# வியாசர் விருந்து

VYASAR VIRUNDU

RAJAGOPALACARI, C.

ராஜாஜி




பாரதி பதிப்பகம்
தியாகராயநகரம் : : சென்னை-17.

# நாங்கள் பாக்யசாலிகள்

## (முதற் பதிப்பிற்காக எழுதியது)

எந்த நாட்டிலும், எந்த நிறத்திலும், எந்த மதத்திலும், எந்தக் காலத்திலும், அன்பிலும் அறிவிலும் ஆற்றலிலும் மிகவும் உயர்ந்த மேதைகள் என்று எவரும் புகழத் தகுந்தவர்களுடைய கூட்டத்தைச் சேர்ந்தவர் ராஜாஜி.

தமிழ் மக்களின் உள்ளத்தில் தரும உணர்ச்சியையும் அன்பையும் உண்மை வீரத்தையும் வளர்க்க வேண்டுமென்று, ராஜாஜி 'கல்கி' வாரப் பத்திரிகையில் 'வியாசர் விருந்து' என்ற பெயருடன் தொடர்ச்சியாக மகா பாரதக் கதையை எழுதி வந்தார்கள். அதை முழுவதும் புத்தகமாகத் திரட்டித் தமிழர் முன்னிலையில் வைக்கின்றோம்.

இன்றைக்கல்ல, நாளைக்கல்ல, இன்னும் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னாலும், நல்லவர்களுடைய சிந்தையிலும் சிரசிலும் சிம்மாசனம் கொள்ளக்கூடிய ராஜாஜி எழுதிய இந்நூலை நாம் பிரசுரித்திருக்கிறோம் என்பதிலுள்ள ஒரு கம்பீரமான எண்ணமே இணையற்ற இன்பம் தருகிறது. அது ஒன்றே போதும். நாங்கள் பாக்கியசாலிகள்.

—சின்ன அண்ணாமலை

# முன்னுரை

## முதற் பதிப்பிற்காக எழுதியது

இரண்டரை யாண்டுகளுக்கு முன் ஒரு நாள் 'முதல் தாம்பூலம்' என்று பெயரிட்டு சிசுபாலன் கதையை 'கல்கி' இதழ் ஒன்றுக்கு எழுதினேன். அதைப் பார்த்துவிட்டு "மகாபாரதத்தில் இவ்வளவு அழகாக நேற்று நடந்த விவகாரங்களைப்போல் சித்திரிக்கப் பட்டிருக்கின்றதா! அப்படியானால் பாரதம் முழுவதும் தொடர்ச்சியாக வாரம் வாரம் இப்படியே எழுதிக்கொண்டு போகலாமே" என்று கல்கி ஆசிரியரும் திரு. டி. கே. சி. யும் சொல்லி என்னைத் தூண்டினார்கள்.

அவர்கள் சொல்லுக்கு இணங்கினேன். பயத்துடன் தான் ஆரம்பித்தேன். பிறகு இந்த வேலையில் எனக்கே ஒரு மகிழ்ச்சியும் பக்தியும் உற்சாகமும் உண்டாகி முதிர்ந்து வந்தது. 107 அத்தியாயங்களாக முடிந்தது.

மகாபாரதமும் ராமாயணமும் தெரியாதவர்கள் நம்முடைய நாட்டில் யாருமே இல்லை. ஆயினும், காலக்ஷேபக்காரர்களும் சினிமாக்காரர்களும் புகுத்திவிட்டிருக்கும் புதுச் சரக்குகள் கலக்காமல் சரியாகப் படித்துத் தெரிந்தவர்கள் வெகு சிலரே என்று நான் எண்ணுகிறேன். புதுச்சரக்குகள் ரஸமாக இருக்கலாம்; ஆனால், வியாசர் எழுதியதிலுள்ள கம்பீரமும், ஆழ்ந்த பொருளும், மற்றவர்கள் கையாளுவதில் கெட்டுப்போகின்றன.

நம்முடைய நாட்டின் பழம் பெருங்காப்பியங்களில் ஒன்றும் அற்புதங்களுக்குள் பேரற்புதமாகிய வியாசருடைய மகாபாரதத்தைச் சரியாகச் சொல்லக்கேட்டு அனுபவித்தால் அறிவும் அடக்கமும் ஆத்ம சக்தியும் தமிழ் மக்கள் அடைவார்கள் என்பது என் எண்ணமும் ஆசையும். துவேஷமும் பொறாமையும் கோபமும் கொண்ட வாழ்க்கை உத

வாது என்பதற்குப் பாரதத்தைப்போல் வேறு படிப்புக் கிடையாது.

அன்புக்குரிய தமிழ் மக்களை எதிரில் வைத்துக் கொண்டு கதை சொல்லுவதுபோல் மனதில் எண்ணி இந்த வியாசர் விருந்தை வாராவாரம் சிரமம் தோன்றாமல் பக்தியோடு எழுதி வந்தேன். 'கல்கி' வாசகர்கள் அனைவரும் உற்சாகத்துடன் படித்து அனுபவித்து வந்ததாகவே நம்புகிறேன்.

முன்காலத்தில் குழந்தைகளுக்குப் புராணக் கதைகளைச் சொல்லப் பாட்டிமார்கள் இருந்தார்கள். இப்போது பேரன் பிள்ளைகளைப் பெற்றவர்களுக்கு அந்தக் கதைகள் தெரியாது. ஆகையால் புத்தக உருவத்தில் கதைகள் இருப்பது குடும்பங்களுக்குப் பயன் படலாம்.

இந்தப் பாரதக் கதைகளை ஒருதடவை வாசித்துவிட்டால் மட்டும் போதாது. திரும்பத் திரும்பப் படிக்கவேண்டும். கிராமங்களில் இரவில் நல்ல விளக்கு வைத்துக்கொண்டு படிக்கத் தெரியாத ஆண்களையும் பெண்களையும் கூட்டி, உட்கார வைத்துக்கொண்டு படித்துச் சொல்லவேண்டும். இப்படிச் செய்தால் நாட்டில் அறிவும் அன்பும் தரும உணர்ச்சியும் பரவும். அனைவரும் நன்மை அடைவோம். படங்கள் ஏன் போடவில்லை என்கிற கேள்விக்கு ஒரு சமாதானம்: இராமாயணம் பாரதம் இந்தக் கதைகளுக்கு நம்முடைய சித்திரக் காரர்கள் போடும் படங்கள் எவ்வளவு அழகாக இருந்தாலும் மூலப் பொருளுக்கும் கற்பனைக்கும் போதிய அளவில் பொருந்துவதில்லை என்பது என் அபிப்பிராயம்.

பீமனை ஒரு சாதாரண குஸ்திக்காரனைப் போலவும் அருச்சுனனை நட்டுவனைப் போலவும், கண்ணனை பெண் குழந்தையைப் போலவும் காட்டிக் குழந்தைகளைப் பழக்குவதில் எனக்குச் சம்மதமில்லை. படிக்கிறவர்களுடைய மனோ தருமத்துக்கே விட்டுவிடுவது நலம்.

—சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# பொருளடக்கம்

# பெயர்கள் அகராதி

**அபிமன்யு:** அருச்சுனனுக்கும் சுபத்திரைக்கும் மகன்.

**அருச்சுனன்:** பஞ்சபாண்டவர்களில் மூன்றாவது சகோதரன். வேறு பெயர்கள்: பார்த்தன், பல்குனன். சவ்வியசாசி, கௌந்தேயன். தனஞ்செயன், மற்றும் பல.

**இந்திரன்:** தேவராஜன்.

**உத்தரன்:** விராடனுடைய மகன்.

**உத்திரை:** விராடனுடைய மகள், அருச்சுனனுடைய குமாரன் அபிமன்யுவின் மனைவி. உத்தரையின் மகன் பரீக்ஷித்து.

**கணபதி:** பரமசிவனுடைய மகன். வேறுபெயர்கள்: விநாயகர், கணநாதன், விக்னேசுவரர், மற்றும் பல.

**கர்ணன்:** சூரியனுக்கும் குந்திக்கும் குமாரன். வேறு பெயர்கள்: ராதேயன், சூரிய குமாரன், தேரோட்டி மகன்.

**கிருஷ்ணன்:** விஷ்ணு அவதாரம். துவாரகை மன்னன். மற்றப் பெயர்கள்: கண்ணன். வாசுதேவன். கோவிந்தன், கோபாலன், கேசவன், பார்த்தசாரதி, ஜனார்த்தனன், ரிஷீகேசன், புண்டரீகாக்ஷன். மதுசூதனன், மாதவன், நாராயணன். அச்சுதன், மற்றும் பல.

**சகாதேவனும் நகுலனும்:** பஞ்சபாண்டவர்களில் இளையவர்களாகிய மாத்ரீயின் இரு புத்திரர்கள்.

**சசிதேவி:** இந்திரன் மனைவி

**சல்லியன்:** நகுல சகதேவர்களின் மாமன்.

**சாத்யகி:** கிருஷ்ணன் பங்காளி. வேறு பெயர்: யுயுதானன். பாண்டவர்கள் பட்சத்தில் யுத்தம் செய்தவன்.

**சுசர்மன்.** திரிகர்த்த தேசத்து ராஜா. கௌரவர்கள் கட்சியிலிருந்தவன்.

**சுபத்திரை:** கிருஷ்ணன் தங்கை. அருச்சுனனுடைய மனைவி. இவள் மகன் அபிமன்யு.

**திருதராஷ்டிரன்:** சந்தனு ராஜாவின் மகன் விசித்திர வீரியன். விசித்திர வீரியனுடைய குமாரர் இருவர்: திருதராஷ்டிரன், பாண்டு. திருதராஷ்டிரன் மக்கள் துரியோதனன் முதலியவர்கள். பாண்டுவின் மக்கள் பஞ்ச பாண்டவர்கள்.

**திருஷ்டத்யும்னன்:** பாஞ்சால ராஜன் துருபதனுடைய குமாரன் திரௌபதியின் சகோதரன்.

**திரௌபதி:** பாண்டவர்களுடைய மனைவி. மற்ற பெயர்கள்: கிருஷ்ணை, பாஞ்சாலி.

**பலராமன்:** கிருஷ்ணனுடைய சகோதரன்.

**பரசுராமன்:** விஷ்ணு அவதாரம், க்ஷத்திரியர்களை வீழ்த்தியவன். ஜமதக்னி முனிவருடைய மகன்.

**பீமன்:** பஞ்ச பாண்டவர்களில் யுதிஷ்டிரனுக்கு அடுத்த சகோதரன். வேறு பெயர்: விருகோதரன்.

**பீஷ்மர்:** பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் பாட்டனார் விசித்திர வீரியனுக்குத் தமயனார். சந்தனு ராஜாவின் குமாரர்.

**பூரிசிரவஸ்:** பாரதப் போரில் கௌரவர் கட்சியில் துணையாக நின்ற ஒருவன். சாத்யகி யின் பங்காளி.

**யுதிஷ்டிரன்:** பாண்டவர்களில் மூத்தவன். மற்றப் பெயர்கள்: தருமன், தரும புத்திரன் தருமராஜன், அஜாத சத்துரு.

**விதுரன்:** திருதராஷ்டிரனுக்கும் பாண்டுவுக் கும் தம்பி முறை.

**வியாசர்:** பாரதம் இயற்றிய முனிவர். பராசர மகரிஷிக்கும் சத்தியவதிக்கும் குமா ரர். பிறகு சத்தியவதியை சந்தனு ராஜா மனைவியாகக் கொண்டான். ஆனபடியால் வியாசர் பாண்டவர் களுக்கும் கௌரவர்களுக்கும் பாட்டன் முறை. வேறு பெயர்: கிருஷ்ண த்வைபாயனர்.

**ஜயத்ரதன்:** சிந்து தேசத்து அரசன். கௌரவர் பக்கம் யுத்தம் செய்தவன்.

# கணபதி ராயசம்

பராசர மகரிஷியின் புத்திரர் புகழ்பெற்ற வியாச பகவான். வியாசர் வேதத்தைத் தொகுத்துக் கொடுத்தவர். இவரே மகா பாரதம் என்னும் புண்ணியக் கதையையும் உலகத்துக்குத் தந்தவர்.

பாரதத்தைத் தன் மனத்தில் யாத்தபின் இதை எவ்வாறு உலகத்துக்குத்தருவதுஎன்று வியாசர் சிந்தித்தார். பிரம்மனைத் தியானித்தார். பிரம்மதேவன் பிரத்தியட்சமானதும் வியாசர் கை கூப்பித் தலைவணங்கி,

"பகவானே; சிலாக்கியமான நூல் ஒன்று என்னாலே மனதில் செய்யப்பட்டிருக்கிறது. இதை எழுதுகிறவர்கள் யாரும் பூமியில் இல்லையே!" என்றார்.

பிரம்மதேவன் வியாசரை மிகப் புகழ்ந்து "ரிஷியே! உம்முடைய நூலை எழுதுவதற்காகக்கணபதியைத்தியானம் செய்யும்" என்று சொல்லிவிட்டு மறைந்தார். வியாச மகரிஷி விநாயகரைத் தியானிக்க அவரும் எழுந்தருளினார். அவருக்கு வியாசர் முறைப்படி பூஜை செய்து,

"கணநாதரே! பாரதத்தை நான் சொல்லச் சொல்ல நீர் எழுத வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

விக்நேசுவரர் "சரி. அப்படி செய்கிறேன். ஆனால் எழுதும்போது என்னுடைய எழுதுகோல் நிற்காது. நிறுத்தாமல் சொல்லிக்கொண்டே போக வேண்டும். அப்படியானால் தான் நான் உமக்காக எழுத முடியும்" என்றார்.

இந்தக் கடுமையான நிபந்தனையை வியாசர் ஒப்புக்கொண்டு, "பொருளை அறிந்துகொண்டே நீர் எழுதிக்கொண்டுபோக வேண்டும்" என்று எதிர்நிபந்தனை ஒன்று கேட்டார்.

கணபதி நகைத்து விட்டு இதற்குச் சம்மதித்தார். அதன் மேல் மகரிஷி பாரதம் பாட ஆரம்பித்தார், ஆங் காங்கு பொருள் விளங்காத முடிச்சுகளை அமைத்துச் சற்று நேரம் விக்நேசுவரர் தயங்கி நின்ற காலத்தைப் பயன் படுத் திக்கொண்டு வியாசர் அநேக சுலோகங்களை மனதில் கவனம் செய்து முடித்துக் கொள்வார். இவ்வாறு வியாச ரால் பாடப்பட்டு கண நாயகரால் பாரதம் எழுதப்பட்டது

அந்தக் காலத்தில் அச்சுக் கிடையாது. கல்வி கற்ற வர்களுடைய ஞாபக சக்தியே நூல்களுக்கு ஆலயமாக இருந்தது. வியாசர் தாம் செய்து எழுதுவித்த பாரதத்தை உடனே முதலில் தம்முடைய புத்திரரான சுகமுனிவருக்குச் சொல்லி வைத்தார். பிறகு தம் சிஷ்யர்கள் பலருக்கும் சொல்லி வைத்தார். இல்லாவிடில் நூல் கெட்டுப் போய் விடலாம் அல்லவோ ?

* * *

தேவர்களுக்குப் பாரதம் சொன்னவர் **நாரதர்** என் றும் கந்தர்வர்களுக்கும் ராக்ஷசர்களுக்கும் யக்ஷர்களுக்கும் சுகர் சொன்னார் என்றும் கதை. மனித லோகத்திற்காக பாரதத்தைச் சொன்னவர் வியாசருடைய முக்கிய சிஷ்யரும் தரும சீலரும் வித்துவானுமான **வைசம்பாயனர்** என்பது பிரசித்தம். **பரீக்ஷித்து** மகாராஜாவின் மகன் **ஜனமேஜய** ராஜா நடத்திய ஒரு பெரிய யாகத்தில் அவனால் ஏவப் பட்டு வைசம்பாயனர் பாரதத்தை விஸ்தாரமாகச் சொன் னார். வைசம்பாயனர் சொன்ன இந்த பாரதத்தைப் பிறகு பௌராணிகரான **சூதர் நைமிசாரணியத்தில் சௌனக ரிஷியின்** தலைமையில் ரிஷிகளை யெல்லாம் சபையாகக் கூட்டி அவர்களுக்குச் சொன்னார்.

" தர்மார்த்தங்களை உபதேசிப்பதற்காக வியாச பக வான் பாடிய பாரதக் கதையை நான் கேட்டிருக்கிறேன். அதை உங்களுக்குச சொல்ல விரும்புகிறேன்" என்று சூதர் சொன்னவுடன் தபோதனர்கள் அனைவரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"ஜனமேஜய ராஜாவின்யாகத்தில் வியாசர்உத்தரவின் படி வைசம்பாயனர் சொன்ன மகாபாரதக் கதையையும்

உபகதைகளையும் நான் கேட்டு, பிறகு பல தீர்த்தங்களுக்கு யாத்திரையோய், பாரதயுத்தம் நடந்த போர்க்களத்தையும பார்த்துவிட்டு உங்களைத் தரிசிக்க இங்கே வந்தேன்" என்று ஆரம்பித்து மகா பாரதம் முழுவதையும் சொன்னார்.

*   *   *   *

சந்தனு மகாராஜாவுக்குப் பின் சித்திராங்கதனும் அவனுக்குப் பின் விசித்திரவீரியனும் ஹஸ்தினாபுரத்தில் அரசாண்டார்கள். விசித்திர வீரியனுக்குத் திருத ராஷ்டிரன், பாண்டு என்ற இரண்டு குமாரர்கள். அதில் மூத்தவன பிறவிக் குருடனானபடியால் பாண்டுவுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்பட்டது. ராஜ்ய பாலனம் செய்து வந்த பாண்டு தான் செய்த ஏதோ ஒரு தவறுக்காக மனைவிகளுடன வனத்துக்குத் தவம் செய்யப் போய் அங்கேயே பல நாட்கள் வசித்து வந்தான்.

வனத்தி லிருக்கும்போது குந்தியும் மாத்ரியும பஞ்ச பாண்டவர்களைப் பெற்றார்கள். பாண்டு காட்டிலேயே இறந்து விட்டான். ரிஷிகள் பஞ்சபாண்டவர்களைப் பால்ய பருவம் முடியும் வரையில் பார்த்து வந்து யுதிஷ்டிரனுக்குப் பதினாறு வயது ஆனதும் எல்லாரையும் ஹஸ்தினாபுரத்திற்கு அழைத்துக் கொண்டுபோய்க் கிழவர் பீஷ்மரிடம் ஒப்புவித்தார்கள்.

பாண்டவர்கள் வேதவேதாந்தங்களையும் க்ஷத்திரியர்களுக்கு வேண்டியகலைகளையும் வெகுசீக்கிரத்தில்கற்றுகொண்டு எல்லாரும் பாராட்டும் வகையில் நடந்து கொண்டார்கள். திருதராஷ்டிரன் மக்களான கௌரவர்களுக்கு இவர்களைக் கண்டு பொறாமை உண்டாயிற்று. அவர்களுக்குப் பல வகைத் தீங்குகளைச் செய்யத் தொடங்கினர்.

கடைசியாக, குலத்துக்குத் தலைவரான பீஷ்மர் எல்லாருக்கும் சமாதானம் சொல்லி, கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஒப்பந்தம் செய்து வைத்தார். அதன் பின் பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்திலும் கௌரவர் ஹஸ்தினாபுரத்திலுமாகத் தனித் தனியாக இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள்.

இப்படி யிருந்துவந்தபோது அந்தக் காலத்து க்ஷத்திரிய வழக்கத்தின்படி கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் ஒரு சூதாட்டத் திருவிழா நடந்தது. அதில் கௌரவர்களுக்காக ஆடின சகுனி யுதிஷ்டிரரைத் தோல்வியடையச் செய்து அதன் பயனாக 13 வருஷம் பாண்டவர்கள் வனவாசம் செய்யும்படி நேர்ந்தது. அப்படியே அவர்கள் ராஜ்யத்தை விட்டு, திரௌபதியையும் அழைத்துக் கொண்டு வனம் சென்றார்கள்.

பன்னிரண்டு வருஷங்கள் ஆரணியத்திலும் பதின்மூன்றாவது வருஷம் மறைவாகவும், சூதாட்ட நிபந்தனைப்படி கழித்துவிட்டுத் திரும்பி வந்தார்கள். அப்போதும் அவர்கள் சொத்தை அபகரித்துக் கொண்டிருந்த துரியோதனன் அதைத் திருப்பிக் கொடுக்கச் சம்மதிக்கவில்லை. அதன்பேரில் யுத்தம நடந்தது. துரியோதனாதிகளைக் கொன்று சாம்ராஜ்யத்தை அடைந்தார்கள்.

இதற்கு மேல் பாண்டவர்கள் 36 வருஷம் ராஜ்ய பரிபாலனம் செய்தார்கள். பிறகு, பேரன் பரீக்ஷித்துக்குப் பட்டம் சூட்டிவிட்டுப் பாண்டவர்களும் திரௌபதியும் மரவுரி தரித்து வனம் சென்றார்கள்.

இதுவே பாரதக் கதையின் சுருக்கம். நம்முடைய நாட்டின் பழம்பெருங் காப்பியமாகிய இந்த அற்புத நூலில் பாண்டவர்கள் சரித்திரத்துடன் எத்தனையோ உபகதைகளும் இருக்கின்றன. எண்ணற்ற முத்துக்களும் ரத்தினங்களும் கிடக்கும் மகா சமுத்திரத்தைப் போன்றது மகாபாரதம். இதுவும் ராமாயணமும் நம்முடைய நாட்டின் தருமத்துக்கும் பண்பாட்டுக்கும் வற்றாத ஊற்றுகள்.

# தேவ விரதன்

"நீ யாரா யிருந்தாலும் எனக்குப் பாரியையாகக் கடவாய்!" குமரி உடல் தரித்து, மானிட லோகத்தில் நின்ற கங்காநதியின் அழகைக்கண்டு மோகித்த சந்தனு மகாராஜா இவ்வாறு சொன்னான்.

"என்னுடைய ராஜ்யமும் எனக்குள்ள தனமும், என் உயிரும் எல்லாம் உன்னைச் சேர்ந்தவை. உன்னை யாசிக்கிறேன்" என்று வற்புறுத்தினான்.

"பூபதியே, நான் உன் மகிஷியாவேன். ஆனால் நீயாவது வேறு யாராவது என்னைப்பற்றி, யார் நீ, என்ன குலம் நீ என்று எந்தச் சமயத்திலும் கேட்கக் கூடாது. நல்லதோ கெட்டதோ நான் எதைச் செய்தாலும் தடுக்கக்கூடாது. என் மேல் எந்தக் காரணத்தைக் கொண்டும் கோபிக்கக் கூடாது. அப்பிரியமான மொழிகளையும் சொல்லக்கூடாது. அவ்வாறு நடந்தால் உடனே உன்னை விட்டுவிட்டுப் போய் விட வேண்டியவளாவேன். இது உனக்குச் சம்மதமா?" என்று கேட்டாள் கங்கை.

"அப்படியே!" என்று அரசன் சத்தியம் செய்து ஒப்புக்கொண்டான்.

*　　　*　　　*

கங்காதேவியினுடைய வினயமும், ஒழுக்கமும், உபசாரமும், ஒரேமாதிரியாகக் கூட இருக்கும்போதும் இல்லாத போதும் தன்னிடம் அவள் காட்டிய அன்பும், அரசனுடைய இதயத்தைக் கவர்ந்தது. காலத்தின் ஓட்டம் அறியாமல் சந்தனு ராஜாவும் கங்கையும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி வாழ்ந்தார்கள்.

கங்காதேவி பல குழந்தைகளைப் பெற்றாள். ஆனால் அவள் சூரிய தேஜஸ் கொண்ட அந்தக் குழந்தைகள் ஒவ்வொன்றையும், பிறந்ததும் கொண்டு போய்க் கங்காப் பிரவாகத்தில் போட்டு விட்டுச் சிரித்துக்கொண்டு அரசனிடம் திரும்பி வருவாள்.

இந்த அருவருப்பான நடவடிக்கையைப் பார்த்துச் சந்தனுவுக்கு வியப்பும் துக்கமும் மேலிட்டுப் பொங்கும். ஆயினும் தான் கொடுத்த வாக்குறுதியை எண்ணி ஒன்றும் சொல்லாமல் பொறுத்துக் கொண்டிருந்தான். இவள் யார், எங்கிருந்து வந்தவள், பேய் பிசாசுகளைப்போல் நடந்து கொள்ளுகிறாளே என்று அடிக்கடி தனக்குள் எண்ணுவான். ஆனால் வாய் திறக்கவில்லை.

* * *

ஏழு குழந்தைகளை இவ்வாறு கொன்றாள். எட்டாவது குழந்தை பிறந்தது. அதையும் அவள் கங்கையில் கொண்டு போய் போடப் போனபோது சந்தனுவின் மனம் பொறுக்கவில்லை.

"நில், நில்! ஏன் இந்தப் பாப கர்மத்தைச் செய்கிறாய்? பெற்ற பிள்ளைகளை ஏன் காரண மின்றிக் கொல்கிறாய்? மிகவும் இழிவான இந்தக் காரியம் உனக்குத் தகாது" என்று தடுத்தான்.

உடனே அவள், "மகாராஜவே! பிரதிஜ்ஞையை மறந்தாயா? புத்திரனிடத்தில் விருப்பம் கொண்டவனே! இனி உனக்கு நான் வேண்டியதில்லை. போகிறேன். இந்த மகனைக் கொல்லவில்லை. நான் யார் என்பதை இப்போது அறிந்துகொள். ரிஷிகளும் முனிவர்களும் போற்றிவரும் கங்காநதியின் தேவதையாவேன். வசிஷ்டர் சாபத்தால் அஷ்டவசுக்கள் மானிட உலகத்தில் பிறக்க வேண்டியதாயிற்று. ஆதலால் அவர்களைப் பெற்றேன். அவர்களுக்கு நான் தாயாராக இருக்கவேண்டும் என்று அவர்கள் வேண்டிக்கொண்ட படி நான் அவர்களை உன்னிடம் பெற்றேன். மானிட உலகத்தில் சிறப்பு வாய்ந்த உன்னைத் தகப்பனாக அவர்கள் பெற்றதும் நல்லதே. அஷ்ட வசுக்களை மக்க

ளாகப் பெற்ற நீயும் உயர்ந்த லோகங்களை அடைவாய். இந்தக்கடைசிக் குழந்தையை நான்கொஞ்சகாலம் வளர்த்து உன்னிடம் ஒப்புவிப்பேன். என்னால் கொடுக்கப்பட்ட தன மாக நீ இந்தப் புத்திரனைப் பெறுவாய்" என்று அரசனுக் குச் சொல்லிவிட்டு மறைந்தாள். அந்தக் குழந்தையே பீஷ்மர்.

* * *

ஒரு நாள் அஷ்ட வசுக்கள் தம் மனைவிமார்களுடன் வசிஷ்டர் ஆசிரமமிருந்த மலைச்சாரலுக்கு வந்து, அங்கே குன்றுகளிலும் வனங்களிலும் சஞ்சரித்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களில் ஒருவன் வசிஷ்டருடைய பசு, நந்தினி, அங்கே மேய்ந்து கொண் டிருந்ததைப் பார்த்து அதன் அழகையும் திவ்விய மங்களா காரத்தையும் கண்டு அதிசயித்து தன்னுடனிருந்த வசுக்க ளின் தேவிமார்களுக்குக் காட்டினான். அவர்கள் எல்லாரும் ஒருவருக்குமேல் ஒருவராக வசிஷ்டருடைய பசுவின் அழகைக் கண்டு வியந்து பேசிக்கொண்டிருக்க, அவர்க ளில் ஒருத்தி, இந்தப் பசு தனக்கு வேண்டும் என்று தன் புருஷனைக் கேட்டுக் கொண்டாள்.

"தேவர்களாகிய நமக்குப் பசுவின் பால் என்னத் திற்கு?" என்றான் வசு. "இது வசிஷ்ட முனிவருடையது. இந்த தபோவனத்திற்கு அவர் உடையவர். இதன் பாலைக் குடித்த மனிதர்கள் சிரஞ்சீவிகளாவார்கள். தேவர்களாகிய நாம் அதனால் அடையவேண்டிய நன்மை ஒன்றுமில்லை. வசிஷ்ட ரிஷியின் கோபத்துக்கு ஆளாவோம்" என்று அந்த வசு, தன் மனைவியின் கோரிக்கையை மறுக்கப் பார்த்தான்,

"மனுஷ்ய லோகத்தில் எனக்கு ஒரு பிரியமான தோழி இருக்கிறாள். அவளுக்காக நான் இதைக் கேட்கிறேன். வசிஷ்டர் வனத்துக்குத் திரும்பி வருவதற்குள் பசுவைக் கொண்டு போவோம். நீ எனக்காக இதைச் செய்தே தீர வேண்டும், எனக்கு இதைவிட மேலான பிரியம் ஏது மில்லை" என்று அவள் தன் புருஷனை வற்புறுத்தினாள்.

முடிவில் அவனும் இசைந்தான். எல்லா வசுக்களும் சேர்ந்து பசுவையும் கன்றையும் கொண்டு போய் விட்டார்கள்.

வசிஷ்டர் ஆசிரமம் திரும்பிவந்து தன் நித்திய கருமங்களுக்கு இன்றியமையாத பசுவும் கன்றும் இல்லாததைக் கண்டு நடந்ததைத் தெரிந்துகொண்டார். அதன்மேல் கோபங்கொண்டு வசுக்களைச் சபித்தார். அவர்கள் மனித உலகத்தில் பிறக்க வேண்டும் என்று தபோதனர் எண்ணினார். எண்ணியதும் அந்தச் சாபம் வசுக்களை எட்டியது.

உடனே அவர்கள் வசிஷ்டருடைய ஆசிரமத்துக்கு ஓடி வந்து ரிஷியைக் கெஞ்சினார்கள்.

“சாபத்தை நிறுத்த முடியாது. பசுவைக் கொண்டு போனவனான பிரபாஸன் நீண்டகாலம் பூவுலகில் புகழ் பெற்று வசிப்பான். மற்றவர்கள் பூமியில் பிறந்தவுடன் விடுதலை அடைந்து விடுவார்கள். நான் சொன்ன சொல்லைப் பொய்யாக்க முடியாது. இவ்வளவுதான் செய்ய முடியும்” என்று வசிஷ்டர் சொல்லிவிட்டார். அதன் பிறகு, கோபத்தால் ஓரளவு அழிந்துபோன தவத்தில் மறுபடி வசிஷ்டர் மனம் செலுத்தினார். தவம் செய்த ரிஷிகள் தங்கள் சக்திகளைக் கொண்டு சாபம் கொடுக்க முடியும். ஆனால் அவ்வாறு தங்கள் சக்தியை உபயோகித்தால் தவம் நஷ்டமாகும்.

வசுக்கள் இவ்வளவாவது நல்ல கதி பெற்றோமே என்று திரும்பினார்கள். அதன் மேல் கங்கையிடம் சென்று “நீ தான் எங்களுக்குத் தாயாக வேண்டும். எங்களுக்காக நீ பூவுலகம் போய், ஒரு நல்ல புருஷனையும் அடைந்து எங்களுக்குச் சீக்கிரத்தில் விடுதலை தரவேண்டும். பிறக்கப் பிறக்க எங்களை உடனே ஜலத்தில் போட்டுவிடு” என்று கேட்டுக் கொண்டார்கள். கங்கையும் அவ்வாறே ஒப்புக் கொண்டு மானிட உலகத்தில் அதற்காகச் சந்தனுவைப் புருஷனாக அடைந்தாள்.

* * *

கங்காதேவி எட்டாவது குழந்தையை எடுத்துக் கொண்டு சந்தனுவை விட்டு நீங்கியபின், பெண்களிடம்

சுகம்பெறும் எண்ணத்தை நீக்கிக்கொண்டு வைராக்கியமாக ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான். ஒரு நாள் கங்காதீரத் தண்டை போனபோது தேவேந்திரனைப் போன்ற அழகும் உடல்கட்டும் பெற்ற ஒரு வாலிபன் அஸ்திரப் பிரயோகம் செய்து கங்காப் பிரவாகத்தைத் தடுத்துக் கொண்டிருந்த தைக் கண்டு அங்கேயேநின்றுன். பிறகு தன் குழந்தைக்கு இவ்வாறு விளையாட்டுக் காட்டிக் கொண்டிருந்த கங்கா தேவியே பிரத்தியட்சமானுள். குமாரனை அரசனிடம் ஒப்பு வித்தாள்.

"அரசனே! என்னிடத்தில் நீ அடைந்த எட்டாவது புத்திரனும், இதுவரையில் என்னுல் வளர்க்கப்பட்டவனு மான தேவவிரதன் இவன். எல்லா அஸ்திரங்களும் தெரிந்திருக்கிறுன். இவன் வசிஷ்டரிடம் வேதமும் வேதாங் கங்களும் ஓதியிருக்கிறுன். சுக்கிராச்சாரியார் அறிந்த சாஸ் திரங்கள் எல்லாம் இவன் கற்றிருக்கிறுன். யுத்தத்தில் பரசுராமருக்குச் சமானமானவன். வில்லாளியும் வீரனும் ராஜ நீதிகளை அறிந்தவனுமான உன் மகனை அழைத்துப் போ!" என்று மகனை ஆசீர்வதித்துத் தகப்பனிடம் ஒப்பு வித்து விட்டு, கங்கை மறைந்தாள்.

# பீஷ்மர் சபதம்

தேவ விரதனுக்கு வயது வந்ததும் கங்காதேவி அவனைச் சந்தனுவிடம் ஒப்படைத்தாள். தேஜஸ் நிறைந்த ராஜகுமாரனைப் பிரியமாகப் பெற்றுக்கொண்டு சந்தனு ராஜா தன் நகரத்திற்குச் சென்றான். சில நாட்கள் கழித்து அவனுக்கு யுவராஜ பட்டாபிஷேகமும் செய்வித்தான்.

நான்கு வருஷம் சென்றன. ஒரு நாள் ராஜா யமுனை யாற்றங்கரைக்குப் போயிருந்தபோது அங்கே உயிரைக் கவரும்படியான திவ்விய வாசனை ஒன்று கமழ்ந்தது. இதற்குக் காரணம் என்னவென்று தேடித் திரிய, தேவ கன்னிகையைப் போன்ற அழகிய வடிவம் கொண்ட ஒரு பெண்ணைக் கண்டான். முனிவர் ஒருவரிடம் பெற்ற வரத்தின் பயனாக அவளிடமிருந்து இந்தத்திவ்ய வாசனை வீசி வனம் முழுதும் நிரம்பிற்று.

* * * *

கங்கையை விட்டுப் பிரிந்தது முதல் அதுவரை காத்து வந்த வைராக்யம் கரைந்து போயிற்று. அந்தக் கன்னிகையை மனைவியாக அடைய வேண்டுமென்று சந்தனு தாங்க முடியாத விருப்பம் கொண்டான்.

"நான் செம்படவப் பெண். என் அப்பன் செம்படவத் தலைவன். அவனைக் கண்டு சம்மதம் பெறுவாயாக! உனக்கு க்ஷேமம் உண்டாகுக" என்றாள் அந்த கன்னி.

அவள் பேசின பேச்சின் இனிமை அவள் வடிவத்துக்கு ஏற்றதாயிருந்தது.

பெண்ணின் தகப்பனை செம்படவத் தலைவன் மிக்க சாமர்த்தியசாலி.

"மகாராஜாவே! பெண்ணாகப் பிறந்த இவளை யாரேனும் ஒருவனுக்குக் கொடுத்துத்தான் தீரவேண்டும். இவளுக்குத் தகுந்த புருஷனும் நீ ஆவாய். சந்தேகமில்லை. ஆனால் எனக்கு ஒரு சத்தியம் செய்து தரவேண்டும்" என்றான்.

"நீ கேட்பது கொடுக்கக் கூடியதாக இருந்தால் நான் ஒப்புக்கொள்வேன்" என்றான் சந்தனு.

"இவளிடத்தில் உனக்குப் பிறக்கும் குமாரனை உனக்குப்பின் ராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டும்" என்றான் செம்படவத் தலைவன்.

மன்மத தாபத்தினால் அதிகமாகத் தகிக்கப் பட்டவனானாலும், செம்படவன் கேட்ட இந்த நிபந்தனையை ஒப்புக்கொள்ள அரசனுக்கு மனம் வரவில்லை. கங்கா புத்திரனான தேவவிரதனை விட்டுவிட்டு எவ்வாறு வேறு குமாரனுக்குப் பட்டம் அளிக்க முடியும்? காரியம் நிறைவேறாமல் துக்கத்துடன் தன் நகரான ஹஸ்தினாபுரத்துக்குத் திரும்பினான். விஷயத்தை யாரிடமும் சொல்லாமல் மனத்துக்குள்ளேயே வியாகூலப்பட்டு இளைத்துப் போனான்.

* * * *

ஒரு நாள் தேவவிரதன் தகப்பனைப் பார்த்து, "அரசனே! உமக்கு எல்லாவித சுகமும் இருக்க ஏன் துக்கத்தில் மூழ்கியிருக்கிறீர்? என்ன காரணத்தினால் கவலைப்பட்டு இளைத்துப் போய்க்கொண்டு வருகிறீர்?" என்று கேட்டு விஷயத்தை ஓரளவு வெளியிடச் செய்தான்.

"பிள்ளாய்! நீ சொன்னபடி நான் கவலையுற்றிருப்பது உண்மை. கவலை யாதெனில், குலத்தில் நீ ஒருவன்தான் புத்திரனாக இருக்கிறாய். நீயோ யுத்தத்துக்கு வேண்டிய பயிற்சியில் எப்போதும் ஈடுபட்டிருக்கிறாய். உலகவாழ்க்கை நிலையில்லை. யுத்தம் நிச்சயமாகக் கிட்டும். உனக்கு ஏதாவது அபாயம் வந்தால் நமது குலம் அழிந்துவிடுமல்லவா? நீ ஒருவனே நூறு புத்திரர்களுக்குச் சமமாக இருக்கிறாய். ஆனாலும் சாஸ்திரம் படித்தவர்கள் நிலையில்லா உலகத்தில் ஒரு புத்திரன் இருப்பதும் இல்லாமையும் ஒன்றே என்கிறார்கள். நம்முடைய குலத்தின் பாரம்பரிய க்ஷேமம் ஒரு புத்திரன் உயிரிலேயே தங்கி நிற்பது உசிதமல்ல. சந்ததி கெடாமலிருப்பதற்காக ஆசைப்படுகிறேன். இதுதான் என் துக்கத்திற்குக் காரணம்" என்று அரசன், மகனிடம் சொன்னான். முழுக் கதையையும் சொல்லத் தகப்பன் வெட்கப்பட்டான்.

அறிவாளியான தேவவிரதனுக்கு தகப்பனாரின் மனோ நிலை தெரிந்துவிட்டது. பிறகு ராஜாவின் சாரதியை அந்த ரங்கமாக விசாரித்து யமுனாநதிக் கரையில் நடந்ததைத் தெரிந்து கொண்டான். அதன்மேல் செம்படவ ராஜனிடம தானே சென்று அவன் மகள் சத்தியவதியைத் தகப்பனா ருக்காகக் கேட்டான்.

செம்படவன் தேவவிரதனுக்குச் சொன்னான்: "என் மகள் ராஜ மகிஷியாவதற்குத் தகுந்தவள். இவளுக்குப் பிறக்கும் குமாரன் ராஜாவாக இருக்கவேண்டுமல்லவா? சந்தனுவுக்குப் பிறகு ராஜ்ய பாலனம் செய்ய நீர் பட்டாபி ஷேகம் செய்யப்பட்டிருக்கிறீர். இதுவே தடையாக நிற்கி றது. என்னை மன்னிப்பீராக."

இதைக் கேட்ட தேவவிரதன், "இவளுக்குப் பிறக்கும் மகன் ராஜாவாக இருப்பான். என் பட்டாபிஷேகத்தை நான் தியாகம் செய்துவிட்டேன்" என்று சத்தியம் செய்து கொடுத்தான்.

"பரத சிரேஷ்டரே! ராஜ வம்சங்களில் இது வரை யாரும் செய்யாததை நீர் செய்துவிட்டீர். நீர் வீரர். இந்தக் கன்னிகைக்கு நீரே பிரபு. இவளைப் பெற்ற தகப்பனைப் போல் நீரே அழைத்துப் போய் அரசனுக்குக் கொடுக்கும் அதிகாரியாவீர். பெண்ணின் தகப்பனாகிய நான் சொல்லு வதைப் பொறுமையுடன் கேட்க வேண்டும். உம்முடைய வாக்கில் எனக்குச் சந்தேகம் இல்லை. ஆயினும் உமக்கு உண்டாகும் சந்ததியைப் பற்றி எனக்கு எவ்வாறு நிச்சயம் உண்டாகும்? மகா வீரராகிய உமக்குப் பிறக்கும் மகனும் வீரனாகத்தான் இருப்பான். அவன் ராஜ்யத்தை அபகரிக் கப் பார்ப்பான் அல்லவா? இதுவே பெண்ணைப் பெற்றவ னுடைய சந்தேகம்" என்றான் செம்படவன்.

இந்தச்சிக்கலான கேள்வியைக்கேட்டதும், தந்தையின் விருப்பத்தைப்பூர்த்திசெய்வதே கருத்தாகக்கொண்டதேவ விரதன் மறுபடியும் எதிர்பாராத ஒரு சத்தியம செய்து தந்தான். "ஆயுள் முழுவதும் நான் பிரமசரிய விரதம் பூண்டு நிற்பேன். என் உயிர் இந்த தேகத்துடன் ஒட்டி யிருக்கும் வரையில் நான் புத்ரோற்பத்தி செய்யவில்லை"

என்று செம்படவத் தலைவனுக்கு தேவவிரதன் பிரதிஜ்ஞை செய்து உறுதி மொழி தந்தான்.

தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். "பீஷ்மன்! "பீஷ்மன்!" என்று அசரீரி கோஷம் உண்டாயிற்று. 'பீஷ்மன்' என்றால் அற்புதமான செயலைச் செய்தவன் என்று பொருள். அதுவே அன்று முதல் தேவவிரதனுடைய பெயராயிற்று. அதன் மேல் கங்கா புத்திரன் சத்தியவதியை அழைத்துச் சென்று தகப்பனிடம் ஒப்புவித்தான்.

சத்தியவதியும் சந்தனுவும் பெற்ற மக்கள் சித்திராங்கதனும் விசித்திரவீரியனும் ஒருவன்பின் ஒருவனாக அரசு புரிந்தார்கள். விசித்திரவீரியனுடைய மனைவிகள் அம்பிகை அம்பாலிகை. இவர்களின் மக்கள் முறையே திருதராஷ்டிரனுடைய மக்கள் நூறு கௌரவர்கள். பாண்டுவின் மக்கள் பஞ்சபாண்டவர்கள்.

பீஷ்மாச்சாரியார் குலத்துக்குத் தலைவராக எல்லோராலும் பூஜிக்கப்பட்டு பாரத யுத்தம் முடியும வரையில் வாழ்ந்திருந்தார்.



# அம்பையும் பீஷ்மரும்

சத்தியவதியின் குமாரன் சித்திராங்கதன் ஒரு கந்தர்வனோடு சண்டை செய்து அவனால் கொல்லப்பட்டான். அவனுக்குப் பிள்ளைகள் இல்லாதபடியால் முறைப்படி அவன் தம்பி விசித்திர வீரியனுக்குப் பட்டாபிஷேகம் செய்விக்கப் பட்டது. விசித்திரவீரியனுக்கு வயது வரும்வரையில் பீஷ்மரே ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்தார்.

விசித்திரவீரியன் விவாகத்துக்குத் தகுந்த வயது அடைந்ததும், காசி ராஜாவின் கன்னிகைகளுக்குச் சுயம் வரம் என்று கேள்விப்பட்டு பீஷ்மர் தேர் ஏறிச் சுயம்வர சபைக்குச் சென்றார். ஒருவர் மேல் ஒருவர் போட்டியாகக் கோசலம், வங்கம், புண்டரம், கலிங்கம் முதலிய பல தேசத்து ராஜகுமாரர்கள் சபையில் கூடியிருந்தார்கள், கன்னிகைகளின் அழகும் குணமும் உலகப் பிரசித்தியாயிருந்தபடியால் போட்டி ரொம்ப மும்முரமாக இருந்தது.

பீஷ்மருடைய புகழ் க்ஷத்திரிய குலத்தில் நிகரற்றிருந்தது. இவர் வெறுமனே சுயம்வரத் திருவிழாவைப் பார்க்க வந்தார் என்று எல்லோரும் முதலில் எண்ணினார்கள். பெயர்களைக் கொடுத்தபோது இவரும் கொடுத்தார். யௌவன ராஜகுமாரர்கள் எல்லாரும் ஏமாற்றமடைந்தார்கள், அவர் சென்றது தன் தம்பி விசித்திரவீரியனுக்காக. ஆனால் இது ஒருவருக்கும் தெரியாது,

"பாரத சிரேஷ்டருடைய அறிவும் படிப்பும் அதிகம். ஆனால் வயதும் ரொம்ப அதிகமாகவே இருக்கிறது. கிழவரான இவருக்கு இந்த சுயம்வரத்தில் என்ன வேலை? இவருடைய பிரதிஜ்ஞை என்னவாயிற்று? ஆயுள் முழுதும் பிரமசாரியாயிருப்பேன் என்று இவர் பொய்ப் புகழா பெற்றார்!" என்றிவ்வாறெல்லாம் ஏளனமாகப் பேசினார்கள். விவாகத்துக்கு இருந்த இரண்டு கன்னிகைகளும் கிழவீரரைப் பார்த்து விட்டு நிற்காமல் விலகிப் போனார்கள்.

பீஷ்மருக்கு மகா கோபம் பொங்கிற்று. "வாருங்கள் யுத்தத்துக்கு!" என்று சபையிலிருந்த ராஜாக்கள் அனை வரையும் அறைகூவி யழைத்து, ஒருவராகவே எல்லோரை யும் எதிர்த்து விரட்டி, மூன்று கன்னிகைகளையும் தன் தேர்மேல் ஏற்றிக்கொண்டு ஹஸ்தினபுரம் போகப் புறப் பட்டார். சௌபல தேசத்தரசன் சால்வன் மட்டும் விடா மல் துரத்திச் சென்று தடுத்தான். அவனை மூத்த ராஜ குமாரி அம்பையானவள் தன் மனதில் வரித்திருந்தாள். சால்வனுக்கும் பீஷ்மருக்கும் கடும்போர் நடந்தது. பீஷ்மர் தனுர்வேதத்தில் கரைகண்ட நிபுணர். சால்வன் தோல்வி யுற்றான். ஆனால் கன்னிகைகளின் வேண்டுகோளுக் கிணங்கி அவனை பீஷ்மர் உயிருடன் தப்பிப் போகவிட்டார்.

பீஷ்மர் ராஜகுமாரிகளுடன் அஸ்தினபுரம் போய்ச் சேர்ந்தார். விசித்திரவீரியனுக்கு மூன்று பெண்களையும் விவாகம் செய்ய ஏற்பாடுகள் நடந்தன. கலியாணப் பந்த லில் எல்லாரும் கூடியிருக்கும் சமயத்தில் அம்பை பீஷ்மரை நோக்கி மெள்ள நகைத்தவாறாக, "கங்கா புத்திரரே! தர்மம் அறிந்தவரே! நான் சௌபல தேசத்து ராஜாவான சால் வனை என் மனதில் புருஷனாகக் கொண்டு விட்டேன். நீர் பலாத்காரமாக என்னைக் கொண்டு வந்தீர். சாஸ்திரம் உணர்ந்த நீ எவ்வண்ணம் செய்ய வேண்டுமோ அவ்வாறு செய்யும்" என்றாள்.

இவ்வாறு விவாக மண்டபத்தில் அம்பை சொன்னதும் பீஷ்மர் ஆட்சேபனையை ஒப்புக்கொண்டு தகுந்த துணை நியமித்து அவளைச் சால்வ ராஜனிடம் அனுப்பி வைத்தார். அம்பையின் தங்கைகளான அம்பிகை, அம்பாலிகை இரு வரையும் விசித்திரவீரியனுக்கு விவாகம் செய்வித்தார்.

* * * *

அம்பை சால்வனிடம் சென்றாள். "நீ என்னால் முன் னேயே வரிக்கப்பட்டாய். பீஷ்மர் என்னை உன்னிடம் அனுப்பியிருக்கிறார். சாஸ்திரப்படி விவாகம் செய்துகொள்" என்றாள்.

சால்வராஜன், "அரசர்களின் மத்தியில் பீஷ்மர் என்னை ஜயித்து உன்னை வசப்படுத்திச் சென்றார். நான் அங்கீகரிக்க

முடியாது. நீ அவரிடமே திரும்பிப் போய், அவர் ஆணைப்படி செய்" என்று சொல்லி அவளைத் திருப்பி அனுப்பி விட்டான்.

ஹஸ்தினபுரம் திரும்பி வந்து பீஷ்மரிடம் அம்பை விஷயத்தைச் சொன்னாள். "சால்வராஜன் அம்பையை வரிக்கவில்லை. நீ இவளை விவாகம் செய்துகொள்ள இப்போது தடையொன்றுமில்லை" என்று விசித்திரவீரியனைக் கேட்க, அவன் "வேறு ஒரு புருஷன்மேல் மனம் செலுத்தின ஒரு கன்னியை நான் விவாகம் செய்துகொள்ள மாட்டேன்" என்று க்ஷத்திரியப் பண்பாட்டினபடி மறுத்து விட்டான்.

"எனக்கு வேறு கதி இல்லை. நீரே என்னை விவாகம் செய்துகொள்ளக் கடமைப் பட்டிருக்கிறீர்" என்று அம்பை பீஷ்மரை வற்புறுத்தினாள்.

"என்னுடைய பிரதிஜ்ஞையை எப்படிப் பொய்யாக்குவேன்! முடியாது" என்று சொல்லி விசித்திரவீரியனை ஒப்புக்கொள்ளும்படி மறுபடியும் பீஷ்மர் வற்புறுத்திப் பார்த்தார். அதன்மேல் "நீ சால்வனையே கேட்டுக் கொள்ள வேண்டும்" என்று அம்பையை மறுபடியும் சால்வராஜனிடம் போகச்சொன்னார். ஆனால் அம்பை அந்த அரசனிடம் போக வெட்கப்பட்டேன்" என்று பீஷ்மர் மனையிலேயே பல ஆண்டுகள் கழித்தாள். ஆனால் பீஷ்மர் ஒப்புக் கொள்ளவில்லை.

பிறகு அம்பை சால்வனிடம் போனாள்.

"மற்றொருவன் ஜயித்த கன்னியை நான் விவாகம் செய்து கொள்ள முடியாது" என்று அவன் மறுபடியும் கண்டிப்பாய் முன்போலவே சொல்லிவிட்டான்.

* * * *

தாமரைப் புஷ்பம் போன்ற கண்களையுடைய அம்பை இவ்வாறு ஹஸ்தினபுரத்திலிருந்து சால்வனிடமும் சால்வனிடமிருந்து ஹஸ்தினபுரமும் பல தடவைகள் அலைந்து அலைந்து

கண்ணீர் சொரிந்தாள். இவ்வாறு ஆறு வருஷங்கள் சென்றன. அம்பை இதயம் துடித்துத் துடித்து ஒருவித கதியும் காணுமல் வாடினுள். அவளுக்குப் பீஷ்மர்மேல் தாங்கமுடியாத கோபம் மேலிட்டது. பல ராஜாக்களிடம் போய் முறையிட்டாள்.

தனக்கு நேர்ந்த அவமானத்திற்காக பீஷ்மரை எதிர்த்துக் கொல்லும்படி ஒவ்வொரு அரசனையும் வேண்டிக் கொண்டாள். பீஷ்மர் என்றுல் எல்லாருக்கும் பயம். யாரும் கேட்கவில்லை. பிறகு ஷண்முகப் பெருமானைக் குறித்துக் கடும் தவம் செய்தாள். முருகன் பிரசன்னமாகி அம்பைக்கு ஒரு மாலை தந்தான். "இந்த மாலையை எவன் தரித்துக்கொள்ளுகிருனே அவன் பீஷ்மனுக்குச் சத்துரு ஆவான்" என்று ஆறுமுகன் அம்பைக்கு ஒரு வாடாத தாமரைப் புஷ்ப மாலையைக் கொடுத்தான்.

* * * *

அம்பை அந்த மாலையைப் பெற்றுக்கொண்டு தன் எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொள்ள ஒவ்வொரு க்ஷத்திரியனிடமும் சென்றுள். "ஆறுமுகக் கடவுள் தந்த இந்த மாலையைப் பெற்றுக்கொண்டு பீஷ்மனைக் கொல்" என்று பலரைக் கேட்டுப் பார்த்தாள். பீஷ்மருடைய விரோதத்தைச் சம்பாதித்துக்கொள்ள யாருக்கும் தைரியம் வரவில்லை. கடைசியாகத் துருபதராஜனிடம் போய் அவனும் மறுத்துவிட்டபின் அவனுடைய அரண்மனை வாயிலில் மாலையைத் தொங்கவிட்டு வனம் சென்றுள்.

பிறகு சில தபோதனர்களிடம் போய் தனக்கு நேர்ந்த அவமானத்தைச் சொல்லி முறையிட்டாள்.

"நீ பரசுராமரிடம் போய்க் கேட்டுக்கொள். அவர் உனக்கு வேண்டியதைச் செய்வார்" என்று அவர்கள் யோசனை சொன்னுர்கள். அப்படியே செய்தாள்.

அம்பையின் கதையைக் கேட்டுக் கருணைகொண்டு பரசுராமர் "குழந்தாய் உனக்கு என்னவேண்டும்? சால்வனுக்குச் சொல்லி உன்னை விவாகம் பண்ணிக் கொள்ளச் சொல்ல வேண்டுமா? அது என்னுல் முடியும்" என்றுர்.

அம்பை, "வேண்டாம். பீஷ்மனுடன் நீர் யுத்தம் செய்து அவனைக் கொல்லவேண்டும். எனக்கு விவாகம் வேண்டாம். பீஷ்மனுடைய மரணமே நான் கோரும் வரம்'' என்றாள்.

க்ஷத்திரிய சத்துருவான பரசுராமர் பீஷ்மருடன் போருக்குச் சென்றார். யுத்தம் நடந்தது. பீஷ்மரும் பரசுராமரும் சமமான வீரர்கள். சமமான ஜிதேந்திரியர்கள். யுத்தம் பல நாட்கள் நடந்தது. முடிவில் பரசுராமர் தோல்வி யடைந்தேன் என்று ஒப்புக்கொண்டு, அம்பையைப் பார்த்து "அம்மணி! என்னாலானதை நான் செய்தேன். நீ பீஷ்மரைச் சரண் அடைய வேண்டியது தான்'' என்றார்.

* * * *

அம்பைக்குக் கோபமும் துயரமும் தாங்கமுடியவில்லை. இமயமலைக்குச் சென்று பரமேசுவரனைக் குறித்துக் கடும் தவம் புரிந்தாள். பரமசிவன் அவளுக்குப் பிரசன்னமாகி "நீ இன்னொரு பிறப்பு அடைவாய், உன்னால் பீஷ்மர் மரண மடைவார்'' என்று வரம் தந்தான்.

உடனே மறு பிறப்பு அடைந்து தன் எண்ணம் நிறை வேற வேண்டும் என்பது அம்பையின் ஆசை. சிதையை அடுக்கி அதற்கு நெருப்பு மூட்டி, தீயுடன் தீ கலப்பது போல் கோபத்தினால் ஜொலித்த அம்பை அதில் குதித்து மாண்டாள்.

பரமசிவனார் வரத்தின்படி அம்பை துருபத ராஜனுக்கு மகளாகப் பிறந்தாள். பிறந்த சில ஆண்டுகளுக்குப் பின் அரண்மனை வாயிலில் யாரும் தீண்டுவதற்குப் பயந்து வாடாமல் இன்னும் தொங்கிக்கொண்டிருந்த புஷ்பமாலையைப் பார்த்து அதைக் கழுத்தில் தானே போட்டுக் கொண்டாள். தகப்பனான துருபதராஜா 'ஐயோ கெட்டேனே! பீஷ்மருடைய விரோ தத்தைப் பெற்றோமே'' என்று பயந்து, மகளைத் தன் வீட்டி லிருந்து அப்புறப்படுத்தி வனத்துக்கு அனுப்பி விட்டான்.

அம்பை வனம் சென்று தவம் செய்து ஆண் தன்மை அடைந்து சிகண்டி என்கிற வீரனாக மாறி விட்டாள். அருச்

சுனன் சிகண்டியைத் தேர்ப்பாகனுகக் கொண்டு பாரத யுத்தத்தில் பீஷ்மரை எதிர்த்தான். குருட்சேத்திர களத்தில் பீஷ்மர் வீழ்த்தப்பட்டு அம்பையின் அடங்காத கோபம் தீர்ந்தது. சிகண்டியின் பிறப்பு ஆதியில் பெண்மை என்று பீஷ்மருக்குத் தெரிந்திருந்தபடியால் எந்த சந்தர்ப்பத்திலும் அவன் மேல் அம்பு பிரயோகிக்க மறுத்துவிட்டார். சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு அருச்சுனன் பீஷ்மரைத் தாக்கி ஜெயித்தான். மரணம் கிட்டிய தறுவாயிலும் தன்னைத் துன்புறுத்திய அம்புகளை ஒவ்வொன்ருக இழுத்து எடுத்து 'இது அருச்சுனனுடைய அம்பு ! சிகண்டியினுடையதல்ல !' என்று சொல்லிக் கொண்டு பீஷ்மர் பூமியில் சாய்ந்தார்.

# தேவயானியும் கசனும்

முன்னொரு காலத்தில் மூன்று உலகங்களையும் ஆள வேண்டுமென்று தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பெரிய போட்டி நடந்தது. தேவர்களுக்குப் புரோகிதர் பிரகஸ்பதி; அவர் வேத மந்திரங்களில் தேர்ச்சி பெற்றவர். அசுரர்களுக்குப் புரோகிதர் அறிவுக்கடலான சுக்ராசாரியர். இந்த இரண்டு பிராமணர்களின் பக்க பலத்தைக் கொண்டு தேவாசுர யுத்தம் நடந்து வந்தது.

யுத்தத்தில் வீழ்த்தப்பட்ட அசுரர்களை யெல்லாம் சுக்ராசாரியர் தம் சஞ்சீவினி வித்தையைக் கொண்டு மறுபடியும் பிழைப்பித்து வந்தார். இறந்த அசுரர்கள் திரும்பவும் திரும்பவும் எழுந்து வந்து தேவர்களுடன் போர் செய்வார்கள். இந்த யுத்த வைத்திய ஏற்பாடு தேவர்கள் கட்சியில் இல்லை. சுக்ராசாரியர் பிரயோகித்த சஞ்சீவினி வைத்தியம் பிரகஸ்பதிக்குத் தெரியாது. இது தேவர்களுக்குப் பெரும் துயரத்தை உண்டாக்கிற்று.

தேவர்கள் ஒன்றுகூடி பிரகஸ்பதியின் குமாரன் கசன் என்பவனிடம் சென்று, "நீ எங்களுக்கு ஒரு உபகாரம் செய்ய வேண்டும். நீ இளம் பிராயமுள்ளவனாகவும் கண்ணைக் கவரும் படியான அழகு பெற்றவனாகவும் இருக்கிறாய். நீ சுக்ராசாரியரிடம் பிரம்மசாரியாகச் சேர்ந்து அவருக்குப் பணிவிடை செய்து அவருடைய நம்பிக்கையையும் அவர் மகளின் அன்பையும் பெற்று அவருடைய சஞ்சீவினி வித்தையை எப்படியாவது கற்றுக்கொண்டு வரவேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

* * *

கசன் இதற்கு ஒப்புக்கொண்டு சுக்ராசாரியரிடம் போனான். அசுர ராஜாவான விருஷபர்வனுடைய நகரத்தில் சுக்ராசாரியர் வசித்து வந்தார். அவருடைய வீட்டுக்குக் கசன் போய், அவரை வணங்கி "அங்கிரஸ் ரிஷியின் பேரன் நான்

பிரகஸ்பதியின் புத்திரன். கசன் என்பது என் பெயர். என்னைச் சிஷ்யனாக ஏற்றுக் கொள்வீராக. நான் தங்கள் கீழ் பூரண பிரம்மசரியத்தைச் செய்வேன்'' என்று வேண்டிக் கொண்டான். தகுந்த சீடன் ஆசார்யனிடம் பிரமசாரியாக எடுத்துக் கொள்ளக் கேட்டால் அறிவு பெற்ற ஆசாரியன் மறுக்கக் கூடாது. "கசனே! நீ நல்ல குலத்தவன். உன்னை நான் அங்கீகரிப்பேன். இதனால் பிரகஸ்பதியும் கௌரவிக்கப் பட்டவர் ஆவார்'' என்று சுக்ராசாரியர் கசனைத் தம் சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார்.

கசனும் அநேக வருஷங்கள் சுக்ராசாரியருக்கும் அவர் மகள் தேவயானிக்கும் ஒரு குறைவும் குற்றமுமின்றிப் பணி விடை செய்து வந்தான். சுக்ராசாரியருக்குத் தன் மகள் தேவயானியிடம் மிகப் பிரியம். கசன் பாடியும் ஆடியும் வாத்தியம் வாசித்தும் அவள் சொன்ன ஏவல் செய்தும் தேவ யானியைச் சந்தோஷப்படுத்தி வந்தான். தேவயானியும் கசனிடம் பிரியம் காட்டி வந்தாள். ஆனால் பிரமசரிய விரதத் தைத் தவறாமல் கசன் காத்துவந்தான்.

அசுரர்களுக்குக் கசன் சுக்ராசாரியாரிடம் சீடனாக அமைந் திருப்பது தெரிந்தது. பிரகஸ்பதியின் மகன் எப்படியாவது சுக்ராசாரியாரிடம் சஞ்சீவினி வித்தையை அபகரித்துக் கொண்டு போய் விடுவான் என்பது அவர்களுடைய கவலை. ஒரு நாள் வனத்தில் குருவின் பசுக்களை மேய்த்துக் கொண்டிருந்தபோது அவனைப் பிடித்துக் கொன்று துண்டு துண்டாகச் செய்து நாய் களுக்கு இரையாகப் போட்டு விட்டார்கள். பசுக்கள் தாமாகக் கொட்டிலுக்குத் திரும்பி வந்ததைப் பார்த்து தேவயானி சந்தேகப் பட்டாள்.

"பிரபுவே! சூர்யன் அஸ்தமித்தான். உம்முடைய அக்கினி ஹோத்திரமும் முடிந்தது. இன்னும் கசன் வீடு வந்து சேர வில்லை. பசுக்கள் தாமாகத் திரும்பி வந்து விட்டன. அவனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்திருக்க வேண்டும். அவனில்லாமல் நான் பிழைத்திருக்க முடியாது'' என்று தகப்பனாரிடம் தேவயானி அழுதாள்.

மகளிடத்தில் மிகுந்த அன்புகொண்ட சுக்ராசாரியர் சஞ்சீவினி வித்தையைப் பிரயோகித்து இறந்துபோனவனை "வா!" என்று அழைத்தார். இவ்வாறு அழைக்கப்பட்ட கசன் நாய்களுடைய உடல்களைப் பிளந்துகொண்டு வெளிப் பட்டுச் சந்தோஷ முகத்துடன் எதிரே வந்து நின்றான்! "என்ன நடந்தது? ஏன் தாமதம் செய்தாய்?" என்று தேவயானி கேட்க, கசன் "காட்டில் பசு மேய்த்துவிட்டு விறகுச் சுமையை எடுத்துக்கொண்டு வரும்போது களைப்புற்று ஒரு ஆல மரத்தடியில் உட்கார்ந்தேன். பசுக்களும் ஒன்று கூடி மரத்து நிழலில் நின்றன. அசுரர்கள் வந்து என்னை நீ யார் என்று கேட்டார்கள். நான் பிரகஸ்பதியின் புத்திரன் என்றேன். உடனே அவர்கள் என்னை வெட்டிக் கொன்று விட்டார்கள். எப்படியோ மறுபடி உயிருள்ளவனாகி நாய்களின் உடலினின்று வந்து உன் சமீபம் நிற்கிறேன்" என்றான்.

மற்றொரு நாள் கசன் தேவயானிக்காகப் பூப் பறிக்க வனம் சென்றான் அசுரர்கள் அவனை அங்கே பிடித்துக் கொன்று அவன் தேகத்தை அரைத்துச் சமுத்திர ஜலத்தில் கரைத்து விட்டார்கள். அவன் போய் வெகு நேரமாகியும் வீட்டுக்குத் திரும்பி வராததைக் கண்டு தேவயானி தகப்பனிடம் சொன்னாள்.

முன் போலவே சஞ்சீவினியைப் பிரயோகித்தார். கசன் கடலினின்று உயிருடன் வெளிப்பட்டு வந்து நடந்த செய்தியைச் சொன்னான்.

* * *

அசுரர்கள் கசனை விட்டபாடில்லை. மூன்றாவது தடவையும் இவ்வாறே மறுபடியும் கொல்லப்பட்டான். அசுரர்கள் இந்தச் சமயம் அவன் உடலைச் சுட்டுச் சாம்பலாக்கி, சாம்பலை மதுபானத்தில் சேர்த்துச் சுக்ராசாரியருக்கே கொடுத்தார்கள். அவர் கசனுடைய உடலைச் சுட்டுக் கரைக்கப் பட்டிருந்த பானத்தைக் குடித்துவிட்டார். பசுக்கள் மேய்ப் பவனில்லாமல் தாமாக வீட்டுக்குத் திரும்பி வந்தன. தேவயானி

தகப்பனாரிடம் 'கசன் வரவில்லை ; அவன் கொல்லப்பட்டவன் தான். அவனின்றி நான் ஜீவித்திருக்க முடியாது" என்றாள்.

"நான் எத்தனை தடவை பிழைப்பு மூட்டினாலும் அவனை அசுரர்கள் கொல்லுவதாகவே தீர்மானித்திருக்கிறார்கள். அறிவு படைத்த நீ எந்தக் காரணத்தினால் ஒருவன் மரண மடைந்தாலும் அதைப்பற்றித் துக்கப்படுவது சரியல்ல. நீ ஏன் வருத்தப்படுகிறாய்? உலகமே உன்னை வணங்குகிறது. நீ விசனப்பட வேண்டாம்!" என்று சுக்ராசாரியர் பெண்ணுக்குச் சமாதானம் சொன்னார்.

கசனிடம் மிகுந்த அன்பைக் கொண்ட தேவயானி சமாதானம் அடையவில்லை. "இவன் அங்கிரஸ் ரிஷியின் பேரன், பிரகஸ்பதியின் புத்திரன், பிரம்மசாரி. தவமே தனமாக உடையவன், முயற்சியுள்ளவன். வேலைகளில் நிபுணன். அவன் கொல்லப்பட்டான். அவனின்றி நான் பிழைக்க முடியாது. அவன் போன வழியை நானும் அடைவேன்" என்று சொல்லி உபவாசம் பூண்டாள்.

சுக்ராசாரியர் அசுரர்கள்மீது கோபம் கொண்டார். இவ்வாறு பிரம்மஹத்தி செய்யும் இந்த அசுரர்களுக்கு நன்மை உண்டாகாது என்ற முடிவுக்கு வந்தார். சஞ்சீவி மந்திரத்தைச் சொல்லி கசனை வா என்று அழைத்தார். மந்திரத்தின் பலத் தால் பிரக்ஞையை அடைந்த கசன், "பகவானே! என்னை அனுக்கிரகிப்பீராக!" என்று குருவின் வயிற்றுக்குள்ளிருந்து சொன்னான். இதைக்கேட்ட சுக்ராசாரியார் வியப்படைந்து, 'பிரம்மசாரியே! எப்படி என் வயிற்றுக்குள் நீ வந்திருக்கிறாய்? இது அசுரர்களின் காரியமா? இந்த க்ஷணத்தில் அசுரர்களை அழித்துவிட்டு நான் தேவர்களிடம் போவேன்: சொல்!" என்று சுக்ராசாரியார் கோபமாகக் கேட்டார். கசன், வயிற்றுக் குள்ளிருந்து கொண்டே நடந்த விஷயத்தைச் சொன்னான்.

வைசம்பாயனர் சொல்லுகிறார்: மகானுபாவரும் தவப் புதையலும் அளவிறந்த மகிமையுள்ளவருமான சுக்கிராசாரி யார் மதுபானத்தினால் இவ்வாறு தாம் அடைந்த ஏமாற்றத்தை

எண்ணிக் கோபத்துடன் எழுந்து அடியில் கண்ட வாக்கியத்தை மக்கள் நன்மைக்காக வெளியிட்டார் :—

"எவன் அறிவின்மையால் மத்யபானம் செய்கிறானோ அவனைத் தருமம் உடனே விட்டு விலகும்; எல்லோராலும் இகழப்படுவான். இது என்னுடைய முடிவு. இதை இன்று முதல் ஜனங்கள் சாஸ்திரமாக வைத்துக்கொண்டு நடக்க வேண்டும்."

பிறகு சுக்ராசாரியார் தேவயானியைப் பார்த்து "பெண்ணே! இப்போது நீ எதைப் பிரியப்படுகிறாய்? கசன் உயிருடன் வரவேண்டுமானால் என் வயிற்றைப் பிளந்து கொண்டுதான் அவன் வெளியே வரவேண்டும். நான் இறந்தால்தான் கசனுக்கு உயிருண்டாகும்" என்றார்.

"ஐயோ! கசன் இல்லாவிட்டால் என்னைத் துக்கம் நெருப்பாக எரித்துவிடும். நீ இறந்துபோனாலோ நான் பிழைத்திருக்கவே முடியாது. இரண்டு விதத்திலும் நான் இறந்துபோவேன்" என்று தேவயானி அழுதாள்.

இப்பொழுது சுக்கிரருக்கு விஷயம் புரிந்துவிட்டது. "பிரகஸ்பதி புத்திரனே! நீ காரிய சித்தி அடைந்தாய். தேவயானிக்காக நான் உன்னை உயிருடன் வெளி வரச்செய்ய வேண்டும். நானும் இறந்து போகாமலிருக்கவேண்டும். இதற்கு ஒரேவழிதான். சஞ்சீவினி வித்தையை உனக்கு நான் உபதேசம் செய்கிறேன். நீ என் வயிற்றிலிருந்து கொண்டே உபதேசம் பெற்று அதைத் தெரிந்து கொண்டபின் என் வயிற்றைப் பிளந்து வெளியே வா! நான் இறந்து போவேன். பிறகு நீ கற்ற வித்தையைக்கொண்டு என்னைப் பிழைப்பித்து தேவயானியின் துக்கத்தை தீர்த்துவிடுவாயாக" என்று சொல்லிக் கசனுக்குச் சஞ்சீவினி வித்தையை உபதேசித்தார். அதன்மேல் கசன் பூரணச் சந்திரனைப்போல் சுக்கிராசாரியாருடைய வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளி வந்தான். அறிவே உருவங்கொண்ட சுக்கிரர் வயிறு கிழிந்து இறந்து கீழே விழுந்தார்.

கசன் உடனே தான் கற்ற சஞ்சீவினி வித்தையைக் கொண்டு சுக்கிராசாரியருக்கு மறுபடி உயிர் தந்து தேவயானியை மகிழ்ச்சி பெறச் செய்தான். "வித்தையில்லாதவனுக்கு வித்தையைத் தந்த ஆசாரியர் தந்தை ஆவார். அதுவேயின்றி நான் உம்முடைய வயிற்றிலிருந்து சிசுவாகவே பிறந்திருக்கிறேன். நீர் எனக்குத் தாயும் ஆனீர்" என்று சொல்லிச் சுக்கிராசாரியைக் கசன் நமஸ்கரித்தான்.

பிறகு பல வருஷம் கசன் சுக்கிராசாரியரிடம் படித்து வந்தான். விரதம் முடிந்து-ஸ்நானம் செய்த பிறகு குருவினால் விடை கொடுக்கப்பட்டு தேவலோகம் போகப் புறப்படும் போது தேவயானி கசனைப் பார்த்து, "அங்கிரஸ பௌத்திரனே! நீ ஒழுக்கத்தினாலும் குலத்தினாலும் கல்வியினாலும் இந்திரியங்களை அடக்கிய தவத்தினாலும் ஒளி பெற்று விளங்குகிறாய்! நீ பிரம்மசரிய நியமம் தவறாதிருந்த காலத்தில் நான் எப்படி உன்னுடன் அன்புடன் நடந்துகொண்டேனோ அப்படியே இப்போது என்னிடம் நீ அன்பு காட்டவேண்டும். பிரகஸ்பதி என்னால் பூஜிக்கத் தக்கவர். அவ்வாறே நீயும். என்னை நீ சாஸ்திரப்படி பாணிக் கிரகணம் செய்து கொள்வாயாக" என்று சொல்லி வணங்கி நின்றாள்.

அந்தக் காலத்தில் அறிவும் சிட்சையும் பெற்ற பிராமண ஸ்திரீகள் தைரியமாகத்தான் பேசுவார்கள். இதற்கு அநேக உதாரணங்கள் உண்டு. தேவயானி சொன்னதைக் கேட்ட கசன்,

"குற்றமற்றவளே! குரு புத்திரியாகிய நீ தருமத்தின்படி எப்போதும் என்னால் பூஜிக்கத்தக்கவள். நான் உன் தகப்பனார் சுக்ரர் வயிற்றிலிருந்து பிறந்து உயிர் பெற்றவன். அதனால் நான் உனக்குச் சகோதரன் ஆகிவிட்டேன். சகோதரியாகிய நீ என்னை இவ்வாறு வேண்டலாகாது" என்றான்

"நீ பிரகஸ்பதியின் புத்திரன். என் பிதாவின் புத்திரன் அல்ல. சிநேகத்தினாலும் காதலினாலும் பல தடவை உயிரிழந்த உன்னை நான் பிழைப்பிக்கச் செய்தேன். ஆதி

தொடங்கி உன்னிடம் நான் அன்பை வைத்தேன். பற்றுள்ளவளும் குற்றமில்லாதவளுமான என்னை நீ விடலாகாது" என்று தேவயானி பலமுறை வேண்டிக் கொண்டாள்.

"ஏவத்தகாத காரியத்தில் நீ என்னை ஏவவேண்டாம். அழகிய புருவங்களைக் கொண்டவளே! விசாலாட்சி! கோபமுள்ளவளே! உனக்கு நான் சகோதரன். எனக்கு சுபம் சொல்லி அனுப்பிக் கொடுப்பாயாக. தவறுதலின்றி என் ஆச்சார்யர் சுக்ரருக்கு எப்போதும் பணிவிடை செய்யக் கடவாய்" என்று கசன் தேவயானியின் வேண்டுகோளை மறுத்துவிட்டு இந்திரலோகம் சென்றான்.

சுக்கிராசாரியார் மகளைச் சமாதானப்படுத்தினார்.

# தேவயானி மணந்தது

சுக்கிராசாரியருடைய மகள் தேவயானியும் அசுர ராஜ கன்னிகைகளும் ஒரு நாள் வனத்தில் விளையாடிவிட்டுக் குளத்தில் நீராடிக்கொண்டிருந்தார்கள். அப்போது குளக் கரையில் வைத்திருந்த ஆடைகள் காற்றடித்து எல்லாருடை யதும் ஒன்றாகக் கலந்து போயின. குளித்தபின் கன்னிகைகள் கரைக்கு வந்து ஆடைகளை எடுத்து உடுத்திக் கொள்ளும்போது விருஷபாவ ராஜாவின் குமாரத்தி சர்மிஷ்டை தெரியாமல் தேவயானியின் புடவையை உடுத்திக்கொண்டாள். இதைப் பார்த்த தேவயானி, "அசுரப் பெண்ணே! மரியாதை தெரியாதவளாக இருக்கிறாயே! சிஷ்யன் மகள் குரு குமாரத்தியின் வஸ்திரத்தை எப்படி உடுத்திக்கொள்ளலாம்?" என்றாள்.

பாதி உண்மையாகவும் பாதி வேடிக்கையாகவும் சொல்லப்பட்டதாயினும் இது, ராஜகுமாரி சர்மிஷ்டைக்கு மிகுந்த கோபம் வந்தது "என் தகப்பனார் முன் உன் தந்தை தினமும் குனிந்து வணங்குவது உனக்குத் தெரியாதா? என் தகப்பன் கொடுத்ததை வாங்கிக்கொள்ளும் யாசகனுடைய பெண் அல்லவா நீ? பிராமணப் பெண்ணே! ஸ்துதிக்கப்படுகிற ராஜவம்சப் பெண் நான், பொருளைக் கொடுக்கும் ஜாதி நான். நீயோ பிச்சை எடுக்கும் குலம். ஆயுதம் எடுக்க முடியாத ஏழை ஜாதிப் பெண்ணாகிய நீ என்னையா பேசு கிறாய்?" என்று பலவாறாகச் சர்மிஷ்டை மிகக் கடுஞ் சொற் களைப் பிரயோகம் செய்தாள். வர வர சண்டை வலுத்துப் போயிற்று. கோபம் அதிகரித்துச் சர்மிஷ்டை தேவயானியைக் கன்னத்தில் அறைந்து தண்ணீர் இல்லாத ஒரு கிணற்றில் அவளைத் தள்ளிவிட்டாள். அவள் இறந்தே விட்டாள் என்று எண்ணி அசுரப் பெண்கள் திரும்பிப் பாராமல் அரண்மனைக்குப் போய்விட்டார்கள்.

கிணற்றில் தள்ளப்பட்ட தேவயானி மேலே ஏற முடி யாமல் அங்கேயே தவித்துக் கொண்டிருந்தாள். தற்செயலாக

பரத குலத்தைச் சேர்ந்த யயாதி சக்கரவர்த்தி வனத்தில் வேட்டையாடிக் களைத்துப்போய் தாகத்துக்குத் தண்ணீர் இருக்கும் இடத்தைத் தேடிக்கொண்டு அந்தக் கிணற்றண்டை தனியாக வந்து சேர்ந்தான். கிணற்றுக்குள் எட்டிப் பார்க்க அதில் ஏதோ பிரகாசமாகத் தெரிந்தது. நன்றாகப் பார்த்ததில் நெருப்பைப்போல் ஒளி வீசிக்கொண்டிருந்த அழகிய கன்னிகை ஒருத்தி அதிலிருக்கக் கண்டு வியந்தான்.

"நீ யார்? குண்டலங்களையும் சிவந்த நகங்களையும் உடைய யுவதியே! நீ யாருடைய மகள்? எந்தக் குலம்? கிணற்றில் எப்படி விழுந்தாய்?" என்று கேட்டான்.

"நான் சுக்கிராசாரியருடைய மகள். கிணற்றில் நான் விழுந்து கிடப்பது அவருக்குத் தெரியாது. என்னைத் தூக்கி விடும்" என்று தன் வலக் கையை நீட்டினாள். யயாதி கையைப் பிடித்து அவளைத் தூக்கிவிட்டான்.

மேலே தூக்கிவிடப்பட்ட தேவயானிக்கு அசுரராஜனுடைய நகரத்துக்குத் திரும்பிப் போக இஷ்டமில்லை. சர்மிஷ்டையின் நடத்தையை நினைத்து நினைத்து, தகப்பனிடம் போகாமல் வேறு எங்கேயாவது போய்விடுவதே நலம் என்று எண்ணினாள். யயாதியைப் பார்த்து, "பிராமணப் பெண்ணுடைய வலது கையைப் பிடித்தீர். நீர் சாந்தியும் சக்தியும் கீர்த்தியும் பெற்றவராகத் தெரிகிறது. யாராக இருந்தாலும் நீர் தான் எனக்குப் புருஷன் ஆவீர்!" என்று தேவயானி பிரார்த்தித்தாள்.

"அன்புள்ளவளே! நான் க்ஷத்திரியன். நீயோ பிராமணப் பெண். என்னுடன் உனக்கு எப்படி விவாகம் தகும்? உலகத்துக்கே ஆசாரியராகத் தகுந்த சுக்கிராசாரியருடைய பெண் க்ஷத்திரியனாகிய எனக்கு எவ்வாறு உரியவள் ஆவாள்? அம்மணி! நீ உன் வீடு செல்வாய்" என்று சொல்லிவிட்டு யயாதி தன் நகரம் சென்றான்.

பழைய நாள் வழக்கப்படி, க்ஷத்திரியப் பெண்ணானவள் பிராமணனை விவாகம் செய்து கொள்ளலாம். பிராமணப்பெண்

க்ஷத்திரிய புருஷனை விவாகம் செய்து கொள்வது தவறு. எல்லா ஜாதிகளிலும் பெண்களுடைய குலத்தைக் காப்பாற்றுவது முக்கியமாகக் கருதப்பட்டு வந்தது. 'அனுலோமம்' செல்லும்; 'பிரதிலோமம்' சாஸ்திரத்துக்கு விரோதம்.

தேவயானிக்கு வீடு செல்ல மனம் வரவில்லை. வனத்தில் ஒரு மரத்தடியில் துக்கப்பட்டு நின்று கொண்டிருந்தாள்.

சுக்ராசாரியருக்கு தேவயானி என்றால் உயிரைப் போல் அன்பு. வெகு நேரமாகியும் விளையாடப் போன மகள் திரும்பி வராததைப் பார்த்து ஒரு ஸ்திரீயை அனுப்பி, பார்த்து வரச் சொன்னார். தோழியுடன் தேவயானி சென்ற இடமெல்லாம் தேடிப்பார்த்துக் கடைசியாக தேவயானி இருந்த மரத்தண்டை வந்தாள். துக்கமும் கோபமும் மேலிட்டுக் கண்கள் சிவந்து துயரத்தில் மூழ்கியிருந்த தேவயானியைப் பார்த்து என்ன நடந்தது என்று கேட்டாள்.

'"அம்மணி' விரைவாகப் போய் விருஷபர்வனுடைய நகரத்துக்குள் இனி நான் கால் வைக்கமாட்டேன் என்பதை என் தந்தையிடம் சொல்லு" என்று தேவயானி அவளைச் சுக்ராசாரியாரிடம் அனுப்பினாள்.

சுக்ராசாரியர் தன் குமாரத்தியின் நிலைமையை அறிந்து மிகவும் துக்கப்பட்டு அவளிருந்த இடம் வந்து சேர்ந்தார். அவளை இரண்டு கைகளாலும் தழுவிக்கொண்டு 'மக்கள் கஷ்டத்தை அடைவதும் சந்தோஷப் படுவதும் தங்கள் குற்றங்களாலும் குணங்களாலுமே தான். நீ யார் பேரிலும் கோபிக்காதே. பிறருடைய குணதோஷம் நமக்கு ஒரு தீங்கும் இழைக்க முடியாது," என்று வேதாந்தத்தை எடுத்துச் சொல்லிப் பார்த்தார்.

"தந்தையே! என் குற்றங்களும் குணங்களும் இருந்தவாறு இருக்கலாம். அதற்கு நான் அதிகாரி. 'உன் அப்பன் அரசர்களிடம் ஸ்தோத்திரம் பாடுகிறவன். என்று விருஷ பர்வனுடைய மகள் சர்மிஷ்டை சொன்ன பேச்சு உண்மையா? ஸ்தோத்திரம் பாடி யாசித்துக் கையேந்திப் பிழைப்பவனா

ஒருவனுடைய பெண் என்று என்னை அவள் சொன்னாளே; நான் எவ்வளவு பொறுமையாக இருந்தும் சர்மிஷ்டை பலமுறை இந்த அகங்காரப் பேச்சைச் சொன்னாள். என்னை அடித்துக் குழியிலும் தள்ளிவிட்டுப் போய்விட்டாள். அவளுடைய தகப்பன் அதிகாரம் நடத்தும் ஊரில் நான் வாசம் செய்ய முடியாது" என்று தேவயானி கோபமும் துக்கமும் மேலிட்டு அழுதாள்.

சுக்கிராசாரியர் "தேவயானி! ஸ்தோத்திரம் செய்பவனுடைய பெண் அல்ல நீ. யாசித்துப் பிழைப்பவன் அல்ல உன் தகப்பன். உலகமெல்லாம் துதிக்கும் ஒருவனுடைய பெண்ணாவாய் நீ. தேவேந்திரனுக்கே இது தெரியும். விருஷபர்வனுக்கும் தெரியும். யோக்கியனானவன் தன் குணங்களைப் பற்றித் தானே புகழ்வதில் வருத்தம் அடைகிறான். ஆகையால் என்னைப் பற்றி அதிகமாக நான் சொல்ல முடியாது. எழுந்திரு. குலத்துக்குச் சிறப்புக் கொண்டுவரும் பெண் ரத்தினமே; பொறுமையை அடைவாயாக வீடு செல்வோம் வா" என்று தேவயானியைச் சுக்கிரர் தேற்றினார்.

இவ்விடத்தில் வியாச பகவான் சுக்கிராசாரியர் தன்னுடைய பெண்ணுக்கு உபதேசம் செய்வதாக வைத்து உலகத்துக்குக்கு உபதேசிக்கிறார்.

"அயலார் சொல்லும் நிந்தனைச் சொற்களை எவன் பொறுத்துக் கொள்கிறானோ அவன் உலகத்தை எல்லாம் ஜயிப்பான். கடிவாளத்தைப் பிடிப்பவன் அல்ல சாரதி. குதிரையை அடக்குவதுபோல் கோபத்தை எவன் அடக்குகிறானோ அவன் தான் உண்மையான சாரதியாவான். பாம்பு சட்டையை உரிப்பது போல் வந்த கோபத்தை எவன் நீக்கி விடுகிறானோ அவன் தான் ஆண்மை படைத்தவன். பிறர் எவ்வளவு வருத்தினாலும் எவன் வருந்தாமலிருக்கிறானோ அவனே காரியசித்தி அடைவான். மாதம் தவறாமல் யாகம் செய்து கொண்டு நூறு வருஷகாலம் கழித்தவனைக் காட்டிலும் கோபிக்காதவன் மேலான தீக்ஷிதனாவான். கோபிக்கிற சுபாவமுள்ளவனை வேலைக்காரனும், சிநேகிதனும், சகோதரனும்,

பாரியையும் பெற்ற புத்திரனும், தருமமும், சத்தியமும் எல்லாமே விட்டு விலகிப் போகும். சிறுவர்களும் சிறுமிகளும் பேசிய பேச்சை அறிவுள்ளவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள்.

"பிதாவே! நான் சிறு பெண். ஆயினும் தாங்கள் சொல்லும் தரும சூக்ஷமத்தை அறிவேன். ஆயினும் ஒழுக்கமும் மரியாதையும் தவறினவர்களிடம் தாம் வசிப்பது சரியாகாது, குலத்தை நிந்திப்பவர்களுடன் அறிஞர்கள் சகவாசம் செய்ய மாட்டார்கள். ஒழுக்கம் கெட்டவர்கள் எவ்வளவு தனவான்களாயிருந்தாலும் சண்டாளர்களே ஆவார்கள். அவர்களிடம் சாதுக்கள் வசிக்கலாகாது. விருஷபர்வனுடைய மகள் சொன்ன சொல்லால் கடையப்படும் அரணிக் கட்டையைப் போல் என் மனம் தீப்பற்றி எரிகிறது. ஆயுதங்களினுல் உண்டான காயம் ஆறும். தீயினுல் உண்டான புண்ணும் ஆறும். சொல்லினுல் உண்டான புண் தேகம் உள்ள வரையிலும் ஆருது" என்று தேவயானி தகப்பனை வணங்கிச் சொன்னுள்.

சுக்கிராசாரியார் விருஷபர்வனிடம் போனுர். அரசன் சிம்மாசனத்தில் வீற்றிருந்தான்.

"அரசனே! செய்யும் பாவம் உடனே பலனைத் தராமலிருக்கலாம். ஆனுலும் முடிவில் குலத்தின் வேரையே அறுத்துவிடும். இந்திரியங்களை ஜயித்து ஏதொரு பாபமும் அறியாமல் தருமத்தைக் காத்து என் வீட்டில் அன்புடன் பணிவிடை செய்து பிரம்மசரியம் நடத்திவந்த பிருகஸ்பதி குமாரன் கசனை நீ உன் ஆட்களால் முந்திக் கொல்வித்தாய். அதையும் பொறுத்தேன். மானமே பெரிதாக உணர்ந்த என் மகள் தேவயானி உன் மகளிடம் அவமானப் பேச்சைக் கேட்டாள். கிணற்றிலும் தள்ளப் பட்டாள். அவள் இனி நகரத்தில் வசிக்க முடியாதவளாயிருக்கிருள். அவளில்லாமல் நானும் இங்கே வசிக்க முடியாது. ஆதலால், மகாராஜனே! உன் தேசத்தை விட்டு நான் வெளியேறுவேன்: நீ விசனப்பட வேண்டாம்" என்ருர்.

இதைக் கேட்டு அசுர ராஜன் திடுக்கிட்டு "தாங்கள் சொன்ன விஷயங்களில் நான் ஒரு பாவமும் அறியாதவன். தாங்கள் என்னை விட்டுப் போனால், நான் அக்கினியில் தான் பிரவேசிக்க வேண்டும்" என்றான்.

"நீயும் உன் அரக்கர்களும் அக்கினியில் விழுந்தாலும் சரி, கடலில் விழுந்து பிராணனை விட்டாலும் சரி, என் மகளுடைய துக்கத்தை நான் தாங்க முடியாது. அவள் எனக்கு உயிரைக் காட்டிலும் பிரியமானவள். அவளை நீ சமாதானப்படுத்தினால் சரி. இல்லாவிட்டால் நான் உன்னை விட்டுப் பிரியவேண்டியது அவசியம்" என்றார் சுக்கிராசாரியார்.

விருஷபர்வன் தன் சுற்றத்தாரைக் கூட்டிக்கொண்டு தேவயானி இருந்த மரத்தடிக்குப் போய் அவள் காலில் விழுந்தான்.

"யாசிப்பவன் மகள் என்று என்னைச் சொன்ன சர்மிஷ்டை எனக்கு வேலைக்காரியாக அமையவேண்டும். என் பிதா என்னை எந்த இடத்தில் கொடுக்கிறாரோ அங்கே அவளும் என் பின்னே தாசியாகச் செல்லவேண்டும்" என்று பிடிவாதமாகச் சொன்னாள் தேவயானி.

விருஷபர்வன் "அப்படியே என்று தாதிகளுக்குச் சொல்லி சர்மிஷ்டையை அழைத்துவர உத்தரவிட்டான்.

சர்மிஷ்டையும் தான் செய்த குற்றத்தை ஒப்புக்கொண்டு பணிந்தாள். "தோழி தேவயானி எப்படி விரும்புகிறாளோ அவ்வாறே நடக்கட்டும். என் பிழையினால் என் தகப்பனார் ஆசிரியரை இழக்கவேண்டாம். அவளுக்கு நான் தாசியாகவே இருப்பேன்" என்று சர்மிஷ்டை ஒப்புக் கொண்டாள். தேவயானி சமாதான மடைந்து தகப்பனாருடன் ஊருக்குள் பிரவேசித்து வீடு சென்றாள்.

* * * *

பிறகு ஒரு நாள் தேவயானி யயாதியை மறுபடியும் வனத்தில் கண்டாள். "என் வலது கையைப் பிடித்த நீர் என்னை

மனைவியாகக் கொள்ள வேண்டும்" என்று தேவயானி மறுபடியும் யயாதியைக் கேட்டுக் கொண்டாள். "க்ஷத்திரியன் பிராமணப் பெண்ணை எவ்வாறு விவாகம்செய்துகொள்ள முடியும்?" என்று அவன் மறுபடியும் ஆட்சேபிக்க, இருவரும் சுக்ராசாரியரிடம் சென்று அவரைக் கேட்டு விவாகத்திற்கு அவருடைய அனுமதியைப் பெற்றனர்கள். சில சமயம் பிரதிலோம விவாகங்களும் நடைபெற்றன என்பதற்கு இது உதாரணம். இது முறையாகும், இது முறையாகாது என்று சாஸ்திரம் சொல்லுமே யொழிய, எந்த விதமான விவாகமும் நடந்துவிட்டபின் புறக்கணிக்கப்பட மாட்டாது.

யயாதியும் தேவயானியும் வெகுநாட்கள் சுகமாகக் காலம் கழித்தார்கள். சர்மிஷ்டை தாசியாக இருந்து வந்தாள். ஒரு நாள் சர்மிஷ்டை யயாதியைத் தனியாகக் கண்டு தன்னையும் விவாகம் செய்துகொள்ள அவனை மிகவும் வேண்டிக் கொண்டாள். அரசனும் அவளுடைய பேச்சுக்கு இணங்கி தேவயானிக்குத் தெரியாமல் அவளை ரகசியமாக விவாகம் செய்து கொண்டான்.

தேவயானிக்கு இது தெரிந்தது. கோபத்தினால் பரவசமடைந்தாள். தனக்கு யயாதி தந்த வாக்கையும் சத்திய பிரதிஜ்ஞையையும் பொய்யாக்கி விட்டான் என்று அவள் தகப்பனாரிடம் முறையிட்டாள். சுக்ராசாரியார் கோபங் கொண்டு "உடனே மூப்பு அடைவாயாக!" என்று யயாதிக்குச் சாபம் இட்டார்.

நடு யௌவன பருவத்தில் இவ்வாறு திடீர் என்று கிழவனாய்விட்ட யயாதி சுக்ராசாரியரைப் பலவாறு வேண்டிக் கொண்டான். "பிழை செய்தவனைப் பொறுத்தருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டான். மகளுடைய உயிரைக் காப்பாற்றினவன் என்று அவரும், மனமுருகி,

"அரசனே! நீ மூப்பை அடைந்தாய். அதை என்னால் மாற்ற இயலாது. ஆனால் உன் மூப்பை வேறொருவனுடைய சம்மதம் பெற்று நீயே மாற்றிக் கொள்ளலாம். அவன் இளமையை நீ அடைந்து உன் மூப்பை அவனுக்குத் தரலாம்" என்று சொல்லி, ஆறுதல் தந்து யயாதியை ஆசீர்வதித்து அனுப்பினார்.

# யயாதி

பாண்டவர்களின் முன்னோர்களில் ஒருவனான யயாதி சக்கரவர்த்தி, தோல்வி என்பதை அறியாத மிக்க பராக்கிரமசாலி. எப்போதும் நியமம் காத்துப் பிதிருக்களையும் தேவர்களையும் மிகுந்த பக்தியுடன் ஆராதனம் செய்து வந்தவன். பிரஜைகளுக்கெல்லாம் நன்மை செய்து மிக்க கீர்த்தி பெற்றான்.

தருமம் தவறாமல் இவ்விதமாகப் பிரஜைகளைப் பரிபாலித்து வந்த யயாதி தன் மனைவி தேவயானிக்கு ஒரு தவறு செய்து அதன் பயனாக மாமனார் சுக்ராசாரியர் இட்ட சாபத்தினால் திடீர் என்று மூப்பை அடைந்தான். "ரூபத்தை அழிப்பதும் துன்பத்தைத் தருவதுமாகிய மூப்பை அடைந்தான்" என்கிறார் பாரதம் பாடிய கவி. விருத்தாப்பியம் அடைந்த அனைவரும் அதிலுள்ள துக்கத்தை அறிவார்கள். அதிலும் நடுயௌவனத்திலிருக்கும் ஒருவன திடீர் என்று மூப்பை அடைந்துவிட்டால சொல்ல வேண்டுமா?

இவ்வாறு எதிர்பாராமல் கிழத்தனத்தை அடைந்த யயாதிக்குக் காம சுகத்தில் ஆசை தீர்ந்திருக்கவில்லை. அவனுக்கு ஐந்து அழகிய குமாரர்கள் இருந்தனர். அவர்கள் எல்லாரும் க்ஷத்திரியக் கலைகளில் பயிற்சி பெற்ற நல்ல குணவான்கள். அவர்களை அழைத்து யயாதி, "உங்கள் பாட்டனார் சுக்ராசாரியருடைய சாபத்தினால் இந்த மூப்பை நான எதிர்பாராத வண்ணம் அடைந்துவிட்டேன். புத்திரர்களே! இதுவரையில் நான் நியமங்களிலேயே என் காலமெல்லாம் கழித்துவிட்டேன். நான் போகங்களை திருப்திப்பட அனுபவிக்கவில்லை. என் மூப்பைப் பெற்றுக்கொண்டு உங்களில் ஒருவன் தன் இளமைப் பருவத்தை எனக்குக் கொடுக்கவேண்டும். அவ்வாறு எவன் கிழத்தனமடைந்த என் சரீரத்தை எனக்காக ஒப்புகொள்ளுகிறானோ அவன் என் ராஜ்யத்தை ஆளக்கடவன். அவனுடைய இளம் சரீரத்துடன் காம சுகங்களை அடைய நான் விரும்புகிறேன்" என்றான்.

முதலில் மூத்த குமாரனைக் கேட்டான். அவன், "மகாராஜாவே! உம்முடைய கிழத்தனத்தை நான் பெற்றுக் கொண்டேனால் பெண்களும் வேலைக்காரர்களும் என்னைப் பார்த்துச் சிரிப்பார்களே! என்றால் முடியாது; என்னைக் காட்டிலும் உமக்குப் பிரியமான என் தம்பிகளைக் கேளும்" என்றான்.

இரண்டாம் மகனைக் கேட்டதற்கு அவன், "தந்தையே! பலத்தையும் ரூபத்தையும் மட்டுமல்லாமல் அறிவையும் அழிப்பதான மூப்பைப் பெற்றுக்கொள்ளச் சொல்லுகிறீர். இதற்கு இசைய எனக்குப் போதிய தைரியம் இல்லை" என்று மரியாதையாக மறுத்துவிட்டான்.

மூன்றாம் மகனும், "கிழவனுக்கு யானை ஏற முடியாது; குதிரை ஓட்டமுடியாது. பேச்சும் தடுமாறும். அந்த நிலையில் நான் என்ன செய்ய முடியும்? அவ்வாறு ஒன்றும் செய்ய முடியாத நிலைமையில் உயிருடன் இருந்து என்ன பயன்? என்னால் ஒப்புக்கொள்ள முடியாது" என்று சொல்லிவிட்டான்.

இவ்வாறு மூவரும் மறுத்துவிட அரசனுக்குக்கோபம் பொங்கிற்று. நான்காவது குமாரனைப் பார்த்து, "நீ சில காலத்துக்கு என் மூப்பைப் பெற்றுக்கொள்ளக் கடவாய். சிலகாலத்திற்கு உன் இளமையை எனக்கு தந்தாயானால் பிறகு உனக்குத் திருப்பிக் கொடுத்துவிட்டு, எனக்குச் சாபமாக வந்த மூப்பை நானே எடுத்துக் கொண்டு விடுவேன்" என்றான்.

இவ்வாறு பரிதபித்துக் கெஞ்சின அரசனைப் பார்த்து "அரசனே! மன்னிக்க வேண்டும். கிழவன் தட்டுத்தடுமாறி உடல் அசுத்தம் நீக்கிக் கொள்வதற்குக் கூடப் பிறர் உதவியை நாட வேண்டியதாகும். நீர் சொல்லுவதை ஒப்புக்கொண்டால் நான் எல்லாக் காரியங்களிலும் சுதந்திரத்தை இழந்து வாழ்க்கையை நடத்த வேண்டியவனாவேன். இது எனக்குப் பிடிக்கவில்லை" என்று நான்காவது மகனும் சொல்லி விட்டான்.

இவ்வாறு நான்கு புதல்வர்களாலும் நிராகரிக்கப் பட்ட யயாதி துக்கத்தில் மூழ்கினான். கொஞ்சநேரங் கழித்துத் தன் சொல்லை எப்போதும் தவருத கடைசிக் குமாரனைப் பார்த்து, "நீ தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். இந்த மூப்பும் கோரமான தோல்மடிப்புகளும் தள்ளாமையும் நரையும் சுக்ராசாரியருடைய சாபத்திஞல் பெற்றேன். இதை நான் பொறுக்க முடியவில்லை. இந்தத் துன்பத்தை நீ என்னிடமிருந்து பெற்றுக் கொண்டால் நான் சில காலம் போகங்களை அனுபவித்துவிட்டுப் பிறகு உன் இளமையை உனக்குத் திருப்பிக் கொடுத்துவிட்டு மூப்பையும் துக்கத்தையும் வாங்கிக்கொள்வேன். உன் அண்ணன்மார்களைப்போல் நீயும் மறுத்துவிட வேண் டாம்!" என்று இறைஞ்சினான்.

கடைசி ராஜகுமாரனான பூரு என்பவன் அன்பு மேலிட்டு, "அப்பனே! உன் கட்டளையின்படி நான் சந்தோஷமாகச் செய்கிறேன். மூப்பையும் ராஜ்ய பாரத் தையும் எடுத்துக் கொள்கிறேன்" என்று சொன்ன வுடன யயாதி அவனைக் கட்டி அணைத்துக் கொண்டான்.

மகனை இவ்வாறு தீண்டின உடன் தன் குமார னுடைய இளமையை யயாதி அடைந்தான். மூப்பைப பெற்றுக்கொண்டு கடைசி மகஞன பூரு என்பவன் ராஜ்ய பாலனம் செய்து பெரும் கீர்த்தி பெற்ருன்.

யயாதி தன் இரண்டு பத்தினிகளுடன் நீண்ட காலம் காமசுகம் அனுபவித்தான். அதன் பின் குபேர னுடைய உத்யான வனத்தில் ஒருஅப்ஸரஸுடன் அநேக ஆண்டுகள் ரமித்தான். இவ்வாறு பல வருஷங்கள் கடந்தன. ஆயினும் யயாதி திருப்தி அடையவில்லை! பிறகு மகனிடம் திரும்பி வந்து அவனுக்கு யயாதி சொன்னதாவது:

"என் பிரியமுள்ள மகனே! காமத்தீயானது விரும் பினவற்றை அனுபவிப்பதனல் ஒரு பொழுதும் ஆருது. நெய்யினல் அக்கினி ஆருமல் மேலும் மேலும் ஜொலிப் பதுபோல் விஷய அனுபவத்திஞல் ஆசைகள் விருத்தி ஆகுமே தவிர தணிவது கிடையாது என்பதை படித்

தேனே ஒழிய உண்மையை உணரவில்லை. இப்போது அறிந்தேன். நெல்லும் பொன்னும் பசுவும் பெண்களும் மனிதன் ஆசையை ஒருநாளும் தீர்க்கமுடியாது. விரும்பும் வெறுப்பும் இல்லாத சாந்த நிலையை அடைய வேண்டும். அதுவே பிரம்மநிலை. உன் இளமையை நீ பெற்றுக் கொண்டு ராஜ்யத்தைக் கீர்த்தியுடன் பரிபாலிப்பாயாக.”

இப்படிச் சொல்லி யயாதி தன் மூப்பைத் திரும்பப் பெற்றுக் கொண்டான். இளமையை மறுபடி அடைந்த பூருவை ராஜ்ய பரிபாலனம் செய்ய அமைத்து விட்டு யயாதி வனம் சென்றான். அங்கே பல்லாண்டுகள் தவம் செய்து சுவர்க்கம் அடைந்தான்.

# விதுரன்

மனௌ உறுதியும் சாஸ்திர அறிவும் பெற்றுச் சத்தியத்திலும் தவத்திலும் வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்த மாண்டவ்யர், ஊருக்கு வெளியே ஒரு வனத்தில் ஆசிரமம் கட்டிக்கொண்டு வசித்து வந்தார். ஒரு நாள அவர் ஆசிரமத்துக்கு வெளியே ஒரு மரத்தடியில் மௌனத்தில் ஆழ்ந்திருந்தபோது சில கொள்ளைக்காரர்கள் அந்தப் பக்கம் வந்தார்கள். அரசனுடைய சேவகர்கள் அவர்களைத் துரத்தி வந்தபடியால் அகப்படாமல் பதுங்க அந்த இடம் வசதியாக இருக்கும் என்று எண்ணி ஆசிரமத்தில் பிரவேசித்தார்கள். கொள்ளை யடித்துக் கொண்டு வந்த சொத்துக்களை அங்கே ஒரு மூலையில் வைத்து விட்டு மற்றொருபுறம் அவர்களும் ஒளிந்து கொண்டார்கள். அரசனுடைய சேவகப் படையாட்கள் திருடர்கள் சென்ற வழியைத் தொடர்ந்து கொண்டு ஆசிரமத்தண்டை வந்து சேர்ந்தார்கள்.

மௌனமாக உட்கார்ந்து யோகத்தில் அமர்ந்திருந்த மாண்டவ்யரைப் பார்த்து படைத் தலைவன் "திருடர்கள் இந்தப் பக்கம் வந்தார்களே, அவர்கள் எந்த வழியாகச் சென்றார்கள்? சீக்கிரம் சொல்லுங்கள்; அவர்களை தொடர்ந்து போய்ப் பிடிக்க வேண்டும்" என்று கேட்டான். யோகத்தில் ஆழ்ந்திருந்த முனிவர் பதில் ஒன்றும் சொல்லவில்லை. படைத் தலைவன் மறுபடியும் அதட்டிக் கேட்டான்.

முனிவர் காதில் ஒன்றும் படவில்லை. இதற்குள் சேவகர்களில் சிலர் ஆசிரமத்துக்குள் பிரவேசித்துக் களவுபோன சொத்துக்கள் அங்கே இருப்பதைக் கண்டு படைத் தலைவனைக் கூப்பிட்டார்கள். எல்லாரும் உள்ளே போய்ப் பார்த்ததில் களவு போன எல்லாச் சொத்துக்களும் சிக்கின. ஒளிந்திருந்த திருடர்களையும் கண்டார்கள்.

"ஓகோ! பிராமணர் ஒன்றும் பேசாமல் மௌன வேஷம் போட்டதனுடைய காரணம் இப்போது தெரிந்து

விட்டது. இவரே திருடர்களுக்குத் தலைவர். இவருடைய ஏவுதலினாலேதான் இந்தக் கொள்ளை நடந்திருக்கிறது" என்று தீர்மானித்து ஆட்களை அங்கேயே காவல்வைத்து விட்டுப் படைத் தலைவன் மட்டும் அரசனிடம் சென்று கையும் களவுமாக மாண்டவ்ய ரிஷியைப் பிடித்துவிட்ட தாகச் சொன்னான்.

பிராமணன் திருட்டுக் கூட்டத்திற்குத் தலைவனாக இருந்து கொண்டு ரிஷிவேஷம் போட்டு உலகத்தை ஏமாற்றி வந்திருக்கிறான் என்று அரசன மிகுந்த கோபங் கொண்டு "மோசக்காரப் பாதகனை உடனே சூலத்தில் ஏற்றுங்கள்" என்று விவரம் விசாரிக்காமல் தண்டனை கொடுத்து விட்டான்.

படைத் தலைவன் திரும்பிச் சென்று, மாண்டவ்யரை அங்கேயே சூலத்தில் ஏற்றிவிட்டுக் கைப்பற்றின களவு சொத்துகளை அரசனிடம ஒப்புவித்து விட்டான்.

சூலத்தில் குத்தியேற்றப்பட்ட தர்மாத்மாவான முனிவரோ வெகு காலம் வரையில் மரணம் அடைய வில்லை. யோகத்திலிருந்த காலத்தில் குத்தப் பட்டபடி யால் அந்த யோகசக்தியால் அபபடியே உயிருடன் இருந்து வந்தார். வனத்தில் அங்கங்கே இருந்த ரிஷிகள் அவ்விடம் வந்து சேர்ந்தார்கள். "ஓ மாண்டவ்யரே ! இந்த பயங்கரமான துயரத்தைத் தாங்கள் ஏன் அடைந் தீர்கள் ?" என்று தபோதனர்கள் கேட்டனர்.

"நான் யாரிடத்தில் குற்றம் சொல்லுவேன்? உலகத் தைக் காக்கும் அரசனுடைய சேவகர்கள் இவ்வாறு எனக்குச் சிக்ஷை கொடுத்திருக்கிறார்கள்" என்று மாண் டவ்யர் சொன்னார்.

சூலத்தில் ஏற்றப்பட்ட ரிஷி அன்ன ஆகாரமின்றி உயிருடனே இருக்கிறார் என்றும், அவரைச் சுற்றி வனத் திலிருக்கும் மற்ற ரிஷிகள் வந்து கூடியிருக்கிறார்கள் என் றும் அரசனுக்குச் சமாசாரம் எட்டியது. அரசன் வியப் பும் திகிலும் அடைந்து உடனே பரிவாரத்துடன் வனத் துக்குப் போனான். அரசன் ரிஷியினுடைய நிலைமையைப்

பார்த்துப் பிரமித்துப்போய் உடனே சூலத்திலிருந்து அவரை இறக்கிவிட உத்திரவிட்டு அவர் காலில் விழுந்து நமஸ்கரித்து "அறியாமையால் நான் இந்த அபராதம் செய்துவிட்டேன். என்னை மன்னிக்க வேண்டும்" என்று கெஞ்சினான்.

மாண்டவ்யர் அரசன்மேல் கோபிக்கவில்லை. நேராகத் தரும தேவதையிடம் சென்றார். ஆசனத்தில் வீற்றிருந்த தரும தேவதையைக் கண்டு "இந்த உபத்திரவத்தை அனுபவிக்கும்படியான கருமம் நான் என்ன செய்தேன்? சொல்லக் கோருகிறேன்" என்று கேட்டார்.

ரிஷியின் தவ வலிமையை அறிந்த தருமதேவன் பயந்து பணிந்து "சுவாமி, நீர் பக்ஷிகளையும் வண்டுகளையும் இம்சித்தீர். சொற்பமாயிருந்தாலும் தானமும் பாவமும் மிகுந்த அளவில் நற்பயனையும் தீய பயனையும் தரும் என்பது உமக்குத் தெரியுமல்லவா?" என்று பதில் சொன்னான்.

தருமன் சொன்னதைக் கேட்ட மாண்டவ்யர் வியப்புற்று, "இந்த இம்சையை நான் எப்போது செய்தேன்?" என்று கேட்டார்.

"நீர் குழந்தையாக இருந்த காலத்தில் செய்தீர்" என்றார்.

"சிறு பையன் அறியாமையால் செய்த குற்றத்திற்குப் பெரிய தண்டனை உன்னால் விதிக்கப்பட்டது. இதற்கீக நீ பூலோகத்தில் மனுஷ்யனாகப் பிறப்பாய்" என்று தரும தேவதையை மாண்டவ்ய ரிஷி சபித்தார்.

இவ்வாறு மாண்டவ்ய-ரிஷியின் சாபத்தைப் பெற்ற தரும தேவதை விசித்திர வீரியனின் மனைவி அம்பாலிகையின் தாசி வயிற்றில் விதுரனாக அவதரித்தான்.

தர்ம தேவதையின் அவதாரமே விதுரன் என்பதற்கு இந்தக் கதை. விதுரன் தர்ம சாஸ்திரத்திலும் ராஜநீதியிலும் ஒப்பற்ற தேர்ச்சியடைந்து ஆசையும் கோபமுமற்ற மகாத்மாவென்று உலகத்தில் பெரியோரெல்லாரா

லும் கருதப்பட்டான். பால்ய பருவத்திலேயே திருத ராஷ்டிர ராஜாவுக்குப் பிரதான மந்திரியாக விதுரனை பீஷ்மர் அமைத்தார்.

விதுரனுக்கு ஒப்பான தர்ம நிஷ்டனும் அவனைப் போல் சிறந்த அறிவு பெற்றவனும் மூவுலகங்களிலும் யாரும் இல்லை என்று வியாசர் சொல்லுகிறார். திருத ராஷ்டிரன் சூதாட்டத்துக்கு அனுமதி கொடுத்த காலத் தில், விதுரன் அவன் காலில் விழுந்து, "அரசனே! பிரபுவே! இந்தக் காரியத்தை நான் ஒப்பவில்லை. இந்தச் சூதாட்டத்தின் காரணமாக உமது புத்திரர்களுக்கு விரோ தம் வரும். வேண்டாம்" என்று மிகவும் வற்புறுத்தித் தடுத்தான்.

திருதராஷ்டிரனும், "சூதாட்டம் வேண்டாம். விது ரன் அங்கீகரிக்கவில்லை. மிகவும் சிறந்த புத்தியுள்ள விது ரன் நமக்கு எப்போதும் நன்மையையே சொல்லுபவன். அவன் என்ன சொல்லுகிறானோ அதுவேதான் நமக்கு நன்மை தரும். நிகழ்ந்ததும் நிகழப்போவதும் அறிந்தவ ரான பிரகஸ்பதி எழுதிய சாஸ்திரமெல்லாம் விதுரன் அறிந்திருக்கிறான். வயதில் என்னைவிடச் சிறியவனாயினும் சிறந்த புத்திசாலியான விதுரனை நம்முடைய குலத்திற் குத் தலைவனாகக் கருதப்படுகிறான். மகனே! சூதாட்டம் வேண்டாம்! சூதாட்டத்தில் பெரிய விரோதம் வரும் என்று விதுரன் சொல்லுகிறான். நம்முடைய ராஜ்யத்தின் நாசத்தை அவன் இதில் காண்கிறான். இந்த சூதாட்ட யோசனையை விட்டு விடு" என்று பலவாறாகத் துஷ்ட புத்தி கொண்ட தன் மகனுக்குத் திருதராஷ்டிரன் சொல் லிப் பார்த்தான். ஆனால் அவன் கேட்கவில்லை. மக னிடத்தில் வைத்த அன்பினால் அவன் கோரியபடியே யுதிஷ்டிரனுக்குச் சூதாட்ட அழைப்பு அனுப்பிவிட்டான்.

# குந்தி தேவி

கண்ணனுடைய பாட்டனும் யாதவகுல சிரேஷ்டனுமான சூரன் என்பவனுக்குப் பிருதை என்ற ஒரு மகள் இருந்தாள். இவள் அழகிலும் குண விசேஷங்களிலும் உலகப் பிரசித்தமாயிருந்தாள். தன் அத்தை மகனை குந்திபோஜனுக்குச் சந்தானம் இல்லாதிருந்தபடியால் சூரன் தன முதல் குழந்தையாகிய பிருதையை அவனுக்குச் சுவீகார மகளாகக் கொடுத்தான். அதன் பின் அவள் குந்தி போஜன் மகளாகவே குந்தி என்று அழைக்கப் பட்டு வந்தாள்.

குந்தி சிறு பெண்ணாக இருந்த காலத்தில் தகப்பனார் கிருகத்துக்கு அதிதியாக வந்த துருவாச மகரிஷிக்கு மிகவும் பொறுமையுடனும் கவனத்துடனும் ஒரு வருஷ காலம் பணிவிடை செய்து பூஜித்து வந்தாள். அவர் மிக்க மகிழ்ச்சி யடைந்து ஒரு திவ்ய மந்திரத்தை அவளுக்கு உபதேசித்தார். "இந்த மந்திரத்தைச் சொல்லி நீ எந்த தேவதையை எண்ணி அழைக்கிறாயோ அந்த தேவதை வந்து தன்னுடைய மகிமையைக் கொண்ட ஒரு புத்திரனை உனக்குத் தருவான்" என்று வரம் தந்தார். பின்னால் இவளுடைய புருஷனுக்கு நேரிடப் போகிற ஆபத்தை * ஞானக் கண்ணால் அறிந்து துருவாசர் இந்த வரத்தைத் தந்தார்.

சிறு பெண்ணானபடியால் தான் பெற்ற மந்திரத்தை உடனே பரீக்ஷை செய்யவேண்டுமென்று எண்ணம் தோன்றிற்று. ஆகாயத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த சூரிய பகவானை எண்ணி மந்திரத்தைச் சொன்னாள். உடனே வானம் மேகங்களால் மறைந்தது. அழகிய உருவத்துடன் பகவான் சூரியன் ஒளி வீசிக்கொண்டு விசாலாட்சியான குந்தியிடம் வந்தான். தடுக்கமுடியாத பிரியமும் ஆகர்

---

* பாண்டுவுக்கு குழந்தை உண்டாகாத சாபம் ஒரு ரிஷி இட்டார். இது அடுத்த கதையில் சொல்லப்படும்.

ஷண வேகமும் கொண்டு நின்றான். இந்த அற்புதத்தைக் கண்ட குந்தி திகைத்துப்போய், "பகவானே! நீர் யார்?" என்றாள்.

"பிரியமானவளே! நான் ஆதித்தன். புத்திரலாபம் கொடுக்கும் மந்திரத்தைக்கொண்டு நீ ஏவியபடியால் வந்தேன்" என்றான் சூரிய பகவான்.

குந்திதேவி நடுங்கி, "நான் பிதாவுக்கு உட்பட்ட கன்னிகை. துருவாச ரிஷி கொடுத்த வித்தையைப் பரிக்ஷை செய்யத்தான் நினைத்தேன். சிறுமியுடைய குற்றத்தை மன்னிக்கவேண்டும்" என்றாள். மந்திரத்தின் வசீகர சக்தியின் பயனாகச் சூரிய பகவானுக்குத் திரும்பிப் போக முடியவில்லை. பழியை அஞ்சி நின்றவளுக்குப் பல வகையாக அன்பு பாராட்டி, தைரியம் சொல்லி வற்புறுத்தினான்.

"ராஜகுமாரியே பயப்பட வேண்டாம். என் அனுக்கிரகத்தினால் உனக்கு ஒரு குற்றமும் வராது. என்னை விட்டுப் பிரிந்ததும் நீ மறுபடியும் முன்போல் பூரணகன்னியாகி விடுவாய்" என்று சொன்னான்.

உலகத்திற்கே ஒளியும் உயிரும் தருபவனான ஆதித்தன் குந்திக்குக் கருப்பத்தைத் தந்துவிட்டான். அதன் பயனாக ஆயுதம் தரித்தவர்களில் சிறந்த வீரனும், சூரியனைப் போன்ற ஒளியும் அழகும் பொருந்தியவனும், உடலோடு உடன் பிறந்த கவசமும் குண்டலங்களும் தரித்தவனுமான கர்ணனைக் குந்தி பெற்றாள். பெற்ற பின் சூரிய பகவானின் வரத்தின்படி மறுபடியும் கன்னி நிலையை அடைந்துவிட்டாள்.

குழந்தையை என்ன செய்வது என்று யோசித்து, தன் குற்றத்தை மறைப்பதற்காக ஒரு பெட்டியில் சிசுவை வைத்துப் பத்திரமாக மூடி ஜலத்தில் விட்டுவிட்டாள். தண்ணீரில் மிதந்து கொண்டிருந்த அந்தப் பெட்டியைத் தேரோட்டி ஒருவன் எடுத்து அதிலிருந்த குழந்தையைப் பார்த்து மகிழ்ந்து தன் பாரியையிடம் கொடுத்தான். சூரிய குமாரனான கர்ணன் இவ்வாறு தேரோட்டியின் குழந்தையாக வளர்ந்தான்.

கர்ணனைப் பெற்றுவிட்டு மறுபடியும் கன்னியாகிய குந்தி விவாகத்துக்குத் தகுந்த வயது அடைந்தாள். குந்தி போஜன் ராஜகுமாரர்களை வரவழைத்து அவளைக் கொடுக்கச் சுயம்வரச் சபை கூட்டினான். நிகரற்ற அழகும் குணமும் கொண்ட ராஜகுமாரியை மனைவியாக அடையப் பல அரச குமாரர்கள் வந்து சேர்ந்தார்கள். அந்தச் சபையிலிருந்த எல்லோருடைய ஒளியையும் மங்கச் செய்து சிம்மத்தைப்போல் வீற்றிருந்த குல சிரேஷ்டனான பாண்டு ராஜனுடைய கழுத்தில் குந்திதேவி மாலையைப் போட்டாள். விவாகம் பூர்த்தி பெற்றுக் குந்தி தேவி பாண்டு மகாராஜனுடன் ஹஸ்தினாபுரம் சென்றாள்.

இராஜ வம்ச வழக்கத்தின்படியும் பீஷ்மருடைய யோசனையின்படியும் பாண்டு ராஜன் சில நாள் கழித்து மத்ர ராஜனுடைய சகோதரி மாத்ரியையும் இரண்டாவது மனைவியாகக் கொண்டான். புத்ரோத்பத்தியைப்பற்றிய கவலைக்காக அக்காலத்தில் இவ்வாறு அரசர்கள் இரண்டு மூன்று மனைவிகளைக் கொள்வது வழக்கம்; சிற்றின்பத்திற்காக அல்ல.

# பாண்டுவின் முடிவு

பாண்டு ராஜன் ஒரு நாள் காட்டில் வேட்டையாடும் போது அங்கே மான்களாக உருவம் கொண்டு ஒரு ரிஷியும் அவர் மனைவியும் விளையாடிக் கொண்டிருந்தார்கள். மான் என்று எண்ணி பாண்டு அந்த ரிஷியை அம்பு எய்து கொன்றுவிட்டான். அந்த ரிஷி உயிர் நீங்கும் தறுவாயில் பாண்டுவைச் சபித்துவிட்டார். "பாதகனே! உன் மனைவியுடன் நீ கலந்தால் தட்சணம் உனக்கு மரணம் உண்டாகும்" என்று பாண்டு மகாராஜன் ரிஷியினால் சாபம் விதிக்கப் பட்டான். இந்தத் தண்டனையைப் பெற்ற பாண்டு மனம் உடைந்து போனவனாய் பீஷ்மரிடமும் விதுரனிடமும் ராஜ்ய பரிபாலனத்தை ஒப்படைத்து விட்டுத் தன் மனைவிகளை அழைத்துக் கொண்டு வனத்திற்குப் போய் விட்டான். அங்கே பிரம்மசரிய விரதம் பூண்டு வசித்து வந்தான்.

சந்ததியில்லாமல் உயிர்நீத்து விடக்கூடாது என்று பாண்டுராஜனுடைய வேண்டுகோளின் மேல் குந்தியும் மாத்திரியும் துருவாசரிஷி உபதேசித்த மந்திரத்தின் மூலமாகத் தேவர்களை வேண்டிக் கொண்டு பஞ்சபாண்டவர்களைப் பெற்றார்கள். இவர்கள் வனத்திலேயே பிறந்து வனத்திலேயே தபஸ்விகளுக்கிடையில் வளர்ந்து வந்தார்கள் மனைவிகளுடனும் புத்திரர்களுடனும் பாண்டுராஜன் பல ஆண்டுகள் வனத்தில் வசித்து வந்தான்.

ஒரு நாள் வசந்த காலத்தில் அரசனும் மாத்ரியும் வனத்தில் பூவும் கொடியும் பறவையும் பிராணிகளும் விளையாடி மகிழ்ந்து கொண்டிருந்ததைப் பார்த்துத் தங்களுக்கு ஏற்பட்டிருந்த துயரத்தை மறந்தார்கள். இயற்கை வேகத்தால் இழுக்கப்பட்டுப் புத்தி தடுமாறிப் போய் அவள் எவ்வளவு தடுத்தும் கேட்காமல் மதிமயங்கிப் போய் அரசன் மாத்ரியுடன் கலந்தான். உடனே ரிஷியின் சாபத்தின்படி உயிர் நீத்தான்.

அரசன் மரணத்திற்குத் தான் காரணமானதை நினைத்து மாத்ரி துக்கம் பொறுக்க மாட்டாமல் பாண்டுவைத் தகனம் செய்யும் காலத்தில் தானும் எரியும் சிதையில் விழுந்து மாண்டாள்.

வனத்தில் இருந்த ரிஷிகள் தீராத துக்கத்தில் மூழ்கிக் கிடந்த குந்தி தேவியையும் பாண்டவர்களையும் ஹஸ்தினாபுரத்திற்கு அழைத்துக் கொண்டு போய் பீஷ்மரிடம் ஒப்புவித்தார்கள். அப்போது யுதிஷ்டிரனுக்கு வயது பதினாறு.

பாண்டுராஜன் வனத்தில் உயிர் நீத்ததை ரிஷிகள் ஹஸ்தினாபுரம் வந்து சொன்னதும் நாடு முழுதும் துக்கத்தில் ஆழ்ந்தது. விதுரனும் பீஷ்மனும் வியாசரும் திருதராஷ்டிரனும் மற்ற பந்துக்களும் முறைப்படி சிரார்த்தம் செய்தார்கள் நகரத்திலும் கிராமங்களிலும் ஜனங்கள் தங்களுடைய சொந்த பந்து இறந்ததைப் போல விசனப் பட்டார்கள்.

பாட்டியார் சத்தியவதிக்கு வியாசர் சொன்னார்: "நடந்து போன காலம் சுகமாகவே முடிந்தது. வருங்காலம் மிகவும் துக்ககரமாக இருக்கப் போகிறது. பூமிக்கு யௌவனம் தீர்ந்து விட்டது. வஞ்சகமும் பலவகை பாபங்களும் நிறைந்த காலம் வரப்போகிறது. இந்தக் குலத்துக்கு நேரப் போகிற கஷ்டமான காலத்தை நீ உன் கண்ணால் பார்க்க வேண்டாம். நகரத்தை விட்டு விலகிப் போய் தபோவனத்தில் வாசஞ் செய்வதே மேலானது." இவ்வாறு வியாசர் சொன்னதைச் சத்தியவதி அங்கீகரித்து அம்பிகை அம்பாலிகை இருவரையும் கூட அழைத்துக் கொண்டு வனம் சென்றாள். அங்கே தபஸ்விகளாகக் கொஞ்ச காலம் கழித்து விட்டு குலத்தில் நடக்கப் போகும் அநியாயங்களைப் பாராமல் இந்த மூன்று மூதாட்டிகளும் மேலுலகம் சென்றார்கள்.

# பீமன்

ஹஸ்தினபுரத்தில் பாண்டு புத்திரர்களும் திருதராஷ்டிரருடைய நூறு குழந்தைகளும் உற்சாகமாக விளையாடிக் கொண்டு வளர்ந்தனர். அவர்கள் எல்லாரை விட பீமசேனன் தேகவன்மையில் மிஞ்சியிருந்தான். விளையாட்டுக் களிலெல்லாம அவன் துரியோதனாதியரைத் தலைமயிரைப் பிடித்து இழுத்தும் அடித்தும் தொந்தரவு செய்வான். அவர்களில் பத்துப் பேர்களைப் பிடித்துக் கொண்டு குளத்தில் முழுகுவான். அவர்கள் மூச்சுத் திக்கு முக்காடித் திணறும் வரையில் அவர்களுடன் தண்ணீருக்குள் மூழ்கியிருந்து பிறகு மேலே வருவான். மரத்தின் மேலேறி அவர்கள் பழம் பறித்துக் கொண்டிருக்கையில் இவன் கீழே இருந்து கொண்டு காலால் மரத்தை உதைப்பான். உதையின் வேகத்தினால் மேலிருந்த பையன்கள் பழங்களைப் போல் மரத்திலிருந்து கீழே விழுவார்கள். பீமசேனனுடைய விளையாட்டினால் திருதராஷ்டிரனுடைய குழந்தைகளுக்கு உடல் முழுதும் எப்போதும் காயமாக இருக்கும். இத்தகைய பால்ய சேஷ்டையினால் குழந்தைப் பருவம் முதல்கொண்டு திருதராஷ்டிர புத்திரர்களுக்கு பீமன பேரில் அதிக விரோதம் ஏற்பட்டு வந்தது.

போதிய வயது வந்ததும் எல்லாரும் கிருபாசாரியடம் ஆயுதப் பயிற்சியும வித்தியாப்பியாசமும் பெற்று வந்தார்கள். பீமசேனன் பேரில் துரியோதனன் கொண்ட பொறாமை அவனுடைய மதியைக் கெடுத்துச் செய்யக் கூடாத செயல்களில் அவனை ஏவிற்று.

துரியோதனனுக்குப் பெரியகவலை. தன் தகப்பனார் பிறவிக் குருடனாகையால் ராஜ்யம் பாண்டுவின் வசம் போய்விட்டது. ஆகையால் யுதிஷ்டிரனே யுவராஜ்ய பட்டாபிஷேகம் பெறுவான். பிறகு அவனே அரசனாவான். கண்ணில்லாத திருதராஷ்டிரன் தனக்கு ஒன்றும் செய்ய முடியாதவனாக இருக்கிறான் என்று எண்ணி பீம

னைக் கொன்றுவிட வேண்டும் என்றே நிச்சயித்தான். அவனைக் கொன்றால் பாண்டவர்களுடைய கொட்டம் முழுதும் அடங்கும் என்று எண்ணி அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தான். அவனைக் கங்கையில் தள்ளிவிட்டுப் பிறகு அருச்சுனனையும் யுதிஷ்டிரனையும் பிடித்துச் சிறையில் போட்டு பூமியை ஆள்வோம் என்று துரியோதனனும் அவன் தம்பிகளும் தீர்மானித்தார்கள்.

ஒருநாள் துரியோதனன் ஜலக்கிரீடைக்கு வெகு விமரிசையாக ஏற்பாடு செய்தான். எல்லாரும் கங்கைக் கரையில் விளையாடிவிட்டு போஜன பண்டங்கள் புசித்துக் களைப்புற்றுக் கூடாரங்களில் தூங்கினார்கள். பீமசேனன் எல்லாரைவிட அதிகமாக விளையாடியவனான படியாலும் அவன் தின்ற பண்டங்களில் விஷம் கலந்திருந்தபடியாலும் மயக்கம் மேலிட்டு ஜலக் கரையிலேயே தரையில் படுத்துத் தூங்கிப்போனான். அந்த நிலையில் துரியோதனன் அவனைக் காட்டுக் கொடிகளினால் மெள்ளக் கட்டிப் போட்டு கங்கையில் தள்ளிவிட்டான். அந்த இடத்தில் துரியோதனன் முந்தியே உத்திரவிட்டிருந்தபடி ஜலத்தில் கூரிய சூலங்கள் நடப்பட்டிருந்தன. அவற்றின் மேல் விழுந்து உடனே உயிர் போய்விடுவதற்காக இந்த ஏற்பாடு. தற்செயலாக பீமன் விழுந்த இடத்தில் சூலங்கள் இருக்கவில்லை. ஜலத்திலிருந்த கொடிய விஷப் பாம்புகள் பீமனைக் கடித்தன. அவன் உணவில் சேர்க்கப்பட்டு அவன் உட்கொண்டிருந்த விஷம் இந்தப் பாம்புகளின் விஷத்துடன் கலந்து ஒன்றை ஒன்று அடித்துவிட்டது. பீமசேனன் விஷத்தால் துன்பம் ஏதும் நேராமல் விழித்துக்கொண்டான்.

விஷப் பாம்புகள் நிறைந்ததும் சூலங்கள் நட்டிருந்ததுமான நீர் மடுவில் தள்ளப்பட்ட பீமன் செத்தே போனான் என்று எண்ணி மற்றவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு துரியோதனன் ஊருக்குத் திரும்பினான்.

பீமசேனன் எங்கே என்று யுதிஷ்டிரன் கேட்டதற்கு அவன் நமக்கு முன்னேயே நகரத்துக்குப்போய் விட்டான் என்று துரியோதனன் சொன்னதை யுதிஷ்டிரன் நம்பி

னான். வீட்டுக்குப் போனதும் தாயார் குந்தியைப் பார்த்து, "அம்மா! பீமன் எங்கே? அவன் எங்களுக்கு முன்னேயே வந்தானாமே? அவன் இங்கே வந்துவிட்டு வேறு எங்கேயாவது போனானா?" என்று மனக் கலக்கமடைந்து விசாரித்தான். பீமன் திரும்பி வரவில்லையென்று தெரிந்ததும் ஏதோ மோசம் நடந்திருப்பதாகச் சந்தேகப்பட்டு யுதிஷ்டிரனும் தம்பிகளும் வனத்துக்குத் திரும்பிப்போய் எல்லா இடமும் தேடிப்பார்த்தார்கள். ஆனால் பீமன் சிக்கவில்லை. மிக்க விசனத்துடன் வீடு திரும்பினார்கள்.

பிறகு ஜலத்தில் விழித்துக்கொண்ட பீமன் நீந்திக் கரையேறி எங்கெங்கேயோ அலைந்து தனியாக வீட்டுக்கு வந்து சேர்ந்தான். குந்தியும் யுதிஷ்டிரனும் அவனைக் கட்டித் தழுவிக் கொண்டார்கள். விஷங்கள் உடம்பில் கலந்து முன்னைவிட அதிக தேகபலம் கொண்டவனாய் விட்டான்.

குந்தி விதுரனைக் கூப்பிட்டு அவனிடம் ரகசியமாக,

"துரியோதனன் கொடியவன்; கெட்ட எண்ணம் கொண்டவன். ராஜ்யத்தில் ஆசை வைத்து, பீமனைக் கொல்லப் பார்க்கிறான். என் மனம் கலங்குகிறது" என்றாள்.

இதைக்கேட்ட விதுரன் "நீ சொல்லுவது உண்மை. ஆனால் இந்த விஷயத்தை வெளியே சொல்லாதே. துஷ்ட சுபாவமுள்ள துரியோதனனை நிந்தித்தால், அவனுக்கு இன்னும் அதிக துவேஷம் உண்டாகும். உன்னுடைய புத்திரர்கள் பூரண ஆயுள் படைத்திருக்கிறார்கள். ஒன்றுக்கும் பயப்படவேண்டாம்" என்றான்.

யுதிஷ்டிரன் பீமனைப் பார்த்து "நீ பேசாமலிருக்க வேண்டும். நாம் எல்லாரும் இனி ஒருவரையொருவர் ஜாக்கிரதையுடன் காப்பாற்றிக்கொண்டு உயிருடன் இருக்க வேண்டும்" என்று எச்சரித்தான்.

பீமன் திரும்பி வந்துவிட்டதைப் பார்த்த துரியோதனன் வியப்படைந்தான். பொறாமையும் துவேஷமும் அதிகரித்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு தாபமடைந்து இளைத்துப் போனான்.

# கர்ணன்

பாண்டவர்களும் திருதராஷ்டிர புத்திரர்களும் முதலில் கிருபாசாரியரிடமும பிறகு துரோணரிடமும் ஆயுதப் பயிற்சி பெற்றார்கள். ஒரு நாள் நகர ஜனங்களை யெல்லாம் அழைத்து ஆயுதப் பயிற்சிப் பரீட்சையும் போட்டியும் ஏற்பாடு செய்தார்கள். பெருங் கூட்டம் கூடிவிட்டது; எல்லாரைக் காட்டிலும் அதிக அற்புத மாக அருச்சுனன் தன் திறமையைக் காட்டித் திரண்டு கூடியிருந்த மக்களைப் பிரமிக்கச் செய்து கொண்டிருந் தான். துரியோதனனுக்குத் தாங்க முடியாத பொறாமை பொங்கிக் கொண்டிருந்தது.

அச்சமயத்தில் திடீர் என்று யாரோ தோள் தட்டிக் கொண்டு வரும் சத்தம் வாசற் பக்கத்திலிருந்து வந்தது. எல்லோரும் சத்தம் வந்த திக்கை நோக்கினார்கள். ஜனக் கூட்டம் வழி விட்டு விலக தேஜஸ் வீசும் தோற்றம் கொண்ட வாலிபன் ஒருவன் சபையில் நுழைந்தான். அவனே கர்ணன்.

சகோதரன் என்பதை அறியாமல் அருச்சுனனைப் பார்த்து "அர்ச்சுனா! நீ என்ன வெல்லாம் செய்து காட்டினையோ அதற்கு மேற்பட்டதாக நான் செய்து காட்டுகிறேன்" என்றான்.

இதைக் கேட்டதும் ஜனக்கூட்டம் உடனே எழுந்து ஆரவாரித்தது. துரியோதனனுடையபொறாமைநிறைந்த மனதில் சந்தோஷம் தோன்றிற்று. கர்ணனைக் கட்டித் தழுவிக்கொண்டு "என்னையும் என் ராஜ்யத்தையும் நீ இஷ்டப்படி உபயோகித்துக் கொள்ளலாம்" என்றான்.

"பிரபுவே! நான் அருச்சுனனுடன் யுத்தம் கோரி வந்தேன்; நீ காட்டிய பிரியத்துக்கு என்றென்றைக்கும் நன்றியுள்ளவனாக இருப்பேன்" என்றான் கர்ணன்.

கர்ணன் அறை கூவியதைக் கேட்டு அருச்சுனனுக்கு கோபம் பொங்கி, "கர்ணா! சபைக்கு அழைக்கப்படாமல்

வந்தவர்களும் கேட்கப்படாமல் பேசுகிறவர்களும் இகழப் படுவார்கள்!" என்று கொடுமையாகப் பேசினான்.

"பல்குனா! இந்தச் சபை எல்லாருக்கும் பொது. உனக்கே உரிமையானதல்ல. ராஜதருமம் பலத்தைப் பின் தொடர்ந்து செல்லுகிறது. வெறும் பேச்சில் என்ன பயன்? பாணங்களைக் கொண்டு பேசு" என்றான் கர்ணன்.

இவ்வாறு கர்ணன் அருச்சுனனை யுத்தத்திற்கு அழைத்ததும் ஜனக்கூட்டம் குதூகலங்கொண்டு இரண்டு கட்சியாகப் பிரிந்தது. ஸ்திரீகளிலுங்கூட இரண்டு பிரிவு கள் உண்டாயிற்று என்று வியாசர் சொல்லுகிறார். உலகம் எப்போதுமே இம்மாதிரிதான் என்று தெரிய வருகிறது.

கர்ணனைப் பார்த்ததும் அடையாளம் கண்டு கொண்ட குந்தி மூர்ச்சை அடைந்தாள். விதுரன் அவளை வேலைக்காரிகளைக் கொண்டு உபசரித்துத் தேற்றினான் அவள் ஒன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தாள்.

பிறகு கிருபாசாரியார் கர்ணனைப் பார்த்து, "பாண்டு புத்திரனும் குருவம்சத்தைச் சேர்ந்தவனுமான அருச்சு னன் தொந்த யுத்தத்திற்குத் தயாராக இருக்கிறான். வீரனே! நீயும் உன் தாய் தந்தைகள் யார், நீ எந்த ராஜ குலத்தைப் பூஜிக்கிறாய் என்பதை எடுத்துச் சொல்வாயாக. குலமும் குலாசாரமும் தெரிந்துகொள் ளாமல் ராஜ குமாரர்கள் சம யுத்தம் செய்ய மாட்டார்கள்" என்று சொன்னார்.

இந்தச் சொல்லைக்கேட்ட கர்ணன் மழையில் நனைந்து வணங்கிய தாமரை மலரைப்போல் தலை குனிந்தான். வெட்கத்தினால் முகம் வாடிற்று.

துரியோதனன் உடனே எழுந்து, "நான் கர்ணனை அங்க தேசத்தின் ராஜாவாக இந்தக்ஷணமே அபிஷேகம் செய்வேன்" என்று சொல்லி பீஷ்மரையும் திருதராஷ்டிர னையும் அனுமதி கேட்டுச் சாமக் கிரியைகளை அங்கேயே வரவழைத்துக் கிரீடம், ஹாரம், சிங்காசனம் முதலியவை

எல்லாம் அமைத்துக் கர்ணனை அங்கதேச ராஜாவாக பட்டாபிஷேகம் செய்வித்தான். அந்தச் சமயத்தில் கர்ணனை வளர்த்த தேரோட்டிக் கிழவன் பயத்தினால் நடுங்கிக் கொண்டும் தடி ஊன்றிக்கொண்டும் சபையில் பிரவேசித்தான்.

அவனைப் பார்த்ததும் அங்க தேசாதிபதியாக அபிஷேகம் செய்யப்பட்ட கர்ணன் பிதாவினிடமுள்ள மரியாதைக்குக் கட்டுப்பட்டு வில்லைக் கீழே வைத்து விட்டுத் தலை வணங்கி நமஸ்கரித்தான். அவனும் "புத்திரனே!" என்று சொல்லிக் கர்ணனைக் கட்டிக்கொண்டு அபிஷேக ஜலத்தினால் ஈரமாயிருந்த அவன் தலையில் ஆனந்தக் கண்ணீர் சொரிந்து இன்னும் ஈரமாக்கினான்.

பீமசேனன் இதைக் கண்டு கொல்லென்று சிரித்து, "தேரோட்டியின் மகனே! உன் குலத்துக்குத் தகுந்த குதிரைச் சவுக்கை எடுத்துக்கொள். நீ அருச்சுனனுடன் சமயுத்தம் செய்யத் தகுந்தவனல்ல" என்றான்.

சபையில் பெரிய குழப்பம் உண்டாயிற்று. சூரியனும் அஸ்தமனமானான். விளக்கு வெளிச்சத்தில் எல்லாரும் கூச்சல் போட்டுக்கொண்டு கலைந்தனர். சிலர் அருச்சுனன் பெயரையும் சிலர் கர்ணன் பெயரையும் சிலர் துரியோதனன் பெயரையும் அவரவர்களுடைய பட்சபாதத்தின்படி சொல்லிக்கொண்டு போனார்கள் என்கிறார் வியாசர்.

வெகு காலத்திற்குப் பிறகு தன் மகன் அருச்சுனனுக்குக் கர்ணனால் ஆபத்து வரும் என்று கண்ட இந்திரன் பிராமண வேஷம் தரித்துக்கொண்டு கொடையாளியாகிய கர்ணனிடம் ஒருநாள் வந்து அவனுடைய குண்டலங்களையும் கவசத்தையும் தானமாகக் கேட்டான். "உன்னை மோசம் செய்யவே இந்திரன் இவ்வாறு வந்து கேட்பான்" என்று சூரிய பகவான் கனவில் வந்து கர்ணனை எச்சரிக்கை செய்திருந்த போதிலும், யாசகனாக வந்த ஒருவன் என்ன கேட்டாலும் மறுக்க இயலாத குணத்தைப் பெற்ற கர்ணன் கத்தியைக் கொண்டு தன் காதுகளையும் விலாப் புறங்களையும் அறுத்து உடன்

பிறந்த குண்டலங்களையும் கவசத்தையும் எடுத்துப் பிராமணனுக்குக் கொடுத்து விட்டான்.

வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்த தேவராஜன் இவற்றைப் பெற்றுக்கொண்டு "யாரும் செய்யக்கூடாத அரிய செயலைச் செய்தாய்!" என்று புகழ்ந்து, "நீ விரும்புகிற வரத்தைக் கேள்" என்றான்.

"சத்துருக்களை சம்ஹரிக்கக் கூடிய உன்னுடைய சக்தி ஆயுதத்தைப்பெற விரும்புகிறேன்" என்று கர்ணன் சொல்ல, இந்திரன் அவ்வாறே கொடுத்தான்.

"நீ யுத்தத்தில் இதைப் பிரயோகித்தால் அவன் யாராயினும் இதனால் நாசமடைவான்; ஆனால் ஒரு சத்துருவைக் கொன்றதும் இந்த ஆயுதம் என்னிடம் வந்துவிடும்" என்று சொல்லிவிட்டு இந்திரன் மறைந்தான்.

கர்ணன் பரசுராமனிடம் சென்று தான் பிராமணன் என்று சொல்லி அவரிடம் சீடனாக அமர்ந்து பிரம்மாஸ்திர மந்திரத்தைக் கற்றான். ஒரு நாள் கர்ணனுடைய மடியில் தலை வைத்துப் பரசுராமர் தூங்கிக்கொண்டிருந்தார். அச்சமயம் ஒரு கொடிய புழுவானது கர்ணன் துடையைக் கடித்துக் குடைந்தது; ரத்தம் பெருகிற்று. தூங்கிக் கொண்டிருந்த குரு எழுந்துவிடுவார் என்று அந்த உபத்திரவத்தை லட்சியம் செய்யாமல், கர்ணன் அசையாதிருந்தான். பரசுராமர் விழித்தெழுந்து ரத்த வெள்ளத்தைப் பார்த்து, "பிரிய சிஷ்யனே, நீ பிராமணனல்ல. க்ஷத்திரியன்தான் இம்மாதிரி உடலுபத்திரவத்தைப் பொறுத்துக்கொண்டு அசையாமலிருக்க முடியும். உண்மையைச் சொல்" என்றார்.

தான் பிராமண குலம் என்று சொன்னது பொய் என்றும் தேரோட்டியின் மகன் என்றும் ஒப்புக் கொண்டான்.

"நீ குருவை ஏமாற்றியபடியால் நீ கற்ற பிரம்மாஸ்திரம் மரணத் தறுவாயில் உனக்குப் பயன்படாமல் உன்னை ஏமாற்றும்; அந்தச் சமயத்தில் மந்திரத்தை மறந்துபோவாய்!" என்று சபித்துவிட்டார். பரசுராம

ருக்கு க்ஷத்திரியர்கள்மேல் ஆறாத துவேஷம். தன் ஜாதியை மறைத்துப் பொய்சொல்லி பிரம்மாஸ்திரத்தைப் பெற்று விட்டானே என்று கோபித்து இவ்வாறு சபித்தார்.

இந்தச் சாபத்தின் படியே கர்ணன் கற்ற அந்த வித்தை உயிருள்ள வரையில் நினைவிலிருந்தும் யுத்தத்தில் அருச்சுனன் தாக்கும் சமயத்தில் மறந்து போகிறது.

துரியோதனனுக்கு ஆப்த சினேகிதனாக கர்ணன் கடைசி வரையில் கௌரவர்களுடைய கட்சியிலேயே இருந்தான். பீஷ்மரும் துரோணரும் நீங்கிய பின் கர்ணன் கௌரவ சேனைக்குத் தலைவனாக இருந்து யுத்தத்தை இரண்டு நாள் அற்புதமாக நடத்தினான். முடிவில் தேர்ச் சக்கரம் மண்ணில் புதைந்து ரதம் ஓட்ட முடியாத சமயத்தில் அருச்சுனன் கர்ணனைக் கொன்றான். குந்திதேவி துக்க சாகரத்தில் மூழ்கினாள்.

# துரோணர்

பரத்வாஜர் என்கிற பிராமண புத்திரரான துரோணர் வேத வேதாந்தங்கள் பூரணமாக ஓதிய பிறகு, அஸ்திரப் பயிற்சியும் பெற்றார். பரத்வாஜருக்குச் சிநேகிதனான பாஞ்சால தேசத்து அரசனுடைய குமாரன் துருபதனும் ஆசிரமத்தில் துரோணருடன் படித்துக் கொண்டிருந்தான். துரோணருக்கும் துருபதனுக்கும் நெருங்கிய சிநேகிதம் உண்டாயிற்று. தான் பட்டத்துக்கு வரும்போது துரோணருக்குப் பாதி இராஜ்யம் கொடுப்பதாகக் கூட பால்ய உற்சாகத்தில் துருபதன் துரோணனிடம் சொன்னதுண்டு.

ஆசிரம வாசம் முடிந்ததும் துரோணர் கிருபருடைய சகோதரியை விவாகம் செய்துகொண்டு அசுவத்தாமன் என்கிற குமாரனையும் பெற்றார். துரோணருக்கு மனைவியிடத்திலும் புத்திரனிடத்திலும் மிகுந்த பற்று. எப்படியாவது தனம் சம்பாதிக்க வேண்டும் என்கிற ஆசை துரோணரையும் பிடித்தது. பரசுராமர் தம் பொருளையெல்லாம் பிராமணர்களுக்குக் கொடுத்துவிடப் போவதாகக் கேள்விப்பட்டு அவரிடம் போனார். துரோணர் போய்ச் சேருவதற்கு முன் பரசுராமர் தானங்கள் செய்துவிட்டு வனம் போகும் தறுவாயிலிருந்தார்.

துரோணர் கேட்டதற்கு, “பிராமண சிரேஷ்டனே! உனக்கு நல்வரவு. எனக்கிருந்த பொருளனைத்தும் நான் கொடுத்தாய்விட்டது. இப்போது இந்தச் சரீரமும், என் அஸ்திர சஸ்திரங்களுந்தான் மிச்சமாயுள்ளன” என்றார்.

துரோணர், “முனிவரே! அஸ்திரங்களையாவது எனக்குப் பூரணமாக உபதேசிக்க வேண்டும்” என்று பரசுராமரைக் கேட்டு, அவ்வாறே பெற்றுக்கொண்டு திரும்பினார்.

பிறகு பாஞ்சால தேசத்து ராஜா இறந்துபோய், துருபதனுக்குப் பட்டாபிஷேகமாயிற்று. இதை அறிந்து

துருபதன் பாதி இராஜ்யத்தைக் கொடுப்பதாகச் சொல்லி யிருந்தானே, பெருஞ் செல்வமாவது துருபதனிடமிருந்து அடையலாம் என்று துரோணர் பாஞ்சால தேசம் சென்றார். போனதும் பழைய சிநேகிதன் என்று தன்னை அறிவித்துக் கொண்டார். துருபத ராஜனுக்குத் துரோணர் வந்தது பிடிக்கவில்லை. அறிமுகம் செய்துகொண்ட முறையோ கொஞ்சமேனும் பிடிக்கவில்லை. ஐசுவரிய கர்வம் நிரம்பினவனான அவன் கோபங் கொண்டு "பிராமணரே! இந்த நடத்தை உமக்குத் தகுந்ததல்ல. சிநேகிதன் என்று என்னை எவ்வாறு நீர் துணிந்து பேசுவீர்? சிம்மாசனத்தி லிருக்கும் அரசனுக்கும், அதிர்ஷ்டமும் செல்வமும் இல்லாத ஒரு சாதாரண மனிதனுக்கும எவ்வாறு சிநேகம் என்று சொல்லிக்கொள்ளக் கூடும்? மந்த புத்தி உள்ளவரே, ஏதோ ஒரு காரணத்தைப்பற்றி உண்டான பால்ய பழக்கத்தை நீர் ஆதாரமாக வைத்துக் கொண்டு ராஜ்யபாரத்தை வகிக்கும் ஒரு அரசனிடம் சிநேகம் பாராட்டாதீர். தரித்திரன் தனவானுக்கும் மூர்க்கன் வித்துவானுக்கும், பயந்தவன் சூரனுக்கும் எப்படி நண்பனாவான்? ஐசுவரியம் சமமாக இருந்தால்தான சிநேகிதம். இராஜ்ய மில்லாதவன் ராஜாவுக்கு சிநேகிதன ஆகமாட்டான்" என்று இவ்வாறு பொறுக்க முடியாத மொழிகளைச் சொல்லித் துரோணரை இகழ்ந்தான்.

துரோணர் கோபமும் வெட்கமும் மேலிட்டு ஒரு பேச்சும் பேசாமல் உள்ளத்தில் ஒரு நிச்சயம் செய்து கொண்டு ஹஸ்தினபுரம் சென்றார். ஹஸ்தினபுரத்தில் தம் மைத்துனர் கிருபர் வீட்டில் யாருக்கும் தெரிவிக்காமல் மறைவாக இருந்தார்.

ஒரு நாள் ராஜ குமாரர்கள் நகரத்துக்கு வெளியே பந்து விளையாடிக்கொண்டு திரிந்தார்கள். அப்போது பந்தும் யுதிஷ்டிரனுடைய மோதிரமும் அங்கிருந்த ஒரு கிணற்றில் விழுந்துவிட்டன. எல்லாரும் கிணற்றைச் சுற்றிக்கொண்டு நிர்மலமான தண்ணீரில் மோதிரம் பளிச்சென்று தெரிவதைப் பார்த்துக்கொண் டிருந்தார்

கள். அந்தச் சமயத்தில் கறுத்த ஒரு பிராமணர் அவ் விடம் வந்து நின்றார்.

"ராஜகுமாரர்களே! நீங்கள் பாரத வம்சத்தில் பிறந்த க்ஷத்திரியர்கள். பந்தை ஏன் எடுக்க முடியவில்லை? நான் அஸ்திரத்தைக் கொண்டு எடுத்தால் எனக்கு என்ன தருவீர்கள்?" என்று பிராமணர் கேட்டார்.

"பிராமணரே! பந்தைநீர் எடுத்தால், கிருபர் வீட்டில் போஜனத்தை அடைவீர்" என்று யுதிஷ்டிரன் சிரித்துக் கொண்டு சொன்னதும், துரோணராகிய அந்தப் பிராம ணர் ஒரு குச்சியை எடுத்து அஸ்திரத்துக்கு வேண்டிய மந்திரம் சொல்லித் தண்ணீரில் வீசி எறிந்தார். அது பந்தைத் தேடிச் சென்று அதில் பற்றிக்கொண்டது. பிறகு வேறு குச்சிகளையும் ஒன்றன் பின் ஒன்றாக அவ் வாறே தண்ணீரில் போட, ஒன்றுடன் ஒன்று சேர்ந்து நீண்டு நின்றன. மேல் குச்சியைப் பிடித்துப் பந்தை எடுத்துக் கொடுத்தார் துரோணர்.

மிக்க ஆச்சரியமும் மகிழ்ச்சியும் கொண்ட ராஜ குமாரர்கள் மோதிரத்தையும் எடுக்கச் சொன்னார்கள். துரோணர் ஒரு அம்பை எடுத்து, வில்லில் தொடுத்துக் கிணற்றில் எய்தார். அது மோதிரத்தைக் குத்தி மேலே கிளப்ப, பிராமணர் மோதிரத்தை எடுத்துக்கொடுத்தார்.

இந்தச் செயலைப் பார்த்து வியந்து, "பிராமணரே! நமஸ்காரம். நீர் யார்? உமக்கு எங்களால் ஆகக்கூடியது ஏதேனும் உண்டா?" என்று ராஜகுமாரர்கள் அவரை வணங்கினார்கள்.

"ராஜகுமாரர்களே! பீஷ்மரிடம் சென்று நான் யார் என்று தெரிந்து கொள்ளுங்கள்" என்று சொல்லி அனுப்பினார்.

ராஜகுமாரர்கள் சொன்ன குறிகளினின்று பீஷ்மர், அவர்கள் கண்ட பிராமணர் புகழ் பெற்ற துரோணர் என்று தெரிந்துகொண்டு, பாண்டவ கௌரவர்களுக்கு இனிக் கொடுக்கவேண்டிய பயிற்சியைத் தரக்கூடிய ஆசாரியர் அவரே என்று தீர்மானித்தார். துரோணரை

விசேஷ மரியாதையுடன் அழைத்து ராஜகுமாரர்களை அவரிடம் ஆயுதப் பயிற்சியைப் பூர்த்தி செய்துகொள்ள அமைத்தார்.

கௌரவ பாண்டவர்களுக்கு ஆயுதப் பயிற்சி தந்து முடிந்ததும் துரோணர் குரு தட்சணையாகத் துருபதனை உயிரோடு பிடித்து வரவேண்டும் என்று கர்ணனையும் துரியோதனனையும் அனுப்பினார். அவர்களும் சென்றார்கள். ஆனால் அது அவர்களால் முடியவில்லை. அதன்பின் அருச்சுனனுக்குக் கட்டளையிட்டார். அவன் போய் யுத்தம் செய்து துருபதனை மந்திரியுடன் பிடித்து வந்து துரோணரிடம் சமர்ப்பித்தான்.

அப்போது துரோணர் புன்னகையுடன் துருபதனைப் பார்த்துச் சொன்னார்: "வீரனே! உன் உயிருக்கு அபாயம் வந்தது என்று பயப்படாதே. பால்யத்தில் என்னோடு விளையாடிச் சிநேகமாக இருந்து பிறகு என்னை மோசமும் அவமானமும் செய்தாய். ராஜாவுடன் சிநேகம செய்ய வேண்டுமானால் ராஜவாக இருக்க வேண்டும் என்றாய். அதற்காக இந்த யுத்தம் உன்மேல் நான் செய்ய வேண்டியதாயிற்று. ஆனால் நான் மறுபடியும உன்னுடன் சிநேகத்தையே விரும்புகிறேன். பாதி ராஜ்யத்தை உனக்கே கொடுக்கிறேன். என்னுடன் நீ சிநேகிதனாக இருப்பதற்கு உனக்கும் சம ராஜ்யம் வேண்டுமல்லவா? ஆகையால் கொடுக்கிறேன்,வைத்துக்கொள்". துருபதன் தம்மை அவமதித்துச் சொன்ன சொல்லை துரோணர் இவ்வாறு ஞாபகப்படுத்தினார். துருபதன் வெட்கம் மேலிட்டுத் தலைவணங்கி நின்றான். அவமானப்படுத்தினது போதும் என்று துரோணரும் அவனுக்கு எல்லா மரியாதைகளும் செய்து திருப்பி அனுப்பினார்.

* * *

துருபதனுடைய கர்வம் இவ்வாறு அடங்கிற்று கோபமும் க்ஷாத்திரமும் பழிக்குப் பழிவாங்கி முடிவடையவில்லை. வளர்ந்துகொண்டே போகும். அதனாலேயே அவ

னுடைய க்ஷாத்திரம் அதிகமாயிற்று. துரோணரைக் கொல்லக்கூடிய ஒரு மகனும், அருச்சுனனை மணம் புரியக் கூடிய ஒரு மகளும் தனக்கு உண்டாக வேண்டும் என்று அநேக விரதங்களிருந்து அவ்வாறே திருஷ்டத்யும்னனையும் திரௌபதியையும் பெற்றான். திருஷ்டத்யுமனனே பின்னால் பாரத யுத்தத்தில் எவராலும் எதிர்க்க முடியாத துரோணரை எதிர்த்துக் கொன்றது.

# அரக்கு மாளிகை

பீமசேனனுடைய தேக பலத்தையும், அருச்சுனனுடைய சாமர்த்தியத்தையும் கண்டு துரியோதனனுக்குப் பொறாமை வளர்ந்துகொண்டே போயிற்று. துரியோதனனுக்குக் கர்ணனும் சகுனியும் சதியாலோசனைக்காரர்களாக அமைந்தார்கள்.

தகப்பனான திருதராஷ்டிரன் அறிவு படைத்தவன். தம்பியின் மக்களிடத்தில் பிரியம் உண்டு. ஆனால் தன் மக்களிடத்தில் பற்று அதிகம், மனோ பலம் கிடையாது. தெரிந்தே தவறான வழியில் செல்வான். துரியோதனன் அநேக உபாயம் செய்து பாண்டவர்களைக் கொல்லப் பார்த்தான். விதுரனுடைய ரகசியமான உதவியைக் கொண்டே பாண்டவர்கள் உயிர் தப்பி வந்தார்கள்.

நகரத்து ஜனங்கள் பாண்டவர்களைப் புகழ்ந்தார்கள். நாற் சந்திகளிலும் சபைகளிலும் யுதிஷ்டிரனே ராஜாவாகத் தகுந்தவன் என்று பேசி வந்தார்கள். "திருதராஷ்டிரன் பிறவிக் குருடன்; ஆகையால் அவன் பட்டாபிஷேகம் பெறவில்லை; அவன ராஜ்யத்தைத் தன் சுவாதினத்தில் இப்போது வைத்துக் கொண்டிருப்பது நியாயமில்லை. பீஷ்மர் சத்திய சந்தர்; அவர் ராஜ்யம் தனக்கு வேண்டாம என்று சபதம் செய்துவிட்டவர். ஆகையால் யுதிஷ்டிரனுக்கே பட்டாபிஷேகம் செய்விக்க வேண்டும். அவனே கௌரவர்கள வம்சத்தையும் நாட்டையும் தருமமாக நடத்துவான்."—இவ்வாறு எங்கே பார்த்தாலும் ஜனங்கள் கூடிக் கூடிப் பேசி வந்தார்கள். துரியோதனனுக்கு இந்தப் பேச்சை சகிக்க முடியவில்லை. மனக் கொதிப்பு அடைந்தான்.

திருதராஷ்டிரனைத் தனியாகப் பார்த்து அவனிடம் சொன்னான்: "பிதாவே! நகரத்து ஜனங்கள் தாறுமாறாகப் பேசுகிறார்கள். உம்மையும் பீஷ்மரையும் கூட அவர்கள் மதிக்கவில்லை. யுதிஷ்டிரனுக்கு உடனே ராஜ்யாபிஷேகம் செய்ய வேண்டும் என்று பேசி வருகிறார்கள். இது நமக்குப் பேராபத்தாக முடியும். கண் தெரியாமையால் நீர்

ராஜ்யம் இழந்ீர். உமது தம்பி அரசனானான். அவனுக்குப்பின் யுதிஷ்டிரன் பட்டம் பெற்றால், பிறகு எங்களுக்கு என்றென்றைக்கும் ராஜ்யம் கிடையாது. அவனுக்குப் பின் அவன் மகனுக்கே போகும். நாங்களும் எங்கள் மக்களும் உலகத்தில் அவமதிக்கப்பட வேண்டியதுதான். அன்னத்திற்குக்கூடப் பிறரை அண்ட வேண்டியதாகும். அதைவிட நரகமே மேலாகும்.''

இதைக் கேட்ட திருதராஷ்டிரன் சிந்திக்கலானான். ''மகனே! நீ சொல்லுவது சரி. ஆயினும் யுதிஷ்டிரன் தருமம் தவறாதவன். எல்லாரிடத்திலும் அன்பு வைத்திருக்கிறான். அவன் தன்னுடைய தகப்பனாரைப்போலவே சிறந்த குணமுள்ளவன். ஜனங்கள் எல்லோரும் அவனை நேசிக்கிறார்கள். அவனை நாம் எவ்வாறு எதிர்க்கக்கூடும்? அவனுக்குச் சகாயம் அதிகமாக இருக்கிறது. தம்பி பாண்டு இருந்த காலத்தில் மந்திரிகள் எல்லாரும் அவனால் நன்றாக ஆதரிக்கப்பட்டார்கள். சேனைத் தலைவர்களும் வீரர்களும் அவர்கள் குடும்பத்தார்களும் அவ்வாறே பாராட்டப்பட்டனர். பாண்டுவோடு பழகின ஜனங்கள் எல்லாரும் யுதிஷ்டிரன் சார்பாகத்தான் இருப்பார்கள். நாம் அவர்களை எதிர்த்து வெல்ல முடியாது. நாம் அதர்மம் செய்தால் நம்மையும் நம்மைச் சேர்ந்தவர்களையும் நகரத்து ஜனங்களே கொல்வார்கள். அல்லது ஊரை விட்டு வெளியேற்றி விடுவார்கள். நாம் உலகத்தின் பழியைச் சம்பாதிப்போம்'' என்றான்.

துரியோதனன், ''நீர் பயப்படுவது சரியல்ல, பீஷ்மர் எந்தக் கட்சியிலும் சேரமாட்டார். அசுவத்தாமன் எனக்கு வேண்டியவன். துரோணர் தம்முடைய புத்திரனை விட்டுவிட்டு வேறு கட்சிக்குப் போக மாட்டார். அசுவத்தாமனுடைய மாமனாகிய கிருபரும் நம்முடைய பக்கத்தில்தான் இருப்பார். விதுரர் நம்மை வெளிப்படையாக எதிர்க்க முடியாது. அவருக்கு நம்மை எதிர்க்கும் சாமர்த்தியம் இல்லை. பாண்டவர்களை இப்போதே வாரணவதத்திற்கு அனுப்பிவிடும். இதில் ஒன்றும் தவறு நேராது. என் துக்கத்தை நான் பொறுக்க முடியாது; உள்ளத்தைப் பிளக்கிறது. இரவில் தூக்கம் இல்லாமல் செய்கிறது.

நான் உயிருடன் இருக்க முடியாது. இவர்களை வாரணா வதத்துக்கு அனுப்பிவிட்டு நாம் நம் கட்சியைப் பலப்படுத்திக் கொள்வோம்'' என்றான்.

* * *

பிறகு சில ராஜநீதி நிபுணர்களையும் தன் கட்சிக்குச் சேர்த்துக்கொண்டு அவர்களையும் தகப்பனிடம் சொல்ல வைத்தான். முக்கியமாகச் சகுனியின் மந்திரியாகிய கணிகன் என்பவன் துரியோதனனுடைய ஆலோசனைக்கு ஆதாரவாகத் திருதராஷ்டிரனுக்கு உபதேசம் செய்தான். சொல்ல வேண்டியதை யெல்லாம் உதாரணங்களுடனும், பிரமாணங்களுடனும் சொல்லிவிட்டு, "ராஜாவே! செல்வம் உள்ளவன்தான் சிறந்தவன். பாண்டு புத்திரர்களிடமிருந்து உம்மைக் காத்துக்கொள்ளும். அரசனே! பாண்டவர்கள் உம்முடைய சகோதரனுடைய புத்திரர்கள். ஆனாலும் பின்னிட்டு வருத்தப்படாமலிருக்குமாறு முன் ஜாக்கிரதையாக இருப்பீராக! அவர்கள் மிகுந்த பலமுள்ளவர்கள்'' என்றான்.

"நான் சொன்னதைக் கேட்டு என்மேல் கோபம்கொள்ளத்தகாது. அரசன் எப்போதும் தன்னுடைய பராக்கிரமத்தைக் காட்டிக் கொண்டிருக்க வேண்டும். தன் பலத்தை பிறர்குறைக்க இடம் கொடுக்க கூடாது. ராஜ காரியங்களை ரகசியமாக வைத்துக்கொள்ள வேண்டும். ஒரு காரியத்தை ஆரம்பித்த பிறகு, அதைச் செவ்வையாக நிறைவேறாமல் இருக்கக்கூடாது. தைத்த முள்ளை சரியாக எடுக்காமற் போனால் நீடித்த புண்ணை உண்டாக்கும். பராக்கிரமமுள்ள விரோதிகளை அழித்துவிட வேண்டும். பலவீனனாக இருந்தாலும் சத்துருவை அலட்சியம் செய்யக் கூடாது. சிறிய நெருப்பும் வனம் முற்றிலும் பரவி எரித்துவிடும். உபாயங்களினால் சத்துருவைக் கொன்றுவிடவேண்டும். தயைகாட்டத்தகாது. அரசனே! பாண்டு புத்திரர்களிடமிருந்து உம்மைக் காத்துக் கொள்ளும். அவர்கள் மிகுந்த பலமுள்ளவர்கள்'' என்று சகுனியின் மந்திரி மேலும் மேலும் விடாமல் போதித்தான்.

துரியோதனன் திருதராஷ்டிரனுக்குச் சொன்னான்: "நான ராஜ சேவகர்களுக்குத் திரவியமும் வெகுமதிகளும்

கொடுத்துச் சந்தோஷப்படுத்தி யிருக்கிறேன். அவர்கள் நமக்குச் சகாயமாகவே இருப்பார்கள். எல்லா மந்திரிகளும் என் சுவாதீனத்திலிருக்கச் செய்திருக்கிறேன். நீர் நய மாகச் சொல்லிப் பாண்டவர்களை வாரணவதம் அனுப்பி விட்டால், பிறகு நகரமும் நாடும் நம்முடைய முழு சுவா தீனமாகும். எல்லாரும் நம்முடைய கட்சிக்கு வந்து விடு வார்கள். இராஜ்யம் நன்றாக நம்முடைய கையில் நிலையாக நிலைத்த பிறகு, பாண்டவர்கள் திரும்பி வரலாம். அப் போது நமக்கு அவர்களால் அபாயம் ஏதுமில்லை.''

இவ்வாறெல்லாம் பலர் ஒரே விதமாகச் சொல்ல திருதராஷ்டிரன் மன உறுதி இழந்து மகனுடைய ஆலோசனைக்குச் சம்மதித்தான். வேண்டிய ஏற்பாடு நடந் தது. பாண்டவர்களுடைய காதில் விழும்படி வாரணவத நகரத்தின் அழகைப்பற்றி மந்திரிகள் பேசலானார்கள். அவ்விடம் சிவபெருமானுக்குப் பெரிய உத்ஸவம் மிகச் சிறப்பாக நடக்கும் என்பதையும் எடுத்துச் சொன்னார்கள். அங்கே போகவேண்டும் என்று பாண்டவர்களே கேட்கும் படிச் செய்தார்கள்.

''கட்டாயம் போய் உத்ஸவத்தைப் பார்த்துவிட்டு வாருங்கள். அவ்விடமுள்ள ஜனங்களும் உங்களைப் பார்க்கப் பிரியப்படுகிறார்கள். அவர்களையும் திருப்தி செய்து வாருங்கள்'' என்று திருதராஷ்டிரனும் மிக்க அன்பு பாராட்டுவதைப்போல் சொன்னான். பீஷ்மர் முதலிய பெரியோர்களிடம் விடை பெற்றுக்கொண்டு பாண்டவர்கள் வாரணவதம் போனார்கள்.

துரியோதனனுக்குப் பேரானந்தம். குந்தியையும் அவள் புத்திரர்களையும் வாரணவதத்தில் தொலைத்து விடச்சகுனியும் கர்ணனும் துரியோதனனும் ஆலோசனை செய்தார்கள். புரோசனன் என்னும் மந்திரியை வர வழைத்து அவனுடன் கலந்து ஆலோசித்து ரகசியமான முடிவுக்கு வந்தார்கள். அவனும் எல்லாம் செய்து முடிப்ப தாக வாக்குக் கொடுத்துப் போனான்.

பாண்டவர்கள் வாரணவதம் போய்ச் சேருவதற்கு முன்னமேயே புரோசனன் வேகமான வாகனம் ஏறிச்

சென்று அந்த நகரம் போய்ச்சேர்ந்தான். பாண்டவர்களுக்கென்று ஒரு அழகான மாளிகை நிருமாணித்தான். சணல், குங்கிலியம், மெழுகு, நெய், எண்ணெய், கொழுப்பு, அரக்கு இவைகளோடு மண்ணைக்கலந்து தீப்பிடிக்கத்தக்க சரக்குகளையே சேர்த்து மாளிகையைக் கட்டினான். சுவருக்குப் பூசிய பூச்சும் தீப்பிடிக்கத் தக்கதாகவே செய்தான்; அங்கங்கே எளிதில் நெருப்புப் பற்றிக்கொள்ளும்படியான பொருள்களைச் சாமர்த்தியமாகப் பல இடங்களில் வைத்து நிரப்பினான். மனதைக் கவரும் படியான ஆசனங்களும் சயனங்களும் ஏற்பாடு செய்தான். மாளிகை முற்றிலும் தயாராகும் வரையில் பாண்டவர்கள் ஊரில் சந்தேகமின்றித் தங்கியிருக்க வசதிகளும் செய்தான். பாண்டவர்கள் அரக்கு மாளிகையில் வந்து தங்கி இரவில் தூங்கிக்கொண்டிருக்கும்போது அதற்குத் தீ வைத்துவிடத் தீர்மானித்திருந்தான். பல நாட்கள் சுகமாக மாளிகையில் அவர்கள் இருந்தபின் ஊராருக்கு எவ்விதத்திலும் தெரியாதபடி வீட்டுக்கு நெருப்புவைத்து விட்டு அவர்களைத் தீக்கிரையாக்கி விட்டால் தற்செயலாக நடந்தது என்று ஜனங்கள் நம்புவார்கள். கௌரவர்கள் பேரில் யாரும் பழிசொல்ல மாட்டார்கள் என்பது துரியோதனனுடைய திட்டம்.

# பாண்டவர்கள் தப்பியது

பெரியோர்கள் அனைவருக்கும் நமஸ்காரம் செய்து சமமான வயதாயிருந்தவர்களைத் தழுவி விடைபெற்றுக் கொண்டு பாண்டவர்கள் வாரணாவதம் சென்றார்கள். நகரத்து ஜனங்கள் பாண்டவர்களுடன் வெகுதூரம் நடந்து சென்று திரும்பிப் போக மனமில்லாமல் திரும்பினார்கள். விதுரன் யுதிஷ்டிரனுக்கு மர்மமாக அந்நிய பாஷையில் எச்சரிக்கை செய்தான்.

"ராஜநீதியில் நிபுணனான எதிரியின் யோசனையை அறிந்தவன்தான் ஆபத்தைத் தாண்டுவான். உலோகத்தினால் செய்யப்படாத கூர்மையான ஆயுதமும் உண்டு. அதைத் தடுக்கும் உபாயத்தை எவன் அறிந்துகொள்ளுகிறானோ அவன் பகைவர்களால் கொல்லப்படமாட்டான். காடுகளை அழிப்பதும் குளிரைப் போக்குவதுமான ஒரு பொருள் வளைக்குள் வாசம் செய்யும் எலியைத் தீண்டாது. முள்ளம் பன்றி பூமியைத் தோண்டி காட்டுத் தீயிலிருந்து தப்பித்துக்கொள்ளும். அறிவாளி நட்சத்திரங்களினால் திசையை அறிகிறான்."

இவ்வாறு மறைவாகப் பொருளை ஏற்றி விதுரன் யுக்தியாகப் பாண்டவர்களுக்குத் துரியோதனனுடைய சதியாலோசனையையும் ஆபத்திலிருந்து தப்பும் வழியையும் பக்கத்திலிருந்தவர்களுக்குத் தெரியாத அந்நிய மொழியில் சொன்னான். யுதிஷ்டிரனும் "தெரிந்தது" என்று சொன்னான். பிறகு குந்திதேவி யுதிஷ்டிரனைக் கேட்டு விதுரன் சொன்னதை எல்லாம் தெரிந்துகொண்டாள். சந்தோஷமாகப் புறப்பட்டவர்கள் மிகுந்த கவலையுடன் சென்றார்கள்.

வாரணாவதத்து ஜனங்கள் பாண்டவர்கள் தங்கள் நகரத்துக்கு வருகிறார்கள் என்று கேட்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டு வரவேற்றார்கள். அவர்களுக்கென்று ஏற்படுத்திய விடுதிகளில் பாண்டவர்கள் சில நாட்கள் இருந்து வந்தார்கள். பிறகு புதிதாக கட்டி முடித்த "சிவம்" என்கிற மாளிகையில் புரோசனன்

பாண்டவர்களை அழைத்துப்போய் இருக்கச் செய்தான். 'சிவம்' என்ருல் மங்களம். அமங்களமான அந்த மாளிகைக்குச் "சிவம்!" என்று பெயரிட்டிருந்தான். விதுரன் சொன்னதை நினைவில் வைத்துக்கொண்டு வீட்டையெல்லாம் யுதிஷ்டிரன் கவனித்துப் பார்த்தான். தீக்கு இரையாவதற்கே கட்டியது என்பது சந்தேகமறத் தெரிந்தது. யுதிஷ்டிரன் பீமனிடம் சொன்னான்:

"ஆபத்தான இடம் என்று நன்ருகத் தெரிந்தபோதிலும் நாம சதியாலோசனையைத் தெரிந்துகொண்டு விட்டோம் என்பதைப் புரோசனனுக்குக் காட்டாமலிருக்கவேண்டும். சமயம் பார்த்து நாம வெளியேற வேண்டும். இப்போது சந்தேகத்துக்கு இடம தரக் கூடாது."

இவ்வாறு தீர்மானித்து அந்த வீட்டிலேயே இருந்தார்கள். இதற்குள் விதுரன் ஒரு சமர்த்தனை சுரங்கக்காரனை அனுப்பினன். அவன் பாண்டவர்களை ஏகாந்தமான ஒரு இடத்தில் சந்தித்து "உம்முடைய நன்மையை உத்தேசித்து விதுரன் யுதிஷ்டிரனிடம் அந்நிய பாஷையில் மறை பொருள் வைத்துச் சொன்னரே, அதுவே எனனை நீங்கள் நம்புவதற்கு அடையாளம. உங்களுடைய சகாயத்துக்காகச் செய்யவேண்டிய காரியத்தைச் செய்து தாவே வந்திருக்கிறேன்" என்ருன்.

அதன்மேல் அந்தச் சுரங்கக்காரன் புரோசனனுக்குத் தெரியாமல் பல நாட்கள் ரகசியமாக வேலை செய்து, அரக்கு மாளிகைக்குள்ளிருந்து மதிலையும் அகழியையும் அபாயமில்லாமல் தாண்டி வெளியே போவதற்குச் சுரங்கம் வெட்டி முடித்தான்.

புரோசனன் மாளிகையின் வாயிலிலேயே வசித்து வந்தான். பாண்டவர்கள் இரவு முழுதும் ஆயுதபாணிகளாகவே ஜாக்கிரதையாகத் தூக்கமில்லாமல் இருந்து வந்தார்கள். வெளியே சென்று வனத்தில் வேட்டையாடித் திரிந்து வந்தனர். அவ்வாறு சுற்றுப் பக்கத்துத் தேசத்தையும் பாதைகளையும் நன்ருகத்தெரிந்துகொண்டார்கள் புரோசனனை முற்றிலும் நம்பினவர்களைப் போலவும்

சந்தோஷமுள்ளவர்களைப் போலவும் தங்களுடைய கவலை யையும் சந்தேகத்தையும் மறைத்துக் கொண்டு பாண்ட வர்கள் அங்கே வாசம் செய்தார்கள். புரோசனனும் ஜனங்களிடம் எவ்வித சந்தேகமும் பழியும் தோன்றாத படி வீட்டுக்குத் தீ வைக்க வேண்டும் என்ற நல்ல சமயத் திற்காக ஒரு வருஷம் காத்துக் கொண்டிருந்தான்.

பிறகு ஒருநாள் இதுதான் சமயம் என்று புரோ சனன் எண்ணினன். புத்திசாலியான யுதிஷ்டிரனுக்கும் புரோசனனுடைய மனதிலிருந்தது புலப்பட்டது. தன் சகோதரர்களை நோக்கி "இந்த பாபிஷ்டன் நம்மைக் கொல்லும் காலம் வந்தது என்று எண்ணுகிறான். நாம் ஓடித் தப்புவதற்கு இதுதான் சமயம்" என்றான்.

குந்திதேவி அன்று ஒரு அன்னதானம் செய்வதாக ஏற்பாடு செய்து மாளிகையில் இருந்த பணியாளர்கள் எல்லாரும் நன்றாகச் சாப்பிட்டு இரவில் மயக்கமுற்றுத் தூங்கிவிட ஏற்பாடு செய்தாள்.

நடு ஜாமத்தில் பீமன் அந்த மாளிகையின் அநேக பாகங்களில் தீப்பற்ற வைத்துவிட்டு, குந்தி தேவியும் பாண்டவ சகோதரர்களும் சுரங்கத்தின் வழியாக இருட் டில் சுவரைத் தடவித்தடவி வழி தெரிந்துகொண்டு வெளியேறி விட்டார்கள். தீயானது உடனே வீட்டை நாலு பக்கமும் சுற்றிக்கொண்டது. புரோசனன் இருந்த இடமும் பற்றிக்கொண்டது. ஊரார் எல்லாரும் வந்து சேர்ந்து தீப்பற்றி எரியும் மாளிகையைக் கண்டு "ஹா! ஹா!" என்று கதறினார்கள். "துரியோதனாதிகள் குற்ற மற்ற பாண்டவர்களை இம்மாதிரி மோசம் செய்து கொன் றார்களே" என்று கௌரவர்களைக் கோபாவேசத்துடன் பலவிதமாகப் பழித்தார்கள். மாளிகை எரிந்து சாம்ப லாயிற்று. புரோசனனும் எதிர்பாராதபடி தீக்கு இரை யானன். வாரணவதத்து ஜனங்கள் "பாண்டவர்கள் இருந்த மாளிகை தீக்கு இரையாயிற்று. யாரும் உயி ருடன் தப்பவில்லை" என்று ஹஸ்தினபுரத்துக்குச் சொல்லி யனுப்பினர்கள்.

திருதராஷ்டிரனுடைய மனோநிலையை வியாசர் வெகு அழகாக வர்ணிக்கிறார். "கோடை காலத்தில் ஆழமான

ஒரு மடுவில் நீர் அடியில் குளிர்ச்சியாகவும் மேலே உஷ்ண மாகவும் இருப்பதுபோல் திருதராஷ்டிரனுடைய உள்ளத்தில் மகிழ்ச்சியும் துக்கமும் கலந்திருந்தது.''

பாண்டவர்கள் இறந்துபோனார்கள் என்று திருதராஷ்டிரனும் அவன் மக்களும் ஆபரணங்களைக் களைந்துவிட்டு ஒற்றை ஆடை உடுத்திக்கொண்டு கங்கைக்குச் சென்று தர்ப்பணம் செய்தார்கள். எல்லாரும் சேர்ந்து பெருங் கூக்குரலிட்டுப் புலம்பினார்கள்.

விதுரன் மட்டும் பிறப்பும் இறப்பும் விதிப்படி நடக்கும் என்ற வேதாந்த உணர்ச்சியோடு துக்கத்தை அதிகமாகக் காட்டிக் கொள்ளவில்லைபோல் இருந்தான். ஆனால் அதற்குக் காரணம் பாண்டவர்கள் இறக்கவில்லை. தப்பியோடிப் பிழைத்திருக்கிறார்கள் என்றே விதுரன் நிச்சயமாக இருந்தான். ஜனங்களோடு ஓரளவு புலம்பினவனானாலும் இந்த நேரத்தில் பாண்டவர்கள் எவ்வளவு தூரம் போயிருப்பார்கள், எங்கே இருப்பார்கள் என்று ஊகித்துக் கணக்கிட்டுக் கொண்டே இருந்தான். பீஷ்மர் துக்க சாகரத்தில் மூழ்கினதைக் கண்டு அவருக்கு விதுரன ரகசியமாகத் தான் செய்த ஏற்பாடுகளையெல்லாம் சொல்லிச் சந்தோஷப் படுத்தினான்.

இரவெல்லாம் விழித்திருந்தபடியாலும், கவலையினாலும் பயத்தினாலும் சகோதரர்களும் குந்திதேவியும் களைத்திருந்ததைப் பார்த்து வாயு புத்திரனான பீமசேனன் தாயாரைத் தோளின்மேலும் இடுப்பில் நகுல சகாதேவர்களையும் தூக்கிக்கொண்டு யுதிஷ்டிரனையும் அருச்சுனனையும் இரண்டு கைகளால் பிடித்துக்கொண்டு யானையைப் போல் காட்டில் செடிகளையும் புதர்களையும் விலக்கி வழி செய்துகொண்டு சென்றான். கங்கைக்கு வந்ததும் அங்கே விதுரன் அனுப்பியிருந்த ஓடம் தயாராக இருந்தது. ஓடக்காரன் ரகசியம் தெரிந்த நண்பன் என்பதைச் சோதித்துத் தெரிந்துகொண்டார்கள். ஓடத்தில் ஏறி இரவிலேயே கங்கையைத் தாண்டிச் சென்றார்கள். பிறகு காட்டில் ஒரு பகலெல்லாம் வேகமாக நடந்தார்கள். மாலையில் இருட்டு மூடவும் பயங்கரமான காட்டு மிருகங்களின் சத்தங்கள் கிளம்ப ஆரம்பித்தன.

தாகத்தினாலும் களைப்பினாலும் நித்திரையினாலும் பீடிக்கப்பட்டு ஒரு அடி வைக்கக்கூடச் சக்தியில்லாமல் கீழே உட்கார்ந்தார்கள். "திருதராஷ்டிரப் புத்திரர்கள் என்னைத் தூக்கிக்கொண்டு போகட்டும்; நான் இங்கேயே கிடப்பேன்" என்று குந்தி படுத்து பிரஜ்ஞை இழந்தாள். பீமன் பயங்கரமான காட்டில் இருட்டில் புகுந்து எங்கிருந்தோ தனனுடைய மேலாடையை தண்ணீரில் நனைத்தும் தாமரை இலைகளினால் தொன்னைகள் செய்தும் தண்ணீர் கொண்டுவந்து குந்திதேவிக்கும் சகோதரர்களுக்கும் கொடுத்தான். பிறகு எல்லாரும் மெய்மறந்து அங்கேயே தூங்கி விட்டார்கள். பீமன் மட்டும் சிந்தனை செய்துகொண்டு விழித்திருந்தான். "இந்தக் காட்டில் செடிகளும் கொடிகளும் ஒன்றையொன்று காப்பாற்றிக் கொண்டும் ஒன்றுக்கு மற்றொன்று இடம் விட்டுக் கொண்டும் பிழைக்கவில்லையா? ஏன் இந்தத் துராத்மா திருதராஷ்டிரனும் துரியோதனனும் இவ்வாறு எங்களைப் பகைக்கிறார்கள்?" என்று பாவம் அறியாத பீமன் மனம் கொதித்து வருந்தினான்.

பிறகு அநேக கஷ்டங்களைத் தாண்டிக்கொண்டும் ஆபத்துகளைத் தாண்டிக்கொண்டும் பாண்டவர்கள் காட்டில் சென்றனர். சில இடங்களில் வேகமாகச் செல்வதற்காகத் தாயாரைத் தூக்கிச் சென்றனர். சில இடங்களில் களைத்து நின்றனர். சில இடங்களில் துக்கத்தை மறக்க ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு நடந்தனர்.

வழியில் வியாசபகவானைக் கண்டார்கள். எல்லாரும் நமஸ்கரித்து அவரிடம் தைரியத்தையும் உபதேசத்தையும் பெற்றார்கள். தங்களுக்கு நேர்ந்த துக்கத்தைச் சொல்லிக் கொண்ட குந்திக்கு வியாசர் "எந்த மனிதனும் தருமத்தை மாத்திரமே செய்ய முடியாது. எந்த பாபியும் பாபத்தையே செய்து கொண்டிருக்கவும் முடியாது. புண்ணிய பாபங்கள் இரண்டையும் செய்யாதவன் உலகத்தில் எவனுமில்லை. செய்த காரியங்களின் பலனை எல்லாரும் அடைவார்கள். விசனத்தில் உள்ளத்தைச் செலுத்தாதே" என்று சொல்லிச் சமாதானப்படுத்தினார்.

பிறகு வியாசர் சொல்லியபடி பிராமண வேஷம் பூண்டு ஏகசக்கர நகரத்தில் ஒரு பிராமணன் வீட்டில் இருந்துகொண்டு, தினமும் அன்னம் பிக்ஷை எடுத்துக் கிடைத்ததைத் தாயாரிடம் கொடுத்துப் பங்கிட்டு எல்லாரும் சாப்பிட்டுக்கொண்டு பிராமண பிரமசாரிகளைப்போல் காலம் கழித்து வந்தார்கள்.

# பகாசுரன் வதம்

பாண்டவர்கள் ஏகசக்ர நகரத்தில் பிராமண வேஷம் பூண்டு வசித்து வந்தார்கள். பிராமணர்களுடைய தெருவில் உபாதானம் எடுத்துக் கிடைத்ததைத் தாயார் குந்தியிடம் கொடுப்பார்கள். பிக்ஷைக்குப் போனவர்கள் வீட்டிற்குத் திரும்பிவரும் வரையில் குந்தி கவலையோடு காத்திருப்பாள். நேரத்தில் திரும்பி வராமல் போனால் என்ன நடந்ததோ என்று பயப்பட்டுக் கொண்டிருப்பாள்.

கிடைத்த அன்னத்தைக் குந்திதேவி இரு சம பங்காகச்செய்து ஒரு பாதியை பீமனுக்கு கொடுத்து விடுவாள். மற்ற பாதியைத் தாயாரும் நான்கு சகோதரர்களும் சேர்ந்து ஐந்து பங்காகச் செய்து சாப்பிட்டு வந்தார்கள். பீமன் வாயு பகவானுடைய அம்சம் ஆனபடியால் அவனுக்குப் பலமும் அதிகம் பசியும் அதிகம். பீமனுக்கு விருகோதரன் என்றும் ஒரு பெயர். ஓநாய் வயிற்றைப் போல் சிறியதாகவும் எளிதில் திருப்திப் படாததுமான வயிற்றை உடையவன் என்று இதற்குப் பொருள். பீமசேனனுக்கு ஏகசக்கரபுரத்தில் அகப்பட்ட பிக்ஷான்னம் எவ்விதத்திலும் திருப்தியாக இருக்கவில்லை. நிறம் மாறியும் இளைத்தும் போனான். இதைக் கண்டு குந்திதேவிக்கும் யுதிஷ்டிரனுக்கும் மிகுந்த துக்கம். சில நாள் கழித்து பீமன் ஒரு குயவனிடம் சிநேகம் செய்து அவனுக்கு வேண்டிய களி மண் வெட்டி யெடுத்துக்கொண்டு வந்து கொடுக்கலானான். அவன் ஒரு பெரிய மண்பாண்டம் செய்து பீமனுக்குக் கொடுத்தான். அதை எடுத்துக் கொண்டு பீமன் பிக்ஷைக்குப் போவான். தெருவில் குழந்தைகள் எல்லாம் பீமனையும் அவன் பானையையும் பார்த்து வேடிக்கை செய்வார்கள்.

ஒரு நாள் மற்ற சகோதரர்கள் பிக்ஷைக்குப் போயிருந்த காலத்தில் பீமசேனன் மட்டும் வீட்டில் குந்தியுடன் இருந்தான். அப்போது அவர்கள் குடியிருந்த பிராமணன் வீட்டில் ஏதோ துக்க சமாசாரம் நிகழ்ந்தது

போல் உள்ளே அழும் குரல் குந்தி காதில் பட்டது. உடனே குந்தி என்னவென்று விசாரிக்க வீட்டிற்குள் சென்றாள். பிராமணனும் அவன் மனைவியும் அடிக்கடி அழுதுகொண்டு ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டிருந்தார்கள்.

*  *  *

"துர்ப்பாக்கிய ஸ்திரீயே! நான் சொன்னதை நீ கேட்கவில்லை. நான் உன்னைப் பலமுறை வேண்டியும் இந்த ஊரை விட்டுப் போக நீ சம்மதிக்கவில்லை. இங்கு பிறந்தேன். இங்கு வளர்ந்தேன். இங்கேயே இருக்கலாம் என்று பிடிவாதம் செய்து வந்தாய். உன் தந்தையும் தாயும் பந்துக்களும் இறந்த பின்னும், இது பிறந்த ஊர் என்று இங்கேயே இருக்க ஆசைப்பட்டாய். எனக்குச் சகதர்மிணியாயும் தாயாகவும் சிநேகிதையாகவும் புத்திர சந்தானம் தந்த பாரியையும் எல்லாமாகிய உன்னை நான் எப்படி இழக்கச் சம்மதிப்பேன்? என் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு 'உன்னை யமனுக்கு அனுப்ப என்னால் முடியாது. இந்தச் சிறுமியை ஆண்டவன் நம்மிடம் வரப் போகும் அவள் கணவனுக்காக ஒப்புவித்திருக்கிறான். வம்ச விருத்திக்கென்று ஆண்டவன் கொடுத்த இவனைச் சாகவிடுவது அதருமம். மகனாகிய சிறு பிள்ளையைச் சாக அடிப்பதும் முடியாது. எனக்கும் உனக்கும் நம்முடைய முன்னோருக்கும் பிண்டதர்ப்பணங்கள் கொடுக்கும் அருமைப் புதல்வனை எவ்வாறு யமனுக்கு அனுப்பிவிட்டு நாம் பிழைத்திருக்க முடியும்? ஐயோ! என் சொல்லை நீ கேட்கவில்லையே! பலனை இப்போது அனுபவிக்க வேண்டும். நான் என் சரீரத்தை விட்டு யமலோகம் சென்றால் இந்தச் சிறுமியும் சிறுவனும் இந்த உலகத்தில் ஜீவித்திருக்க முடியாது. நான் என்ன செய்வேன்? எல்லாருடனும் கூட இறந்து போவது சிலாக்கியம்" என்று பிராமணன் சொல்லி விம்மி விம்மி அழுதான்.

பிராம்மணனுடைய மனைவி சொன்னாள்: "மனைவியைப் புருஷன் எதற்காகக் கொள்ளுகிறானோ அந்தப்

ப்ரயோஜனம் நீர் என்னால் பெற்றுகிவிட்டது. ஒரு புத்திரியையும் ஒரு புத்திரனையும் நீர் என்னிடம் அடைந்தீர். என் கடனை நான் தீர்த்துவிட்டேன். குழந்தைகளை வளர்ப்பதற்கும் காப்பதற்கும் உமக்குச் சக்தி உண்டு. நீர் இல்லாமல் என்னால் அது செய்ய முடியாது. வெளியில் போடப்பட்ட மாமிசத்தைப் பறவைகள் தூக்கிப் போக எவ்வாறு காத்துக் கொண்டிருக்கிறவோ அவ்வாறே புருஷனில்லாத ஸ்திரீயை எல்லா ஜனங்களும் ஏமாற்ற விரும்புகின்றார்கள். துஷ்ட ஜனங்கள் நிறைந்திருக்கும் இவ்வுலகத்தில் அநாதையான பெண் வாழ்வது கஷ்டம். நெய்யில் நனைக்கப்பட்ட துணியை நாய்கள் எப்படிப் பிடித்திழுக்குமோ அப்படி நாதனில்லாத பெண்கள் துஷ்டர்கள கையில் சிக்கிக்கொண்டு நாலா பக்கத்திலும் இழுக்கப்பட்டு அலைவார்கள். நாதன் அற்றுப்போன இந்தக் குழந்தையை நான் சரியாக வளர்த்துக் காப்பாற்றுவது முடியாத காரியம். குளத்தில் ஜலம் வற்றிப் போனால் மீன்கள் எவ்வாறு அழியுமோ அவ்வாறு இந்தக் குழந்தைகள் இருவரும் நாசமடைவார்கள். அரக்கனுக்கு என்னைக் கொடுத்துவிடுவதே மேலாகும். புருஷன் இருக்கும்போது ஸ்திரீயானவள் பரலோக மடைவதே பெரும் பாக்கியம். இதுவே சாஸ்திரம். எனக்கு விடை கொடும். என் குழந்தைகளைக் காப்பாற்றும். நான் விரும்பினவற்றை அனுபவித்தாயிற்று. தருமானுஷ்டானம் செய்தேன். உமக்குப் பணிவிடை செய்ததினால் புண்ணிய லோகமும் பெறுவேன். மரணம் எனக்குப் பயம் தரவில்லை. நான் போனபின் நீர் வேறொரு ஸ்திரீயை அடைய முடியும், நீர் சந்தோஷமாய் என்னை அரக்கனிடம் அனுப்பி விடும்.''

இவ்வாறு மனைவியால் சொல்லப்பட்ட பிராமணன் அவளைத் தழுவிக்கொண்டு ஸ்திரீயைப்போல் மெல்லிய குரலில் தானும் கண்ணீர் விட்டழுதான்.

''அன்புள்ளவளே! சுந்தரீ! இவ்வாறு பேசாதே. இத்தகைய ஞானமுள்ள மனைவியை ஒருபோதும் விடத்தகாது. புத்தியுள்ள புருஷன் இவ்வுலகத்தில் ஸ்திரீயை ரக்ஷிக்க வேண்டியது முதல் கடமை. எக்காலத்திலும்

விடத்தகாத ஸ்திரீயை அரக்கனுக்குக் கொடுத்துவிட்டு ஜீவிப்பேனாயின் நான் பாபியாவேன்'' என்றான்.

தாயும் தகப்பனும் பேசினதைக் கேட்டுக்கொண்டிருந்த மகள், ''நான் சொல்லுவதைக் கேளுங்கள். கேட்டு விட்டுப் பிறகு உசிதப்படி செய்யுங்கள். நான்தான் உங்களால் இழக்கத்தக்கவள். என்னை அரக்கனிடம் அனுப்பி விடுங்கள். என் ஒருத்தியைக் கொண்டு எல்லாவற்றையும் காப்பாற்றிக் கொள்ள முடியும். ஓடத்தைக் கொண்டு தண்ணீரைத் தாண்டுவதுபோல் என்னைக் கொண்டு ஆபத்தைத் தாண்டுங்கள். நீங்கள் பரலோகம் சென்றால் என் சகோதரனை இந்தக் குழந்தை சீக்கிரம் இறந்து போவான். தந்தையே! நீர் இறந்தால் சிறு பெண்ணாகிய நான் அநாதையாகி விசனத்தில் சிக்கிக் கஷ்டப்படுவேன். இந்தக் குலத்திற்கு விமோசனம் தரக்கூடிய நிலையில் நான் இருக்கிறேன். நான் சொல்லியபடி செய்தீர்களானால் என் பிறவி பயனுள்ளதாகும். என்னுடைய நன்மையைக் கருதியே நீர் என்னை அரக்கனுக்கு அனுப்ப வேண்டும்.''

இவ்வாறு பிரியமான பெண் சொல்லத் தந்தையும் தாயும் இருவரும் அவளைத் தழுவி முத்தமிட்டு அழுதார்கள். எல்லாரும் அழுவதைக் கண்டு குழந்தையாகிய மகன் மலர்ந்த கண்களுடன் ''அப்பா! அழாதே! அம்மா! அழாதே! அக்கா அழாதே!'' என்று ஒவ்வொருவரிடமும் போய்ச் சொல்லி அவர்கள் மடியில் உட்கார்ந்தான். பிறகு அவன் எழுந்து அங்கிருந்த ஒரு விறகுக் குச்சியைக் கையில் எடுத்து ''அந்த ராக்ஷஸனை நான் இதனால் கொன்று போடுவேன்'' என்று மழலைச் சொல் சொல்ல எல்லோரும் சேர்ந்து பெருந் துக்கத்திற்கு இடையில் சிரித்தார்கள். அதுதான் நல்ல சமயம் என்று குந்திதேவி பேச ஆரம்பித்தாள்.

''இந்தத் துக்கத்திற்குக் காரணம் என்ன? தயவு செய்து சொன்னீர்களானால், ஏதாவது நிவர்த்திக்க முடியுமானால் நானும் செய்வேன்'' என்றாள்.

பிராமணன் "அம்மணி! உன்னால் என்ன செய்ய முடியும்? இந்த ஊருக்கு அருகில் ஒரு குகை இருக்கிறது. அதில் ஒரு கொடிய அரக்கன் இருக்கிறான். அவன் பெயர் பகாசுரன். மிகுந்த பலவான் அவன் இந்த தேசத்தையும் நகரத்தையும் பிடித்துக் கொண்டிருக்கிறான். சென்ற பதின்மூன்று வருஷங்களாக அவனால் இந்த நகரம் பீடிக்கப்பட்டு வருகிறது. இந்த தேசத்துக்கு அரசனாயிருக்கும் க்ஷத்திரியன் வேத்திரகீய நகரத்திலிருக்கிறான். அவனால் நம்மைக் காப்பாற்ற முடியவில்லை. இந்த அரக்கன் குகையில் வசித்துக்கொண்டு ஊரிலுள்ள ஸ்திரீகள், பாலர், விருத்தர்கள் எல்லாரையும் இஷ்டப்படி கொன்று தின்றுகொண்டுவந்தான். ஊரார் எல்லாரும் சேர்ந்து ஒரு நியமம் செய்துகொள்ளும்படி அவனைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள். 'நினைத்தபடி கொல்லாதே, உனக்கு வேண்டிய மாமிசமும், அன்னமும், தயிரும் சாராயமும் கள்ளும் பலவிதபானங்களும் பாத்திரங்களில் வைத்து வண்டிக்கு இரண்டு கறுப்புக் காளைமாடுகளையும் கட்டி வீட்டுக்கு ஒரு மனிதனாக வாரம் ஒருமுறை அனுப்புகிறோம். நீ அன்னத்தையும் மாடுகளையும் ஆளையும் தின்றுவிட்டு மற்றவர்களை இம்சிக்காமலிருக்க வேண்டும்' என்று ஊரார் வேண்டிக்கொள்ள, அவனும் அங்கீகரித்து அவ்வாறே நடந்து வருகிறது. அது முதல் இந்த பலவானை அரக்கன் மற்ற பகைவர்களிடத்திலிருந்தும், காட்டு மிருகங்களிடத்திலிருந்தும் இந்ததேசத்தை ரக்ஷித்து வருகிறான். இந்த உடன்படிக்கைப்படி அநேக வருஷங்களாக நடந்துவருகிறது.

"இந்தக் கஷ்டத்தினின்று தேசத்தை விடுவிக்க யாராவது எங்கேயாவது ஆரம்பம் செய்தால் அவர்களை உடனே அந்த ராக்ஷசன் பிள்ளை பெண்களுடன் கொன்று தின்றுவிட்டு அடக்கி வருகிறான். அம்மணி, எங்கள் பரம்பரை அரசன் எங்களைக் காப்பாற்ற முடியவில்லை. சக்தியுள்ள ராஜாவை அடையாத ஜனங்கள் மனைவி மக்களைப் பெறுதலே கூடாது. தகுந்த அரசனை முதலில் அடைய வேண்டும். அதன் பிறகே மனைவியையும் தனதானியங்களையும் அடைய வேண்டும். சரியான

அரசன் இல்லாவிடில் மனைவி ஏது, தனம் ஏது? இந்த வாரத்தில் ஆளை அனுப்பும் முறை இந்தக் குடும்பத்திற்கு நேர்ந்திருக்கிறது. எங்கேயாவது ஒருவனை விலைகொடுத்து வாங்கி அனுப்புவதற்கு எனக்குப் பொருள் கிடையாது. மனைவியையாவது குழந்தையையாவது அரக்கனிடம் அனுப்ப என்னால் முடியவில்லை. எல்லாரையும் கூட்டிக் கொண்டு அரக்கனிடம் நான் செல்வேன். எங்கள் எல்லாரையும் சேர்த்து அந்தப்பாவி தின்று விடட்டும். அம்மா! நீ கேட்டதனால் உனக்குச் சொன்னேன்" என்றான்.

இந்த ஏகச் சக்ரபுரிக் கதையில் எவ்வளவு அரசியல் தத்துவங்கள் அடங்கி நிற்கின்றன என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

குந்தி பீமனுடன் கலந்து பேசிவிட்டுத் திரும்பி வந்து சொன்னாள்: "இந்த பயத்திற்காக நீங்கள் துன்பப்பட வேண்டாம். எனக்கு ஐந்து குமாரர்கள் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவன் இந்த அரக்கனுக்கு இரையை எடுத்துக்கொண்டு செல்வான்" என்றாள்.

பிராமணன், "ஐயோ! கூடாது! அதிதியாக வந்திருக்கும் உன் மகனுடைய உயிரை எனக்காக பலிகொடுக்க நான் ஒப்பமாட்டேன்" என்றான்.

குந்தி "பிராமணரே! பயப்படாதீர். என் மகன் மந்திரசக்தி பெற்றவன். அந்த அரக்கனைக் கொன்று வருவான். இவன் அரக்கர்களைக் கொன்றதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் இதை நீங்கள் யாரிடத்திலும் சொல்லக் கூடாது. சொன்னால் அந்த வித்தை இவனுக்கு உதவாது" என்றாள். வெளியே தெரிந்தால் துரியோதனனுடைய ஆட்களுக்கு இவர்கள் பாண்டவர்கள் என்று தெரிந்து போகும் என்று பயந்து இவ்வாறு கேட்டுக் கொண்டாள்.

குந்தி செய்த ஏற்பாட்டினால் பீமனுக்குத் தாங்க முடியாத சந்தோஷமும் உற்சாகமும் உண்டாயிற்று. சகோதரர்கள் பிக்ஷை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்தார்கள்.

பீமசேனன் முகத்தில் புதிய ஒரு மகிழ்ச்சிக் குறிப்பைக் கண்ட தரும புத்திரன் பீமன் ஏதோ சாகசம் செய்ய எண்ணியிருக்கிறான் என்று ஊகித்து குந்தியிடம் போய் "அம்மா! பீமன் ரொம்ப சந்தோஷமாக இருக்கிறானே, அவன் என்ன செய்ய யோசித்திருக்கிறான்?" என்று கேட்டான். குந்தி விஷயத்தைச் சொன்னாள்.

யுதிஷ்டிரன் "இதென்ன, செய்யக்கூடாத சாகசத்தை செய்கிறாய்! பீமனுடைய வலிமையை ஆதாரமாகக் கொண்டு நாம் சிந்தையற்றுத் தூங்குகிறோம். வஞ்சகர்கள் பறித்துக்கொண்ட ராஜ்யத்தை இவனுடைய பராக்கிரமத்தால் அல்லவோ மறுபடி அடைய எதிர் பார்க்கிறோம்? பீமனால் அல்லவோ நாம் அரக்கு மாளிகையில் தீக்கு இரை யாகாமல் தப்பினோம்? இந்த பீமனை இழப்பதற்கு வழிதேடினாயே! துயரங்களினால் மனம் நொந்துபோய்ப் புத்தியை இழந்து விட்டாய் போலிருக்கிறது" என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொல்ல, குந்தி தேவி, "யுதிஷ்டிரனே! இந்தப் பிராமணர் வீட்டில் நாம் பல நாள் சுகமாக வசித்தோம்; மனிதர்களாகப் பிறந்தவர்களுடைய கடமையும் லக்ஷணமும் உபகாரத்துக்குப் பிரதி உபகாரம் செய்வதே யாகும். பீமனுடைய பராக்கிரமத்தை நான் அறிவேன், நீ பயப்படவேண்டாம். வாரணாவதத்திலிருந்து நம்மனைவரையும் தூக்கிவந்த பீமன், இடும்பனைக் கொன்ற பீமன், இவனைப்பற்றி எனக்குப் பயமில்லை. இந்த குடும்பத்துக்கு உதவுவது நம்முடைய கடமை" என்றாள்.

பிறகு நகரவாசிகள் பலவகை மாமிசங்களோடு சேர்ந்த அன்னத்தையும் குடங்கள் நிறையத் தயிரும் பானங்களும் வண்டியில் வைத்துக்கொண்டு பிராமணன் வீட்டண்டை வந்தார்கள். இரண்டு கருப்புக் காளைமாடுகளைப் பூட்டிய அந்த வண்டியில் பீமன் ஏறி அரக்கனுடைய குகைக்குச் சென்றான்.

வாத்திய முழக்கத்தோடு வண்டி சென்றது. குறிப்பிட்ட ஒரு இடம் போய்ச் சேர்ந்ததும் கூட வந்த ஊர் ஜனங்கள் நின்று விட்டார்கள். பீமன் மட்டும் வண்டியை

ஓட்டிப் போனான். அவ்விடத்தில் எலும்பும், மயிரும், ரத்தமும் கிடந்தன. துண்டுபட்டுச் சிதறிக் கிடக்கும் கை கால் தலைகளையும் கண்டான். கழுகுகள் வட்டமிட்டுக் கொண்டிருந்தன. பொறுக்க முடியாத நாற்றமாக இருந்தது. பீமன் வண்டியை நிறுத்திவிட்டுப் போஜன பண்டங்களை எல்லாம் அவசர அவசரமாகச் சாப்பிட ஆரம்பித்தான். "நான் அரக்கனோடு யுத்தம் செய்யும் போது அன்னமெல்லாம் இறைந்து போய்விடும். தவிர இந்த அரக்கனைக் கொன்ற பிறகு பிணம் தொட்ட தீட்டு உண்டாகும். சாப்பிட முடியாது" என்று முன்னதாகவே எல்லாவற்றையும் சாப்பிட்டு விடுவதாகத் தீர்மானித்து அவ்வாறே செய்ய ஆரம்பித்தான்.

வெகு நேரம் கோபத்துடன் காத்துக்கொண்டிருந்த அரக்கன் பீமன் செய்ததை எல்லாம் தூரத்திலிருந்து பார்த்து இன்னும் அதிக கோபாவேசமானான். பீமனும் அரக்கனைக் கண்டு அவனைப் பெயரிட்டு அழைத்தான். பெரிய சரீரமும் சிவந்த மீசையும் தாடியும் தலை மயிரும் காது வரையில் அகன்ற வாயும் கொண்ட அந்த பயங்கரமான அரக்கன் பீமனைத் தூக்கிச்செல்ல ஓடிவந்தான். பீமசேனன் சிரித்துக்கொண்டே அவனைக் கவனிக்காதவன்போல் அவனுக்கு முதுகைக் காட்டிக்கொண்டு அன்னத்தைச் சாப்பிட்டுக் கொண்டே இருந்தான். ராக்ஷசன் ஓடிவந்து முதுகில் ஒரு அறை அறைந்தான். பீமன் அந்த அடியை வாங்கிக் கொண்டு திரும்பிப் பாராமல் சாப்பிட்டுக் கொண்டே இருந்தான். அரக்கன் போய் ஒரு மரத்தைப் பிடுங்கி எடுத்து அதைப் பீமசேனன் மேல் அங்கிருந்து விட்டெறிந்தான். பீமன் திரும்பிப் பாராமல் இடது கையினால் அதைத் தடுத்து வலது கையைக் கொண்டு சாப்பிட்டுக் கொண்டேயிருந்தான். பிறகு குடத்தை எடுத்துத் தயிரையும் குடித்துவிட்டு வாயைத் துடைத்துக்கொண்டு எழுந்து ராக்ஷசனைத் திரும்பிப் பார்த்தான்.

அதன்மேல் இருவருக்கும் பெரிய யுத்தம் நடந்தது. பகனை பீமன் உதைத்துக் கீழே தள்ளி "ராக்ஷசா! களைப்பாறு" என்பான். பிறகு "எழுந்து வா!" என்பான்.

அசுரன் அநேகந் தடவை பீமனால் தள்ளப்பட்டு மீண்டும் மீண்டும் எழுந்து வந்து போர் புரிந்தான். முடிவில் பீமன் அரக்கனைக் கீழே தள்ளி முதுகின் மேல் முழங்காலை வைத்து அவன் எலும்பை முறித்தான். அசுரன் பயங்கரமான சப்தம் செய்து வாயில் ரத்தம் கக்கிக்கொண்டு உயிர் நீத்தான். பிணத்தை பீமன் இழுத்து வந்து நகரத்தின் கோபுரவாயில் போட்டுவிட்டுப் பிறகு பிராமணனுடைய வீட்டுக்குப்போய் ஸ்நானம் செய்து தாயாரிடம் நடந்ததைச் சொல்லி அவளை மகிழச் செய்தான்.

# திரௌபதி சுயம்வரம்

ஏக சக்கரபுரத்தில் பிராம்மண வேஷமும் பிராமண வாழ்க்கை முறையும் அனுசரித்துத் தாங்கள் யார் என்று ஒருவருக்கும் தெரியாமல் மறைவாகப் பாண்டவர்கள் வாசம் செய்து கொண்டிருந்த காலத்தில் பாஞ்சால ராஜனான துருபதன் மகள் திரௌபதிக்குச் சுயம்வர ஏற்பாடு நடந்தது. தானங்களைப் பெறவும் வேடிக்கை பார்க்கவும் ஏக சக்கரபுரத்தில் பல பிராமமணர்கள் சுயம்வர சபைக்குப் போவதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். திரௌபதியை உத்தேசித்துப் பாஞ்சாலம் போக தன் மக்கள் விரும்புவதைக் குறிப்பால் அறிந்து கொண்ட குந்தி, "நாம் இந்த நகரத்தில் இவ்வளவு காலம் வாசம் செய்தோம். ஒரே இடத்தில் நெடுங்காலம் வசிப்பது நல்லதல்ல. பாஞ்சால தேசம் மிகச் செழிப்பாயிருப்பதாகக் கேள்வி. இந்தப் பிரதேசத்திலுள்ள காடுகளையும் தோட்டங்களையும் பார்த்தோம். பார்த்ததையே பார்த்தால் முன் போல் சந்தோஷம் உண்டாகாது. பிக்ஷையும் குறைந்து வருகிறது. புதிய இடத்துக்குப் போவது நலம். துருபதனுடைய தேசத்திற்குப் போகலாம்" என்று தானாகவே யுதிஷ்டிரனிடம் சொன்னாள். லௌகிக சாமர்த்தியத்தில் குந்தி யாருக்கும் குறைந்தவளல்ல.

x x x

பிராம்மணர்கள் கூட்டம் கூட்டமாகப் பாஞ்சாலத்தில் நடக்கும் சுயம்வரத்திற்குப் போனார்கள். அவர்களோடு பாண்டவர்களும் சென்றார்கள். நெடு நாட்கள் நடந்து துருபதனுடைய அழகிய நகரத்தைச் சேர்ந்தார்கள். நகரத்தையும் ராஜமாளிகைகளையும் பார்த்துவிட்டு ஒரு குயவனுடைய வீட்டில் இடம் செய்துகொண்டு தங்கினார்கள். பாஞ்சால நகரத்திலும் பாண்டவர்கள் பிராம்மண விருத்தியை அனுசரித்து வந்தார்கள். ஊரில் யாருக்கும் இவர்கள் யார் என்று தெரியாது.

துருபதனுக்கும் துரோணருக்கும் சமாதானம் ஏற்பட்டிருந்தபோதிலும் துரோணருடைய விரோதத்தினால் துருபதனுக்குக் கவலையாகவே இருந்து வந்தது. அருச்சுனனுக்குத் தன் மகள் திரௌபதியைக் கொடுத்து விவாகம் செய்து முடிக்க வேண்டும் என்பது துருபதனுடைய ஆசை. அப்படிச் செய்துவிட்டால் துரோணருடைய பகைமை குறையும். யுத்தம் வந்தாலும் இந்த சம்பவத்தால் தன்னுடைய வலிமை அதிகமாகும் என்று அவன் யோசனை. பாண்டவர்கள் வாரணாவதத்தில் இறந்துவிட்டார்கள் என்பதைக் கேட்டதும் அவன் மிகவும் துயரப்பட்டான். பிறகு அவர்கள் தப்பிப் பிழைத்திருக்கலாம் என்று ஒரு வதந்தி பரவி வந்தது. அதைக் கேட்டுக் கொஞ்சம் சந்தோஷம் அடைந்து வந்தான்.

x x x

சுயம்வர மண்டபம் வெகு அழகாக நிர்மாணிக்கப்பட்டது. ராஜகுமாரர்களும் விருந்தினர்களும் தங்குவதற்கு மண்டபத்தைச் சுற்றிப் பல விடுதிகள் கட்டப்பட்டு அலங்கரிக்கப்பட்டிருந்தன. கண்ணைக் கவரும்படியான வேடிக்கைகளும் காட்சிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பதினாறு நாட்கள் அற்புதமான விழா நடந்தது.

x x x

எஃகுத் தந்திகளால் திரிக்கப்பட்ட நாண் கொண்ட ஒரு பெரிய வில் சுயம்வர மண்டபத்தில் வைக்கப்பட்டிருந்தது. அந்த வில்லை வளைத்து எஃகு நாணை அதில் பூட்டி அம்பு எய்து, மேலே வெகு உயரத்தில் அமைக்கப்பட்டிருந்த ஒரு பொன் மயமான லக்ஷியத்தை அடிக்க வேண்டியது. இடையில் சுழலும் யந்திரம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அந்தச் சுழல் யந்திரத்திலிருந்த துவாரத்தின் வழியாக அம்பு செல்ல வேண்டியது. சுழல் யந்திரத்தினால் தடைப்படாமல் அம்பைச் செலுத்தி லக்ஷியத்தை அடித்த வீரன் தன் மகளை அடையலாம் என்று துருபதன் பிரசுரித்தான்.

x x x

சுயம்வரத்திற்கு நாற்திசையிலிருந்தும் வீரர்கள் வந்திருந்தார்கள். திருதராஷ்டிர புத்திரர்களும் கர்ணனும், கிருஷ்ணனும் சிசுபாலனும் ஜராசந்தனும் சல்லியனும் உள்பட நூற்றுக்கணக்கான அரசர்கள் வந்து குழுமினார்கள். சுயம்வர சம்பவத்தைப் பார்க்க வந்த பொது ஜனக் கூட்டமும் மிகப் பெரிது. சபையில் கடலைப்போல் கம்பீர ஓசை நிரம்பிற்று. வாத்தியங்களும் மங்கல சப்தங்களும் கோஷித்தன. முன்னால் ஒரு குதிரைமேல் திருஷ்டத்யும்னன் தங்கைக்கு வழி செய்து கொண்டு வந்தான். பின்னால் மஞ்சன நீராடி அகிற் புகையினால் கூந்தலின் ஈரத்தைப் போக்கி பட்டாடை தரித்துக் கொண்டு இயற்கை அழகே ஆபரணமாகப் படைத்த திரௌபதி கையில் மாலையை எடுத்துக் கொண்டு யானையினின்று இறங்கிச் சபையில் பிரவேசித்தாள். அவள் அழகைக் கண்டு களிப்பும் பரவசமு முற்ற வீரர்களைக் கடைக் கண்ணால் பார்வை யிட்டுக் கொண்டு திரௌபதி சபை மத்தியில் நடந்து மேடைக்குச் சென்றாள். பிராமணர்கள் மந்திரங்கள ஓதி அக்னியில் அவி அளித்தார்கள். சுவஸ்தி வாசனம் சொல்லப்பட்டு வாத்திய கோஷமும் அடங்கிய பின், கம்பீரமான குரலைப் படைத்த திருஷ்டத்யும்னன் தன் சகோதரியை மண்டபத்தின் நடுவில் கைப்பிடித்து நிறுத்தி, கூடியிருந்த சபையோரைப் பார்த்து,

"இங்கே பிரசன்னமா யிருக்கிற வீரர்கள் எல்லாரும் கேட்கவேண்டும். இதோ, வில்! இதோ, லக்ஷியம்! இவையே அம்புகள்! யந்திரத்தின் துவாரத்தின் வழியாக ஐந்து சரங்களை எய்து குலமும் ரூபமும் பலமும் பொருந்திய எவன் லக்ஷியத்தை அடிக்கிறானோ அவன் என் சகோதரியை இப்போதே பாரியையாக அடைவான். இது சத்தியம்" என்று சொல்லி அங்கே வந்து அமர்ந்திருக்கும் அரசர்களுடைய பெயர்களையும் குலத்தையும் திரௌபதிக்கு வரிசைக் கிரமமாக எடுத்துச் சொன்னான்.

x x x

புகழ்பெற்ற பல அரசகுமாரர்கள் ஒவ்வொருவராக எழுந்து வந்து வில்லைத் தூக்கி நாண் ஏற்ற முடியாமல் அவமானப்பட்டுத் திரும்பினார்கள்.

சிசுபாலன், ஜராசந்தன், சல்லியன், துரியோதனன் இவர்களும் பார்த்து ஏமாற்ற மடைந்தார்கள்.

கர்ணன் எழுந்து வந்ததும் சபையிலுள்ள எல்லோரும் இவன் நிச்சயமாக வெற்றி பெறுவான் என்று எதிர்பார்த்தார்கள். வில்லை வளைத்து நாண் பூட்ட ஒரு மயிரிழையே தான் இருந்தது. அப்போது வில்லானது பளீர் என்று அவனைத் திருப்பி அடித்தது. சபையில் ஏற்பட்ட பரபரப்பு அடங்கியதும் பிராம்மணக் கூட்டத்தின் மத்தியில் உட்கார்ந்திருந்த ஒருவன் எழுந்தான்.

அந்தண இளைஞனாக வேஷங் கொண்ட அருச்சுனன் எழுந்ததைக் கண்டு சபையில் கலவரம் ஏற்பட்டது. பிராம்மணர்களே ஒருவரோடு ஒருவர் வாதம் செய்ய ஆரம்பித்தார்கள். சிலருக்குப் பெருத்த உற்சாகம். சிலருக்கு அடங்காத ஆட்சேபணை

கர்ணன் சல்லியன் முதலான வீரர்கள் தோல்வியடைந்த ஒரு விஷயத்தில் வெறும் சபல புத்தியால் தூண்டப்பட்டு இந்தப் பிரம்மசாரி பிரவேசிப்பது பிராமண சமூகத்துக்கே பெருத்த அவமானம் கொண்டுவந்து விடும் என்று பலர் பெருங் கூச்சல் போட்டார்கள். ஆனால் சிலர் வேறுவிதமாகச் சொன்னார்கள். "இவனைப் பார்த்தால் வெற்றி பெற்றாலும் பெறுவான் என்று தோன்றுகிறது. இவனுடைய உற்சாகத்தையும் தைரியத்தையும் கவனித்துப் பார்த்தால் க்ஷத்திரியர்கள் யாரும் செய்யாத காரியத்தை இவன் ஒருவனே செய்யச் சக்தி பெற்றிருப்பான் என்றே நினைக்க இடமிருக்கிறது. தேக பலம் குறைவாக இருந்தாலும் பிராமணர்களுக்கு உறுதியான தவப்பெருமை இருக்கிறது. ஏன் இவன் பிரயத்தனப் படக்கூடாது?" என்று ஒரு கட்சி பலமாகவே கிளம்பிற்று. அதன்மேல் பிராமணர்கள் ஏகோபித்து ஆசிர்வதித்தார்கள்.

* * *

அருச்சுனன் வில்லின் சமீபம் போய் நின்று, திருஷ்டத்யும்னனைப் பார்த்து "இந்தத் தனுசைப் பிடித்து வளைத்து பிராமணர்கள் நாணேற்றலாமோ?" என்று

கேட்டான். இதைக் கேட்ட திருஷ்டத்யும்னன், "பிராம்மணோத்தமனே! பிராமணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் இவர்கள் யாராயினும் இந்த வில்லை நாணேற்றி லக்ஷியத்தை அடித்து வென்றால் அவனுக்குஎன் சகோதரி உரியவளாவாள். நான் சொன்ன வாக்கு சத்தியம். பின்வாங்க மாட்டேன்" என்றான்.

அதன் பிறகு அருச்சுனன் நாராயணனை மனத்தில் தியானித்து வில்லை யெடுத்தான். நாணையும் ஏற்றினான். சபை ஆச்சரியத்தில் மூழ்கி நிச்சப்தமாக இருந்தது. எய்த ஐந்து பாணங்களும் சுழலும் யந்திரத்தின் வழியாகச் சென்றன. மேலே கட்டியிருந்த லக்ஷியம் அறுந்து கீழே விழுந்தது. சபை ஆரவாரித்தது; வாத்தியங்கள் முழங்கின.

அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான பிராமணர்கள் திரௌபதியை தாங்களே அனைவரும் பெற்றுவிட்டதாகவே சந்தோஷப்பட்டுக் கூச்சலிட்டார்கள். மேலுத்தரியங்களை உயர வீசினார்கள். கோலாகலத்தைச் சொல்ல முடியாது. திரௌபதி புதிய அழகுடன் விளங்கினாள். நகைக்காமலே நகைத்த தோற்றத்துடனும் பார்வையினாலே பேசுபவள் போலும் அருச்சுனனிடம் சென்று மாலையை எடுத்து அவனுடைய கழுத்தில் போட்டாள். யுதிஷ்டிரனும் நகுலனும் சகாதேவனும் சம்பவத்தைத் தாயாரிடம் சொல்ல வேகமாக எழுந்து குயவன் சாலைக்குச் சென்றார்கள். பீமன் மட்டும் ஏதாவது தம்பிக்கு க்ஷத்திரிய கூட்டத்தினின்று ஆபத்து நேரிடுமோ என்று சபையிலேயே இருந்தான்.

பீமன் எதிர்பார்த்தபடியே கூட்டத்தில் ராஜகுமாரர்கள் கலவரம் செய்தார்கள். "சுயம்வர முறை பிராமணர்களுக்கு இல்லை. இந்தப் பெண்ணுக்கு ஒரு ராஜகுமாரனும் வேண்டாமலிருந்தால், விவாகம் இல்லாமலே சிதை ஏறவேண்டியது. பிராமணன் இவளை எப்படி அடையலாம்? தருமத்தைக் காப்பாற்றவும், சுயம்வர முறைக்கே நேரப்போகும் ஆபத்தைத் தடுக்கவும் இந்த விவாகத்தை நாம் நடக்க விடாமல் தடுத்துவிட வேண்டும்"

என்று ராஜகுமாரர்கள் எல்லாரும் ஆரவாரம் செய்தார்கள். பெருத்த கலகம் ஏற்படும்போலிருந்தது. பீமன் வெளியில் சென்று ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி இலைகளை உதறினான். உதறி அதை ஒரு சாதாரணத் தடியைத் தூக்கி வருவதுபோல் தூக்கிக்கொண்டு அருச்சுனன் பக்கத்தில் வந்து நின்றான். திரௌபதி அர்ச்சுனன் போர்த்திருந்த மான் தோலின் தலைப்பைப் பிடித்துக் கொண்டு பேசாமல் நின்றாள்.

கிருஷ்ணனும் பலராமனும் மற்றவர்களும் குழப்பம் கிளப்பின அரசர்கள் கூட்டத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தார்கள். அருச்சுனன் திரௌபதியை அழைத்துக் கொண்டு குயவனுடைய சாலைக்குப் போனான்.

* * *

பீமார்ச்சுனர்கள் திரௌபதியை அழைத்துச்சென்ற போது திருஷ்டத்யும்னனும் பின் தொடர்ந்து சென்றான். சென்று அங்கு நடந்ததை மறைவாகப் பார்த்து வியப்புற்றுத் திரும்பிவந்து தந்தை துருபதனிடம், "தந்தையே! இவர்கள் பாண்டவர்களே என்றே நினைக்கிறேன். அச்சமின்றித் திரௌபதி அந்த வாலிபனுடைய கிருஷ்ணாஜினத்தைப் பிடித்துக்கொண்டு போனாள். நானும் போனேன். அங்கே குடிசையில் அக்கினிக் கொழுந்து போல் உட்கார்ந்திருந்தவள் 'குந்தி என்றே எண்ணுகிறேன்" என்றான்.

* * *

துருபதன் சொல்லியனுப்பி குந்தியும் பாண்டவர்களும் அரண்மனைக்கு வந்தார்கள். துருபதன் கேட்டதற்குத் தாங்கள் பாண்டவர்கள் என்றும் 'திரௌபதியை ஐவரும் ஒன்றாக விவாகம் செய்து கொள்வதே தங்கள் தீர்மானம் என்றும் தர்ம புத்திரன் சொன்னான். பாண்டவர்கள் என்று அறிந்ததும் துருபதன் மகிழ்ந்தான். "துரோணருடைய பகையைப்பற்றி இனிக்கவலை இல்லை. மகளுக்கு அருச்சுனன் புருஷனாக அமைந்துவிட்டான்" என்று அவனுக்குச் சந்தோஷம் பொங்கிற்று.

ஆனால் ஐந்து பேரும் ஒருத்தியை விவாகம் செய்வோம் என்று யுதிஷ்டிரன் சொன்னதைக் கேட்டு வியப்பும் அருவருப்பும் கொண்டான்!

"இது என்ன அக்கிரமம்! ஒரு காலத்திலும் தருமம் என்று சொல்லப்படாததும் உலக வழக்கத்துக்கு முற்றிலும் மாறுபாடானதுமான இந்த எண்ணம் ஏன் உமக்கு உண்டாயிருக்கிறது?" என்று துருபதன் ரொம்ப ஆட்சேபித்துப் பார்த்தான்.

யுதிஷ்டிரன் சமாதானம் சொன்னான். "ராஜாவே! மன்னிக்க வேண்டும். கிடைத்ததையெல்லாம் நாங்கள் சேர்த்து அனுபவிப்பதாகப் பிரதிஜ்ஞை செய்திருக்கிறோம். மகா ஆபத்துக்கிடையில் இவ்விதம் நாம் தீர்மானித்தோம். இந்த பிரதிஜ்ஞையை நாம் புறக்கணிக்க முடியாது. எங்கள் தாயாராலும் இதுவே சொல்லப்பட்டது" என்றான் யுதிஷ்டிரன்.

"நீரும் குந்தியும் திருஷ்டத்யும்னனும், திரௌபதியும் எல்லாரும் சம்மதித்தால் அப்படியே செய்யலாம்" என்று துருபதன் முடிவில் ஒப்புக்கொண்டான். அவ்வாறே பெரியோர்களும் சம்மதித்து முடிந்தது.

# இந்திரப் பிரஸ்தம்

**பா**ஞ்சாலியின் சுயம்வரத்தில் நடந்த சம்பவங்களைப்பற்றி வதந்திகள் ஹஸ்தினாபுரத்துக்கு வந்ததும் விதுரன் மகிழ்ச்சி யடைந்து வேகமாகத் திருதராஷ்டிரனிடம் சென்று, "திருதராஷ்டிரனே, நம்முடைய குலம் பலமடைந்து விட்டது, துருபதன் மகள் நமக்கு மருமகளாய் விட்டாள். நமக்கு நல்ல காலம்" என்றான்.

துரியோதனனும் சுயம்வரத்துக்குப் போயிருந்தானல்லவா? அவன் தான் திரௌபதியை அடைந்து விட்டான் என்று துரியோதனிடம் இருந்த அளவு மீறிய பட்சபாதத்தினால் அறிவை இழந்த திருதராஷ்டிரன் விதுரன் கொண்டுவந்த செய்தியைத் தவறாகப் பொருள் செய்து கொண்டான்.

"நல்ல காலம்! நல்ல காலம்! உடனே போய் மருமகளை திரௌபதியை அழைத்து வா, பாஞ்சாலியை தகுந்த மரியாதையோடு வரவேற்பதற்கு எல்லா ஏற்பாடுகளும் தாமதமின்றிச் செய்" என்றான்.

இதைக் கேட்ட விதுரன் உண்மையில் நடந்ததை அவனுக்குச் சொன்னான். பாக்கியசாலியான பாண்டவர்கள் உயிருடனிருக்கிறார்கள். துருபதன் மகளை அர்ச்சுனன் பெற்றான். பாண்டவர்கள் ஐவரும் மந்திர பூர்வமாக அவளைப் பாணிக்கிரகணம் செய்து கொண்டார்கள். அவர்கள் எல்லாரும் குந்தி தேவியுடன் துருபதனுடைய பாதுகாப்பில் க்ஷேமமா யிருக்கிறார்கள்" என்று விதுரன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் ஏமாற்றமடைந்தான். ஆயினும் தன்னுடைய ஏமாற்றத்தைக் காட்டிக் கொள்ளாமல்,

"விதுரனே! நீ சொல்லுவது எனக்கு மகிழ்ச்சி உண்டாக்கிற்று. அன்புக்குரிய பாண்டவர்கள் உயிருடன் இருக்கிறார்களா? நெருப்பில் மாண்டார்கள் என்றல்லவோ துக்கப்பட்டுக் கொண்டிருந்தேன்? நீ இப்போது

கொண்டு வந்த செய்தி என்னுடைய உள்ளத்தைப் பூரிக்கச் செய்கிறது. துருபதன் மகள் நமக்கு மருமகளானாளா? நல்லது, நல்லது! எல்லாம் நல்லது!" என்று சொல்லித் தானும் மகிழ்ச்சி யடைந்ததைப் போலவே காட்டிக் கொண்டான்.

பாண்டவர்கள் அரக்கு மாளிகையிலிருந்து எப்படியோ தப்பிப் பிழைத்து, ஒரு வருஷ காலம் மறைவாக இருந்துவிட்டு இப்போது பாஞ்சால வல்லரசனுடைய மகளை மனைவியாகப் பெற்று முன்னைவிட அதிக பலம் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்பதைக் கண்டு துரியோதனனுக்கு முன்னிருந்த பொறாமையும் விரோதமும் இரு மடங்காயின.

"மாமா! பயமா யிருக்கிறதே, புரோசனை நம்பிக் கெட்டோம். நம்முடைய சூழ்ச்சி யெல்லாம் வீணாயிற்று. நம்முடைய பகைவர்களான இந்தப் பாண்டு புத்திரர்கள் நம்மைவிட சாமர்த்தியசாலிகள். தெய்வமும் இவர்களுக்குத் துணையாயிருக்கிறது. மரணம் இவர்களை எட்டவே எட்டாதுபோல் இருக்கிறது. திருஷ்டத்யும்னனும் சிகண்டியும் இவர்களுக்குத் துணையாய் விட்டார்களே! என்ன செய்வது?" என்று துரியோதனனும் துச்சாதனனும் சகுனியிடம் முறையிட்டார்கள்.

கர்ணனும் துரியோதனனும் அந்தகனான திருதராஷ்டிரனிடம் சென்று,

"விதுரனிடம் நீர் இது நல்ல காலம் என்று சொன்னீரே! பாண்டவர்கள் நமக்கு விரோதிகளாயிற்றே! விரோதிகள் அபிவிருத்தி அடைவது நமக்குத் தீமையல்லவா? அவர்கள் நம்மை நிச்சயமாக அழித்து விடுவார்கள். நாம் அவர்களுக்குச் செய்யப் பார்த்தது நிறைவேறவில்லை. நிறைவேறாத காரியங்கள் நமக்கே பெரிய அபாயமாகும். எப்படியாவது நாம் அவர்களை இப்போது அழித்துவிட வேண்டும். இல்லாவிடில் நாம் கெட்டுப் போவோம். இதற்கு யோசனை செய்வீராக" என்றார்கள்.

"மகனே நீ சொல்லுவது உண்மை. ஆனால் நம்முடைய கருத்து விதுரனுக்குத் தெரியக்கூடாது. அதற்காகத்தான நான் அவனிடம் அவ்வாறு நடந்துகொண்டேன். இப்போது செய்யத் தக்கது என்னவென்று உங்கள் யோசனையைச் சொல்லுங்கள், பார்ப்போம்" என்றான் திருதராஷ்டிரன்.

துரியோதனன் சொன்னான்:

"எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. கவலையில் சிக்கித் தடுமாறுகிறேன். என் புத்தி பலவாறாக ஓடுகிறது. இந்தப் பாண்டவர்கள் ஐவரும் ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்கள் அல்ல. மாத்ரி குமாரர்களுக்கும் மற்ற மூவருக்கும் எப்படியாவது விரோதம் மூட்டிவிடுவது ஒரு வழி. துருபதனுக்குத் திரவியம் நிறையக் கொடுத்து அவனை நம்முடைய கட்சியில் எப்படியாவது சேர்த்துக்கொள்ளப் பார்க்கலாம். தன் மகளைப் பாண்டவர்களுக்குக் கொடுத்திருக்கிற ஒரு காரணத்தினாலேயே நாம் அவனைச் சிநேகம் செய்ய முடியாமல் போகாது. தனத்தின் பலத்தினால் ஆகாத காரியத்தையுங்கூடச் செய்து முடிக்கலாம்."

இவ்வாறு துரியோதனன் சொன்னதைக் கேட்ட கர்ணன் நகைத்தான். "இது வீண் பேச்சு" என்றான்.

"எவ்விதத்திலாவது யுக்தி செய்து அந்தப் பாண்டவர்கள் இங்கே வந்து நம்முடைய வசத்திலிருக்கும் ராஜ்யத்திற்கு உரிமை கோராமல் செய்ய வேண்டும். பிராமணர்களைத் துருபதன் நகரத்திற்கு அனுப்பி அங்கே வதந்திகளை உலாவச் செய்யலாம். பல பேர்கள் தனித் தனியாகப் போய்ப் பாண்டவர்களிடம் சொல்லட்டும். 'ஹஸ்தினபுரத்துக்கு நீங்கள் சென்றால் உங்களுக்கு அபாயம் நேரிடும்' என்று பலர் சொல்லிப் பயம் உண்டாக்கினால் பாண்டவர்கள் இவ்விடம் வராமல் இருப்பார்கள்" என்றான் துரியோதனன்.

"இதுவும் உபயோகமற்ற யோசனை" என்றான் கர்ணன்.

மறுபடியும் துரியோதனன், "திரௌபதியைக் கொண்டு பாண்டவர்களுக்குள் விரோதம் உண்டாக்க

முடியாதா? இயற்கைக்கு மாறாகப் பல புருஷர்கள் ஒரு ஸ்திரீயை மணந்திருக்கிறார்கள். இது நமக்குப் பெரும் வசதி தருகிறது. காமவேக நிபுணர்களைக் கொண்டு அவர்கள் மனத்தில் சந்தேகத்தையும் பொறாமையையும் கிளப்பி விடலாம். நிச்சயமாகப் பலனைப் பெறுவோம். அழகான பெண்களைத் தேடிக் குந்தி புத்திரர்களில் சிலரை ஏமாற்றித் திரௌபதியை இவர்கள் மேல் வெறுப்புக் கொள்ளவும் செய்யலாம். இவர்களில் யாராவது ஒருவன் பேரில் திரௌபதிக்கு விரோதம் ஆரம்பித்தால் அவனை நாம் ஹஸ்தினாபுரத்துக்குக் கூப்பிட்டழைத்து மேலே செய்யக்கூடிய தந்திரங்களைச் செய்யலாம்'' என்றான்.

கர்ணன் இதற்கும் நகைத்தான். ''துரியோதனா! உன்னுடைய யோசனைகள் எதுவும் சரியாயில்லை. இந்தப் பாண்டவர்களைத் தந்திரத்தினால் ஜெயிக்க முடியாது. இவ்விடம் அவர்கள் இருந்த காலத்தில், சிறகு முளைக்காத பறவைக் குஞ்சுகள் போல் இருந்தார்கள். அப்போதுங்கூட உன்னால் அவர்களை ஏமாற்ற முடியவில்லையே? இப்போது அவர்கள் அனுபவம் அடைந்து வேறு அரசனிடம் சரண் புகுந்திருக்கிறார்கள். உன்னுடைய எண்ணங்கள் அவர்களுக்குத் தெரிந்து போயிற்று. தந்திரங்கள் இனிமேல் உதவாது. அவர்களை மித்திரபேதம் செய்து ஜெயிப்பது அசாத்யம். துருபதராஜன் யோக்கியமானவன். அவனை விலைக்கு வாங்க முடியாது. பாண்டவர்களை ஒருக்காலும் அவன் விட்டுக்கொடுக்க மாட்டான். திரௌபதியும் அவர்கள் பேரில் ஒரு நாளும் வெறுப்புக் கொள்ளமாட்டாள். ஆகையால் நமக்கு இருக்கும் வழி ஒன்றே. இவர்களுடைய பலம் இன்னும் அதிகமாக வளருவதற்கு முன் நாம் இவர்களைத் தாக்கி யுத்தம் செய்து அழித்துவிடுவதே வழி. அவர்களுடன் இன்னும் பல வேறு சிநேகிதர்கள் சீக்கிரத்தில் சேர்ந்துவிடுவார்கள். அதற்கு முன் தாக்க வேண்டும். கிருஷ்ணன் யாதவ சேனையோடு துருபதனுடைய தேசம் வந்து சேருவதற்கு முன் நாம் பாண்டவர்களையும் துருபதனையும் தாக்கி அடித்துவிட வேண்டும். துருபதன் எதிர்பார்க்காமல்

இருக்கும்போதே திடீரென்று நாம் அந்த நகரத்தைத் தாக்கவேண்டும். பராக்கிரம முறையே க்ஷத்திரியர்களுக்குச் சிறந்த முறை. அதைக் கையாள வேண்டும். தந்திரங்கள் வீணாகும்'' என்றான்.

கர்ணன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் ஒன்றும் நிச்சயம் செய்ய முடியாதவனாகிப் பீஷ்மரையும் துரோணரையும் அழைத்து ஆலோசிக்கலானான்.

* * *

பாண்டவர்கள் உயிருடன் இருப்பதை அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைந்திருந்த பீஷ்மரைப் பார்த்து திருதராஷ்டிரன்,

"பீஷ்மரே! பாண்டவர்கள் உயிருடன் இருக்கிறதாக இப்போது தெரிகிறது. பாஞ்சால தேசத்தில் துருபதனிடம் இருக்கிறார்கள். என்ன செய்யலாம்?'' என்று கேட்டான்.

"அந்த வீரர்களோடு சமாதானம் செய்துகொண்டு ராஜ்யத்தில் பாதியை அவர்களுக்குக் கொடுப்பதுதான் கிரமம். இதுதான் நாட்டிலுள்ள ஜனங்களுக்கெல்லாம் விருப்பம். குலத்தின் பெயரைக் காப்பாற்றவும் இதுவே வழி. அரக்கு மாளிகை தீப்பற்றி எரிந்ததைப் பற்றி ஊரில் பலவாறாகப் பேசி வருகிறார்கள். உன்மேல் எல்லாரும் குற்றம் சொல்லுகிறார்கள். இப்போது நீ பாண்டவர்களை அழைத்துப் பாதி ராஜ்யம் கொடுத்துப் பட்டாபிஷேகம் செய்து வைத்தால் அந்தப் பழி நீங்கும். இதுவே என் யோசனை'' என்று தருமமும் நீதியும் அறிந்த பீஷ்மர் சொன்னார்.

துரோணரும் அவ்வாறே சொன்னார். "நல்ல தூதனை அனுப்பிச் சமாதானம் பேசி அவர்களை வரவழைத்து யுதிஷ்டிரனுக்கு ராஜ்யாபிஷேகம் செய்து அவனுக்குப் பாதி தேசம் கொடுத்து விடுவதே மேலான யோசனை'' என்று அவரும் சொன்னார்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த கர்ணனுக்குக் கோபாவேசம் வந்தது. அவனுக்குத் துரியோதனனிடம்

அளவு கடந்த நட்பு. பாண்டவர்களுக்குப் பாதி ராஜ்யம் தரும் யோசனை அவனுக்குப் பிடிக்கவில்லை. திருதராஷ்டிரனைப் பார்த்து அவன் சொன்னதாவது :

"உம்மிடத்தில் பொருளும் அந்தஸ்தும் பெற்ற துரோணர் இவ்விதம் யோசனை சொல்லுவது எனக்கு வியப்பாக இருக்கிறது. மந்திரிகளுடைய யோக்யதையை நன்றாக ஆராய்ந்துதான் அவர்கள் சொல்லும் யோசனையை அரசன் பரிசீலனை செய்ய வேண்டும். பேச்சுக்கு மட்டும் மதிப்புக் கொடுத்துவிடக் கூடாது."

இவ்வாறு கர்ணன் சொன்னதைக் கேட்ட துரோணருக்குப் பெரும் கோபம் வந்தது. "துஷ்டனே! நீ அரசனுக்குத் துர்மார்க்கத்தை உபதேசிக்கிறாய். மரியாதை தவறிப் பேசுகிறாய். நானும் பீஷ்மரும் சொன்னதைத் திருதராஷ்டிரன் கேட்காமற் போனால் கௌரவர்கள் சீக்கிரத்தில் அழிந்து போவார்கள் என்பது நிச்சயம்" என்றார்.

பிறகு திருதராஷ்டிரன் விதுரனைக் கேட்டான். "குலத்துக்குத் தலைவரான பீஷ்மரும், ஆசாரியரான துரோணரும் சொன்ன யோசனையே மேலானது. அறிவில் சிறந்த அவர்கள் சொன்ன யோசனையைப் புறக்கணிக்க வேண்டாம். அவர்கள் எந்தக் காலத்திலும் நமக்கு நன்மையே செய்து வந்தவர்கள். துரியோதனன் முதலியவர்களைப் போலவே உமக்குப் பாண்டவர்களும் புத்திரர்கள் ஆவார்கள். அவர்களுக்குத் தீங்கு இழைக்க யாராவது யோசனை சொன்னால் அவர்கள் குலத்தைக் கெடுக்க வந்தவர்கள் என்று நீர் கருதவேண்டும். துருபதனும் அவன் புத்திரர்களும், கிருஷ்ணனும் அவனைச் சேர்ந்த யாதவர்களும் பாண்டவர்களுக்குப் பெரும் பக்க பலமாக இருக்கிறார்கள். அவர்களை யுத்தத்தில் வெல்ல முடியாது. கர்ணன் சொல்லும் யோசனை பயனற்றது. பாண்டவர்களை அரக்கு மாளிகையில் வைத்து அவர்களைக் கொல்லப் பார்த்ததாகப் பழி நம்பேரில் ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பழியை முதலில் நீக்கிக் கொள்ளவேண்டும். நம்முடைய நகரத்திலும் நாட்டிலும் உள்ள ஜனங்கள் பாண்டவர்கள்

உயிருடன் இருப்பதைக் கேட்டு மகிழ்ந்து அவர்களை மறுபடியும் கண்ணால் பார்க்க வேண்டுமென்று ஆசை கொண்டிருக்கிறார்கள். துரியோதனனுடைய பேச்சைக் கேட்கவேண்டாம். கர்ணனும் சகுனியும் சிறுவர்கள். அவர்களுக்கு ராஜ நீதி தெரியாது. இவர்கள் சொல்லும் யோசனைகள் பயன தரமாட்டா. பீஷ்மர் சொன்னதைச் செய்'' என்றான் விதுரன்.

முடிவில் திருதராஷ்டிரன் பாண்டு புத்திரர்களுக்கும் பாதி ராஜ்யம் கொடுத்துச் சமாதானமாகப் போவதாகவே தீர்மானித்தான். பாண்டவர்களையும் திரௌபதியையும் அழைத்துவரப் பாஞ்சால தேசத்திற்கு விதுரனை அனுப்பினான்.

பலவகை ரத்தினங்களையும் ஏராளமான வேறு தனங்களையும் எடுத்துக்கொண்டு விதுரன் துருபதனுடைய நகரத்திற்கு விசையான வாகனத்தில் ஏறிச் சென்றான்.

துருபதனைக் கண்டு கிரமப்படி மரியாதை செய்து பாண்டவர்களையும் பாஞ்சாலியையும் ஹஸ்தினபுரத்துக்கு அனுப்பித் தரவேண்டும் என்று திருதராஷ்டிரன் சார்பாக விதுரன் கேட்டுக் கொண்டான்.

துருபதனுக்குச் சந்தேகம்தான். அவன திருதராஷ்டிரனை நம்பவில்லை. ''பாண்டவர்கள் இஷ்டம் எவ்வாறோ அவ்வாறு செய்யலாம்'' என்றான்.

விதுரன் குந்திதேவியிடம் சென்று அடிபணிந்தான். ''விசித்திர வீரியனுடைய புத்திரனே! என் குழந்தைகளை நீ காப்பாற்றினாய். இவர்கள் உன் குழந்தைகள். உன்னையே நம்பியிருக்கிறேன். நீ எவ்விதம சொல்லுகிறாயோ அவ்வாறு செய்வோம்'' என்றாள் குந்தி. அவளுக்கும் சந்தேகமே. பெற்ற பிள்ளைகளைப் பற்றிக் கவலைப்பட்டாள்.

விதுரன், ''குந்தியே! உன் மக்களுக்கு அழிவு கிடையாது. அவர்கள் ராஜ்ய பட்டாபிஷேகம் அடைவார்கள். உலகத்தில் பெரும்கீர்த்திபெறுவார்கள். வா போவோம்'' என்று சமாதானப் படுத்தினான். முடிவில் துருபதன்

அனுமதியின் பேரில் எல்லாரையும் அழைத்துக்கொண்டு ஹஸ்தினாபுரம் சென்றான்.

தெருக்களெல்லாம் ஜலம் தெளித்து மலர் தூவி அலங்கரிக்கப்பட்டிருந்த ஹஸ்தினாபுரத்திற்குள் பாண்டவர்கள் திரௌபதியுடனும் தாயார் குந்திதேவியுடனும் பிரவேசித்தார்கள். ஜனங்களின் மகிழ்ச்சி கரைபுரண்டு ஓடிற்று. மந்திராலோசனையில் முடிந்தபடியே பாதி ராஜ்யம் பாண்டவர்களுக்குத் தரப்பட்டது. யுதிஷ்டிரனுக்கு முறைப்படி ராஜ்யாபிஷேகம் நடந்தது.

பட்டாபிஷேகம் பெற்ற யுதிஷ்டிரனை திருதராஷ்டிரன் ஆசீர்வதித்தான்,

"என் சகோதரன் பாண்டு இந்த ராஜ்யத்தை விருத்தி செய்தான். அவன் மகனான நீயும் கீர்த்தி பெற்றுச் சுகமாக இருப்பாயாக! பாண்டு ராஜன் என் கட்டளையை எப்போதும் சந்தோஷமாகச் செய்து வந்தான். அவ்வாறே நீயும் என்னிடம் அன்பாக இருக்கவேண்டும். என் மக்கள் துராத்மாக்கள். அகங்காரம் கொண்டவர்கள். இவர்களுடன் உங்களுக்கு விரோதம் வராமலிருப்பதற்காக நான் இந்த ஏற்பாடு செய்திருக்கிறேன். நீங்கள் காண்டவப் பிரஸ்தத்துக்குப்போய் அங்கே உங்கள் ராஜதானியை அமைத்துக் கொள்ளுங்கள். நம்முடைய முன்னோர்கள் புரூரவஸும், நகுஷனும், யயாதியும் அந்த நகரத்தில்தான் இருந்து ராஜ்யபாரம் வகித்து வந்தார்கள். நம்முடைய வம்சத்துக்கு அதுதான் புராதன ராஜதானி. அதை நீ புனருத்தாரணம் செய்து புகழ் பெறுவாய்" என்றான்.

"இவ்வாறு திருதராஷ்டிரன் யுதிஷ்டிரனுக்கு நல்ல வார்த்தைகளைச் சொன்னான். பாண்டவர்களும் பாழாகக் கிடந்த காண்டவ பிரஸ்தத்தை நிபுணர்களைக் கொண்டு புதுப்பித்து மாளிகைகளும் கோட்டைகளும் கட்டி இந்திரப்பிரஸ்தம் என்ற பெயர் சூட்டி உலகமெல்லாம் வியக்கும்படியான அழகிய புது நகரம் உண்டாக்கினார்கள். அவ்விடத்தில் பாண்டவர்கள் இருபத்துமூன்று வருஷம் தருமம் தவறாமல் அரசு புரிந்துகொண்டு தாயாருடனும் திரௌபதியிடனும் சுகமாக இருந்துவந்தார்கள்.

# சாரங்கக் குஞ்சுகள்

புராணக் கதைகளில் பறவையும் மிருகமும் மனிதர்களைப்போல் பேசும். உலக நீதியும் வேதாந்தமுங்கூட உபதேசிக்கும். இதனுடன் ஆங்காங்கு அந்தப் பிராணிகளின் இயற்கை லட்சணங்களும் கதவுக்குள்ளிருந்து எட்டிப் பார்ப்பதுபோல் தோற்றம் காட்டவும் செய்யும்.

இயற்கையும் கற்பனையும் இவ்வாறு கலந்து நிற்பது புராண இலக்கியத்தின் தனியழகு. மகா புத்திசாலியாகவும் நீதி நிபுணனாகவும் வருணிக்கப்பட்ட அனுமான் இராவணனுடைய அந்தப்புரத்தில் ஒரு அழகிய ஸ்திரீயைக் கண்டு அவள்தான் சீதை என்று எண்ணிக் கொண்டு குரங்கைப்போல் குதித்துக் கூத்தாடியது இராமாயணம் படிப்போரெல்லாம் அனுபவிக்கும் ஒரு கட்டம்.

பட்சிகளும் பசுக்களும் பேசும் கதைகள் குழந்தைகளுக்குச் சொல்வது சகஜம். ஆனால் முதிர்ந்தவர்களுக்குச் சொல்லப்படும் புராணக் கதைகளில் இவ்வாறான சம்பாஷணைகளுக்கு உண்மைத் தோற்றம் தருவதற்காக ஏதேனும் சப்பை கட்ட வேண்டியதாகும். அதற்காகக் கையாளப்படும் முறை ஒன்று உண்டு. கதையில் வரும் பிராணிகளுக்கு ஒரு பூர்வ ஜன்ம விருத்தாந்தம் ஆக்கித் தந்துவிடுவது புராண இலக்கிய முறை. ஒரு ரிஷி மானாகப் பிறந்தார் என்றாவது ஒரு அரசன் சாபத்தால் நரியாக ஜன்மம் எடுத்தான் என்றாவது கதை சொல்லுவது வழக்கம். அப்போது மானானது மான் போலும் நடந்து கொள்ளும்; ரிஷி போலும் பேசும். நரி, நரியாக இருந்தாலும் அனுபவம் பெற்ற அரசனாகவும் கூடவே காட்டிக்கொள்ளும். கதையும் ருசிக்கும். அதன் மூலம் மிகப் பெரிய உண்மைகளும் புகட்டப்படும்.

*　　　*　　　*

**பா**ண்டவர்கள் காண்டவ பிரஸ்தத்தில் குடியேறி பாழாகக் கிடந்த இடத்தைப் புதுப்பித்து நகரங்களும்

கிராமங்களும் உண்டாக்கினார்கள். புதரும் முள்ளுமாக இருந்த அந்த வனம் முன் ஒரு காலத்தில் பெரிய நகரமாக இருந்ததாம். பாண்டவர்கள் அதை அடைந்த போது ஒரே பயங்கரமான நாடாக இருந்தது. பட்சிகளும் ஜந்துக்களும் அதைத் தங்கள் இருப்பிடமாகச் செய்து கொண்டிருந்தன. திருடர்களும் தீயர்களும் அங்கே பதுங்கியிருந்து ஜனங்களை இம்சித்துக் கொண்டிருந்தார்கள். இந்தக் காட்டைத் தீ வைத்துக் கொளுத்திவிட்டு இந்த இடத்தில் புது நகரம் கட்டி வைப்பதாக கிருஷ்ணனும் அர்ச்சுனனும் தீர்மானித்தார்கள்.

அந்த வனத்திலிருந்த ஒரு மரத்தில் ஒரு சாரங்கப் பறவை சிறகு முளைக்காத நான்கு குஞ்சுகளுடன் வாசம் செய்து வந்தது. குஞ்சுகளையும் தாய்ப் பறவையையும் விட்டுவிட்டு ஆண் பறவை வேறொரு பெண் பறவையுடன் உல்லாசமாக வனத்தில் திரிந்து கொண்டிருந்தது. தாய்ப் பறவை மட்டும் குஞ்சுகளுக்காக இரை தேடிக் கொண்டு வந்து காப்பாற்றிக்கொண்டிருந்தது. அச்சமயத்தில் கிருஷ்ணார்ச்சுனர்கள் தீர்மானித்து உத்தரவிட்டபடி காட்டில் தீப்பற்றிக் கொண்டது. நெருப்பானது பரவி காட்டை எல்லாம் அழித்து எல்லாப் பிராணிகளையும் துன்புறுத்திற்று. இதைக் கண்டு துயருற்ற சாரங்கம் கண்ணீர் விட்டுப் புலம்பிற்று.

“உலகத்தை யெல்லாம் எரித்துக்கொண்டு தீ நெருங்கி வந்துகொண்டிருக்கிறதே! பயங்கரமான அனல் வரவர அதிகமாகிறதே! இன்னும் கொஞ்ச நேரத்தில் இங்கே வந்து நம்மை எரித்து விடுமே! மரங்கள் பேரோசையுடன் விழுகிறதைக் கண்டு காட்டுப் பிராணிகள் எல்லாம் கலங்குகின்றனவே! சிறகும் கால்களும் இல்லாத குஞ்சுகளே! நீங்கள் தீக்கு இரையாவீர்களே! நான் என்ன செய்வேன்? உங்கள் தகப்பன் நம்மை விட்டுப் போய்விட்டானே? இந்தக் குஞ்சுகளைத் தூக்கிக்கொண்டு பறந்து போக எனக்குச் சக்தி யில்லையே!” என்றிவ்வாறு பரிதபித்துக் கொண்டிருக்கிற தாயைப் பார்த்துக் குஞ்சுகள் சொல்லின:

"தாயே! எங்கள் மேலுள்ள அன்பினால் பரிதபிக்காதே. நாங்கள் இங்கே இறந்து போனாலும் அதனால் ஒன்றும் குறையில்லை; நல்ல பதவியை அடைவோம். நீயும் எங்களுக்காக உயிர் நீத்தால் குலம் விருத்தியடையாமல் போகும். நீ அக்கினி இல்லாத வேறு இடத்துக்குப் போய் க்ஷேமமாக இரு. நாங்கள் இங்கே தீக்கு இரையானாலும் உனக்குப் பிள்ளைகள் உண்டாகும். அம்மா! நீ ஆராய்ந்து குலத்துக்கு எது அதிக க்ஷேமமோ அதைச் செய்."

இவ்வாறு குஞ்சுகள் சொன்ன போதிலும் தாய்க்குக் குஞ்சுகளை விட்டுப்போக மனம் வரவில்லை. "இங்கேயே உங்களுடன் நானும் தீக்கு இரையாவேன்" என்று இருந்தது.

* * *

மந்தபாலர் என்கிற ஒரு ரிஷி ஒழுக்கம் தவறாமல் ஆயுள் முழுதும் பிரமசரிய விரதத்தைக் காப்பாற்றிவிட்டு இறந்தார். அவர் மேலுலகம் சென்றபோது "புத்திர சந்தானம் உண்டாக்காமல் வந்தவர்களுக்கு இங்கே இடமில்லை" என்று வாயில் காப்போர்களால் திருப்பி அனுப்பப்பட்டார். அதன்மேல் அவர் சாரங்கப் பட்சியாகப் பிறந்து ஜரிதை என்கிற பெண் பறவையுடன் கூடினார். அது நான்கு முட்டைகள் இட்டவுடன் அவர் ஜரிதையை விட்டுவிட்டு லபிதை என்ற மற்றொரு பெண்சாரங்கப் பறவையுடன் சேர்ந்தார்.

ஜரிதையின் நான்கு முட்டைகளும் பொறிந்து குஞ்சுகளாயின. அவையே மேலேசொன்னவாறு காடு தீப்பற்றி எரியும்போது, ரிஷிக்குப் பிறந்த குஞ்சுகளானபடியால் இவ்வாறு தாய்க்குத் தைரியத்தை உபதேசித்தன.

x x x

தாய்ப் பறவை குஞ்சுகளுக்குச் சொல்லிற்று: "இந்த மரத்துக்குப் பக்கத்தில் ஒரு எலிப்பாழி இருக்கிறது. அந்த வளை வாயிலுக்குள் உங்களை விடுகிறேன், நீங்கள் மெள்ள உள்ளே நுழைந்து போய்ப் பதுங்கி

இருங்கள். நெருப்புப் படாமல் க்ஷேமமாக இருக்கலாம். வளையின் வாயை நான் மண்ணைப் போட்டு மூடி விடுகிறேன். அனல் உங்களை எட்டாது. இந்தக் காட்டுத்தீ அணைந்ததும் நான் வந்து மண்ணை எடுத்துத் தள்ளி உங்களை உயிருடன் விடுவிப்பேன்'' என்றது தாய்ப் பறவை.

தாய் சொன்னதைக் குஞ்சுகள் ஒப்பவில்லை. "வளைக்குள் இருக்கும் எலி எங்களைத் தின்றுவிடும். நெருப்பில் சாவது மேலானது. எலியால் தின்னப்பட்ட இழிவான முடிவு எங்களுக்கு வேண்டாம்'' என்றன.

"இந்த வளையிலிருந்த எலியைப் பருந்து ஒன்று தூக்கிப் போனதை நான் பார்த்தேன். வளையில் உங்களுக்கு அபாயம் இல்லை'' என்று தாய்ப்பறவை சமாதானம் சொல்லிற்று.

ஆயினும் குஞ்சுகள் ஒப்பவில்லை. "வேறு எலிகள் வளையில் கட்டாயம் இருக்கும். ஒரு எலி மட்டும் பருந்துக்கு இரையாகி விட்டதனால் அபாயம் தீர்ந்து விடவில்லை. நீ உயிரைக் காப்பாற்றிக் கொள். நெருப்பு வேகமாக வந்து கொண்டிருக்கிறது; இந்த மரத்தைச் சுற்றிக் கொள்ளுவதற்கு முன் நீ பறந்துபோ. வளைக்குள் நுழைந்து பதுங்க எங்களால் முடியாது. எங்களுக்காக வருந்தி நீயும் ஏன் உயிரை விடுகிறாய்? நீ யார்? நாங்கள் யார்? நாங்கள் உனக்கு என்ன உதவி செய்தோம்? ஒன்றுமில்லை. நாங்கள் பிறந்து உனக்குக் கஷ்டம்தான் கொடுத்தோம். நீ எங்களை விட்டுவிடு. நீ இன்னும் சிறு வயது. யௌவனம் தீரவில்லை. நீ பர்த்தாவை அடைந்து க்ஷேமமாக இரு. நாங்கள் அக்கினியில் எரிக்கப்பட்டு இறந்தால் நல்ல உலகங்களை அடைவோம். உயிருடன் தப்பினால் நெருப்பு அணைந்த பிறகு நீ வந்து எங்களைப் பார்க்கலாம். நீ உடனே போய் விடு'' என்று குஞ்சுகள் வற்புறுத்தத் தாய்ப் பறவை பறந்து போயிற்று.

x x x

தீயானது அந்த மரத்தைப் பற்றிற்று. பறவைக் குஞ்சுகள் மனங் கலங்காமல் ஆபத்தை எதிர்பார்த்துக் கொண்டு ஒன்றோடொன்று சம்பாஷணை செய்து கொண்டிருந்தன.

"அறிவுள்ளவன் கஷ்டகாலம் வரும்போது முந்தியே தெரிந்துகொண்டு மனதை ஸ்திரப்படுத்திக் கொள்ளுகிறான். ஆபத்து வரும்போது கலங்க மாட்டான்" என்றது மூத்த குஞ்சு.

"நீ தீரன், மேதாவி. பலரில் ஒருவன்தான் உன்னைப் போலத் தைரியமாக இருப்பான்" என்றது தம்பிக் குஞ்சுகள்.

சிரித்த முகத்துடன் அக்கினியை எல்லாம் துதி செய்தன.

"அக்கினியே! எங்களுடைய தாய் போய்விட்டாள். தந்தை எங்களுக்குத் தெரியாது. நாங்கள் முட்டையை விட்டு வெளிவந்தபின் அவரைக் காணவில்லை. புகையைத் துவஜமாகக் கொண்ட ஆதி தெய்வமே! இன்னும் சிறகு முளைக்காத பறவைக் குஞ்சுகளாகிய எங்களுக்கு நீயே கதி. வேறு ஆதரவு யாரும் இல்லை.' எங்களை ரக்ஷிப்பாயாக! உன்னைச் சரண் புகுந்தோம்" என்று அக்கினியைப் பிரார்த்தித்து வேதம் ஓதிய பிராமண பிரமசாரிகளைப் போல் துதி செய்தன.

மரத்தில் பற்றிய தீயானது பறவைக் குஞ்சுகளைத் தீண்டவில்லை. காட்டை எல்லாம் தாவி நிர்மூலம் செய்து விட்டு அணைந்தது. அந்தப் பறவைக் குஞ்சுகள் சாகவில்லை.

நெருப்பு அணைந்த பிறகு தாய்ப் பறவை அவ்விடம் வந்து குஞ்சுகள் க்ஷேமமாகப் பேசிக் கொண்டிருக்கிற அற்புதத்தைக் கண்டது. அவற்றை ஒவ்வொன்றாகத் தழுவி முத்தமிட்டு மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்தது.

x x x

ஆண் பறவையானது தன் புது மனைவி லபிதை யிடம், "ஐயோ! என் குஞ்சுகள் தீக்கு இரையா யிருக்குமே!" என்று வருத்தப்பட்டு அடிக்கடி அலறிக்கொண்டிருந்தது. அதற்கு லபிதை என்கிற அந்தப்பெண்பறவை "அப்படியா? உம்முடைய சமாசாரம் எனக்கு நன்றாகத் தெரியும். இப்போது ஜரிதையிடம் போகவேண்டும் என்று உமக்கு ஆசை போலிருக்கிறது. என்மேல் வெறுப்பு உண்டாகி இருக்கிறது. பொய்யாக ஏன் நெருப்பையும் குஞ்சுகளையும் காரணமாகச் சொல்லுகிறீர்? நீர்தான் முந்தியே சொல்லி யிருக்கிறீரே? ஜரிதையின் குஞ்சுகளை அக்கினி எரிக்காது, உமக்கு அக்கினி தேவன் வரம் தந்திருக்கிறான் என்று சொன்னீரல்லவா? என்னை விட்டுவிட்டு உமக்கு அன்பான ஜரிதையிடம் போக வேண்டுமானால் உண்மையைச் சொல்லிப் போகலாமே! நம்பத்தகாத கெட்ட புருஷனை அடைந்து ஏமாற்றப்பட்ட பெண்களில் நானும் ஒருத்தியாகக் காட்டில் சஞ்சரிப்பேன். நீர் போகலாம்" என்றது.

"நீ எண்ணுவது சரியல்ல" என்றது மந்தபாலப் பறவை. "நான் புத்திர சந்தானத்திற்காகத்தான் பறவைப் பிறப்பு எடுத்தேன். குஞ்சுகளைப் பற்றித்தான எனக்குக் கவலை. போய்ப் பார்த்து வருகிறேன்" என்று புது மனைவிக்குச் சமாதானம் சொல்லி ஜரிதை இருந்த மரத்தண்டை சென்றார்.

ஜரிதை புருஷன் வந்ததைக் கவனிக்கவே இல்லை. குஞ்சுகளை உயிருடன் அடைந்த சந்தோஷத்திலேயே முழுகியிருந்தது. பிறகு புருஷனைப் பார்த்து, "ஏன் வந்தீர்?" என்று அசிரத்தையாகக் கேட்டது.

"என் குஞ்சுகள் சுகமா? இவற்றில் எது மூத்த புத்திரன்?" என்று மந்தபாலர் பக்கத்தில் வந்து அன்பாகக் கேட்டார்.

அப்போது ஜரிதை, "யார் ஜேஷ்டனானால் அவனால் உமக்கு ஆவது என்ன, இளையவனானால் ஆவது என்ன? ஒரு துணையுமில்லாமல் என்னை விட்டுவிட்டு எவளைத்

தொடர்ந்து சென்றீரோ அவளிடத்தில் போய்ச் சேரும். சுகமாக அவளிடம் இருக்கலாம்'' என்றது.

''புத்திரர்களைப் பெற்ற பின் ஸ்திரீ புருஷனை லட்சியம் செய்யாள். இது உலக சுபாவம். ஒரு குற்றமும் அறியாத வசிஷ்டரைக் கூட அருந்ததி இவ்வாறுதான் உதாசீனம் செய்தாள்'' என்றார் மந்தபாலர்.

# ஜராசந்தன்

இந்திரப் பிரஸ்தத்தில் பாண்டவர்கள் மிகச் சிறப்பாக ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள். யுதிஷ்டிரன் ராஜசூய யாகம் நடத்தி அரசர்க்கரசன் என்கிற பதவியையும் பெற வேண்டுமென்று அவனைச் சூழ்ந்தவர்கள் ஆசைப்பட்டார்கள். அக்காலத்திலும் சாம்ராஜ்ய மோகம் ரொம்ப இருந்ததாகக் காண்கின்றது.

இந்த விஷயத்தைப்பற்றி யோசனை செய்வதற்காக யுதிஷ்டிரன் கிருஷ்ணனுக்குச் சொல்லியனுப்பினான். தருமபுத்திரன் தன்னைப் பார்க்க விரும்புவதாகச் செய்தி வந்ததும் ஜனார்த்தனன் * துவாரகையிலிருந்து வேகமான குதிரைகளைப் பூட்டிய வாகனம் ஏறிப் புறப்பட்டு இந்திரப் பிரஸ்தம் வந்து சேர்ந்தான்.

"ராஜசூய யாகம் செய்யச் சொல்லிச் சிநேகிதர்கள் சொல்லுகிறார்கள். எவன் எல்லா ராஜாக்களாலும் பூஜிக்கப்படுகிறானோ அவனே ராஜசூயம் செய்யவும் அரசர்க்கரசனாவதற்கும் தகுதியடைந்தவன். நீர்தான் இதைப் பற்றி எனக்குச் சரியான யோசனை சொல்லும் தன்மை வாய்ந்தவர். மற்றவர்களைப் போல் நீர் வெறும் சிநேகத்தால் என்னிடமுள்ள குறைகளைப் பாராமல் பட்சபாதமாகப் பேசமாட்டீர். சொந்த லாபத்திற்கும் கேட்கிறவனுக்குப் பிரியமாக இருக்கும் என்கிற எண்ணங்கொண்டும் உண்மைக்கு மாறாக யோசனை சொல்லுவது மனிதர்களுடைய சுபாவம். நீர் அவ்வாறு செய்ய மாட்டீர்."

இவ்வாறு யுதிஷ்டிரன் கூற, கிருஷ்ணன் பதில் சொன்னான்.

"மகத நாட்டு ராஜாவான ஜராசந்தன் மற்ற அரசர்களையெல்லாம் ஜெயித்துத் தன் வசப்படுத்திக் கொண்டிருக்கிறான். அவனுடைய பராக்கிரமத்தினால் க்ஷத்திரி

---

*ஜனார்த்தனன் = கிருஷ்ணன்.

யர்கள் எல்லாரும் அவனைக் கண்டு பயந்தும் பணிந்தும் நிற்கிறார்கள். பலசாலிகளான சிசுபாலன் முதலியவர்களும் அவனை ஆசிரயித்து வருகிறார்கள். ஜராசந்தன் இருக்கும் வரையில் வேறொருவன் எவ்வாறு ராஜாதி ராஜப் பதவியை அடையமுடியும்? உக்கிரசேனன் மகனை மதி கெட்ட கம்சனைப்பற்றி உலகத்துத் தெரியுமல்லவா? அவன் ஜராசந்தனுக்கு மருமகனும் துணையரசனும் ஆனபின், நானும் என் குலத்தவரும் ஜராசந்தனை எதிர்த்தோம். மூன்று வருஷகாலமளவாமல் அவனுடைய சேனைகளைத் தாக்கினோம். தோல்வியடைந்தோம். அவனுடைய பயத்தினால் நாங்கள் வடமதுரையை விட்டு விட்டு மேற்கே துவாரகையில் கோட்டையும் நகரமும் புதிதாகக் கட்டிக்கொண்டு க்ஷேமமாக இருந்து வருகிறோம். நீர் ராஜாதி ராஜ பட்டம் பெறுவதை துரியோதனன், கர்ணன் முதலியோர் ஆட்சேபிக்காமலிருந்தாலும் ஜராசந்தன் எதிர்ப்பான். யுத்தமின்றி ஒப்ப மாட்டான். எவராலும் தோல்வி என்பதை அறியாத ஜராசந்தன் இருக்கும் வரையில் நீர் ராஜசூயம் நடத்த இயலாது. அவனை எப்படியாவது வதம் செய்து அவனால் சிறையில் வைக்கப்பட்டிருக்கும் அரசர்களைச் சிறையிலிருந்து மீட்டினால் நாம் ராஜசூயம் நடத்தலாம்'' என்றான்.

இவ்வாறு கண்ணன் சொன்னதைக் கேட்ட யுதிஷ்டிரன், "நீர் சொல்லுவது சரியே. தத்தம் நாட்டில் சிறப்புடன் வாழும் அரசர்கள் என்னைப்போல அநேகர் இருக்கிறார்கள். அடைய முடியாத பதவியைப் பற்றி ஒருவன் ஆசைப்படுவதில் பயனில்லை. சாம்ராட் பதவியை என்னைப் போன்றவன் விரும்புவது தவறு. கடவுள் படைத்திருக்கும் இந்த பூமி மிகப் பெரியது, அளவிறந்த செல்வம் கொண்டது. தத்தம் நாட்டில் அரசு புரிந்து கொண்டு அநேக ராஜாக்கள் திருப்தியாக இருக்க முடியும். ஆசைக்கு அளவில்லை. ஆகையால் நான் இந்த சாம்ராஜ்ய பதவி யோசனையை விட்டு விட்டு, இருப்பதை வைத்துக்கொண்டு திருப்தியாக இருப்பதே நலம். பீமன் முதலானோர் இந்தப் பதவிக்கு ஆசைப்படுகிறார்கள். ஜராசந்தனைக் கண்டு நீரே பயந்திருக்க, நாங்கள் எம்மட்டும்?''

தருமபுத்திரனுடைய அடக்கம் பீமனுக்குப் பிடிக்கவில்லை.

“முயற்சியே அரசர்களுக்கு விதிக்கப்பட்ட சிறப்பான குணம். தம் பலத்தைத் தாம் அறியாதவர்கள் புருஷ ஜன்மம் எடுத்துப் பயனில்லை. திருப்தியடைந்து சும்மா இருப்பது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. சோம்பலை நீக்கி ராஜநீதி உபாயங்களைத் திருத்தமாக உபயோகப் படுத்துகிறவன் தன்னைவிட பலவானான அரசனையும் வென்றுவிடலாம். முயற்சியும் உபாயமும் பயன் தரும். நான் பெற்றிருக்கும் தேகபலமும் கண்ணனுடைய சாதுரியமும் தனஞ்சயனிடத்திலுள்ள சாமர்த்தியமும் ஒன்று சேர்ந்தால் எதைத்தான் செய்ய முடியாது? நாம் மூவரும் ஒன்று சேர்ந்து புறப்பட்டால் ஜராசந்தனுடைய பலத்தை அடக்கி விடலாம். நீர் சந்தேகப்பட வேண்டாம்” என்று பீமசேனன் சொன்னான்.

“ஜராசந்தன் கொல்லப்பட வேண்டியவன் என்பதில் ஐயமில்லை. எண்பத்தாறு அரசர்களை அநியாயமாகச் சிறையில் வைத்திருக்கிறான். இன்னும் பதினான்கு அரசர்களைப் பிடித்தபின், நூறு ராஜாக்களையும் ஒரே சமயத்தில் யாகபசுக்களாகக் கொன்று விழா நடத்த ஏற்பாடு செய்திருக்கிறான். பீமனும் அருச்சுனனும் ஒப்புக்கொண்டால் நானும் சேர்ந்து மூவருமாகப் போய் யுக்தியால் அந்தக் கொடியவனை வதம் செய்து சிறைப்பட்ட அரசர்களை விடுவிக்கலாம். இந்த யோசனை எனக்கும் சம்மதம்” என்றான் கண்ணன்.

யுதிஷ்டிரனுக்கு இந்த ஆலோசனை சரியாகத் தோன்றவில்லை. “சாம்ராஜ்ய பதவி மோகத்தினால் ஏமாந்துபோய் என் இரண்டு கண்களைப் போலுள்ள பீமார்ச்சுனர்களை இழக்கும்படி நேரிடலாம். இந்த அபாயமான காரியத்திற்கு அவர்களை அனுப்ப எனக்குப் பிடிக்கவில்லை. இந்த யோசனையை விட்டுவிடுவதே நலம்” என்றான்.

பிறகு தனஞ்சயன் பேசலானான்;

"புகழ்பெற்ற குலத்தில் பிறந்த நாம் பராக்கிரமச் செயல்களைச் செய்யாமல் வாழ்நாட்களை முடித்துவிட்டு உயிர் நீப்பதில் என்ன பலன்? வேறு எல்லா நற்குணங்களிருந்தும் காரியத்தில் பிரவேசிக்க மனமில்லாத பராக்கிரமமற்ற க்ஷத்திரியனுக்குப் புகழில்லை. வெற்றிக்குக் காரணம் உற்சாகம்தான். செய்ய வேண்டியதை ஊக்கத்துடன் செய்தால் பாக்கியம அடையலாம். சாதன பலங்கள் இருந்தும் ஊக்கம் இல்லாமையால் அந்தச் சாதனங்களை உபயோகியாமல் ஒருவன் தோல்வி அடையலாம். தன் பலத்தைத் தான் அறியாமலிருப்பதும் ஊக்கமில்லாமலிருப்பதுமே பெரும்பாலும் தோல்விகளுக்குக் காரணம். இந்தக் காரியத்துக்கு நாம் தகுதியுள்ளவர்கள. தகுதியில்லை என்று யுதிஷ்டிரன் ஏன் நினைக்கிறார்? விருத்தாப்பியம் அடைந்தபின் நாம் காஷாயம் தரித்து வனத்தில் விரதம் நடத்தலாம். இப்போது குல தருமத்திற்கு இயைந்த பராக்கிரமச் செயல்களில் ஈடுபடுவோம்" என்றான்.

இதைக் கேட்ட கண்ணன் மகிழ்ச்சி அடைந்தான். "பரத குலத்தில் குந்திக்கு மகனாகப் பிறந்த அருச்சுனன் வேறு என்ன யோசனை சொல்லுவான? மரணம் அனைவருக்கும் நேர்ந்தே தீரவேண்டிய விஷயம். யுத்தம் செய்யாமலிருப்பதினால் யாரும் மரணத்திலிருந்து தப்பினது கிடையாது. நீதி சாஸ்திரங்களின்படி தகுந்த உபாயங்களைப பிரயோகித்துப் பிறரை வசப்படுத்திக்கொண்டு ஜெயம் பெறுவதே க்ஷத்திரியனுக்கு உரித்தான கடமை" என்றான்.

முடிவில் ஜராசந்தனை வதம் செய்வதே கடமை என்று எல்லோரும் தீர்மானித்து யுதிஷ்டிரனும் ஒப்புக் கொண்டான்.

எதிர்காலத்துக்கும் பொருத்தமான விஷயங்கள் பழைய மகாபாரதத்தில் அடங்கி யிருக்கின்றன என்பதற்கு இந்த சம்வாதம் ஒன்றே போதும்.

# ஜராசந்தன் வதம்

மூன்று அக்ஷௌஹிணி சேனைகளுக்குத் தலைவனும் மிக்க பராக்கிரமசாலி என்று புகழ்பெற்றவனுமான பிருகத்ரதன் என்பவன் மகத நாட்டை ஆண்டான். காசி ராஜனுக்கு இரட்டையாகப் பிறந்த இரண்டு பெண்களை அவன விவாகம் செய்துகொண்டான். "உங்கள் இருவரில் யாருக்கும் நான் எந்தவிதத்திலும் பட்சபாதகமாக நடக்க மாட்டேன்" என்று பிருகத்ரதன் தன் இரு மனைவிகளுக்கும் சபதம் செய்து கொடுத்தான்.

பலநாள் காத்தும் பிருகத்ரதன் சந்தானப் பேறு பெறவில்லை. இளமைப் பருவம் தாண்டி முதுமையை அடைந்தான். பிறகு ராஜ்யத்தை மந்திரிகளிடம் விட்டு விட்டு மனைவிகளுடன் வனம் சென்று தவத்தில் ஈடுபட்டான். கௌதம வம்சத்தைச் சேர்ந்த சண்ட கௌசிகர் என்ற முனிவரிடம் ஒரு நாள் சென்று தன் குறையைச் சொல்லிக் கொண்டான். அவர் இவனிடம் கருணை கொண்டு, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

பிருகத்ரதன், "சுவாமி! ராஜ்யத்தை விட்டு விட்டுச் சந்ததி இல்லாமல் தபோவனத்துக்கு வந்திருக்கும் பாக்கிய மற்ற எனக்கு என்ன வேண்டுமா யிருக்கிறது?" என்று சொன்னான்.

முனிவர் இந்தச் சொல்லைக் கேட்டு மனமிரங்கி தியானத்தில் ஆழ்ந்தார். அப்போது மரத்தடியில் இருந்த அவர் மடியில் ஒரு மாங்கனி விழுந்தது. அதை அவர் எடுத்து, "இதைப் பெற்றுக் கொள். உன் குறை தீரும்" என்று சொல்லி அரசனை ஆசீர்வதித்து அனுப்பினார்.

அரசன் அந்தப் பழத்தைத் தன் இரண்டு மனைவிகளுக்கும் இரண்டு பங்காகச்செய்து இருவருக்கும் கொடுத்தான். பட்சபாதம் செய்யமாட்டேன என்கிற பிரதிஜ்ஞை

யைக் காப்பாற்றி இவ்வாறு செய்தான். அவர்கள் அதை உண்டபின் சிலநாள் கழித்துக் கருப்பம் தரித்தார்கள். காலத்தில் பிரசவமும் ஆயிற்று. ஆனால் இரண்டு மனைவிகளும் மனம் நொந்து முன்னைவிட அதிகமான துயரத்தில் அழுந்தும்படி நேரிட்டது. குழந்தைகளுக்குப் பதில் ஒரு தேகத்தின் இரண்டு கூறாக, ஒரு மனைவி ஒரு கூறையும், மற்றொரு மனைவி மற்றொரு கூறையும் மாம்பழத்தின் இரண்டு கூறுகளைப்போல் பெற்றார்கள். ஒரு கை, ஒரு கால், அரை முகம், ஒரு கண், ஒரு காது—இவ்வாறு பயங்கரமாக உயிருள்ள இரண்டு உடற் கூறுகளை இருவரும் பெற்றார்கள்.

துக்கத்தினால் பீடிக்கப்பட்டு, அமங்கலமான பிண்டங்களை துணியில் மூடி எங்கேயாவது கொண்டுபோய் எறிந்து விடும்படி தாதிகளிடம் சொன்னார்கள். அவ்வாறே அந்த இரண்டு மாமிசப் பிண்டங்களையும் தாதிகள் கொண்டுபோய்த் தெருக் குப்பையில் எறிந்துவிட்டார்கள்.

மாமிசம் தின்னும் ஒரு அரக்கி அந்த இடத்தில் வந்தாள். அவள் அந்த சிசுப்பிண்டங்களைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து இரண்டு துண்டங்களையும் ஒன்றாகச் சேர்த்து எடுக்கப் போனாள். உடனே இரண்டும் ஒன்று கூடி உயிர் கொண்டு ஒரு சிசுவாயிற்று. அரக்கி இதைக் கண்டதும் இக்குழந்தையைக் கொல்லத் தகாது என்று எண்ணி, அழகிய மானிட உருவம் தரித்துக்கொண்டு அரசனிடம் போய், 'இது உன் குழந்தை' என்று சொல்லிக் கொடுத்தாள்.

அரசன் அளவு கடந்த மகிழ்ச்சி அடைந்து குழந்தையைப் பெற்றுக் கொண்டு அதை மனைவிகளிடம் ஒப்புவித்தான்.

இந்தக் குழந்தையே ஜராசந்தன். முனிவர் வரத்தினால் ஜராசந்தன் அளவு கடந்த உடல் வன்மை பெற்று வளர்ந்தான். ஆனால் அவனுடைய உடல் இரண்டு கூறுகளாகப் பிறந்து ஒன்று கூடிய உடலானபடியால், இரு பருப்பாகப் பிரியும் தன்மையும் பெற்றிருந்தது.

இந்த விநோதக்கதையில் ஒரு தத்துவத்தை புரா ணம் செய்தவர் அடக்கி யிருக்கிறார். பிரிந்த பின் மறுபடி கூடினாலும் பலம் குறைந்தே இருக்கும் என்பது ஜரா சந்த ஜன்மக் கதையில் காட்டப்படுகிறது.

"ஜராசந்தனுடைய துணையாளர்களான ஹம்சன், இடிம்பகன், கம்சன் இவர்கள் இறந்துவிட்டார்கள். ஜரா சந்தனை வதம் செய்வதற்கு இதுதான் சமயம். சேனைகளை யும் படைகளையும் கொண்டு அவனை எதிர்த்துப் போர் செய்யப் பார்ப்பதில் பயனில்லை. அவனைத் தனிச் சண்டை யில் இழுத்துத்தான் வெல்ல வேண்டும்" என்று கண் ணன் நிச்சயித்தான்.

அக்காலத்து வழக்கத்தின்படி பகைவன் போருக்கு அழைத்தால் க்ஷத்திரியன் ஒப்புக்கொண்டே தீரவேண் டும். மல் யுத்தமானாலும் அல்லது வில்லும் தேரும சாதனமாகக் கொண்ட யுத்தமானாலும் க்ஷத்திரிய வழக் கப்படி பகைவன் கோரியபடி வீரன் ஒப்புக் கொண்டு யுத் தம் நடத்தவேண்டும். இந்த வழக்கத்தை உத்தேசித்துக் கிருஷ்ணனும் பாண்டவர்களும் சதி செய்தார்கள்.

தருப்பையும் மரவுரியுமாக விரதம் பூண்டவர்க ளுடைய வேஷம் கொண்டு நீர்வளமும் அழகிய கிராமங் களும் நகரங்களும் நிறைந்த மகத தேசம் போய்ச் சேர்ந் தார்கள். ஜராசந்தனுடைய ராஜதானியை அடைந் தார்கள்.

x x x

ஜராசந்தன் அபசகுனங்களைக் கண்டான். அதற் காகப் புரோகிதர்களைக் கொண்டு சாந்தி செய்வித்து அரசனும் உபவாச விரதமிருந்தான். ஆயுதமில்லாமல் கிருஷ்ணனும் பீமார்ச்சுனர்களும் அரண்மனைக்குள் பிரவேசித்தார்கள். ஜராசந்தன் யாரோ உயர் குலத்து அதிதிகள் வந்தார்கள் என்று எதிர்கொண்டழைத்து வழக்கப்படி மரியாதை செய்து, "சுவாகதம்" என்றான். பேசினால் பொய் சொல்ல வேண்டி நேரிடும் என்று அதர்மத்துக்குப் பயந்து பீமனும் அருச்சுனனும் தங்கள்

எண்ணத்தை வெளிப்படுத்தாமல் மௌனமாக இருந்தார்கள்.

கிருஷ்ணன், அரசனுக்குச் சமாதானமாக, "இவர்கள் இருவரும் இப்போது ஒரு விரதம் எடுத்துக்கொண்டிருக்கிற காரணத்தால் பேசவில்லை. நடு இரவு ஆன பின் தான் இவர்கள் பேச முடியும்" என்றான்.

ஜராசந்தன் அவர்களைத் தன் யாகசாலையில் இருக்கச் செய்து தன் மாளிகைக்குச் சென்றான்.

பிறகு ஜராசந்தன் நடு இரவில் வந்து மறுபடியும் அவர்களைக் கண்டான். எந்த வேளையானாலும் உயர் குலத்தைச் சேர்ந்த ஸ்நாதகர்களை அவர்கள் சௌகரியப்படி கண்டு பேசுவது ஜராசந்தனுடைய வழக்கம். ஆகையால் நடு நிசியில் வந்து தனக்காகக் காத்திருந்த அதிதிகளைக் கண்டு விசாரிப்பதற்காக வந்தான். அவர்களுடைய நடத்தையைக் கண்டு ஜராசந்தனுக்குச் சந்தேகம் தோன்றிற்று. அதன்பின் கைகளில் வில்லில் நாண் உரைந்த காயப்புகளையும் மற்ற க்ஷத்திரியச் சின்னங்களையும் கண்டுகொண்டான்.

"உண்மையைச் சொல்லுங்கள்" என்று ஜராசந்தன் கேட்க, அவர்களும் "நாங்கள் உன் சத்துருக்கள். உடனே யுத்தத்துக்கு ஆயத்தமாவாய்! எங்கள் மூவரில் யாருடன் வேண்டுமானாலும் உன் இஷ்டப்படி தீர்மானித்துச் சண்டை செய்யலாம்" என்றார்கள்.

வந்தவர்கள் மூவரும் யார் என்று தெரிந்து கொண்ட பின் ஜராசந்தன், "கிருஷ்ணா! நீ இடையர் குலத்தில் பிறந்தவன். அருச்சுனனோ சிறுவனாக இருக்கிறான். பீமன் தேக பலத்தில் புகழ் பெற்றவன். ஆகையால் அவனுடன் யுத்தம் கோருகிறேன்" என்று சொல்லி, உடனே பீமனுடன் கைகளையே ஆயுதமாகக்கொண்ட மல் யுத்தம் செய்யும்படி அழைத்தான். பீமன் ஆயுதமின்றி நின்றபடியால் ஜராசந்தனும் அவ்வாறே ஆயுதங்கள் ஏதுமின்றி மல் யுத்தம் செய்யத் தீர்மானித்து அழைத்தான்.

x x x

பீமனும் ஜராசந்தனும் ஒருவரை ஒருவர் எட்டிப் பிடித்தும் தாக்கியும் பதின்மூன்று நாட்கள் ஆகார மாவது ஓய்வாவது இல்லாமல் இரவும் பகலும் சண்டை செய்தார்கள். பதினன்காவது நாள் ஜராசந்தன் களைப் புற்றுத் தயங்கினன்.

"இதுதான் இவனை வதம் செய்ய வேண்டிய சமயம்" என்று கிருஷ்ணன் பீமனைத் தூண்டினன். உடனே பீமன் ஜராசந்தனைத் தூக்கி நூறு சுழல் சுழற்றிக் கீழே போட்டுக் கால்களைப் பிடித்து உடலை இரண்டாகக் கிழித்துப் போட்டுக் கர்ஜித்தான்.

கிழிபட்ட இரண்டு பாகங்கள் உடனே தாமாக ஒன்று சேர்ந்துகொண்டன. ஜராசந்தன் மறுபடியும் உயிருடன் எழுந்து பீமனுடன் யுத்தத்தைத் துவக்கினன்.

இதைக் கண்டு பீமன் ஏக்கமடைந்தான். இன்னது செய்வது என்று தோன்றவில்லை. அச்சமயம் கிருஷ்ணன் ஒரு புல்லை எடுத்து இரண்டாகக் கிழித்துக் கால்மாற்றிப் போட்டுச் சமிக்ஞையாகக் காட்டினன். பீமசேனன் உடனே இதன் பொருளை அறிந்து கொண்டு மறுபடியும் ஜராசந்தனை இரண்டாகக் கிழித்து அப்படியே போடா மல் கால்மாற்றிப் போட்டு எறிந்தான்.

கிழிபட்ட துண்டங்கள் ஒன்று கூட முடியாமல் உயிரற்றுக் கிடந்தன. ஜராசந்தன் மாண்டான்.

x x x

சிறைபட்ட அசுரர்களை விடுவித்து ஜராசந்தனுடைய குமாரன் சகதேவனுக்கு இராஜ்யாபிஷேகமும் செய்து விட்டுக் கிருஷ்ணனும் பீமார்ச்சுனர்களும் ஊர் திரும்பி னர்கள்.

அதன்பின் பாண்டவர்கள் எதிர்ப்பவர்கள் யாரும் இல்லாமல் திக்விஜயம் செய்து ராஜசூய யாகத்தைச் சிறப் பாக நடத்தி வைத்தார்கள். யுதிஷ்டிரன் ராஜாதிராஜன் என்கிற பதவியை அடைந்தான். அப்போது கூடிய ராஜ சபையில்தான் அவமரியாதையாக நடந்துகொண்ட சிசு பாலன் கிருஷ்ணனுல் கொல்லப்பட்டான்.

# முதல் தாம்பூலம்

சபையில் நடக்கும் நடவடிக்கை தங்களுக்குப் பிடிக்கவில்லை என்பதைக் காட்டுவதற்காகச் சிலர் சேர்ந்தாப்போல் எழுந்து வெளியே போகும் வழக்கம் ஜனநாயகத்தில் முளைத்த நவீனக் குறும்பு அல்ல. பழையநாட்களிலும் இந்த 'வாக்-அவுட்' முறை கையாளப்பட்டது என்று மகாபாரதம் படித்தால் தெரியவரும்.

பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்தில் ராஜதானி ஏற்படுத்தி பெரிய ராஜசூய யாகம் செய்தார்கள். பாரத தேசத்தில் அக்காலத்தில் அரசர்கள் பலர் சுதந்திர ஆட்சி புரிந்து வந்தார்கள். ஒரு தருமம், ஒரு பண்பாட்டையே எல்லாரும் பின்பற்றி வந்தபோதிலும் ஒரு அரசனுடைய தேசத்திலும் ஆட்சியிலும் மற்றொருவன் பிரவேசிக்கமாட்டான். ஆனால் அவ்வப்போது யாராவது ஒரு பராக்கிரமசாலியான அரசன் நாடு முழுதும் தூது அனுப்பி ராஜாதி ராஜனாக இருக்க மற்ற அரசர்களிடம் அனுமதி பெறுவான. அநேகமாக யுத்தமும் கலவரமுமில்லாமலேயே முடியும். அனுமதிபெற்ற பிறகு ஒரு பெரிய ராஜசூய யாகம் செய்வான். எல்லா ராஜாக்களும் யாகத்திற்கு வந்து மகாராஜனுடைய பேராட்சியை ஒப்புக்கொண்டு ஊர் திரும்புவார்கள். இந்த வழக்கப்படி ஜராசந்தன் கொல்லப்பட்ட பிறகு பாண்டவர்கள் ராஜாக்கள் எல்லாரையும் கூப்பிட்டு ராஜசூய யாகம் நடத்தினார்கள்.

x x x

அழைப்புக் கிணங்கி சபைக்கு வந்தவர்களுக்கு மரியாதை செய்யும் சமயம் வந்தது. யாருக்கு முதல் மரியாதை என்கிற கேள்வி பிறந்தது. தரும புத்திரன் விருத்தரான பீஷ்மாச்சாரியரைக் கேட்டான். கிழவனார் துவாரகாபுரி அரசனான கண்ணனுக்கு அக்கிர பூஜை செய்யவேண்டும் என்று அபிப்பிராயம் கொடுத்தார்.

இதை ஒப்புக்கொண்டு யுதிஷ்டிரன் ஏவியபடி தம்பி சகாதேவன் பசு, அர்க்கியம், மதுவர்க்கம் இவைகளை முறைப்படி ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் சமர்ப்பித்தான்.

இவ்வாறு வாசுதேவனைக் கௌரவித்தது சேதி தேசத்து ராஜாவான சிசுபாலனுக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. அவன் ஒரு பெருஞ் சிரிப்புச் சிரித்து விட்டு, "இது வியப்புக்குரிய அநியாயமாக இருக்கிறது! ஆனால், இதில் வியப்பு என்ன? ஆலோசனை கேட்டவன் முறைகெட்ட முறையில் பிறந்தவனல்லவோ! [குந்திதேவியின் புத்திரர்கள் பாண்டு ராஜாவின் மக்களல்லவென்பதைச் சொல்லி இகழ்ச்சி செய்கிறான்.] ஆலோசனை சொன்னவனோ எப்போதும் தாழ்ந்த இடத்தையே தேடி ஓடும் தாயின் வயிற்றில் தோன்றினவன். [பீஷ்மனுடைய தாய் கங்காதேவி. நதி மேட்டிலிருந்து தாழ்ந்த இடத்தைத் தேடி ஓடும் அல்லவா? இதை வைத்து ஏளனம் செய்கிறான்.] அக்கிர பூஜை செய்த சகாதேவனும் ஒழுங்கு பிறழ்ந்த பிறப்புடையவன் தானே? மரியாதையை அங்கீகரிக்கிறவனோ மாடு மேய்க்கிறவர்கள் குலத்தில் வளர்ந்த மூடன். இந்த முறை தவறிய நடவடிக்கையைப் பார்த்துக் கொண்டிருக்கும் சபையோர் ஊமைகள். யோக்கியர்களுக்கு இங்கே இடம் இல்லை" என்று சொன்னான். சபையில் சிலர் சிசுபாலனுடன் சேர்ந்து சிரித்தார்கள். அதனால் உற்சாகமடைந்து அவன் மறுபடி யுதிஷ்டிரனைப் பார்த்துச் சொன்னான்:

"சபையில் எத்தனையோ அரசர்கள் இருக்க நீ இந்தக் கிருஷ்ணனுக்கு முதல் மரியாதை செய்தாயே! ஒருவனுக்குச் செய்ய வேண்டிய மரியாதையைச் செய்யாமலிருப்பதும் செய்ய வேண்டியதற்குமேல் அதிகமாக ஒருவனுக்குச் செய்வதும் இரண்டும் பெருங் குற்றமல்லவா? ராஜாதிராஜனாக விரும்புகிற உனக்கு இது தெரியாமல் போயிற்றே!"

கோபாவேசமாக இன்னும் சொல்லிக்கொண்டே போனான்: "சபையில் எவ்வளவு மகான்கள் இருக்கிறார்கள்? எத்தனை ராஜாக்கள் வீற்றிருக்கிறார்கள்?

இவர்கள் எல்லாரையும் விட்டுவிட்டு அரசர்களுக்குரிய மரியாதையை அரசனல்லாத இந்த மாடு மேய்ப்பவனுக்குக் கொடுத்தாயே! கண்ணன் தகப்பனார் வசுதேவன். அவன் ராஜா உக்கிரசேனனுடைய காரியஸ்தன். ஆகையால் கண்ணன் ராஜகுலத்தில் பிறந்த அரச குமாரனல்ல என்பது என்னுடைய ஆட்சேபணை. உனக்குத் தேவகியின் புத்திரனிடம் பட்சபாதம் இருந்தால் அதைக் காட்டுவதற்கு இதுதானா சமயம்? பாண்டு வம்சத்தாருக்கு இது தகாது! பாண்டு புத்திரர்களே, நீங்கள் சிறுவர்கள். ராஜசபை நடத்தும் முறை உங்களுக்குத் தெரியவில்லை. இந்தக் கிழவனான பீஷ்மன் தவறான யோசனை சொல்லி உங்களைப் பெருங் குற்றத்தில் தள்ளினான். கிருஷ்ணனை ஒரு தேசத்து அரசனல்ல. ஹே, யுதிஷ்டிரனே! ராஜாக்களுடைய சபையில் அவனுக்கு எவ்வாறு நீ அக்கிர பூஜை தரலாம்? வயதிலாவது முதிர்ந்தவனா? அதுவுமில்லை. அவனுடைய தகப்பனார் வசுதேவன் இருக்க மகனுக்கு இந்த மரியாதை பெற அதிகாரம் ஏது? அல்லது இவன் உனக்கு ஆசாரியனா? ஆசிரியரான துரோணர் இங்கே சபையில் இருக்கிறாரே! ஒருவேளை இந்தக் கிருஷ்ணன் யாகம் செய்வதில் நிபுணன் என்று ராஜசூய யாகத்தில் இவனுக்கு அக்கிர பூஜை தந்தாயோ? துவைபாயன வியாசர் சபையில் இருக்கிறாரே, அவரல்லவோ, யாகங்கள் நடத்தும் பெரியோர்களில் முதல்வர்? இந்த முதல் மரியாதையை உன் குலத்தில் விருத்தாப்யமடைந்த பீஷ்மனுக்கே செய்திருந்தாலும் ஒருவாறு சமாதானமாகலாம்.

"உங்கள் குலகுரு கிருபாசாரியார் சபையில் இருக்க இந்த மாட்டுக்காரனுக்கா அக்கிர பூஜை செய்வது? வீரனும் சர்வசாஸ்திர விசாரதருமான அசுவத்தாமர் சபையிலிருக்க அவரை மறந்து, நீ எப்படி அக்கிர பூஜைக்குக் கிருஷ்ணனைத் தேர்ந்தெடுத்தாய்?

"அரசர்க்கரசனான துரியோதனன் இருக்கிறானே! பரசுராமரின் சீடன் கர்ணன் இருக்கிறானே! அவனல்லவோ ஜராசந்தனை தனியாக எதிர்த்து வெற்றியும் புகழும் பெற்ற வீரன்? அவனை விட்டுவிட்டுச் சபையில்

முதல் மரியாதைக்கு இந்தக் கிருஷ்ணனைத் தேர்ந்தெடுத்தாயே! வயதிலும் விருத்தனல்ல; ஒரு தேசத்து அரசனுமல்ல, யாகப் பயிற்சி பெற்றவனுமல்ல, வெறும் பட்சபாதத்தினால் இவனுக்கு அக்கிர பூஜை தந்தாய். அரசர்களையும் பெரியோர்களையும இப்படி அவமதிக்கவே நீ எல்லாரையும் அழைத்துச் சபை கூட்டினாயா?

"அரசர்களே! குந்தி புத்திரன் யுதிஷ்டிரனை நாம் ராஜாதி ராஜனாக ஒப்புக்கொண்டது அவன் பராக்கிரமத்தை கண்டு பயந்து போயல்ல, அவனுடைய தயவைச் சம்பாதித்து லாபமடையவுமல்ல, அவன் விரோதத்தைக் கண்டு பயந்துமல்ல. தருமமே பிரதானமாகக் கொண்டு ராஜ்யபாலனம் செய்கிறேன் என்று அவன் சொன்னதைக்கேட்டு நாம் அவனைக் கௌரவித்தோம். இப்போது நம்மை யெல்லாம் அவமதித்து விட்டான். தர்மாத்மா என்கிற புகழ்ப்பெயர் இனி இவனுக்குத் தகாது. ஜராசந்தனை அநியாய முறையில் கொன்ற துராத்மாவுக்கு அக்கிர பூஜை செய்த பிறகு தர்மாத்மா என்கிற பெயர் யுதிஷ்டிரனுக்கு எப்படித் தகும்? கயவன் என்றுதான் இனி அவனைச் சொல்ல வேண்டும்.

"ஏ கிருஷ்ணனே! இந்தப் பாண்டவர்கள் தான் சுய நலத்தைக் கருதி முறையைப் புறக்கணித்து உனக்கு மரியாதை செய்கிறார்கள். ஆனால் நீ எப்படி ஒப்புக் கொள்ளலாம்? உனக்கும் முறை தெரியாமல் போயிற்று? தரையில் சிந்திய அவியுணவை யாரும் கவனிக்காமலிருந்தால் ஒரு நாய் தின்று விடுவதைபபோல் உனக்குப் பொருத்தமாகாத மரியாதையை நீ ஒப்புக் கொண்டாய். உன்னைப் பரிகசிக்கத்தான் இந்த விளையாட்டை நடத்தியிருக்கிறார்கள் என்று நான் உனக்குச் சொல்லுகிறேன். உண்மையில் இந்த நாடகம் உன்னைக் கௌரவிக்கவென்று நடத்தப்பட்டதல்ல. இது உனக்குத் தெரியவில்லை! கண்ணில்லாத குருடனுக்குச் சௌந்தரியமான பொருள்களைக் காட்டுவதுபோலும், கிலீபனுக்கு விவாகம் செய்து கொடுப்பதுபோலும், ராஜ்யமில்லாத உனக்கு அரசர்க்குரிய இந்த மரியாதையைச் செய்து பரிகசிக்கிறார்கள்.

"ராஜாதி ராஜனுக விரும்பும் யுதிஷ்டிரனுடைய உண்மைப் பான்மையை இப்போது கண்டோம். பீஷ்மருடைய உண்மைப் பான்மையும் வெளியாயிற்று. வாசுதேவன் எத்தகையோன் என்பதும் கண்டு கொண்டோம். எல்லாம் ஒரே அழகு!"

இவ்வாறு சிசுபாலன் கடுமையான சொற்பொழிவு நிகழ்த்திவிட்டு ஆசனத்திலிருந்து எழுந்து மற்ற ராஜாக்களைப் பார்த்து "வாருங்கள் வெளியே" என்று சொல்லி அவர்களையும் கூட்டிக்கொண்டு சபையிலிருந்து வெளியே சென்ருன.

யுதிஷ்டிரன் வெளியே போனவர்களைப் பின் தொடர்ந்து ஓடிஞன். ஓடி அவர்களைச் சமாதானம் செய்து மதுரமாகவும் சாந்தமாகவும் பேசிஞன். ஆனுல் அவனுடைய முயற்சி பயன் பெறவில்லை.

சமாதானம் ஆகவில்லை. சிசுபாலனுடைய அகம்பாவம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. பிறகு கண்ணனுக்கும் சிசுபாலனுக்கும் பெரும்போர் நடந்தது. துஷ்டஞன சிசுபாலன் கண்ணனுல் வதம் செய்யப்பட்டான்.

ராஜசூயம் நடந்து யுதிஷ்டிரன் ராஜாதி ராஜப் பதவியைப் பெற்ருன்.

# சகுனியின் பிரவேசம்

இந்திரப் பிரஸ்த நகரத்தில் பாண்டவர்கள் நடத்திய ராஜசூய யாகம் முடிந்தது. வந்திருந்த அரசர்களும் மற்றப் பெரியோர்களும் விடை பெற்றுக் கொண்டு திரும்பினார்கள். வியாசரும் அரசனிடம் சொல்லிப் போக வந்தார். தருமபுத்திரன் எழுந்து முனிவருக்கு ஆசனம் அளித்துப் பூஜித்துப் பக்கத்தில் உட்கார்ந்தான். "குந்திபுத்திரனே! பெறுதற்கரிய சாம்ராஜ்யப் பதவியை அடைந்தாய். கௌரவ குலம் உன்னால் பெருமை அடைந்தது. நான் போவதற்கு விடை கொடுப்பாயாக" என்றார் முனிவர்.

குலத்துக்குப் பிதாமகரும் குருவுமான வியாசரின் காலைத் தொட்டு யுதிஷ்டிரன், "குருவே! என் சந்தேகத்தைத் தீர்க்கக் கூடியவர் நீங்கள்தான். மிகவும் கொடிய உற்பாதங்களைக் கண்டதாகப் பெரியோர்கள் சொல்லுகிறார்கள். அவற்றின் பயன் சிசுபாலனுடைய மரணத்தினால் தீர்ந்து போயிற்றா அல்லது இன்னும் கவலைக்கிடமுண்டா?" என்று கேட்டான்.

தருமபுத்திரனுடைய கேள்விக்கு வியாச பகவான் சொன்னார்:

"அப்பனே! பதின்மூன்று வருஷகாலம் கஷ்டங்கள் நேரும். க்ஷத்திரிய குலம் அழியப் போவதைக் காட்ட இந்த உற்பாதங்கள் தோன்றின. சிசுபாலனுடைய வதத்தோடு இது முடியவில்லை. இன்னும் பெரிய சம்பவங்களும் நடக்க வேண்டியிருக்கிறது. அரசர்கள் நூற்றுக்கணக்காக மாள்வார்கள். அந்த நாசத்திற்கு நீ காரணமாவாய். உன் பங்காளிகளுடன் நீயும் உன் சகோதரர்களும் பகைமை கொண்டு க்ஷத்திரிய வம்சத்திற்கே நாசம் தரும்படியான மகா யுத்தம் உண்டாகும். காலத்தின் பயனாக வரும் விதியை யாரும் விலக்க முடியாது. மனங் கலங்காமல் தைரியமாக இருப்பாயாக. நான் போய் வருகிறேன். புலன்களை அடக்கி நிலை திரியாமல் ஜாக்கிரதை

யாக இருந்து கொண்டு ராஜ்யபாலனம் செய்வாயாக'' என்று ஆசீர்வதித்தார்.

வியாசர் சென்ற பிறகு கவலைக் கடலில் மூழ்கிய யுதிஷ்டிரன் தன்சகோதரர்களிடம் விஷயத்தைச்சொல்லி, ''வீரர்களே! வியாசர் சொன்ன சொல்லைக் கேட்டு எனக்கு வாழ்க்கையில் வெறுப்பு உண்டாகி விட்டது. அரசர்களுடைய அழிவிற்கு நான் காரணமாவேன் என்று அறிந்தபின் நான் உயிர் வைத்துக் கொண்டிருப்பதில் என்ன பயன்?'' என்ருன்.

இதைக் கேட்டு அருச்சுனன் சொன்னன்;

''அரசனுகிய நீர் இவ்வாறு மனதைக் கலவரப்படுத்திக்கொள்ளக் கூடாது. விஷயங்களை ஆராய்ந்து அந்தந்தச் சமயத்தில் எது கடமையோ அதைச் செய்ய வேண்டும்'' என்ருன்.

யுதிஷ்டிரன், ''சகோதரர்களே, ஈசுவரன் நம்மைக் காப்பாருக. கலக முண்டாகாம விருப்பதற்காக நான் பிரதிஜ்ஞை செய்கிறேன். இன்று முதல் பதின்மூன்று வருஷ காலம் நான் என சகோதரர்களையாவது மற்றக் குலத்தோரையாவது எந்தச் சமயத்திலும் கடிந்து பேச மாட்டேன். குலத்தோர் விருப்பத்தின்படி எப்போதும் நடந்து கொள்வேன். மன வேறுபாட்டுக்கு இடம் தர மாட்டேன். மன வேறுபாட்டினுல்தான் உலகத்தில் கலகம் உண்டாகிறது. சண்டைகளுக்கு மூல காரணமாகிய கோபத்தைத் தடுத்துவிட்டு துரியோதனுதியர்களுடைய பேச்சைத் தடுக்காமல் அவர்களுடைய விருப்பப்படியே எப்போதும நடந்துகொள்வேன். வியாசர் எச்சரிக்கை செய்தபடி கோபத்துக்கு இடங் கொடுக்காமலிருப்பேன்'' என்ருன். அதைக் கேட்ட சகோதரர்களும் ''கலகத்துக்கு நாம் ஒரு போதும் காரணமாகக் கூடாது. நீர் சொல்லுவதே சரி'' என்ருர்கள்.

துரியோதனுதியர் சூதாட்டத்திற்கு அழைத்தபோது மாட்டேன் என்று சொல்லாமல் ஒப்புக் கொள்ளுவதற்கு இந்தப் பிரதிஜ்ஞையே முக்கியமான காரணம். கலகம்

வரும் என்று பயந்து அதற்கு இடம் கொடுக்காமலிருப்பதற்காக யுதிஷ்டிரர் எடுத்துக் கொண்ட பிரதிஜ்ஞையே பிறகு கலகத்துக்குக் காரணமாயிற்று. அழைப்பை மறுக்கப் பயந்து சூதாட்டம் ஆடினதின் பயனாகத் தீராத பெருங் கோபமும் பிறகு மகா யுத்தமும் குல நாசமும் உண்டாயின.

மனிதனுடைய சாதுர்யமும் சங்கல்பங்களும் பிரயத்தனங்களும் எண்ணிய நோக்கத்திற்கு நேர் விரோதமான முடிவுக்குப் போய்ச் சேரும் என்பதற்கு தருமபுத்திரனுடைய இந்தப் பிரதிஜ்ஞையே உலகப் பிரசித்தமான திருஷ்டாந்தமாகும்.

x x x

கலகம் வருமே என்று தருமபுத்திரன் இந்திரப்பிரஸ்தத்தில் கிடக்க, துரியோதனன் பாண்டவ ராஜதானியில் ராஜசூய யாகம் நடந்த போது தான் கண்ட ஐச்வரியத்தை நினைத்துப் பொறாமை என்கிற எரியும் நெருப்பில் வீழ்ந்து தவித்துக் கொண்டிருந்தான். என்றும் பார்த்திராத செல்வத்தையும் கண்ணைக் கவர்ந்து மோசம் செய்யும்படியான படிகக் கதவுகளையும் சிற்ப வேலைகளையும் யுதிஷ்டிரனுடைய சபா மண்டபத்தில் துரியோதனன் கண்டான். பல தேசத்து அரசர்கள் பாண்டவர்களுக்குச் சிநேகிதர்களாயிருப்பதையும் பார்த்தான். திருதராஷ்டிரன் மகனுக்குத் தாங்க முடியாத துயரம் உண்டாயிற்று. பாண்டவர்களுடைய ஐஸ்வர்ய தசையை எண்ணியெண்ணி வருந்திக் கொண்டிருந்த துரியோதனனுக்குத் தன் பக்கத்தில் சகுனி நின்று பேசுவது கூடத் தெரியவில்லை.

“ஏன் பெருமூச்சு விடுகிறாய்? ஏன் துக்கம் உன்னை வாட்டுகிறது!” என்று சகுனி கேட்டான்.

“சகோதரர்களால் சூழப்பட்டு யுதிஷ்டிரன் இந்திரனைப்போல் அரசு புரிகிறான். குழுமியிருந்த அரசர்களுக்கு எதிரில் சிசுபாலன் வதஞ் செய்யப்பட்டான். அதற்குப் பழி வாங்க எந்த க்ஷத்திரியனும் முன்வர

யில்லை. பாண்டவர்களைக் கண்டு பயந்து நடுங்கி ஒன்றுஞ் செய்யாமல் சும்மா நின்றனர். ரத்தினங்களையும் தனங்களையும் ராஜகுலத்தவர் கேவலம் வியாபாரம் செய்து பிழைக்கும் வைசியர்களைப் போல் அடங்கி ஒடுங்கி யுதிஷ்டிரனுக்குக் காணிக்கை செலுத்தினர்கள். இதையெல்லாம் பார்த்த பின் நான் எவ்வாறு வருத்தப்படாமலிருக்க முடியும்? நான் உயிருடன் இருந்து என்ன பயன்?'' என்றான்.

சகுனி, ''துரியோதனா! பாண்டவர்கள் உன் சகோதரர்கள் அல்லவா? அவர்களுடைய சம்பத்தைப் பார்த்துப் பொருமைப்படத் தகாது. தங்களுக்கு நியாயமாகக் கிடைத்த பாகத்தை அவர்கள் அனுபவிக்கிறார்கள். அவர்களுடைய அதிருஷ்டத்தினால் அவர்கள் பாக்கியம் பெற்று மேன்மை அடைந்திருக்கிறார்கள். பிறருக்கு எவ்வித துரோகமும் செய்யாமல தஙகள் பாகத்தை வைத்துக் கொண்டு தங்கள் சக்தியின் பயனாக அவர்கள் அபிவிருத்தி அடைந்திருபபதைப் பார்த்து நீ ஏன் பொருமைப் படுகிறாய்? அவர்களுடைய பலமும் சந்தோஷமும் உனக்கு எவ்வாறு குறை செய்யும்? உன்னுடைய சகோதரர்களும் பந்துக்களும் உன் பேச்சுக்கு அடங்கி நிற்கிறார்கள். துரோணரும், அசுவத்தாமரும் கர்ணனும உன் பட்சத்தில் இருக்கிறார்கள். நீ ஏன் துக்கப்படவேண்டும்? பீஷ்மரும் கிருபரும் ஜயத்ரதனும சோமதத்தனும் நானும துணையாக இருக்க, நீ பூமி முழுதுமே ஜயிக்கலாம். வருத்தப் படாதே'' என்றான்.

இதைக் கேட்ட துரியோதனன். ''சகுனியே, இவ்வளவு துணைவர்கள் உண்மையில் இருப்பாராயின், யுத்தம செய்து இந்திரப்ரஸ்தத்திலிருந்து பாண்டவர்களை நாம் துரத்த வேண்டும்'' என்றான்.

''வேண்டாம். அது அபாயகரமான வேலை. யுத்தமின்றி எந்த உபாயத்தினால் யுதிஷ்டிரனை எளிதில் வெல்லலாமோ அது எனக்குத்தெரியும்'' என்றான் சகுனி

துரியோதனன் கண்களில் பிரகாசம் தோன்றிற்று. ''மாமா! யாருடைய உயிரும் சேதப்படாமல் பாண்டவர்

களை ஜயிக்க முடியுமா? அதற்கு ஏதாவது வழியுண்டா" என்று மிக்க ஆவலோடு துரியோதனன் சகுனியைக் கேட்டான்.

"துரியோதனா! யுதிஷ்டிரன் பந்தய ஆட்டத்தில் ஆசையுள்ளவன். அவனுக்கு ஆடத் தெரியாது. நாம் அழைத்தால் க்ஷத்திரிய குலாசாரத்தின்படி அவன் கட்டாயம் ஒப்புக்கொள்வான். நான் ஆட்டத்தில் தேர்ந்தவன். உனக்காக ஆடுவேன். அவனுடைய ராஜ்யத்தையும், ஐச்வர்யத்தையும் உனக்காக நான் அவனிடமிருந்து யுத்தமின்றிப் பறித்துவிட முடியும்" என்றான்.

# ஆட்டத்திற்கு அழைப்பு

துரியோதனனும் சகுனியும் திருதராஷ்டிரனிடம் சென்றார்கள். சகுனி முதலில் பேச ஆரம்பித்தான்: "அரசனே! சுயோதனன்* துயரத்தினால் இளைத்து இரத்தம் இழந்து வெளுத்துப் போயிருக்கிறான். தாங்க முடியாத அவனுடைய துக்கத்தை நீர் விசாரிக்கவே யில்லை. ஏன் அவனைப்பற்றிக் கவலையில்லாமலிருக்கிறீர்?" என்றான்.

மகனிடத்தில் அளவு கடந்த அன்புகொண்ட திருதராஷ்டிரன் துரியோதனனைக் கட்டித் தழுவி "நீ துயரப் படுவதற்குக் காரணம் ஒன்றும் எனக்குத் தெரிய வில்லையே! எல்லா ஐஸ்வரியமும் பெற்றிருக்கிறாய். உலக மெல்லாம் உன் சொல்லுக்குக் கட்டுப்பட்டிருக்கிறது. எல்லாவித சுகங்களும் தேவர்களுக்கு இருப்பது போல் உனக்கு இருக்க ஏன துயரப்படுகிறாய்? வேதமும் அஸ்திர வித்தைகளும் சாஸ்திரங்களும் அங்கலக்ஷண பூர்ணமாய் கிருபாசாரியாரிடமும், பலராமரிடமும், துரோணரிடமும் படித்திருக்கிறாய். எனக்கு மூத்த மகனாய் ராஜ்ய லக்ஷ்மியை அடைந்திருக்கிறாய். உன் விசனத்திற்கு என்ன காரணம்? சொல்" என்றான்.

துரியோதனன், "தந்தையே! அற்ப மனிதனைப் போல் உண்கிறேன், உடுக்கிறேன், அவமானத்தையும் பொறுத்துக்கொண்டிருக்கிறேன். இது என்ன வாழ்க்கை!" என்று ஆரம்பித்துத் தன் துயரத்தை விவரமாகத் தெரிவித்தான். பாண்டவர்களுடைய நகரத்தில் தான் பார்த்த செல்வத்தை எடுத்துச் சொல்லித் தன் பொறாமையைத் தகப்பனுக்குத் தெரியப்படுத்தி, உள்ளது போதுமென்றிருப்பது க்ஷத்திரிய தருமம் அல்ல, பயமும் தயையும் அரசர்களுடைய கௌரவத்தைத் தாழ்த்தி விடுகின்றன. யுதிஷ்டிரனிடமுள்ள ராஜ்ய

* சுயோதனன் = துரியோதனன்.

லக்ஷ்மியைப் பார்த்த பிறகு என் செல்வமும் சுகமும் எனக்குத் திருப்தி கொடுக்கவில்லை. அரசனே! பாண்டவர்கள் உயர்ந்து போனார்கள்; நாம் வீழ்ந்தோம்" என்று அலறினான்.

திருதராஷ்டிரன், "புத்திரனே! எனக்கு நீ மூத்த புத்திரன். பட்டமகிஷியின் மகன். பாண்டவர்களைப் பகையாதே. பகையினால் துக்கமும் மரணமுந்தான் உண்டாகும். வஞ்சகம் அறியாத யுதிஷ்டிரனை ஏன் பகைக்கிறாய்? அவனுடைய செல்வம் நம்முடையதுமாகும். நம்முடைய மித்திரர்களே அவனுக்கும் மித்திரர்கள். நம் பேரில் அவனுக்கு அசூயையாவது விரோதமாவது எள்ளளவும் இல்லை. குலத்திலும் பராக்ரமத்திலும் அவனுக்குச் சரியாக நீயும் இருக்கிறாய். சகோதரனைக் கண்டு ஏன் பொறாமைப் படுகிறாய்? வேண்டாம்!" என்று மகன் பேரில் அன்பு மேலிட்டுத் தன்னுடைய அறிவில் கண்ட நியாயத்தை எடுத்துச் சொன்னான்.

தகப்பன் சொல் துரியோதனனுக்குப் பிடிக்கவில்லை.

"இயற்கை அறிவில்லாமல் எவ்வளவு கல்வி கேள்விகள் பெற்றும் என்ன பயன்? பக்ஷணங்களின் சுவை அவற்றில் மூழ்கி மிதக்கும் அகப்பைக்குத் தெரியாதது போல் நீர் நீதி சாஸ்திரங்களில் மூழ்கியிருந்த போதிலும் அவற்றின் பொருளை யறியாமல் பேசுகிறீர். உலக நடை வேறு. அரசர்களின் தருமம் வேறு என்று பிருகஸ்பதி சொல்லியிருக்கிறார். சாதாரண மக்களுக்குப் பொறுமையும் திருப்தியும் தருமமாகும். அரசர்களுக்குப் பொறுமையும் திருப்தியும் தருமமல்ல. க்ஷத்திரியனுடைய கடமை எப்போதும் வெற்றியைத் தேடுவதேயாகும். தருமமாயினும் சரி, அதருமமாயினும் சரி, ஜயத்தைத் தேடுவதே அரசன் தொழில்" என்று துரியோதனன் தகப்பனிடம் ராஜநீதியை எடுத்துச் சொன்னான்.

பிறகு சகுனியும் பேசினான். சூதாட்ட யோசனையை திருதராஷ்டிரனுக்குச் சொன்னான். "யுத்தமின்றித் துரியோதனனுடைய துயரத்தைத் தீர்க்க முடியும்" என்றான்.

திருதராஷ்டிரன் மன உறுதி இழக்க ஆரம்பித்தான். அதைக்கண்டு இதுதான் தகப்பனுடைய சம்மதம் பெறு வதற்குச் சமயம் என்று துரியோதனன் "கபடமாகவோ, வெளிப்படையாகவோ எதிரியை வீழ்த்தக்கூடிய எல்லா உபாயங்களும் க்ஷத்திரியனுக்கு ஆயுதமாகும். வெட்டும் கருவியே ஆயுதமல்ல. மித்திரன் யார், சத்துருயார் என் பது பிறப்பாலும் குலத்தாலும் நிர்ணயமாகாது. எவனால் துன்பம் உண்டாகிறதோ அவனே பகைவன். சகோதர னானாலும் அவன் பகைவனாவான். திருப்தி கொண்டு வாழ்வது அரசர்களுடைய வாழ்க்கைக்குப் பொருந்தாது. பகைவனுடைய அபிவிருத்தியைப் பார்த்தும்கவனியாமல் விட்டு விடுகிற அரசன் அழிந்து போவான். சத்துருவின் வளர்ச்சியை முன்னதாகவே தெரிந்துகொண்டு அதைத் தகுந்த சூழ்ச்சியால் அடக்கப் பார்ப்பதே ராஜ தருமம். வேரில் உண்டாகும் புற்று மரத்தை அழிப்பதுபோல் நம்முடைய குலத்தவர்களின் சம்பத்து நம்மை அழித்து விடும்" என்றான்.

"குந்தி மகனை 'ஆட்டத்திற்கு வா' என்று நீ சொன்னால் மட்டும் போதும். மற்ற வேலையெல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றான் மகா புத்தி கூர்மை படைத்தவனும் பாவியுமாகிய சகுனி.

"யுத்தம் என்பதில்லாமல்உயிருக்கு ஆபத்தில்லாமல் பாண்டவர்களுடைய சம்பத்தை எனக்குச் சகுனி சம்பா தித்துத் தருவான். நீர் யுதிஷ்டிரனை அழைக்க மாத்திரம் உடன்பட வேண்டும்" என்றான் துரியோதனன்.

திருதராஷ்டிரன், "இது எனக்குச் சரியாகத்தோன்ற வில்லை. தம்பி விதுரனைக் கேட்கலாம். அவன் அறிவாளி. அவன் சொல்லின்படி நான் எப்போதும் செய்யவேண்டிய வன்" என்றான்.

விதுரனுடன் ஆலோசிப்பது துரியோதனனுக்குச் சம்மதமில்லை. "விதுரர் சாதாரண தருமத்தைத்தான் உபதேசிப்பார். அது வெற்றிக்கு உதவாது. அரசர்க ளுக்கு ஜயம் வேண்டின் தருமத்தைப் புறக்கணிக்கவேண் டியதாகும். தர்ம சாஸ்திர நிபுணர்களாகிய விதுரரும்

வியாசரும் நம்முடைய முன்னேற்றத்திற்கு விரோதிகளா வார்கள். விதுரருக்கு என்னிடத்தில் அன்பில்லை. அவருக்குப் பாண்டவர்களிடமே பிரியம். இது உமக்குத் தெரியாதா?'' என்றான்.

''பாண்டவர்கள் பலவான்கள். அவர்களோடு விரோதம் செய்துகொள்வது யுக்தம் என்று எனக்குத் தோன்றவில்லை. சூதாட்டம் என்பது பகைக்குக் காரணமாகும். சூதாட்டத்தில் உண்டாகும் கெட்ட மனப்பான்மை கரை கடந்து போகும். வேண்டாம்'' என்றான் திருதராஷ்டிரன்.

''பயம் என்பதை விட்டுவிட்டுத் தன்னைத் தான் காப்பாற்றிக் கொள்வதே ராஜதருமம். பகைவர்கள் அதிக அபிவிருத்தி அடைவதற்குள் நமக்குச் சக்தி இருக்கும் போதே வேலை செய்யவேண்டு மல்லவா? அதுவே முன் ஜாக்கிரதையாகும். வியாதியும் யமனும் நமக்காகக் காத்திருக்குமா? சூதாட்டத்தை நாம் புதிதாக உண்டாக்கவில்லை. முன்னோர்கள் அதையும்தான் உண்டாக்கி இருக்கிறார்கள். சூதாட்டத்தில் அபாயமும் உயிர் நாசமும் இல்லாமல் க்ஷத்திரியர்கள் தங்கள் காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம்'' என்று துரியோதனன் தகப்பனை வற்புறுத்தினான்.

திருதராஷ்டிரன், ''மகனே! நான் விருத்தியாப்பியம் அடைந்துவிட்டேன். நீயே அரசன். உன் இஷ்டப்படி நீ செய்யலாம். நீ செல்லும் வழி எனக்குப் பிடிக்கவில்லை. பிறகு வருத்தப்படுவாய். இது விதியின் வேலை'' என்றான்.

மகனுடைய தொந்தரவைப் பொறுக்கமாட்டாமல் முடிவில் திருதராஷ்டிரன் சரி என்று ஒப்புக்கொண்டு, சூதாட்டத்திற்குத் தகுந்த சபா மண்டபம் கட்ட வேலைக்காரர்களுக்கு உத்தரவும் கொடுத்தான். ஆனால், ரகசியமாக விதுரனிடம் இதைப்பற்றிக் கலந்து பேசினான்.

* * *

''அரசனே! இது குலத்திற்கு நாசம் கொண்டுவந்துவிடும், இந்த யோசனையின் பயனாக நம்முடைய குலத்தில்

கோபமும் கலகமும் உண்டாகிப் பெரும் ஆபத்து நேரிடும். வேண்டாம்!'' என்றான் விதுரன்.

மகனுடைய வேண்டுகோளைத் தடுக்க முடியாமல் திருதராஷ்டிரன், "விதுரா? விதி நமக்கு அனுகூலமா யிருந்தால் இந்தச் சூதாட்டத்தைப் பற்றி எனக்குப் பயம் இல்லை. விதி பிரதிகூலமா யிருந்தால், நாம் என்ன செய்து என்ன பயன்? உலகமனைத்தும் விதியின் வசமே இருந்து நடத்தப்பட்டு வருகிறது. நீ போய் யுதிஷ்டிரனை ஆட்டத்திற்கு அழைத்தேன் என்று எனக்காகச் சொல்லி அவனை அழைத்து வா!'' என்று விதுரனுக்குக் கட்டளையிட்டான.

விதியின் கதியையும் மனிதன் கடமையையும் சரியாக அறிந்தும் புத்தியைக் கலவரப்படுத்திக் கொண்டு மன வுறுதியற்ற திருதராஷ்டிரன் துரியோதனனிடம் வைத் திருந்த பற்றினால் அவன் சொல்லுக்கு இசைந்தான். அர சன் கட்டளைப்படி விதுரனும் யுதிஷ்டிரனிடம் சென்றான்.

# பந்தயம்

"ஏன் சந்தோஷமற்ற முகத்தோடு வருகிறீர்? ஹஸ்தினாபுரத்தில் எல்லோரும் சுகமா? அரசனும் ராஜ குமாரர்களும் நன்ருயிருக்கிருர்களா? நகரத்துப பிரஜைகளின் நடத்தை சரியாயிருக்கிறதா?" என்று விதுரனைக் கண்டதும் கவலையோடு யுதிஷ்டிரன் கேட்டான்.

"ஹஸ்தினபுரத்தில் அனைவரும் சுகம். நீங்கள் அனைவரும் சுகமா? புதிதாக நிர்மாணிக்கப்பட்ட விளையாட்டு மண்டபத்தைப் பார்த்துவிட்டுப்போக உங்களைத் திருதராஷ்டிர ராஜன் சார்பாக அழைக்க வந்தேன். உங்களுடைய மண்டபத்திற்குச் சமானமான அழகிய மண்டபம் அங்கே கட்டப்பட்டிருக்கிறது. சகோதரர்களுடன் நீயும் வந்து பார்த்துப் பாய்ச்சிகை ஆடிவிட்டுத் திரும்பிப் போக வேண்டும் என்பது அரசன் வேண்டுகோள்" என்று விதுரன தான் வந்த விஷயத்தை முறைப்படி சொன்னுன்.

"கவருட்டம் க்ஷத்திரியர்களுக்குள் கலகம் விளைவிக்கும். புத்திசாலிகள் அதை விரும்பமாட்டார்கள். நாங்கள் உம்முடைய சொல்லைப பின்பற்றி நடப்பவர்கள். உம்முடைய யோசனை என்ன?" என்று யுதிஷ்டிரன் விதுரனைக் கேட்டான்.

"காய் விளையாட்டு அனர்த்தத்திற்கு மூலம் என்பது அனைவரும் அறிந்த விஷயம். நான் இந்த ஏற்பாட்டைத் தடுக்கத்தான் முயற்சி செய்தேன். ஆனுலும் அரசன் உங்களை அழைக்கச் சொன்னுன்; அதனுல் வந்தேன். உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்" என்ருன் விதுரன்.

இவ்வாறு எச்சரிக்கை செய்யப்பட்டும், யுதிஷ்டிரன் சகோதரர்களையும் பரிவாரங்களையும் கூட்டிக்கொண்டு ஹஸ்தினுபுரம் சென்ருன்.

மகா புத்திசாலியான யுதிஷ்டிரன் ஏன் சூதாட்ட அழைப்பை ஒப்புக் கொண்டான் என்கிற கேள்வி பிறக்

கிறது. இதற்கு மூன்று காரணங்கள். காம விவகாரம், சூதாட்டம், கட்குடிப் பழக்கம் இவை மனிதனைத் தெரிந்தே ஏமாற்றி இழுத்துக் குழியில் தள்ளுகின்றன. யுதிஷ்டிரனுக்குக் கவறுட்டத்தில் மோகம் என்பது பாரதத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இரண்டாவதாக அரசகுல பண்பாட்டின்படி பாய்ச்சிகை ஆட்டத்திற்கும் பந்தயங்களும் விடுத்த அழைப்பை மறுதலிப்பது கூடாது. இவை யிரண்டுமன்றி, குலநாசத்திற்குக் காரணமான கலகம் வரும் என்று வியாசர் சொல்லி யிருந்த படியினால் திருதராஷ்டிரனுடைய பேச்சை அவமதித்துக் கோபத்திற்கு இடம் கொடுக்கக்கூடாது என்பது யுதிஷ்டிரனுடைய எண்ணம். இவையெல்லாம் காரணமாக புத்திசாலியான யுதிஷ்டிரன் அழைப்பை ஒப்புக் கொண்டு ஹஸ்தினபுரத்துக்குப் போனான். நகரத்துக்குச் சமீபத்தில் தனக்கும் தன பரிவாரத்திற்கும் கட்டப்பட்டிருந்த அழகிய விடுதியில் தங்கிச்சிரமபரிகாரம் செய்த பின் அடுத்த நாள் காலைக் கடமைகளை முடித்துவிட்டுச் சபாமண்டபம் சென்றான்.

குசலப் பிரச்னைகள் முடிந்த பின் சகுனி பேசினன். "யுதிஷ்டிரனே! ஆட்டத்திற்குத் துணி விரிக்கப்பட்டிருக்கிறது. வா, ஆடலாம்" என்றான்,

"ராஜனே! கவறுட்டம் நல்ல விஷயமல்ல. பந்தய ஆட்டங்களில் ஜயிப்பது பராக்கிரமத்தோடு சேராது. அஸிதரும் தேவலரும் இன்னும் லெளகீக விஷயங்களில் அனுபவம் பெற்ற முனிவர்கள் பலரும் சூதாட்டம் கூடாது, அது மோசத்தோடு சேர்ந்தது என்று சொல்லி யிருக்கிறார்கள். யுத்தத்தில்ஜயிப்பதே க்ஷத்திரியர்களுக்கு யோக்கியமான முறை என்று சொல்லி யிருக்கிறார்கள். இது உனக்குத் தெரியாதது அல்ல!" என்றான் யுதிஷ்டிரன்.

ஒரு பக்கம் பழக்கத்தினால் தூண்டப்பட்டு யுதிஷ்டிரன் ஆடவும் ஆசைப்பட்டான்; மற்றொருபுறம் அது கூடாது என்கிற விவேகமும் அவனைத் தடுத்துக் கொண்டுதான் இருந்தது. சகுனியுடன் வாதம் செய்யும்

சாக்காக தன் உள்ளத்தில் நடைபெற்ற மனக் குழப்பத்தை வெளியிட்டுக் கொண்டான். கூர்மையான மூளையைப் படைத்த சகுனி இதை உணர்ந்து, மறுபடியும் சொன்னான் :

"மோசமாவது என்ன ? யுத்தமாவது என்ன ? வேதம் படித்தவர்களில் ஒருவரோடு ஒருவர் போட்டி போடவில்லையா ? படித்தவன் படிக்காதவனை ஜயிக்கிறான். அதில் மோசம் என்று யாராவது சொல்லுகிறார்களா? ஆயுதத் தேர்ச்சி பெற்றவன் தேர்ச்சிபெறாதவனை யுத்தத்தில் தோற்கடிக்கிறான். அது மட்டும் தர்மமா ? தேக பலமுள்ளவன் தேகபலம் இல்லாதவனை ஜயிக்கிறான்; அதுவும் மோசம்தான் ? எல்லாச் செய்கைகளிலும் தெரிந்தவன் தெரியாதவனைத் தோற்கடிக்கிறான். இதில் மோசம் என்ன, தர்மம் என்ன? பாய்ச்சிகை ஆட்டத்திலும் ஆடத் தெரிந்தவன் ஜயிக்கிறான் ; தெரியாதவன் தோல்வியடைகிறான். இதை மோசம் என்று எவ்வாறு சொல்லலாம் ? உனக்குப் பயமாயிருந்தால் ஆட வேண்டாம். ஆனால் தர்மத்தின் பேரில் சாக்கு சொல்ல வேண்டாம் ' என்றான்.

"சரி யார் என்னுடன் ஆட வருகிறார்கள்?" என்றான் யுதிஷ்டிரன்.

துரியோதனன், "பணயம் வைக்க நான் தனமும் ரத்தினமும் தருவேன. எனக்காக என் மாமா சகுனி ஆடுவார் " என்றான்.

யுதிஷ்டிரன் துரியோதனனை ஆட்டத்தில் தோற்கடிக்கலாம் என்று எண்ணியிருந்தான். சகுனியின் சாமர்த்தியத்தை அறிந்தவனாதலால் தயங்கினான்.

" ஒருவனுக்காக மற்றொருவன் ஆடுவது சாதாரண முறையல்ல என்பது என் அபிப்பிராயம் " என்றான். யுதிஷ்டிரன்.

" ஓ! வேறு சாக்கு எடுத்தாயோ ?" என்று சகுனி ஏளனம் செய்ய ஆரம்பித்தான்.

“சரி. ஆடுகிறேன்” என்றான் யுதிஷ்டிரன்.

மண்டபம் நிறையக் கூட்டம். சபையில் துரோண ரும், கிருபரும், பீஷ்மரும், விதுரனும், திருதராஷ்டிரனும் இருந்தார்கள். கலகத்துக்குக் காரணமான சூதாட்டம் நடைபெறுகிறது என்று தெரிந்திருந்தும் தடுக்க முடியாமல் அதிருப்தியோடு உட்கார்ந்திருந்தார்கள். மண்ட பத்தில் கூடியிருந்த ராஜ குமாரர்கள் மிக்க உற்சாகத் தோடு ஆட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

முதலில் ரத்தினங்கள் பந்தயம் வைக்கப்பட்டன. பிறகு பொன்னும் பொக்கிஷங்களும் வைக்கப்பட்டன. பிறகு தேர்களும் குதிரைகளும் வைக்கப்பட்டன. இவற்றை இழந்தபின் யுதிஷ்டிரன் தன் வேலைக்காரர் களைப் பந்தயம் வைத்து இழந்தான். பிறகு தனக்குள்ள யானைகளையும் சேனைகளையும் பந்தயமாக வைத்து அவற் றையும் இழந்தான். சகுனியின் பாய்ச்சிகை ஒவ்வொரு வீச்சிலும் அவன் சொன்னபடி நடந்துகொண்டது.

பசுக்கள், ஆடுகள், நகரங்கள், தேசங்கள், பிரஜை கள் எல்லாவற்றையும் யுதிஷ்டிரன் இழந்தான். ஆட்டத் தை நிறுத்தவில்லை. தம்பிகளின் உடல்மேலிருந்த ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் இழந்தான்.

“வேறு ஏதாவது உண்டா?” என்றான் சகுனி.

“இதோ அழகிய சியாமள நிறங்கொண்ட நகுலன் இருக்கிறான். இவனும் எனக்கு ஒரு பொருள் ஆவான். அவனைப் பந்தயம் வைக்கிறேன்” என்றான் யுதிஷ்டிரன்.

“அப்படியா? இதோ, உன் பிரியமான ராஜகுமாரன் எங்கள் வசமானான்” என்று சொல்லிப் பாய்ச்சிகை வீசி னான். சொல்லியபடியே ஜயித்தான் சகுனி.

சபை திடுக்கிட்டது.

“இதோ, என் தம்பி சகதேவன். கல்விகளின் கரை யைக் கண்டு புகழ் பெற்றவன். இவனைப் பந்தயமாக வைப்பது தவறு. ஆயினும் வைக்கிறேன். ஆடுவா யாக!” என்றான் யுதிஷ்டிரன்.

"ஆடினேன், ஜயித்தேன்" என்று சொல்லிக் கொண்டே ஆடினான் சகுனி. தம்பி சகதேவனையும் இழந்தான் தருமபுத்திரன்.

ஒருவேளை இத்துடன் யுதிஷ்டிரன் ஆட்டத்தை நிறுத்திவிடுவானோ என்று அந்தத் துராத்மா சகுனி, "உன் மதிப்பில் பீமனும் அருச்சுனனும் மாத்ரீ புத்திரர்களைவிட விலை அதிகம் போலும்? அவர்களை வைத்து ஆடமாட்டாயல்லவா?" என்று குத்திச் சொன்னான்.

"மூடனே! எங்களைப் பிரித்துவிடப் பார்க்கிறாயா? அதர்மத்தில் வாழ்பவனாகிய உனக்கு எங்களுக்குள் இருக்கும் தருமநிலை எங்கே தெரியப் போகிறது?" என்று கூறி யுதிஷ்டிரன், "யுத்தத்தில் எங்களை கரை சேர்க்கும் நாவாயைப் போன்றவன், ஒப்பற்ற பராக்கிரமம் படைத்தவன், எப்போதும் வெற்றிக்கு ஸ்தானமானவன். இந்த அருச்சுனனையும் பந்தயமாக வைத்தேன். ஆடு?" என்றான்.

"இதோ ஆடுகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சகுனி ஆடினான். யுதிஷ்டிரன் அருச்சுனனையும் இழந்தான்.

வரைகடந்துபோன துரதிருஷ்டப் பிரவாகம் தருமபுத்திரனை வசமின்றிச் செய்து அவனை இழுத்துச் சென்றது. கண்களில் நீர் கலங்க "அரசனே! யுத்தத்தில் எங்களுக்குத் தலைவன் அசுரர்களுக்கு பயத்தைத் தரும வச்சிராயுதம் எடுத்த இந்திரனைப் போன்றவன். அவமதிப்பை ஒருபோதும் பொறாதவன், உலகத்தில் இவனுக்குச் சமமான தேகவன்மை படைத்தவன் எவனுமில்லை. இந்த பீமனை பந்தயமாக வைக்கிறேன்" என்று சொல்லி வாயுபுத்திரனையும் பந்தயமாக வைத்து ஆடினான். மறுபடியும் யுதிஷ்டிரன் தோற்றான்.

"இன்னும் ஏதாவது பொருள் உண்டோ?" என்றான் துராத்மா சகுனி.

"ஆம், இருக்கிறது. இதோ. நீ ஜயித்தாயானால் நானும் உனக்கு அடிமையாக இருப்பேன்" என்றான் தருமபுத்திரன்.

"இதோ, ஜயித்தேன்!" என்று சகுனி சொல்லிக் கொண்டே ஆடி ஜயித்தும் விட்டான். அதன் பிறகு சகுனி சபையில் நின்று, பாண்டு புத்திரர்கள் ஐவரையும் ஒவ்வொருவனுகப் பெயரைச் சொல்லித் தனக்கு நியாயப் படி அடிமையானுன் என்று சபையோருக்கு வெகு ஆர வாரத்துடன் பிரகடனம் செய்தான்.

அவ்வாறு சபையோரைக் கலங்கச் செய்த பின், சகுனி யுதிஷ்டிரனைப் பார்த்து, "உன்னிடம் இழக்காத பொருள் ஒன்று இன்னும் இருக்கிறது. அதைப் பந்தயம் வைத்து மறுபடியும் உன்னை நீ மீட்டுக் கொள்ளலாம். மனைவி பாஞ்சாலியைப் பணயமாக வைத்து ஏன் ஆடலா காது?" என்றுன்.

"அவளையும் வைத்தேன்" என்று யுதிஷ்டிரன் சொல்லி விட்டான். சொல்லி விட்டுத் தன்னையும் அறி யாமல் கதறினுன்.

சபையில் விருத்தர்கள் இருந்த பக்கத்தில் சப்தம் கிளம்பிற்று. அதன்மேல் "சீ! சீ!" என்று எல்லாப் பக்கத்திலும் பெரும் கலக்கம் உண்டாயிற்று. சிலர் கண்ணீர் விட்டார்கள். சிலருடைய உடல் வேர்வை கொட்டிற்று.

துரியோதனனும் தம்பிகளும் கர்ணனும் சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். திருதராஷ்டிரன மகன் யுயுத்ஸு என்பவன் மட்டும் துக்கம் தாங்காமல் தலைகுனிந்து பெரு மூச்சு விட்டான். சகுனியும் தாய்களை வீசி, "ஜயித்தேன், பாருங்கள்!" என்றுன்.

உடனே துரியோதனன் விதுரனைப் பார்த்து, "போய் பாண்டவர்களுக்குப் பிரியமான திரௌபதியை அழைத்து வாரும். எங்கள் வீட்டை குப்பை கூட்டிச் சுத்தப்படுத்த வேண்டும். சீக்கிரம் வரட்டும்" என்றுன்.

"மூடனே! யமன் வீட்டுக்குப் போகாதே. கயிற்றி ஞல் கட்டப்பட்டுப் படுகுழியில் தொங்குகிருய். அது தெரியாமல் மூடனைப்போலவே பேசுகிருய். உன பதவிக் குத் தகாத பேச்சுகள் உன் வாயிலிருந்து வெளியாயின"

என்று விதுரன் துரியோதனனைக் கண்டித்து விட்டுச் சபையோரைப் பார்த்து, "தர்மபுத்திரன் தன்னுடைய சுதந்திரத்தை இழந்தபின் பாஞ்சாலியைப் பந்தயம் வைக்க அவனுக்கு உரிமை இல்லை. கௌரவர்களின் முடிவு நெருங்கி விட்டது. நண்பர்களுடைய சொற்களை மதிக்காமல் திருதராஷ்டிர புத்திரர்கள் நரகத்துக்கு வழி தேடிக் கொள்ளுகிறார்கள்'' என்றான்.

* * *

துரியோதனன் விதுரன் சொன்னதைக் கேட்டுச் சினங் கொண்டு தன் தேரோட்டி பிரதிகாமியை அழைத்து "இந்த விதுரர் எங்களிடம் அசூயை கொண்டவர். பாண்டவர்களைக் கண்டு பயந்தவர். உனக்கு அவ்வாறான பயமில்லையே? நீ போய்த் திரௌபதியை உடனே கூட்டிவா!'' என்றான்.

# துரௌபதியின் துயரம்

எஜமானன் கட்டளைப்படி பிரதிகாமி திரௌபதி யிடம் சென்றான்.

"அம்மணி, துருபதபுத்திரியே! யுதிஷ்டிரர் சூதாட்டம் என்னும் மயக்கத்தில் விழுந்து சிக்கிக்கொண்டு உன்னைத் துரியோதனனுக்கு இழந்துவிட்டார். திருதராஷ்டிரன் வீட்டில் வேலை செய்வதற்காக உன்னை அழைத்துப் போக வந்திருக்கிறேன். இது அவர்களுடைய கட்டளை" என்றான்.

ராஜசூய யாகம் செய்து ராஜாதி ராஜனுக பட்டாபி ஷேகம் பெற்றவனுடைய மகிஷியான திரௌபதி இந்த விசித்திரமான பேச்சைக் கேட்டு திகைத்துப் போனாள். "பிரதிகாமி, என்ன சொல் சொன்னாய்? எந்த ராஜ புத்திரன் தன் மனைவியை ஆட்டத்தில் பந்தயம் வைப் பான்? பந்தயம் வைக்க வேறு ஒரு பொருளும் இல்லையா?" என்றாள்.

"ஆமாம், தாயே! வேறு பொருள் இல்லாதபடியால் தான் உன்னை வைத்து ஆடினார்" என்று யுதிஷ்டிரன் பொருளெல்லாம் இழந்ததும், தம்பிகளை இழந்ததும் பிறகு தன்னையும் மனைவியையும் பந்தயமாக வைத்ததும், நடந் ததை முழுதும் சொன்னான்.

பிரதிகாமி சொன்ன விருத்தாந்தம் இதயத்தை உடைத்து உயிரைக் கொல்லும் தன்மையதா யிருந்த போதிலும் க்ஷத்திரிய ஸ்திரீயானபடியால் விரைவில் உள்ளத்தில் தைரியம் செய்து கொண்டாள். கண்களில் கோபாக்கினி ஜொலித்தவளாக "ஓ! தேரோட்டியே! திரும்பிப்போ. போய்ச் சூதாடினவரைக் கேள். நீர் முதலில் உம்மைத் தோற்றீரா அல்லது மனைவியை தோற்றீரா என்று கேள். சபையோர் முன்னிலையில். இந்தக் கேள்வி கேட்டு விடை பெற்றுக்கொண்டு பிறகு என்னை அழைத்துப் போகலாம்" என்றாள்.

x x x

பிரதிகாமி அவ்வாறே போய்ச் சபையின் முன் தர்ம புத்திரனைப் பார்த்து திரௌபதி சொன்னபடி கேட்டான்.

யுதிஷ்டிரர் உயிரிழந்த பிணம்போல் மறு மொழி சொல்லாமல் நின்றார்.

அதன்மேல் துரியோதனன் பிரதிகாமியைப் பார்த்து, "பாஞ்சாலியே இவ்விடம் வந்து தன்னுடைய புருஷனை இந்தக் கேள்வி கேட்கட்டும். போய் திரௌபதியை அழைத்துவா!" என்றான்.

பிரதிகாமி மறுபடியும் திரௌபதியிடம் சென்று, "அரச குமாரியே! அற்பனான துரியோதனன் உன்னைச் சபைக்கு வரச் சொல்லுகிறான். நீயே நேரில் வந்து கேள்வி கேட்கலாம என்று கட்டளை யிடுகிறான்" என்று வணக்கத்துடன் சொன்னான்.

திரௌபதி மறுபடியும், "இல்லை, நீ திரும்பப் போய்ச் சபையோரையே நான் கேட்ட கேள்வியைக் கேள். என் பிரச்னைக்கு அவர்களாவது பதில் சொல்லட்டும்" என்றாள்.

பிரதிகாமி போய்த் திரௌபதி சொன்னதைச் சபையோருக்குத் தெரியப்படுத்தினான்.

துரியோதனன் கோபம் கொண்டு தம்பி துச்சாதனனைப் பார்த்து, "இந்தத் தேரோட்டி பெரும் மடையன், பீமனைக் கண்டு பயப்படுகிறான். நீ போய் அவளை இழுத்து வா!" என்று உத்தரவிட்டான்.

இதைக் கேட்டதும் துராத்மாவான துச்சாதனன் மகிழ்ச்சியடைந்து துரிதமாகவே சென்றான். திரௌபதி இருக்குமிடம் சென்று, "வா, வா! வீணில் தாமதம் செய்ய வேண்டாம்! நீ ஜயிக்கப்பட்டாய். வெட்கம ஏன்? அழகியே! கௌரவர்களைச் சேர், தருமமாக அடையப்பட்டிருக்கிறாய். சபைக்கு வா!" என்று துராத்மாவான துச்சாதனன சொன்னான். சொன்னதோடு அவளைப் பிடித்து இழுக்கப் போனான்.

பாஞ்சாலி எழுந்து துயரம் தாங்க முடியாமற் கதறிக் கொண்டு திருதராஷ்டிரனுடைய அந்தப்புரத்திற்குள்

ஓடினாள். துச்சாதனன் அவளைத் துரத்திக்கொண்டு போய் அவள் தலைமயிரைப் பிடித்திழுத்து அலங்கோலம் செய்து சபைக்கு அவளைப் பலாத்காரமாக இழுத்துக் கொண்டு வந்தான்.

கதை எழுதும்போதே மனம் திடுக்கிடுகிறது. மகா பாபமான செயலில் ராக்ஷஸத் துணிச்சலுடன் திருதராஷ்டிர குமாரர்கள் இறங்கிவிட்டார்கள்.

x x x

சபையைச் சேர்ந்ததும் திரௌபதி தன் கோபத்தை அடக்கிக் கொண்டு கூடியிருந்த விருத்தர்களைப் பார்த்து, கம்பீரமாகப் பேச ஆரம்பித்தாள். "சூதில் கை தேர்ந்தவர்களும அயோக்கியர்களும் ஒன்று சேர்ந்து மோசமாகச் சூழ்ச்சி செய்து அரசனை ஏமாற்றி என்னைப் பந்தயமாக வைக்கச் செய்ததை எவ்வாறு நீங்கள் ஒப்புக் கொண்டீர்கள்? சுதந்திரம் இழந்த ஒருவன் எப்படித் தன் மனைவியைப் பந்தயம் வைத்து இழக்க முடியும்? மனைவிகள் பெண்கள், மருமகளிர் படைத்த கௌரவ குலத்தோர் பலர் சபையில் இருக்கிறீர்கள். என் கேள்விக்குச் சமாதானம் சொல்லுங்கள்" என்றாள்.

இவ்வாறு பாஞ்சாலி ஒரு அநாதைப் பெண்போல் சங்கடப்படுவதைப் பார்த்துக் கொண்டிருந்த பீமனுக்குப் பொறுக்க முடியவில்லை. "யுதிஷ்டிரரே! சூதாட்டமே தொழிலாக வைத்திருக்கும் நீசரும் தங்களோடு வாழும் தாசிகளைக் கூடப் பந்தயம் வைக்க மாட்டார்கள். துருபத புத்திரியை இந்த அற்பர்கள் துன்பப்படுத்த நீர் விட்டீர். இந்த அக்கிரமத்தை நான் பொறுக்க முடியாது. இந்த மகா பாவத்திற்கு நீர் காரணமாவீர். ஹே! தம்பி சகதேவா! நெருப்பு எடுத்து வா. எந்தக் கைகளைக் கொண்டு இந்தச் சூதாட்டம் இவர் ஆடினாரோ, அந்தக் கைகளை நான் நெருப்பு வைத்துக் கொளுத்தப் போகிறேன்" என்று கர்ஜித்தான்.

அருச்சுனன் பீமனைத் தடுத்தான். "அப்பனே! இதற்கு முன் எப்போதும் நீ இவ்வாறு பேசினது கிடையாது. நம்முடைய சத்துருக்களால் செய்யப்பட்ட இந்தச்

சூழ்ச்சி நம்மைக்கூட பாவம் செய்யத் தூண்டுகிறது. நாம் அந்த வலையில் விழக் கூடாது. பகைவர்களின் எண்ணம் நிறைவேறிப் போகும், ஜாக்கிரதை!" என்று மெதுவாகச் சொன்னான்.

பீமன் கோபத்தை அடக்கிக் கொண்டான்.

**பா**ஞ்சாலியின் பரிதாபத்தைப் பார்த்து அதைச் சகிக்க முடியாதவனாக திருதராஷ்டிர புத்திரன் விகர்ணன் என்பவன் எழுந்தான். "க்ஷத்திரிய வீரர்களே! நீங்கள் என்ன காரணத்தினால் பேசாமலிருக்கிறீர்கள்? நான் சிறியவன. நான் நீங்கள் மௌனம் சாதிப்பதால் என் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன். கேளுங்கள். மோசமாக அழைக்கப்பட்டுச் சூதாட்டத்தில் சிக்கிவிட்ட யுதிஷ்டிரன் இவளைப் பந்தயம் வைத்தான். அது செல்லாது. தவிர, இவள் யுதிஷ்டிரன் ஒருவனுக்கு மட்டும் சொந்தமல்ல. அதனாலும் பந்தயம் செல்லாது. மேலும் அவன் தன் சுதந்திரத்தை முதலில் இழந்துவிட்டான். தன்னைத் தான் தோற்றபின் இவளை வைத்து ஆட அவனுக்கு உரிமை ஏது? மற்றும் ஒரு ஆட்சேபணை உண்டு. சகுனியே முதலில் இவள் பெயரைச் சொன்னான். இது க்ஷத்திரியர்கள் ஆடும் முறைக்கு முரண்பட்டது. குறிப்பிட்ட பொருளைப் பந்தயம் வைக்கச் சொல்லி எதிராளி சொல்லக் கூடாது. இவற்றையெல்லாம் யோசித்தால் பாஞ்சாலி நியாயமாக ஜெயிக்கப்படவில்லை. இது என் அபிப்பிராயம்" என்று சொன்னான்.

இவ்வாறு சிறுவனாகிய விகர்ணன் தைரியமாகப் பேசினதும், சபையோருக்குக் கடவுள் கொடுத்த அறிவு திடீரென்று சிறையினின்று விடுபட்டது. பெரிய ஆரவாரம் கிளம்பிற்று. அனைவரும் ஒரே முகமாய் விகர்ணனைப் புகழ்ந்தார்கள். "தருமம் பிழைத்தது தருமம் பிழைத்தது" என்றார்கள்.

அந்தச் சமயத்தில் கர்ணன் எழுந்து,

"விகர்ணா! சபையில் பெரியவர்கள் இருக்கச் சிறு பையனான நீ எழுந்து யுக்தி வாதம் செய்கிறாய். நெருப்

யைக் கடைந்த அரணிக் கட்டையை அந்த நெருப்பே பற்றி அழிப்பதுபோல், நீ அறியாமையால் அவசரப்பட்டு, பிறந்த வீட்டுக்கே துரோகம் செய்கிறாய். தனக்குள்ள எல்லாப் பொருளையும் யுதிஷ்டிரன் முதலிலேயே பந்தயம் வைத்து இழந்தான். ஆகையால் இவளை முந்தியே சகுனிக்கு இழந்து விட்டான். இதைப்பற்றி வேறு என்ன கேள்வி? பொருட்களை யெல்லாம் இழந்தபின் இவர்கள் மேலுள்ள வஸ்திரங்களும் இப்போது சகுனியுடையதே. பாண்டவர்களுடைய வஸ்திரங்களையும் அவர்களுடைய மனைவியான இவளுடைய துணியையும் பறித்து உடனே சகுனிக்குத் தருவாய் துச்சாதனா!'' என்றான்.

பாண்டவர்கள், கர்ணன் சொன்ன குரூரப் பேச்சைக் கேட்டதும், தருமத்தின் பரீட்சை கடைசி வரையில் நடைபெற வேண்டியது போலிருக்கிறது, எதற்கும் தயார் என்று பேச்சின்றி உடனே தங்கள் அங்கவஸ்திரங்களை எடுத்துச் சபையில் வீசி எறிந்தார்கள்.

இதைக் கண்ட துச்சாதனன் திரௌபதியிடம் சென்று, அவள் ஆடையையும் பிடித்திழுக்க ஆரம்பித்தான். இனி பகவான் ஒருவனே துணை என்று பாஞ்சாலி, "லோகநாதா! ஈசனே; இந்த நிலையை அடைந்த என்னை நீயும் கைவிட்டு விடாதே! உன்னைச் சரணமடைகிறேன். காப்பாற்று!'' என்று அச்சுதன் பேரைச் சொல்லிப் பெரும் கூச்சல் போட்டு மூர்ச்சையானாள்.

x x x

அப்போது ஒரு பெரிய ஆச்சரியம் நடந்தது. துச்சாதனன் இழுக்க இழுக்க, திரௌபதியின் வஸ்திரங்கள் புதிது புதிதாக உண்டாகிக் கொண்டு வந்தன. பெருங் குவியலாகத் திவ்விய ஆடைகள் சபையில் குவிந்தன.

துச்சாதனன் களைத்துப் போய்த் தரையில் உட்கார்ந்தான். ஆச்சரிய நிகழ்ச்சியைக் கண்டு சபை பயந்து நடுங்கிற்று.

கோபத்தினால் உதடுகள் துடிக்கப் பீமன் எழுந்து பேரொலியுடன் பயங்கரமான ஒரு பிரதிஜ்ஞை செய்தான்.

"பரத வம்சத்திற்குத் தகாத இந்தப் பாவி துச்சாதனனுடைய மார்பைக் கிழித்து இவன் ரத்தத்தை நான் உறிஞ்சிக் குடித்துவிட்டுத்தான் என் முன்னோர்கள் இருக்கும் உலகத்திற்குப் போவேன்! இது சத்தியம்!" என்று பீமசேனன் கோர சபதம் செய்தான்.

திடீரென்று நரிகள் ஊளையிட்டன. நாலா பக்கங்களிலிருந்து கழுதைகளும் பிணம் தின்னும் பறவைகளும் விகாரமாகக் கத்தின.

x x x

நடந்த சம்பவம் குலநாசத்துக்குக் காரணமாகும், தீராத துவேஷம் உண்டாகிவிட்டது. தன் புத்திரர்களுக்குப் பெரிய அபாயம் நேர்ந்துவிட்டது என்பதை அறிந்து கொண்ட திருதராஷ்டிரன், திரௌபதியை அழைத்து, "பாஞ்சாலி, என் பிரிய மருமகளே! உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று சொல்லி, தன் புத்திரர்கள் மேல் கோபமும் வெறுப்பும் கொண்ட திரௌபதியைச் சமாதானப்படுத்தப் பார்த்தான். யுதிஷ்டிரனைக் கூப்பிட்டு, "அஜாத சத்ருவே! நீ க்ஷேமமாக இருப்பாய். துரியோதனன் செய்த தீமையை மனதில் வைக்கவேண்டாம். உன் தாயான காந்தாரியையும் கண்ணில்லாத என்னையும் மதித்து மற்றவர்கள் செய்த குற்றங்களைப் பொறுப்பாய். நாடு நகரம் பொருள் எல்லாவற்றையும் மறுபடி பெற்றுச் சுதந்திரமாக இருங்கள். இந்திரப்பிரஸ்தம் போங்கள்" என்றான்.

x x x

இவ்வாறு திருதராஷ்டிரனின் வரம் பெற்றாலும் யுதிஷ்டிரனுக்கும் சகோதரர்களுக்கும் மனதில் சமாதானம் உண்டாகவில்லை. ஆட்டத்தில் இழந்ததைத் திரும்பப் பெறுவதில் ஏதோ குற்றம் இருப்பதாகவே எண்ணினார்கள். கஷ்டங்களும் அனர்த்தங்களும் நெருங்கும் காலத்தில் புத்தி தடுமாறுவது இயல்பு. பூபாரம் தொலைவதற்காகக் கலியினால் பிரவேசிக்கப் பட்டவனாய்ச் சபையோர் எல்லாரும் தடுத்தும், தருமபுத்திரன் மறுபடியும் சகுனியுடன் ஆட்டத்திற்கு உட்கார்ந்தான். தோற்றவன் தன்

சகோதரர்களுடன் பன்னிரண்டு வருஷம் வனவாசம் செய்து பதின்மூன்றும் வருஷம் உறவினரால் அறியப் படாமல் அஞ்ஞாத வாசம் செய்வது; அறியுப்பட்டால் திரும்பவும் பன்னிரண்டு வருஷம் வனவாசம் செய்வது என்கிற நிபந்தனைப்படி மறுபடியும் பாய்ச்சிகை உருட்டி யுதிஷ்டிரன் தோல்வி யடைந்தான்.

உடனே பாண்டவர்கள் வனவாச தீட்சை எடுத்துக் கொண்டு சபையோரிடம் விடை பெற்றுக் காடு சென்றார் கள். சபையிலிருந்த அனைவரும் வெட்கத்தினால் தலை குனிந்தார்கள்.

# திருதராஷ்டிரன் கவலை

**பா**ண்டவர்கள் வனம் செல்லப் புறப்பட்டார்கள். நகர வீதிகளில் ஜனக் கூட்டத்தின் நெருக்கடி நடக்க இடமில்லாமலிருந்தது. மாளிகைகளிலும் தேவாலயங்களின் கோபுரங்கள் மேலும் மரங்கள் மேலும் ஜனங்கள் ஏறி உட்கார்ந்து பார்த்தார்கள். ஸ்திரீகள் உப்பரிகைகளிலும் பலகணிகள் வழியாகவும் பார்த்துக் கொண்டிருந்தனர், குடையுடனும் வாத்தியத்துடனும் பவனி செல்ல வேண்டிய தருமபுத்திரன் மரவுரியும் தோலும் உடுத்து கால் நடையாக வனம் செல்லுகின்றதைப் பார்த்து நகரத்து ஜனங்கள் எல்லாரும் "ஆ! ஆ!" "ஓ! ஓ!" என்று சொல்லிக் கண்ணீர் சொரிந்தனர்.

திருதராஷ்டிரன் விதுரனுக்குச் சொல்லி யனுப்பினான். "விதுரா! பாண்டு புத்திரர்களும் திரௌபதியும் எப்படிச் செல்கின்றனர்? கண்ணால் பார்த்துத் தெரிந்து கொள்ள இயலாதவனுக்கு நீ சொல்ல வேண்டும்" என்று கேட்டான்.

"குந்தி புத்திரனான யுதிஷ்டிரன் துணியினால் முகத்தை மூடிக்கொண்டு போகிறான். பீமன் தன் கைகளிரண்டையும் பார்த்துக்கொண்டு போகிறான். அருச்சுனன் மணலை எடுத்துத் தூவிக்கொண்டு போகிறான். நகுல சகாதேவர்கள் உடலெல்லாம் புழுதி பூசிக்கொண்டு தருமபுத்திரன் பின் போகின்றனர். திரௌபதியும் விரிந்த கூந்தலினால் முகம் முழுதும் மூடியவளாகக் கண்ணீர் சொரிந்துகொண்டு தரும புத்திரன் பின் செல்லுகிறாள். புரோகிதர் தௌம்மியர் யமனைப் பற்றிய ஸாம கீதங்களை ஸ்வரத்துடன் பாடிக்கொண்டு கூடச் செல்லுகிறார்" என்றான் விதுரன்.

இதைக் கேட்ட திருதராஷ்டிரனுக்கு முன்னைவிட அதிகமான பயமும் கவலையும் உண்டாயின. "நகரத்திலுள்ள ஜனங்கள் என்ன சொல்லுகிறார்கள்?" என்று மறுபடியும் கேட்டான்.

"மகாராஜாவே! எல்லா வருணத்தாரும் சொல்லும் சொற்களைச் சொல்லுகிறேன், கேளும்! 'நம்முடைய நாயகர்கள் ஊரைவிட்டுப் போகின்றனரே! குரு வம்சத்துப் பெரியோர்களெல்லாம் அறிவடையாத பாலர்களைப் போல் நடந்து கொண்டார்களே! சீ! சீ! இதுவென்ன துராசை? பாண்டு புத்திரர்களைத் திருதராஷ்டிரன் காட்டுக்கு அனுப்பினான்" என்று நகரத்து ஜனங்கள் எல்லாரும் நம்மை ஏசுகிறார்கள். ஆகாயத்தில் மேகமில்லாமலே மின்னல்கள் உண்டாயின. பூமியும் நடுங்கிற்று. இதைப் போன்ற வேறு கெட்ட உற்பாதங்களும் தோன்றின" என்றான்.

இவ்வாறு திருதராஷ்டிரனும் விதுரனும் பேசிக் கொண்டிருந்தபொழுது நாரதர் திடீரென்று பிரசன்னமானார். "இன்றைக்குப் பதினான்காவது வருஷத்தில் துரியோதனன் செய்த பிழையினால் கௌரவர்கள் அழியப் போகின்றனர்" என்று திருதராஷ்டிரனுக்குச் சொல்லிவிட்டுத் தேவரிஷி மறைந்தார்.

துரியோதனனும் அவன் சகாக்களும் பயமடைந்து துரோணரிடம் சென்றார்கள்.

"ஆசாரியரே! ராஜ்யமெல்லாம் உமது! நீரே தஞ்சம். எங்களைக் கைவிடலாகாது" என்று அவரைக் கெஞ்சினார்கள்.

இதைக்கேட்ட துரோணர், "பாண்டவர்கள் தேவர்களின் அம்சம். அவர்களை யாரும் வெல்ல முடியாது. இது அறிவுடையோரின் அபிப்பிராயம். இதை நான் அறிந்திருந்தாலும் என்னைச் சரணடைந்த திருதராஷ்டிர புத்திரர்களை நான் விட்டுவிட முடியாது. அவர்களுக்கு என்னால் கூடிய அளவு முழுமனத்தோடும் அன்போடும் உதவி செய்வேன். ஆயினும் விதியானது மிக்க வலிமையுடையது. பாண்டவர்கள் வனவாசம் முடிந்து கோபத்தோடு திரும்பி வருவார்கள். துருபதன்மேல் எனக்கு உண்டான கோபத்திற்காக நான அவனை ராஜ்யத்திலிருந்து தள்ளி அவமானப் படுத்தினேன். என்னைக் கொல்லுவதற்காகவே ஒரு புத்திரனை வேண்டி யாகம்

செய்து துருபதன் திருஷ்டத்யும்னனைப் பெற்றிருக்கிறான். அவன் பாண்டவர்களுக்கு நெருங்கிய பந்துவும் சிநேகிதனும் ஆய்விட்டான். என்னைக் கொல்லுவதற்காகவே அவனுக்கும் பாண்டவர்களுக்கும் சிநேகமும் சம்பந்தமும் விதிவசமாக ஏற்பட்டிருப்பதாக உலகத்தார் எல்லாரும் பேசி வருகிறார்கள். நீங்கள் செய்து வந்த காரியங்களெல்லாம் அந்தப் பேச்சை உண்மையாக்குவதாகத்தான் இருக்கிறது. உங்களுடைய நாள் கிட்டி வருகிறது. காலதாமதம் செய்யாமல் உங்களுடைய நன்மையைச் செய்து கொள்ளுங்கள். பெரிய யாகங்களைச் செய்யுங்கள். சுகங்களை அனுபவித்து விடுங்கள். தானங்களைக் கொடுங்கள். பதினான்காவது வருஷத்தில் ஆபத்து வரப்போகிறது. துரியோதனா! தரும புத்திரனோடு சமாதானம் செய்து கொள். நான் சொல்வதைச் சொன்னேன். பிறகு உன் இஷ்டம்'' என்றார்.

துரியோதனனுக்குத் துரோணர் சொன்னது கொஞ்சமும் பிடிக்கவில்லை.

x x x

''பூபதியே! ஏன் துயரப்படுகிறீர்?'' என்று திருதராஷ்டிரனைச் சஞ்சயன் கேட்டான்.

''பாண்டவர்களைப் பகை செய்து கொண்ட பிறகு துயரமின்மை ஏது?'' என்றான் கண்ணில்லாத அரசன்.

சஞ்சயன், ''நீர் சொல்லுவது உண்மையே. கெட்டுப் போகவேண்டியவனுடைய மதி அழிந்து போகிறது. நல்லவையெல்லாம் தீயவை போலும் தீயவை எல்லாம் நல்லவை போலும் அவனுக்குத் தோன்றும். காலமானது தானே நேராக ஒரு தடியை எடுத்து மனிதன் தலையை உடைப்பதில்லை. காரியா காரியங்களை மாறாக அவனையே செய்யச் செய்து மனிதனை பள்ளத்தில் தள்ளுகிறது. உம்முடைய பிள்ளைகள் பாஞ்சாலியை அவமானப் படுத்தினார்கள். தங்கள் நாசத்தைத் தாங்களே தேடிக்கொண்டார்கள்'' என்றான் சஞ்சயன்.

"அறிவாளியான விதுரன் தருமத்துக்கும் ராஜநீதிக்கும் ஒத்த சொல்லைச் சொன்னான். நான் அதைக் கேட்கவில்லை. மூட மகனுடைய விருப்பத்தை அனுசரித்தேன் நாம் ஏமாந்தோம்" என்றான் திருதராஷ்டிரன்.

x x x

அடிக்கொருதரம் விதுரன் திருதராஷ்டிரனை வற்புறுத்துவான். "உம்முடைய மகன் பெரும் பாவம் செய்தான். தருமபுத்திரன் வஞ்சிக்கப்பட்டான். உம்முடைய குமாரர்களைக் கெட்ட வழியிலிருந்து திருப்புவது உம்முடைய கடமையல்லவா? உம்மால் கொடுக்கப்பட்ட ராஜ்யத்தை பாண்டு புத்திரர்கள் மறுபடியும் அடைந்து அனுபவிக்க நீர் ஏற்பாடு செய்ய வேண்டும். யுதிஷ்டிரனை வனத்திலிருந்து திரும்பி வரச் செய்து சமாதானம் செய்யும். துரியோதனன் உம்முடைய ஆலோசனையைக் கேட்காவிட்டால் அவனை அடக்க வேண்டும்" என்று விதுரன் பலதடவை திருதராஷ்டிரனுக்குச் சொன்னான்.

முதலில் இவ்வாறு சொல்லும்போது திருதராஷ்டிரன் சும்மா கேட்டுக் கொண்டிருப்பான். விதுரனுடைய அறிவு மேலானது என்று திருதராஷ்டிரனுக்கு அவனிடத்தில் பூரண மதிப்பு.

ஆனால் வரவரப் பொறுமையை இழந்தான்.

ஒரு நாள், "விதுரனே! நீ எப்போதும் பாண்டவர்களைப் பற்றிச் சாதகமாகவும், என் மக்களைப்பற்றி விரோதமாகவுமே பேசுகிறாய். நீ எனக்குச் சத்துரு வென்றே தோன்றுகிறது. எங்கள் நன்மையை நீ விரும்பவில்லை. துரியோதனன் என் தேகத்திலிருந்து உண்டானவன். அவனை நான் எவ்வாறு விட்டுவிட முடியும்? நியாயமில்லாமலும் இயற்கைக்கு விரோதமாகவும் யோசனை சொல்லுவதில் என்ன பயன்? இனி நான் உன்னை நம்ப முடியாது. நீ எனக்கு இனிமேல் வேண்டியதில்லை. உனக்கு இஷ்டமானால் பாண்டவர்கள் இருக்குமிடம் நீயும் போகலாம்" என்று கோபமாகச் சொல்லி

விட்டு விதுரனுடைய மறுமொழிக்குக்கூடக் காத்திராமல் திருதராஷ்டிரன் எழுந்து அந்தப்புரம் போய்விட்டான்.

இவ்வாறு சொல்லப்பட்ட விதுரன் "இனி இந்தக் குலம் நாசமே" என்று தீர்மானித்துக்கொண்டு வேகமான குதிரைகள் பூட்டிய ரதத்தில் ஏறிப் பாண்டவர்கள் இருந்த வனத்திற்குச் சென்றான்.

x x x

விதுரன் நகரத்தை விட்டுப்போனதும் திருதராஷ்டிரன் மறுபடி கவலை அடைந்தான். "என்ன செய்தேன்! பாண்டவர்களுடைய பலத்தை இன்னும் அதிகரித்து விடும்படியான வழியைத் தேடினேனே! விதுரனைத் துரத்தியது பெருந்தவறு" என்று நினைத்துச் சஞ்சயனைக் கூப்பிட்டு, "சஞ்சயனே நான் என் பிரிய சகோதரன் விதுரனைத் தகாத சொல் சொல்லிவிட்டேன். அவன் கோபங்கொண்டு வனம் சென்று விட்டான், நீ உடனே போய் விதுரனைக் கண்டு எப்படியாவது சமாதானம் சொல்லி அழைத்துவா!" என்றான்.

சஞ்சயன் விரைவாகச் சென்று வனத்தில் பாண்டவர்கள் இருந்த ஆசிரமத்தை அடைந்தான். பாண்டவர்கள் மான தோல் உடுத்தி, ரிஷிகளுடன் இருந்ததைப் பார்த்தான். அவ்விடம் விதுரன் இருப்பதையும் கண்டான். திருதராஷ்டிரன் தான் விதுரனுக்குச் செய்த குற்றத்திற்குப் பச்சாதாபப்படுவதைத் தெரிவித்தான்.

"நீர் திரும்பாமற் போனால் திருதராஷ்டிரன் உயிர் நீப்பான். சீக்கிரம் பாண்டவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு அரசன் சபையைச் சேருவீராக" என்று வணக்கமாகச் சஞ்சயன் விதுரனிடம் சொன்னான்.

இந்தச் செய்தியைக் கேட்டதும் தருமமே உருவான விதுரன், யுதிஷ்டிரனிடம் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டு ஹஸ்தினாபுரம் திரும்பி அடைந்தான்.

திருதராஷ்டிரனும் விதுரனைக் கட்டித் தழுவிக் கொண்டு, "குற்றமற்றவனே! என்னால் அவசரத்தில்

சொல்லப்பட்ட பேச்சை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும்'' என்று அழுகுரலில் சொன்னான்.

x x x

ஒருநாள் மைத்ரேய ரிஷி திருதராஷ்டிரன் சபைக்கு வந்தார். அரசன் ரிஷியை வணங்கி வரவேற்றான்.

''பகவானே! வீரர்களும் எனக்குப் பிரிய மக்களுமான பாண்டவர்களைக் குருஜாங்குலத்தில் கண்டீரே, அவர்கள் சுகமா? வனத்திலேயே இருக்க விரும்புகிறார்களா? நம்முடைய குலத்தில் சிநேகம் குறைவடையாமல் இருக்குமா? ஆசீர்வதிக்க வேண்டும்'' என்று திருதராஷ்டிரன் முனிவரைக் கேட்டான்.

மைத்ரேயர், ''காம்யக வனத்தில் தற்செயலாகத் தருமபுத்திரரைப் பார்த்தேன். வனத்திலுள்ள ரிஷிகளும் அவரைப் பார்க்க வந்திருந்தார்கள். அப்போது ஹஸ்தினாபுரத்தில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் சொல்லக் கேட்டேன். அதனால் தான் நான் இவ்விடம் வந்தேன். நீரும் பீஷ்மரும் உயிருடன் இருக்கும்பொழுது இவ்வாறு நடந்தது யோக்கியமன்று'' என்றார்.

பிறகு, மைத்ரேயர் சபையிலிருந்த துரியோதனனைப் பார்த்து, ''ராஜகுமாரனே! உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன். பாண்டவர்களை மோசம் செய்யப் பார்க்க வேண்டாம். அவர்கள் சூரர்கள். கிருஷ்ணனுக்கும் துருபதனுக்கும் பந்துக்கள். அவர்களை விரோதம் செய்துகொள்ள வேண்டாம். சமாதானம் செய்துகொள்'' என்றார்.

இவ்வாறு ரிஷி சொன்ன போது, பிடிவாதக்காரனும் மூடனுமான துரியோதனன் தன் தொடையைக் கையால் தட்டிப் புன்னகை புரிந்து பூமியைக் காலால் கிறிக்கொண்டு ஒன்றும் சொல்லாமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக்கொண்டு நின்றான்.

மைத்ரேயர் கோபங்கொண்டு துரியோதனனைப் பார்த்து ''இந்த கர்வத்தின் பலனை நிச்சயமாக அடை

வாய். பீமனுடைய கதையால் உன் தொடை பிளக்கப் பட்டு யுத்தத்தில் மாள்வாய்" என்றார். திருதராஷ்டிரன் துள்ளி எழுந்து ரிஷியின் காலில் விழுந்தான். "சபிக்கா தீர்! பகவானே" என்றான்.

மைத்ரேயர், "அரசனே! உன் புத்திரன் சமாதானம் அடைந்தால் என் சாபத்தின் பயன் உண்டாகாது. இல்லாவிடில் உண்டாகும்" என்று சொல்லி எழுந்து சபையினின்று வெளியேறினார்.

மகாபாரதம் புராணக்கதை. தற்காலத்திலும் கூட பெரிய பதவியில் இருப்பவர்களையும் சாதாரண உலக வாழ்க்கையில் இருப்பவர்களையும் க்ஷாத்திர எண்ணங்கள் தூண்டும். அப்போது இந்த அத்தியாயத்தைப் படித்தால் அறிவு உண்டாகும். பெரும் பிழையினின்று தப்பலாம்.

# கிருஷ்ணன் பிரதிஜ்ஞை

சிசுபாலனைக் கிருஷ்ணன் கொன்றுவிட்டான் என்ற செய்தி அவனுடைய நண்பன் சால்வனுக்கு எட்டியதும் அவன் மிகுந்த கோபங்கொண்டு பெரும் படையைக் கூட்டிக்கொண்டு துவாரகைக்கு முற்றுகையிட்டான். அப்போது கிருஷ்ணன் இன்னும் நகரத்திற்குத் திரும்பவில்லை. கிருஷ்ணன் இல்லாத சமயத்தில் துவாரகையை உக்கிரசேனன் காவல் காத்தான். பாரதத்தில் முற்றுகையைப் பற்றி படிக்கும்போது தற்கால யுத்த நடவடிக்கைகள் போலவே எல்லாம் காணப்படுகிறது. துவாரகை என்பது ஒரு தீவில் கட்டப்பட்ட கோட்டை. அதில் சகலவிதக் காப்புகளும் நன்றாக நிர்மாணிக்கப்பட்டிருந்தன. பல்லாயிரக் கணக்கான போர் வீரர்கள் இருப்பதற்குத் தகுந்த இடங்களும் யந்திரங்களும் சுரங்க வழிகளும் அமைக்கப்பட்டிருந்தன. பலவித ஆயுதங்கள், கவண் கற்களை எறிகின்ற பொறிகள், வெடி மருந்து உள்பட எல்லாம் சேகரித்து வைக்கப்பட்டிருந்தன. புகழ்பெற்ற வீரர்களின் பெருங் கூட்டம் நகரத்திற்குள்ளிருந்தது. முற்றுகை இடப்பட்ட காலத்தில் நகரத்தில் யாரும் கள் குடிக்கக் கூடாது என்று உக்கிரசேனனுடைய கண்டிப்பான உத்தரவு முரசு அறைந்து பகிரங்கப்படுத்தப்பட்டது. நகரத்திலிருந்து நர்த்தனம் முதலிய வேடிக்கை ஆட்டக்காரர்களை யெல்லாம் அப்புறப்படுத்தி விட்டனர். ஜலத்தைத் தாண்டி வரும் எல்லாப் பாலங்களும் உடைத்து விடப்பட்டன. கப்பல்கள் தடுக்கப்பட்டன. அகழிகளில் ஜலத்துக்குள் இரும்புச் சூலங்கள் நடப்பட்டன. மதில்கள் எல்லாம் பழுது பார்க்கப்பட்டன. வழிகளெல்லாம் இரும்பு முள்ளங் கம்பிகள் நடப்பட்டு தடுக்கப்பட்டன.

இயற்கையாகவே பிரவேசிப்பதற்குக் கடினமாக இருந்த நகரத்துக்கு சால்வன் முற்றுகையிட்ட காலத்தில் இன்னும் அதிகக் கடினமான பந்தோபஸ்துகள் செய்யப்பட்டன. நகரத்திலிருந்து யாரும் முத்திரையிட்ட ராதா

ரிச் சீட்டின்றி வெளியே போகாமல் தடுக்கப்பட்டார்கள். அவ்வாறே நகரத்துக்குள் பிரவேசிப்பதற்கும் கடுமையான உத்தரவு. சேனைகளுக்கெல்லாம் சம்பளம் உயர்த்தப்பட்டது. கொடுக்க வேண்டிய ஊதியங்கள் எல்லாருக்கும் தாமதமின்றித் தாராளமாகத் தரப்பட்டது. சேனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட ஆட்கள் எல்லாரும் நன்றாகப் பரீக்ஷிக்கப் பட்டார்கள்.

கிருஷ்ணன் வந்து நகரத்தில் ஏற்பட்ட கஷ்டங்களைப் பார்த்து மகா கோபங்கொண்டு சால்வன் மேல் படை எடுத்துச் சென்று ஜயித்தான். பிறகு ஹஸ்தினாபுரத்தில் நடந்த செய்திகளும் பாண்டவர்கள் காட்டுக்குத் துரத்தப் பட்டதும் தெரிந்தது. உடனே கிருஷ்ணன் பாண்டவர்கள் தங்கி யிருந்த வனத்துக்குச் சென்றான்.

x x x

பாண்டவர்களிடம் மிக்க அன்பு வைத்திருந்த போஜ குலத்தவர்களும் விருஷ்ணி குலத்தவர்களும், சேதி தேசத்து ராஜா திருஷ்டகேதுவும், கேகயர்களும் மற்றும் பலரும் கிருஷ்ணனுடன் கூட்டமாக பாண்டவர்கள் இருந்த வனத்துக்குச் சென்றார்கள்.

துரியோதனாதியர் செய்ததைக் கேட்ட இவர்கள் மகா கோபங்கொண்டு "இவர்களுடைய ரத்தத்தை பூமி குடிக்கப் போகின்றது" என்றார்கள்.

விசாரிக்க வந்த அரசர்களின் பேச்சு முடிந்தபின் திரௌபதி கிருஷ்ண பகவானிடம் வந்தாள்.

"ஒற்றை வஸ்திரத்தைத் தரித்திருந்த நிலையில் நான் சபைக்கு இழுக்கப்பட்டேன். திருதராஷ்டிர புத்திரர்கள் என்னை அவமானப்படுத்திப் பரிகசித்தார்கள். தங்களுக்கு நான் தாசியாகி விட்டேன் என்றே எண்ணினார்கள். பீஷ்மரும் திருதராஷ்டிரரும் நான் யார் என்பதையும் அவர்களுக்கு நான் மருமகள் என்பதையும் மறந்து விட்டார்கள். ஜனார்த்தனரே! என் கணவர்களும் என்னைக் காப்பாற்றவில்லை" என்றாள். பிறகு பெருகிய கண்ணீரைத் துடைத்துக்கொண்டு "அற்பர்களால் துன்பப்படுத்

தப்பட்டேன். பீமனுடைய தேக பலம் பயன்படாமல் போயிற்று. அருச்சுனனுடைய காண்டீபமும் பயன்படாமல் சும்மா கிடந்தது. கேவலம் பலவீனர்களுங்கூட உலகத்தில் தங்கள் மனைவிகளை ரக்ஷிப்பார்கள். இவ்வளவு பாவம் செய்த துரியோதனன் எவ்வாறு உயிருடன் இருக்கலாம்? ராஜாதி ராஜனுக இருந்த பாண்டுவின் மருமகளாகிய நான், தலைமயிரைப் பிடித்து இழுக்கப்பட்டேன். ஐந்து வீரர்களுடைய மனைவியாகிய நான் அவமானப் படுத்தப் பட்டேனே. நான் எவ்வாறு உயிருடன் இருக்க முடியும்? மதுசூதனு! எனக்குப் பதிகள் இல்லை. புத்திரர்களில்லை. பந்துக்களுமில்லை, சகோதரர்களுமில்லை, நீரும் இல்லாமற் போனீர்!'' என்று கோபாவேசமாய்ப் பெருமூச்சு விட்டுக்கொண்டு ரத்தக் கண்ணீர் கலந்த சொற்களைச் சொன்னுள்.

இவ்வாறு புலம்பிய திரௌபதியைக் கிருஷ்ணன் சமாதானம் செய்து, "உன்னை யார் இவ்வாறு துன்பப் படுத்தினர்களோ, அவர்கள் எல்லாரும் யுத்த களத்தில் இரத்தத்தில் நனைந்து உயிரற்றுக் கிடப்பார்கள்; நீ துயரப்பட வேண்டாம். நான் உனக்குப் பிரதிக்ஞை செய்கிறேன். பாண்டவர்களுக்கு என்ன துணை செய்ய வேண்டுமோ அதை நான் செய்வேன். நீ அரசர்க்கரசியாகப் பட்டம் பெறுவாய். ஆகாயம் விழுந்தாலும், இமயமலை வெடித்தாலும், பூமி உடைந்து போனுலும், கடல் வற்றினுலும் என் வார்த்தை பொய்யாகாது. சத்தியம்'' என்று கண்ணன் திரௌபதிக்குச் சபதம் செய்தான்.

இப்படிச் செய்யலாமா, அப்படிச் செய்யலாமா, என்று மேல் வாரியாகத் தத்துவங்களைக் கையாண்டு வாதம் செய்யும் சிலர் மகா பாரதத்தில் கண்ணன் செய்த செயல்களைப்பற்றி விமரிசனம் செய்வதுண்டு. கற்பனு சக்தியோடு இந்தப் பிரதிஜ்ஞையை நன்ருக ஆலோசித்தால் அவர்களுக்கு ஏற்படும் இத்தகைய சந்தேகங்கள் தீரும்.

இந்தப் பிரதிஜ்ஞையைக் கண்ணன் செய்ததும் திரௌபதி சமாதானம் அடைந்து அருச்சனனைக் கடைக் கண்ணுல் கண்ணீர்த் துளிகளின் வழியாகப் பார்த்தாள்.

"அழகிய கண்ணை யுடையவளே! கண்ணபிரான் என்ன சொன்னாரோ அது நடக்கும். மாறாது!" என்று அருச்சுனனும் பிரதிஜ்ஞை செய்தான்.

இப்படிக் கண்ணனும் பார்த்தனும் செய்த பிரதிஜ்ஞை எவ்வாறு நிறைவேறும் என்பதைக் காட்டி திருஷ்டத்யும்னன் தன் சகோதரியைத் தேற்றினான். "நான் துரோணரை எதிர்த்துக் கொல்லுவேன். சிகண்டி பீஷ்மரைக் கொல்லுவான். பீமன் அந்த துராத்மாவான துரியோதனனைக் கொல்லுவான். அருச்சுனன அந்தத் தேரோட்டி மகன் கர்ணனுக்கு யமனாவான்" என்று திருஷ்டத்யும்னன் சொன்னான்.

"நான் துவாரகையில் இருக்கவில்லை. இருந்திருந்தால் கட்டாயம் இந்தச் சூதாட்ட மோசத்தை நடவாமல் செய்திருப்பேன். திருதராஷ்டிரனும் துரியோதனனும் என்னைச் சபைக்கு அழைக்காமலிருந்தாலும் நான போயிருப்பேன். பீஷ்மர், துரோணர், கிருபர் முதலிய பெரியோர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி இந்த நாசகரமான சூதாட்டத்தை நிறுத்தியிருப்பேன். நான் சால்வராஜனை எதிர்க்க வேண்டியதாகி நாட்டை விட்டு வெளியே போயிருந்தேன். சிசுபாலனை நான் யாகத்தில் வதம் செய்தேன் என்கிற கோபத்தால், நான் துவாரகையில் இல்லாத காலத்தில் என் நகரத்தை சால்வன முற்றுகை யிட்டான். பிறகு நான் துவாரகை சென்றதும் விஷயம் தெரிந்து அவனைத் தொடர்ந்து துரத்திச் செல்ல நேரிட்டது. அவனை வென்று வதம் செய்த பின்னரே இந்தச் சூதாட்ட நிகழ்ச்சியைப்பற்றிக் கேள்விப்பட்டு உங்களைப் பார்க்க இங்கே வந்தேன். அணை உடைந்தபின் ஜலத்தைத் தடுக்க முடியாததுபோல் உங்கள் துக்கத்தை இப்போது போக்க இயலாதவனாக இருக்கிறேன்" என்றான்.

பிறகு கிருஷ்ணன் விடை பெற்றுக் கொண்டு அருச்சுனன் மனைவி சுபத்திரையையும் அவர்கள் குழந்தை அபிமன்யுவையும் அழைத்துக் கொண்டு துவாரகை சென்றான். திருஷ்டத்யும்னன் திரௌபதியின் புத்திரர்களை அழைத்துக் கொண்டு பாஞ்சாலம் சென்றான்.

# பாசுபதம்

**வ**னவாச ஆரம்பத்தில் பீமசேனனும் திரௌபதியும் சில சந்தர்ப்பங்களில் தருமபுத்திரனோடு வாதாடுவார்கள். கோபமே க்ஷத்திரியனுக்கு லக்ஷணம் என்றும், க்ஷத்திரியனுக்குப் பொறுமை தகாது என்றும் அது அவமானத்தில் முடியும் என்றும் பெரியோர் வாக்குகளையும் நியாயங்களையும் பிரமாணமாகக் காட்டி, பீமசேனனும் பாஞ்சாலியும் * வாதிப்பார்கள். தாம் செய்த பிரதிஜ்ஞையை காப்பாற்றியே தீரவேண்டும், அனைவருக்கும் பொறுமையே மேலான தருமம் என்று யுதிஷ்டிரன் உறுதியாகப் பதில் சொல்லுவான். வனவாசத்தை நிறைவேற்றாமலே உடனே துரியோதனனைத் தாக்கி அவனையும் அவன் துணைவர்களையும் கொன்று ராஜ்யத்தை மீட்கவேண்டும் என்பது பீமனுடைய ஆசை.

"வேத மந்திரங்களைப் பொருள் செய்து கொள்ளாமல் எழுத்தறிவு மட்டும் அடைந்தவன் திருப்பித் திருப்பி மந்திரங்களைச் சொல்லிக்கொண்டு திருப்தி யடைவதைப் போல் நீர் பேசுகிறீர். உம்முடைய மதி குழப்பமடைந்திருக்கிறது. க்ஷத்திரியனாகப் பிறந்த நீர் வேறு குலத்தின் தருமத்தை அனுசரிக்கப் பார்க்கிறீர். பிராமணத்தன்மை அடைந்துவிட்டீர். இது பயன் தராது. சாஸ்திரம் என்ன சொல்லுகிறது? க்ஷத்திரியனுக்குக் குரூரமும் கோபமும் லக்ஷணம். பொறுமை என்பது க்ஷத்திரியனுக்கு விதித்த குணமல்ல. கெட்ட எண்ணங்களைக் கொண்ட திருதராஷ்டிர புத்திரர்களை வீரர்களாகிய நாம் சும்மா விடலாமா? வஞ்சகப் பகைவரை வெல்லாத க்ஷத்திரியனுடைய பிறப்பு பயனற்றதென்பது என் அபிப்பிராயம். வஞ்சகனைக் கொன்று அதனால் நரகம் அடைந்தாலும் அந்த நரகம் சுவர்க்கத்திற்கு ஒப்பானது. உம்முடைய பொறுமை நெருப்பைக் காட்டிலும் மிக வெப்பமான தாபத்தை உண்டாக்கி என்னையும் அருச்சுனனையும் இரவும் பகலும் தூக்கமில்லாமல் வாட்டுகிறது.

* பாஞ்சாலி—திரௌபதி.

நீசர்கள் நம்முடைய ராஜ்யத்தைக் கவர்ந்துகொண்டு அனுபவிக்கிறார்கள். செய்ய வேண்டிய காரியத்தில் பிரவேசிக்காமல் மலைப் பாம்புபோல் செயலற்றுக் கிடக்கிறீர். பிரதிஜ்ஞையை செய்து முடிக்க வேண்டும் என்கிறீர், உலகமெல்லாம் அறிந்த அருச்சுனன் எவ்வாறு உலகத்தாரால் அறியப்படாமல் அஞ்ஞாதவாசம் செய்து முடிக்க இயலும்? இமயமலையை ஒரு பிடி புல்லினால் மறைக்க முடியுமா? சிங்கம் போன்ற அருச்சுனனும் நகுல சகதேவர்களும் எவ்வாறு மறைந்து சஞ்சரிப்பார்கள்? கீர்த்தியைப் பெற்ற இந்த திரௌபதி எவ்விதம் மறைந்து சஞ்சரிப்பாள்? இவ்வாறெல்லாம் முடியாத காரியத்தை நாம செய்யப் பார்த்தாலும் திருதராஷ்டிர புத்திரன் ஒற்றர்களை உபயோகித்து நம்மை அறிந்து கொள்ளுவான். இது நிறைவேறாத யோசனை. மறுபடியும் பதின்மூன்று வருஷம் காட்டில் நாம் இருக்க வேண்டி நேரிடும். பிரதிஜ்ஞையை முடிப்பது ஆகாத காரியம். இப்போது பதின்மூன்று மாதம் நாம் காட்டில் இருந்தாயிற்று. சோமலதையில்லாதிருந்தால் வேறு தழையை உபயோகித்து யாகம் முடிப்பார்கள். பதின்மூன்று வருஷத்திற்குப்பதில் பதினமூன்று மாதங்களே போதும், இதற்கு சாஸ்திரம் உண்டு. வஞ்சத்தில் உண்டான பிரதிஜ்ஞையைத் தவறினதற்குப் பிராயச்சித்தம் உண்டு. பாரம் சுமக்கும் காளை மாட்டுக்கு ஒரு பிடி புல்லைக் கொடுத்தால் அந்தச் சிறு குற்றத்திற்குப் போதுமான பிராயச்சித்தம் ஆகும். சத்துருவை உடனே வதம் செய்வதென்று நிச்சயம் செய்யும். க்ஷத்திரியருக்கு வேறு மேலான தருமம் இல்லை.''

இவ்வாறு பீமன் அடிக்கடி பலமாக வாதிப்பான். திரௌபதியோ, தனக்குத் துரியோதனனும் கர்ணனும் துச்சாதனனும் செய்த அவமானத்தை எடுத்துச்சொல்லி யுதிஷ்டிரனும் தயங்கும்படியாகச் சாத்திர மேற்கோள்கள் எடுத்துக் காட்டுவாள். யுதிஷ்டிரன் பெரு மூச்சு விட்டு ஆலோசிப்பான். தருமத்தை உபதேசித்துப் பயனில்லை என்று நீதியையும் பலாபலத்தைப் பற்றியும் எடுத்து உரைப்பான்.

"பூரிசிரவசும், பீஷ்மரும், துரோணரும், கர்ணனும் அசுவத்தாமரும், பகைவனுக்குத் துணையாக இருக்கிறார்கள். துரியோதனனும் அவன் தம்பிகளும் யுத்தப் பயிற்சி பெற்றவர்கள், பல சிற்றரசர்களும் பெரிய ராஜாக்களும் இப்போது துரியோதனன் பட்சத்தி லிருக்கிறார்கள். பீஷ்மரும் துரோணரும், துரியோதனனை மதிக்கவில்லையாயினும் அவனை விட்டுக்கொடுக்க மாட்டார்கள். யுத்தத்தில் அவனுக்காக உயிரையும் விடக் காத்திருக்கிறார்கள். கர்ணன் சாமர்த்தியசாலி. எல்லா அஸ்திரங்களையும் அறிந்தவன். அசைக்க முடியாதவன். மகா ரதன். அபார முயற்சி எடுக்கும் தன்மை கொண்டவன். யுத்தத்தில் வெற்றி நிச்சயமில்லை. அவசரப்படுவதில் பயனில்லை" என்று யுதிஷ்டிரன் சொல்லுவான். இவ்வாறு பாண்டவர்களின் பொறுமையை கஷ்டப்பட்டு தரும புத்திரன் காப்பாற்றி வந்தான்

பிறகு வியாசருடைய உபதேசத்தின் பேரில் புது அஸ்திரங்களையும் தேவர்களின் வரங்களையும் பெறுவதற்காக அருச்சுனன் தவம் செய்ய இமயமலைக்குப் போவதென்று நிச்சயமாயிற்று. அருச்சுனன் சகோதரர்களிடம் விடை பெற்றுக்கொண்டு பாஞ்சாலியிடம் சொல்லப் போனான் "தனஞ்சய! உன்னுடைய காரியம் மங்களமாக முடிவு பெறவேண்டும். உன்னைப் பெற்ற குந்திதேவி நீ பிறந்த போது உன்னைப்பற்றி என்னவெல்லாம் விரும்பினாளோ அவற்றையெல்லாம் நீ அடைவாயாக! எங்கள் எல்லாருடைய சுக துக்கமும் வாழ்வும் மானமும் ஐசுவரியமும், உன்னைப்பற்றி நிற்கின்றன. அஸ்திரங்களுடன் திரும்பி வருவாயாக!" என்று பாஞ்சாலி மங்கள வார்த்தைகள் சொல்லி அனுப்பினாள்.

இவ்விடம் கவனிக்கத்தக்கது. அருச்சுனன் தவம் செய்யச் சென்றபோது திரௌபதியின் உள்ளம் தாயின் உள்ளமாகப் பேசிற்று. மனைவியா யிருந்தபோதிலும் குந்திக்குப் பதிலாக ஆசீர்வதிக்கும் மொழிகளைச் சொன்னாள். "குந்தி விரும்பிய மங்களமெல்லாம் உனக்கு ஆகுக" என்று ஆசீர்வதித்தாள்.

x x x

அஸ்திரங்களுக்காகத் தவம் செய்யப் போன அருச்சுனன், அடர்ந்த காடுகளைத் தாண்டி இந்திரகீல மலையை அடைந்தான். அவ்விடத்தில் ஒரு கிழ பிராமணனைக் கண்டான். "குழந்தாய்! வில்லும், கவசமும், பாணமும் கத்தியும் தரித்துக் கொண்டிருக்கிறாய். நீ யார்? இங்கே அஸ்திரங்களால் செய்ய வேண்டியது ஒன்றுமில்லையே? கோபத்தையும் இன்பங்களையும் விட்ட தவசிகளுடைய இருப்பிடத்தில் இந்த க்ஷத்திரிய வேஷம் என்னத்திற்கு?" என்று சிரித்துக்கொண்டே அந்த தவசி அருச்சுனனோடு அன்பாக சம்பாஷித்தான். பிறகு தன் உண்மை உருவத்தைக் காட்டி, தானே இந்திரன் என்றும் தன் மகனாகிய அருச்சுனனைக் கண்டு மகிழவே வந்ததாகவும் தெரிவித்தான்.

அருச்சுனன் இந்திரனை வணங்கி, "நான் வேண்டுவது அஸ்திரங்கள். எனக்கு அதைத் தருவாயாக" என்றான்.

இந்திரன், "தனஞ்சய! அஸ்திரங்களால் என்ன பிரயோசனம்? இஷ்டமான போகங்களைக் கேள். மேலான உலகங்களைக் கேள்" என்றான்.

"தேவராஜனே! நான் போகத்தையும் மேலுலகங்களையும் விரும்பவில்லை. பாஞ்சாலியையும் சகோதரர்களையும் காட்டில் விட்டுவிட்டு வந்திருக்கிறேன். நான் கேட்பது அஸ்திரங்களே!" என்றான்.

"முக்கண்ணனாகிய சிவபெருமானைத் தரிசித்துச் சித்தி பெற்றால் உனக்குத் திவ்வியாஸ்திரங்கள் கிடைக்கும். மகா தேவனைக் குறித்துத் தவம் செய்" என்று சொல்லி ஆயிரக் கண்ணன் மறைந்தான். அதன்மேல் அருச்சுனன் சிவபெருமானைத் தியானித்து இமயமலைச் சாரலில் நீண்ட காலம் கடுந்தவம் செய்தான்.

x x x

பினாகமும் அம்புகளும் கையில் எடுத்துக்கொண்டு பரமசிவனார் உமா தேவியுடன் வேட உருவத்தில் அருச்சுனன் இருந்த காட்டை அடைந்தார்.

அப்போது ஒரு காட்டுப் பன்றி அருச்சுனனைத் தாக்க வந்தது. அந்தப் பன்றியைப் பிநாகம் வளைத்த சங்கரனும் காண்டீபம் வளைத்த அருச்சுனனும் ஒரே சமயத்தில் அம்பு எய்து கொன்றார்கள்.

"நீ யார்? ஸ்திரீயுடன் இந்தக் காட்டில் ஏன் சஞ்சரிக்கின்றாய்? நான் குறி வைத்த பன்றியை நீ எவ்வாறு அடிக்கலாம்?" என்று அருச்சுனன் வேடனாகிய சங்கரனை அதட்டிக் கேட்டான்.

"ஓய் வீரனே! மிருகங்கள் நிறைந்த இந்த வனம் காட்டு வாசிகளாகிய எங்களுடையது. நீ சுகத்துக்குரியவனாகத் தோன்றுகிறாய். ஏன் தனிமையாக இந்தக் காட்டில் சஞ்சரிக்கின்றாய்?" என்று வேடன் அருச்சுனனை ஏளனமாகப் பேசி, தான் அடித்த பன்றி என்றும், அதை அருச்சுனன் ஒப்புக்கொள்ளாவிடில் தன்னுடன் சண்டை செய்து வெல்ல வேண்டும் என்றும் சொன்னான்.

அருச்சுனனுக்குப் பெரும் கோபம் வந்தது. சர்ப்பம் போன்ற பாணங்களை வேடன் மேல் வருஷித்தான். அந்த அம்புமாரிகள் பரமசிவனாகிய வேடன்மேல் விழுந்து விழுந்து பயனற்றுப் போனதை அருச்சுனன் கண்டான்; நூற்றுக்கணக்கான நாராசங்களை விட்டான். மழையை மலை ஏற்றுக் கொள்வதுபோல் அவற்றை பிரசன்ன முகத்துடன் வேடன் ஏற்றுக்கொண்டான். பாணங்கள் தீர்ந்துபோன பிறகு, வில்லின் நுனியால் வேடனைக் குத்தி அடிக்க ஆரம்பித்தான். அதையும் வேடன் பொருட்படுத்தவில்லை. வில்லை அனாயாசமாக அருச்சுனனிடமிருந்து பிடுங்கிக்கொண்டு வேடன் சிரித்தான். காண்டீபத்தை இழந்த அருச்சுனன் ஒருநாளும் நடைபெறாத தோல்வி சாதாரண ஒரு காட்டு வாசியிடம் தனக்கு உண்டானதைக் கண்டு திகைத்தான். பிறகு பரபரப்பாகக் கத்தியை எடுத்து யுத்தம் செய்தான். சங்கரன் தலையில் பட்ட கத்தி உடைந்து துண்டு துண்டாயிற்று. பிறகு கற்களை எடுத்து எறிந்து சண்டை செய்தான். அதுவும் பயன் பெறவில்லை. அதன் மேல் முஷ்டி யுத்தம் ஆரம்பித்தான். அதிலும் அருச்சுனன்

தோல்வி அடைந்தான். பிறகு ஒருவரை யொருவர் தாக்கி மல் யுத்தம் செய்தார்கள். வேடன் அருச்சுனனை மார் போடு மார்பாக இறுகக் கட்டிக்கொண்டு அவனால் ஒன் றும் செய்ய முடியாதபடி செய்தான்.

ஒன்றும் செய்ய முடியாதவனாகித் திகைத்துப்போன அருச்சுனன், பகவான் மகாதேவனைத் தியானித்தான். தியானித்தவுடனே அவனுக்கு அறிவு உதயமாயிற்று. வேடன் யார் என்பது தெரிந்தது.

"நான் செய்த குற்றத்தைப் பொறுக்க வேண்டும்!" என்று பரமேசுவரனுடைய காலில் விழுந்து வேண்டிக் கொண்டான்.

"பொறுத்தேன்" என்று சொல்லிச் சிரித்து பரம சிவன் அருச்சுனனுக்குத் தான் பறித்துக்கொண்ட காண் டீபத்தையும் மற்ற ஆயுதங்களையும் தன் கையால் திருப் பிக் கொடுத்து, பாசுபதாஸ்திரத்தையும் வரங்களையும் தந்தான்.

மல் யுத்தத்தில் முக்கண்ணனால் தீண்டப்பட்டதின் பயனாக அருச்சுனனுடைய சரீரம், எல்லாவித தோஷங் களும் நீங்கி முன்னைவிட நூறு மடங்கு தேஜஸ் நிறைந்து பிரகாசித்தது. "நீ சுவர்க்கம்போய் இந்திரனைப் பார்" என்று அருச்சுனனுக்குச் சொல்லிவிட்டு, அவன் பார்த் துக் கொண்டிருக்கும்போதே சூரியன் அஸ்தமிப்பது போல் தகதகவென்று பரமசிவன் மறைந்தான்.

"நேரில் நான் மகாதேவனைப் பார்த்தும் தீண்டியும் அனுபவித்தேனே? இனி எனக்கு என்ன குறை?" என்று அருச்சுனன் மகிழ்ச்சிப் பரவசமாக நின்றான். அப்போது இந்திரனுடைய தேர்ப்பாகன் மாதலி தேருடன் வந்து நின்றான். அதில் ஏறி அருச்சுனன் இந்திரலோகம் சென்றான்.

# துயரம் புதிதல்ல

பாண்டவர்கள் வனவாசத்திலிருந்த பொழுது அவர்களைப் பார்க்க ஒரு சமயம் பலராமனும் கோவிந்தனும் பரிவாரத்துடன் வந்து சேர்ந்தார்கள்.

பாண்டவர்களைப் பார்த்துப் பலராமன் மிக்கத் துயரப்பட்டுக் கிருஷ்ணனுக்குச் சொல்லலானான் :

"கிருஷ்ணா! தருமமும் அதருமமும் வாழ்க்கையில் பயன் தருவதில்லைபோல் தோன்றுகிறது. துரியோதனனைப் பார். பூமியை ஆள்கிறான்; மகாத்மாவான யுதிஷ்டிரன் மரவுரி உடுத்திக்கொண்டு காட்டில் வாசம் செய்கிறான். யுதிஷ்டிரன் நாட்டையும் சுகத்தையும் இழந்து காட்டிலிருப்பதையும் துரியோதனனும் அவனுடைய துஷ்ட சகோதரர்களும் விருத்தி அடைந்து சுகமாகஇருப்பதையும் பார்த்துப் பிரஜைகளுக்குக் கடவுள் நம்பிக்கையே போய்விட்டது. உலகத்தில் தருமா தருமங்களின் பலனைப் பார்த்தால் சாஸ்திரங்களில் தருமத்தைச் சிலாகிப்பது வெறும் பேச்சாகத் தோன்றுகிறது. பூமியாசை கொண்ட திருதராஷ்டிரன் எமன் முன் நிற்கும்போது தன் நடத்தைக்கு என்ன சமாதானம் சொல்லப் போகிறான்? குற்றமற்ற பாண்டவர்களும் யாக வேதியில் பிறந்த பாஞ்சாலியும் வனவாசம் செய்வதைப் பார்த்து மலைகளும் பூமியுமே துயரப்படுகின்றன!" என்றான்.

பக்கத்திலிருந்த சாத்யகி, "பலராமா! புலம்புவதற்கு அல்ல இது சமயம்! யுதிஷ்டிரர் ஏதும் செய்யச் சொல்லாமலிருந்தாலும் என்னசெய்ய வேண்டுமோ அதை நாம் காலம் வீணாக்காமல் செய்ய வேண்டும். நீயும் கிருஷ்ணனும் நம்மைச் சேர்ந்தவர்களும் உயிருடன் உறவினர்களாக இருக்க, இந்தப் பாண்டவர்கள் ஏன் வனவாசம் செய்ய வேண்டும்? பந்துக்களாகிய நாம் பாண்டவர்களுக்கு நேர்ந்த கஷ்டத்தை நீக்குவதற்கு அவர்கள் ஏவாமலே முயற்சி செய்ய வேண்டும். நம்முடைய குலத்தாரை ஒன்று கூட்டித் துரியோதனன் சேனையை யமலோகத்

துக்கு அனுப்ப வேண்டும். இந்த வேலைக்கு நீயும் கிருஷ்ணனுமே போதும். கர்ணனுடைய அஸ்திரங்களை நொறுக்கி அவன் தலையை வெட்டித்தள்ள ஆசைப்படுகிறேன். துரியோதனனை வதம் செய்து பாண்டவர்கள் இழந்த ராஜ்யத்தை யுத்தத்தில் மீட்டி அபிமன்யுவிடம் ஒப்படைப்போம். பாண்டவர்கள் வேண்டுமானால் வனவாசப் பிரதிஜ்ஞையை நிறைவேற்றலாம். இதுவே நமக்கும் புகழைத் தரும்படியான காரியம்'' என்றான்.

இதையெல்லாம் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த வாசுதேவன், "நீங்கள் சொல்லுவது சரியே! ஆனால் பாண்டவர்கள் தங்கள் கைகளால் ஜெயிக்கப்படாத பூமியை மற்றவர்கள் சம்பாதித்துத் தருவதை விரும்ப மாட்டார்கள். வீர வம்சத்தில் பிறந்த பாஞ்சாலியும் அவ்வாறே எண்ணுவாள். யுதிஷ்டிரர் பூமிக்கு ஆசைப்பட்டோ அல்லது பிறரைக் கண்டு பயந்தோ தம்முடைய தருமத்தை ஒருபோதும் விடமாட்டார். பிரதிஜ்ஞை முடிந்ததும் பாஞ்சால ராஜனும் கேகயனும் சேதி ராஜனும் நாமும் ஒன்று சேர்ந்து பாண்டவர்களுக்குத் துணையாக யுத்தம் செய்து பகைவர்களை வதம் செய்வோம்'' என்றான்.

கிருஷ்ணன் இவ்வாறு சொன்னதைக் கேட்டு யுதிஷ்டிரன் மகிழ்ச்சி அடைந்தான். "மாதவன்* சரியாகச் சொல்கிறான். சத்தியமே காக்கத் தக்கது; ராஜ்யமன்று. கோவிந்தன் ஒருவனே என்னை உள்ளபடி அறிந்தவன். யுத்தம் செய்ய வேண்டும் என்று கேசவன் நமக்குச் சொல்லும் காலத்தில் யுத்தம் செய்வோம். இப்போது விருஷ்ணி குல வீரர்கள் திரும்பிப்போகக் கடவர். தருமம் தவறாமல் இருங்கள். பிறகு ஒரு காலத்தில் கூடுவோம்'' என்று யுதிஷ்டிரன் அவர்களுக்குச் சமாதானம் சொல்லி அனுப்பினான்.

x x x

* மாதவன், கேசவன், கோவிந்தன், வாசுதேவன்...... கிருஷ்ணன்.

அஸ்திரங்கள் பெறுவதற்காகப் போன அருச்சுனன் வெகு காலம திரும்பி வரவில்லை. பீமனுடைய துக்கமும் கோபமும் முன்னைவிட அதிகமாயிற்று. யுதிஷ்டிரனைப் பார்த்து அவன் சொல்லலானான்.

"மகாராஜாவே! நம்முடைய உயிரெல்லாம் அருச்சுனனிடத்தில் இருப்பது உமக்குத் தெரியும். உம்முடைய உத்திரவின்பேரில போனவன் என்ன ஆனானோ தெரியவில்லை. அவனுக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டு அவன் இறந்தால் நம கதி என்ன? அருச்சுனன இல்லாவிடில் பாஞ்சாலனும சாத்தியகியும் கிருஷ்ணனுங்கூட நம்மைக் காப்பாற்ற முடியாது. அருச்சுனன் இறந்தானானால் அநதத துக்கத்தை என்னால் தாஙக முடியாது. உம்முடைய விளையாட்டால் நாம் இந்தத் துனபங்களை எல்லாம் அடைந்தோம். அற்பர்களாகிய நமமுடைய பகைவர்கள் பலமுள்ளவர்களானார்களே. வனவாசம் செய்வது க்ஷத்திரியனுடைய தருமம் அல்ல. அரசு புரிவதே க்ஷத்திரியன் கடமையாகும. ஏன் நமக்கு உரிய தருமத்தை விட்டுவிட்டு இவ்வாறு பிடிவாதம் செய்கிறீர்? அருச்சுனனை வனத்திலிருந்து திருப்பி அழைத்து கோவிந்தனையும் வரவழைத்து உடனே திருதராஷ்டிரன் மக்கள மேல் போர் புரிவோம. அந்தத் துராத்மா சகுனியையும், கர்ணனையும், துரியோதனனையும் வதம் செய்து நான் திருப்தி அடைவேன. பிறகு நீர் வேண்டுமானால் காட்டுக்குப் போய்த் தவம் செய்யலாம். உடனே செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாமல் தாமதம செய்வது பெருங குற்றமாகும். மோசம செய்தவனை மோசத்தால் கொல்லுவது பாவமல்ல. ஒரு பகலும் இரவும சேர்ந்து ஒரு வருஷத்துக்குச் சமானமாக சில விரதங்களைச் செய்து முடிக்கலாம் எனபது தர்ம சாஸ்திரம். இனறையிலிருந்து பதின்மூன்று நாட்கள விரதமிருந்து முடித்தோமானால் பிரதிஜ்ஞை முடிந்து போகும. எனக்கு விடை கொடும். தீயானது புதரை எரிக்க ஆசைப் படுவதுபோல் துரியோதனனைக் கொல்ல ஆசைப்படுகிறேன்."

பீமன் இவ்வாறு சொன்னதைக் கேட்ட தருமபுத்திரன் தம்பியைக் கட்டி அணைத்துக் கொண்டு, "அன்பிற்

குரியவனே! பதின்மூன்று வருஷங்கள் முடிந்ததும் காண்டீபம் ஏந்திய வீரனான அருச்சுனனும் நீயும் யுத்தம் செய்து துரியோதனனைக் கொல்லுவீர்கள். சந்தேகமில்லை. சரியான காலம் வரும் வரையில் பொறுத்துக் கொள்வாய். பாவத்தில் மூழ்கிய துரியோதனனும் அவனைச் சேர்ந்தவர்களும் தப்பமாட்டார்கள். சந்தேகமில்லை" என்று சமாதானப்படுத்தினான்.

x x x

இவ்வாறு சோகத்தால் பீடிக்கப்பட்டு சகோதரர்கள் வாதாடிக் கொண்டிருக்கும்போது பிருகதசுவ மகரிஷி பாண்டவர்களுடைய ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தார். அவருக்குச் செய்ய வேண்டிய பூஜையைச் செய்து களைப்புத் தீர்த்துக் கொள்ளச் செய்தபின் யுதிஷ்டிரன் அவரருகில் உட்கார்ந்து சொன்னான் :

"பகவானே! வஞ்சகர்கள் நம்மைச் சூதாட்டத்திற்கு அழைத்து மோசம் செய்து நம்முடைய தனத்தையும் ராஜ்யத்தையும் பறித்துக் கொண்டார்கள். அதன் பயனாக நானும் ஒப்பற்ற வீரர்களான என்னுடைய சகோதரர்களும் பாஞ்சாலியும் வனவாசம் செய்கிறோம். தம்பி அருச்சுனன் அஸ்திரங்கள் பெறப் போனவன் வெகு காலமாயும் திரும்பவில்லை. அவன் இல்லாமல் நாங்கள் உயிர் இழந்தவர்கள்போல் இருக்கிறோம். அருச்சுனன் அஸ்திரங்களைப் பெற்றுத் திரும்பி வருவானா? அவனை நாங்கள் எப்போது பார்ப்போம்? தீராத துக்கத்தில் மூழ்கிக் கிடக்கிறோம். என்னைப்போல துக்கம் அனுபவித்த மனிதன் இவ்வுலகில் வேறு ஒருவனும் இருந்ததில்லை" என்றான்.

மகரிஷி சொன்னார்:

"துக்கத்தில் மனதைச் செலுத்தாதே! அஸ்திரங்களும் வரங்களும் பெற்றுக்கொண்டு அருச்சுனன் வந்துவிடுவான். பகைவர்களையும் ஜயிப்பீர்கள். உன்னைப்போல் துர்ப்பாக்கியன் உலகத்தில் இருந்ததில்லை என்கிறாய்! அது சரியல்ல, உன்னைக் காட்டிலும் மிக்கத் துயரத்

துக்கு ஆளான நளன் சரித்திரம் உனக்குத் தெரியவில்லை போலிருக்கிறது. நிஷத தேசத்து அரசனைப்பற்றி நீ கேட்டதில்லையா? பந்தய ஆட்டத்தில் இறங்கி புஷ்கரனால் வஞ்சிக்கப்பட்டு நாடும் செல்வமும் எல்லாம் இழந்து, காட்டுக்குத் துரத்தப்பட்டான். வனவாச காலத்தில் அவனுடன் சகோதரர்களாவது, பிராம்மணர்களாவது இருக்கவில்லை. கலி புருஷன் அவனைப் பிடித்துக்கொண்டதன் பயனாக நளன் தன் விவேகத்தையும் குணத்தையும் இழந்து, புத்தி தடுமாறி, தன் கூட வந்த மனைவியையும் ஏமாற்றிக் காட்டில் அவளைத் தனியாக விட்டுவிட்டு ஓடிப்போனான். நீயோ தேவர்களுக்கு ஒப்பான வீர சகோதரர்களாலும் பிராமணர்களாலும் சூழப்பட்டு வனவாசம் செய்கிறாய். ஒப்பற்ற பாஞ்சாலியும் கூட இருக்கிறாள். உன்னுடைய மதியும் களங்கமற்று நல்ல நிலையிலிருக்கிறது. நீ துயரப்படலாகாது. நீ பாக்கியவான்'' என்று கூறினார் மகரிஷி.

பிறகு ரிஷி நளனுடைய சரித்திரத்தை யுதிஷ்டிரனுக்கு விஸ்தாரமாகச் சொன்னார்.

நளன் கதை பாரதத்தில் இருபத்தெட்டு அத்தியாயங்களாகும். அதன் முடிவில் ரிஷி சொல்லுகிறார்:—

''பாண்டவனே! நளன் மிகவும் பயங்கரமான துக்கத்தை அடைந்து முடிவில் க்ஷேமத்தை அடைந்தான். நீ அவனைப்போல் கலியால் பீடிக்கப்படாமலும் தனியாக இல்லாமலும் சகோதரர்களுடன் திரௌபதியுடனும் இருந்துகொண்டு, தருமத்தையே சிந்தித்துக் கொண்டும் வேத வேதாந்தங்களை ஓதிய பிராமணர்களால் எப்போதும் சூழப்பட்டும் புண்ணிய கதைகளைக் கேட்டுக் கொண்டும் இருக்கிறாய். துயரப்பட வேண்டாம். மனித வாழ்க்கையில் சோதனைகள் நேருவது புதிதல்ல.''

இவ்வாறு புருகதசுவ மகரிஷி நளன் கதையைச் சொல்லி யுதிஷ்டிரனுக்குத் தேர்தல் வார்த்தைகள் கூறினார்.

# அகஸ்தியர்

இந்திரப் பிரஸ்தத்தில் யுதிஷ்டிரனைப் பூஜித்து வந்த பிராமணர்களின் கூட்டம் வனவாசத்திலும், கூடவே இருந்து கொண்டு வந்தது. பரிவாரத்தைச் சமாளித்துக் கொண்டு காலம் கழிப்பது கஷ்டமாகவே இருந்தது. அருச்சுனனைத் தவம் செய்ய அனுப்பி விட்டபிறகு, ஒரு நாள் லோமசர் என்கிற பிரம்மரிஷி பாண்டவர்களைக் காண வந்தார். "இந்தப் பரிவாரத்தைக் குறைத்துக் கொண்டு தீர்த்த யாத்திரை செய்யுங்கள். லகு பரிவாரமானால்தான் இஷ்டப்படி பிரயாணம் செய்ய முடியும்" என்று லோமச முனிவர் சொன்ன யோசனையை ஒப்புக் கொண்டு யுதிஷ்டிரன அனைவருக்கும் தெரியப்படுத்தி விட்டான்.

"ஆயாசம் தாங்க மாட்டாதவர்களும் நல்ல போஜனம் விரும்பிச் சமையற்காரனை அண்டி நிற்பவர்களும் ராஜ பக்தியை மட்டும் முன்னிட்டு என்னிடம் வந்திருப்பவர்களும் எல்லாரும் திருதராஷ்டிர மகாராஜாவைப்போய் அடையலாம். அவர் ஆதரிக்கா விட்டால் பாஞ்சால ராஜன் துருபதனிடம் போகலாம்" என்று சமாதானப் படுத்தித் தன் பரிவாரத்தைச் சுருக்கிக் கொண்டான்.

பிறகு பாண்டவர்கள் புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போனார்கள். அங்கங்கே அவர்கள் கண்ட இடங்களின் பூர்வ கதைகளைக் கேட்டுக் கொண்டே சென்றார்கள். இவ்வாறு சொல்லப்பட்ட கதைகளில் அகஸ்தியர் கதை ஒன்று.

x x x

அகஸ்தியர் ஒரு சமயத்தில் சில பித்ருக்கள் தலை கீழாகத் தொங்கிக்கொண்டு துன்ப நிலையில் இருப்பதைக் கண்டார். "நீங்கள் யார்? ஏன் இந்தக் கடுமையான தவம் புரிகிறீர்கள்?" என்று அவர் கேட்டதற்கு அந்த ஜீவன்கள், "மகனே! நாங்கள் உன்னுடைய முன்னோர்

களாவோம். நீ விவாக மில்லாமலிருப்பதால் உனக்குப் பின் எங்களுக்குப் பிண்டம் தருபவர்கள் இல்லாமல் போவார்கள். அதற்காக இந்தத் தவம் செய்கிறோம். நீ புத்திர சந்தானம் பெறுவதற்கு வழி தேடினாயானால் நாம் இந்த நிலையிலிருந்து தப்புவோம்'' என்றார்கள்.

இதைக் கேட்ட அகஸ்தியர் விவாகம செய்து கொள்ளத் தீர்மானித்தார்.

x x x

விதர்ப்ப தேசத்து அரசன் தனக்குக் குழந்தை உண்டாகவில்லை. யென்று துயரப்பட்டுக் கொண்டிருந்தான். அதற்காக அவன் அகஸ்தியரை வணங்கி முனிவருடைய ஆசியைக் கேட்டான்.

"உனக்குக் குழந்தை உண்டாகும். ஒரு அழகிய மகளைப் பெறுவாய். அவளை எனக்கு மனைவியாகத் தருவாயாக'' என்று அகஸ்தியர் அந்த அரசனுக்கு வரம் தந்தார்.

உலகத்திலுள்ள ஸ்திரீ லக்ஷணங்களை யெல்லாம் சேர்த்து மிகக சௌந்தரிய ரூபத்தை மனதில் நிருமாணித்துக்கொண்டு அரசனுக்குஅகஸ்தியர் இந்தவரம் தந்தார். அரசனுடைய பாரியையும் கருப்பம் தரித்துப்பெண் குழந்தையைப் பெற்றாள். குழந்தையின் பெயர் லோபாமுத்திரை. லோபாமுத்திரை அகஸ்தியர் மனத்தில் கற்பனை செய்து கொண்ட லக்ஷணங்களுடன் நிகரற்ற அழகு வாய்ந்தவளாக வளர்ந்து விவாகத்துக்குத் தகுந்த பருவம் அடைந்தாள்.

விதர்ப்பராஜனுடைய மகளின் ரூபலாவண்ணியம் க்ஷத்திரிய உலகத்தில் பிரசித்தியா யிருந்தாலும் அகஸ்தியருக்குப் பயந்து எந்த ராஜகுமாரனும் அவளை வரிக்க வரவில்லை.

x x x

பிறகு ஒருநாள் அகஸ்திய முனிவர் விதர்ப்பதேசம் வந்து அரசனைக் கண்டு "என்னுடைய பித்ருக்களுக்குத்

திருப்தி செய்யப் புத்திரனை விரும்புகிறேன். வாக்குத் தத்தப்படி உன் மகளை எனக்குத் தருவாயாக'' என்று கேட்டார்.

நூற்றுக் கணக்கான கன்னிகைகளால சூழப்பட்டுத் தாதிமார்களின் பணிவிடையைப் பெற்று வளர்ந்த தன் அருமை மகளை, வனவாசம் செய்யும் முனிவருக்குக் கொடுத்துவிட அரசனுக்கு மனம் வரவில்லை. ஆனால் முன் செய்த வாக்குத்தத்தத்தை நினைத்து ரிஷியின் கோபத்துக்குப் பயந்தான்.

ராஜாவும் தாயாரும் துயரத்தில் முழுகிவருந்துவதை லோபாமுத்திரை பார்த்தாள். "ஏன் வருந்துகிறீர்கள்? என் நிமித்தம் நீங்கள் சாபம் அடையலாகாது. என்னை முனிவருக்கே கொடுத்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். துயரம் வேண்டாம். இதுவே என் பிரியமும்'' என்றாள்.

லோபாமுத்திரையின் சொல்லைக்கேட்டு அரசன் சமாதானம் அடைந்தான். முறைப்படி அவளை அகஸ்தியருக்குக் கொடுத்து விவாகமும் முடிந்தது.

x x x

முனிவருடன் போக ராஜகுமாரி புறப்பட்டாள். "இந்த உயர்ந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் கழற்றி விடு'' என்றார் அகஸ்தியர்.

உடனே லோபாமுத்திரை தன் அழகிய ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் கழற்றி அவற்றைத் தன் தாதிகளுக்கும் கன்னிகளுக்கும் கொடுத்துவிட்டு மரவுரியும் தோலும் கட்டிக்கொண்டு முனிவருடன் சந்தோஷமாக வனம் சென்றாள்.

* * *

கங்காத் துவாரத்தில் லோபாமுத்திரை அக்ஸ்திய ருடன் அநேக நாள் விரதங் காத்துப் பணிவிடை செய்து முனிவருடைய அன்பைப் பூரணமாகச் சம்பாதித்தாள்.

ஒரு நாள் பிரியம் மேலிட்டு முனிவர் மனைவியைக் கருப்பம் வகிக்க அழைத்தார். லோபாமுத்திரை ஸ்திரீகளுக்கு இயற்கையான வெட்கம் மேலிட்டுத் தலை வணங்கிக் கைகூப்பி, "ஸ்வாமி! நான் கடமைப் பட்டிருக்கிறேன். ஆயினும் என்னுடைய பிரீதியை நீங்கள் செய்ய வேண்டும்" என்றாள்.

அவளுடைய ரூபசௌந்தரியத்திலும் சீலத்திலும் முற்றிலும் மனங் கவரப்பட்ட முனிவர், "அப்படியே!' என்றார்.

"பிதாவினுடைய வீட்டில் இருந்த காலத்தில் நான் படுத்த படுக்கையும் அணிந்த வஸ்திராபரணங்களையும் போன்று இவ்விடத்திலும் உம்மால் நான் அடைந்து, நீங்களும் திவ்வியாலங்காரங்களை அணிந்து சந்தோஷமாக என்னைச் சேரவேண்டு மென்பதே என் விருப்பம்" என்றாள்.

"நீ சொல்லியபடி செய்ய எனக்குச் செல்வம் ஏது, சௌகரியமேது, நீயும் நானும் வனத்தில் வசிக்கும் தரித்திரர்கள் அன்றோ?" என்றார் அகஸ்தியர்.

"சுவாமி! நீர் தவப் பெருமையினால் எல்லாம் படைத்தவராவீர்! ஒரு நிமிஷத்தில் உலகத்திலுள்ள செல்வம் அனைத்தும் நீர் சம்பாதிக்க முடியும்" என்றாள் லோபாமுத்திரை.

"நீசொல்வது உண்மை. ஆனால் அவ்வாறு தவத்தின் வலிமையால் நான் தனம் சம்பாதித்தால் அது தவத்தின் பயனை அழித்து விடுமே! இது உனக்கு விருப்பமா?" என்றார்.

"அதை நான் விரும்பவில்லை. தவத்தைச் செலவழிக்காமல் போதிய தனம் எங்கேயாவது சம்பாதித்துக் கொண்டு வர வேண்டும் என்கிறேன்" என்றாள்.

"பாக்கியவதியே! அப்படியே செய்கிறேன்" என்று அகஸ்தியர் மனைவிக்குச் சொல்லிவிட்டு, சாதாரண பிராமணனைப்போல் அரசர்களை யாசிக்கப் புறப்பட்டார்.

மிக்க செல்வம் படைத்தவன் என்று பிரசித்தி பெற்ற ஒரு அரசனிடம் அகஸ்தியர் சென்றார்.

“தானம் வேண்டி வந்தேன். பிறருக்குக் குறைவாவது துன்பமாவது ஏற்படாமல் எனக்குத் தானம் தர வேண்டும்” என்றார்

அந்த அரசன் தன் ஆட்சியின் வரவையும் செலவையும் ஒன்றும் மறைக்காமல் முனிவரிடம் கணக்கை ஒப்புவித்தான். “பார்த்து எடுத்துக்கொள்ளுங்கள்” என்றான். ராஜ்யத்தின் வரவு செலவுக் கணக்கைப் பார்த்ததில் மிச்சம் ஒன்றும் இருக்கவில்லை. அரசாங்கங்களில் வரவுக்குச் சரியாகவே செலவு எப்போதும் ஏற்பட்டுவிடுகிறது. முன்னாட்களிலும் இப்போதைப் போலவேதான்.

இதைக்கண்டு, “இவ்விடம் நான் தானம் பெற்றால் பிரஜைகளுக்குத் துன்பமாகும். வேறே எங்கேயாவது பார்க்கிறேன்” என்று அகஸ்தியர் புறப்பட்டார். அந்த அரசன், “நானும் கூட வருகிறேன்” என்று அவனும் முனிவருடன் கூடச் சேர்ந்து இருவரும் மற்றொரு ராஜாவிடம் போய்க் கேட்டார்கள். அவ்விடத்திலும் அதே நிலைமையாக இருந்தது.

நியாயமான செலவுக்கு எவ்வளவு வேண்டுமோ அந்த அளவுக்குத்தான் அரசன் பிரஜைகளிடமிருந்து வரி வசூல் செய்ய வேண்டும் என்கிற தத்துவத்தை வியாசர் இதன் மூலம் எடுத்துக் காட்டுகிறார். நியாயமான வரிகள் பெற்றுக் கடமைகளைப் பூரணமாகச் செய்து தரும சாஸ்திரப்படி நடந்து வரும் எந்த அரசனிடத்திலாவது தானம் பெற்றால் அவனுடைய பிரஜைகளுக்கு அந்த அளவில் நஷ்டமும் துன்பமும் உண்டாகும் என்று அகஸ்தியர் உணர்ந்தார். அதன்மேல் எல்லாருமாகச் சேர்ந்து இல்வலன் என்கிற ஒரு கொடிய அசுரனிடம் போய் அவனைக் கேட்பது உசிதம் என்று தீர்மானித்தார்கள்.

x x x

இல்வலன் என்ற அசுரனும் அவன் தம்பி வாதாபியும் பிராமணர்கள்மேல் தீராத துவேஷம் கொண்டவர்

கள். பிராமணர்களை விருந்துக்கு இல்வலன் அழைப்பான். மாயையால் தம்பி வாதாபியை ஆட்டின் உருவம் எடுக்கச் செய்து ஆட்டை வெட்டிப் பக்குவம் செய்து, வந்த பிரா மணர்களை உண்ணச் சொல்லுவான். அந்தக் காலத்தில் பிராமணர்கள் மாமிசம் உண்பார்கள்.

விருந்து முடிந்தவுடன் இல்வலன், "வாதாபி! வா!" என்று கூவுவான். தான் கொன்றவர்களை யமலோகத்தி லிருந்து திரும்பி வரவழைக்கும் வரத்தை இல்வலன் பெற் றிருந்தான். வெட்டுப்பட்டு இறந்த வாதாபி மறுபடி உயிர்கொண்டு பிராமணர்களுடைய வயிற்றைப் பிளந்து விட்டு அசுரச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு வெளியே வரு வான். இவ்வாறு பல பிராமணர்கள் வாதாபியின் செய லால் வயிறு கிழிக்கப்பட்டு மாண்டார்கள். தருமத்தையே ஏமாற்றி இவ்வாறு பிராமணர்களைக் கொன்று தங்கள் எண்ணத்தை நிறைவேற்றி வருவதாக பாபிஷ்டர்களாகிய அந்த அசுரர்களுடைய கருத்து.

அகஸ்தியர் வந்ததாகத் தெரிந்ததும் நல்ல பிராமணர் சிக்கினார் என்று இல்வலன் மிக்க மகிழ்ச்சி யடைந்து அவரை வரவேற்று வழக்கபபடி விருந்து வைத்தான். வாதாபியை ஆடாகச் சமைத்துப் பரிமாறி, "இந்த முனிவர் இறந்தார்" என்று மனதில் எண்ணிக் கொண்டு அகஸ்தியரை உண்ணச் செய்தான்.

விருந்து முடிந்தபின் இல்வலன், "வாதாபி! சீக்கிரம் வெளியே வா! தாமதித்தாயானல் முனிவர் உன்னை மீறுவார்!" என்று சொன்னான்.

முனிவர், "ஓ வாதாபியே! உலக சாந்திக்காக நீ ஜீரணம் செய்யப்பட்டாய்" என்று சொல்லித் தம் வயிற் றைத் தடவிக் கொடுத்தார். இல்வலன், "வாதாபி! வா வாதாபி! வா!" என்று பன்முறை பயந்து கத்தினான்.

பயனில்லை! "வாதாபி ஜீர்ணமாய்விட்டான். ஏன் வீணாக அழைக்கிறாய்?" என்றார் முனிவர்.

அசுரன் கை கூப்பி அகஸ்தியரை வணங்கி அவர் கோரிய தனங்களைக் கொடுத்து அனுப்பினான். லோபா முத்திரையை அகஸ்தியர் திருப்தி செய்தார்.

"உனக்குப் பத்து நல்ல மக்கள் வேண்டுமா அல்லது பத்துப் பேரை வெல்லக்கூடிய ஒரு மகன் வேண்டுமா?" என்று அகஸ்தியர் மனைவியைக் கேட்டதாகவும், "பகவானே, புகழுக்குரிய அறிவைப் படைத்தவனும் தருமத்தில் நிலை கொண்டவனுமான ஒரு மகனையே விரும்புகிறேன்" என்று லோபாமுத்திரை சொல்ல, அவ்வாறே அவள் பெற்றதாகவும் கதை.

x x x

ஒரு சமயம் விந்திய மலையானது மேரு மலையின் மேல் பொறாமை கொண்டு, தானும் மேருவைப்போல் வளர்ந்து சூரிய சந்திராதிகளைத் தடுத்துவிடப் பார்த்ததாம். இந்தச் சங்கடத்தைத் தீர்த்துக்கொள்ள முடியாமல் தேவர்கள் அகஸ்தியரை வேண்டினார்கள். அவர் விந்திய மலையண்டை சென்று, "பருவதோத்தமனே! எனக்கு வழி விடக் கடவாய்! ஒரு காரியத்துக்காக நான் தெற்கே செல்ல வேண்டியதாக இருக்கிறது. நான் திரும்பியபின் நீ இஷ்டப்படி வளரலாம். நான் வரும் வரையில் பொறுத்திருப்பாயாக!" என்று சொன்னார்.

அகஸ்தியரிடம் விந்திய பர்வதம் வைத்திருந்த கௌரவத்தினால், "அப்படியே!" என்று மலை ஒப்புக்கொண்டதாகவும், அகஸ்தியர் தெற்கே போனவர் திரும்பி வரவில்லை என்றும் இந்த ஒப்பந்தப்படி விந்திய மலையும் வளராமல் இது வரையில் படுத்துக் கிடக்கிறது என்றும், அதிலிருந்து அகஸ்தியர் தென்னாட்டிலேயே இருந்துவிட்டார் என்றும் பாரதக் கதை.

# ரிஷியசிருங்கர்

விஷயானுபவங்களைப் பற்றி ஒன்றுமே தெரியாத படி மக்களை வளர்த்தால் பிரம்மச்சரியம் சுலபமாக ஏற்படும் என்பது சிலர் எண்ணம். இது பயனற்றது. அந்த முறையில் காக்கப்பட்ட கோட்டை வெகு எளிதாக எதிரியின் வசமாகும். இதை விளக்குவதற்காக பாரதத்தில் ஒரு கதை உண்டு. இந்தக் கதை சுருக்கமாக இராமாயணத்திலு மிருக்கிறது. பாரதத்தில் பௌராணிகர் அதை ரொம்பச் சித்தரித்து நீண்ட கதையாகச் சொல்லுகிருர்.

x x x

பிரம்மாவுக்குச் சமமான தேஜஸ் படைத்த விபாண்டகர் தம்முடைய புத்திரன் ரிஷியசிருங்கருடன் வனத்தில் வசித்து வந்தார். ரிஷியசிருங்கர் தன் பிதாவைத் தவிர வேறு மனிதர்களைப் பார்த்ததே கிடையாது. பெண்களைக் கண்ணுல் கண்டதே கிடையாது. இவ்வாறு சுத்த பிரம்ம சாரியாக வளர்ந்தார் ரிஷியசிருங்கர்.

x x x .

அங்க தேசமானது ஒரு காலத்தில் பெரிய பஞ்சத்தால் பீடிக்கப்பட்டது. மழை யின்மையால் பயிர்கள் அழிந்து ஜனங்கள் மாண்டார்கள். ஊமைப் பிராணிகளும் மிகவும் துன்பப்பட்டன. தேசத்தைத் துன்புறுத்தும் கொடிய பஞ்சத்தை எப்படிப் போக்குவது, பிரஜைகளைக் காப்பாற்ற என்ன செய்வது என்று ராஜா ரோமபாதன் பிராமணர்களைக் கேட்க, அவர்கள், "ராஜேந்திரனே! பெண்களை அறியாதவரும் சம்பூரண பிரம்ம சாரியுமான ரிஷியசிருங்கர் என்கிற ரிஷி குமாரர் ஒருவர் இருக்கிருர். அவரை நம் ராஜதானிக்கு வரவழைக்க வேண்டும். மிக்க தவமுள்ள அவர் நம் நாட்டில் கால் வைத்ததும் மழை பொழியும்" என்ருர்கள்,

விபாண்டக ரிஷியின் ஆசிரமத்திலிருந்து ரிஷியசிருங்கரை எப்படித் தருவிப்பது என்று அரசன் மந்திரிக

ளுடன் ஆலோசனை செய்தான். அவர்கள் சொல்லிய உபாயத்தின்படி ராஜதானியிலுள்ள வேசிகளுள் சாமர்த்திய சாலிகளான சிலரை அழைத்து, "நீங்கள் வனம் சென்று ரிஷி குமாரனை எப்படியாவது உபாயம் செய்து என்னுடைய தேசத்திற்குக் கொண்டு வந்து விடவேண்டும்" என்று நியமித்தான்.

அந்த ஸ்திரீகள் முதலில் தயங்கினார்கள். அரசன் சொல்லை மீறுவதற்குப் பயந்தார்கள். ஆனால் ரிஷியின் சாபத்துக்கும் பயந்தார்கள். முடிவில் தெய்வமே கதி என்று அரசனிடம் பொருள்களைப் பெற்றுக்கொண்டு ரிஷி ஆசிரமத்துக்குச் சென்றார்கள்.

இவ்வாறு புறப்பட்ட வேசிகளின் கூட்டத்துக்குத் தலைவியானவள் ஒரு பெரிய ஓடத்தைத் தோட்டம்போல் அமைத்தாள். அதில் போலி மரங்களும் புதர்களும கொடிகளும் வைத்து அழகிய தோட்டத்தின் மத்தியில் ஆசிரமம் இருப்பதுபோல் செய்தாள். அந்த ஓடத்தை விபாண்டக ஆசிரமத்தண்டை நதியில் கட்டிவிட்டு, வேசிகள் ரிஷியின் ஆசிரமத்தண்டை நெஞ்சம் பதைக்கச்சென்றார்கள்.

முனிவர் வெளியில் போயிருந்தார். இதுதான் சமயம் என்று அவர்களில் ஒரு அழகிய யுவதி ஆசிரமத்திலிருந்த ரிஷி குமாரரண்டை சென்றாள்.

"முனிவரே! க்ஷேமமா? கிழங்குகளும் கனிகளும் குறைவின்றிக் கிடைக்கின்றனவா? வனத்தில் ரிஷிகளுடைய தவம் சரியாக நடைபெறுகிறதா? உம்முடைய பிதாவின் தேஜஸ் குறைவின்றி வளர்கிறதா? வேத அத்தியயனம் சரியாக நடைபெறுகின்றதா?" என்று ரிஷிகளும் சீடர்களும் விசாரிக்கும் முறையில் கேட்டாள் அவள்.

இதைப்போன்ற அழகிய மானிட உருவத்தையும் குரலையும் அதற்கு முன் ரிஷி குமாரர் பார்த்ததில்லை. அந்த வடிவத்தைக் கண்டதும ரிஷியசிருங்கருடைய உள்ளத்தில் அடக்க முடியாத இயற்கை வேகம் வேலை செய்ய

ஆரம்பித்தது. வேசியாகிய யுவதியைத் தன்னைப்போன்ற ஒரு ரிஷி குமாரன் என்று எண்ணினார். உள்ளத்தில் அடக்க முடியாத ஒரு புது மகிழ்ச்சி பொங்குவதை அனுபவித்தார்.

"நீர் ஜோதியைப்போல பிரகாசிக்கிறீர். நீர் யார்? உம்மை நமஸ்கரிக்கிறேன். உம்முடைய ஆசிரமம் எங்கே இருக்கிறது? நீர் எந்த விரதத்தை அனுசரித்து வருகிறீர்?" என்று ஆண் பெண் வித்தியாசம் அறியாத ரிஷி குமாரர் அவளைக் கேட்டார். அவளுக்கு அர்க்கியமும் பாத்தியமும் அதிதிகளுக்குச் செய்யும் உபசாரமும் செய்தார்.

"இந்த இடத்துக்கு மூன்று யோஜனை தூரத்தில் என்னுடைய ஆசிரமம் இருக்கிறது. உங்களுக்கு நான் பழங்கள் கொண்டுவந்திருக்கிறேன். உங்களால் நான் நமஸ்காரம் பெறும் தகுதி படைக்கவில்லை. உங்களை நான் எங்கள் சம்பிரதாயப்படி நமஸ்கரிக்க வேண்டும்" என்றாள்.

நகரத்திலிருந்து கொண்டுவந்திருந்த மோதகங்களையும் பட்சணங்களையும் ரிஷி குமாரனுடைய வாயில் போட்டு அவரை உண்ணச் செய்து வாசனை பொருந்திய மாலைகளைச்சூட்டி பானங்களைக் குடிக்கச் செய்து, "எங்களுடைய சம்பிரதாயப்படி நமஸ்கரிக்கும் முறை இப்படி" என்று சொல்லி அவரைக் கட்டித் தழுவி விளையாடினாள்

கொஞ்ச நேரம் கழிந்தபின் விபாண்டகர் வரும் சமயமாயிற்று என்று பயந்து வேசியானவள், "நான் அக்கினி ஹோத்திரம் செய்ய வேண்டிய காலம் வந்து விட்டது. நாழி ஆயிற்று" என்று காரணம் சொல்லி மெதுவாக ஆசிரமத்தை விட்டு விலகிப் போய்விட்டாள்.

x x x

விபாண்டகர் வந்து ஆசிரமத்தில் சிதறிக்கிடக்கும் பண்டங்களைப் பார்த்துத் திடுக்கிட்டார். ஆசிரமம் சுத்தம் செய்யப்படவில்லை. செடிகளும் கொடிகளும் ஒடிந்து கிடந்தன. ரிஷி குமாரருடைய முகம் வழக்கம்போலில்லை.

மன்மத வேகத்தினால் மதியும் கலையும் இழந்தவராக இருந்தார்.

"பிரிய குமாரனே! ஏன் சமித்துகள் கொண்டு வந்து வைக்கவில்லை? நல்ல செடிகளையெல்லாம் யார் ஒடித்துப் போட்டிருக்கிறார்கள்? ஹோமம் செய்வதற்கு வேண்டிய பால் கறந்தாயிற்றா? இவ்விடம் யாராவது உனக்குப் பணிவிடை செய்ய மனிதர்கள் வந்தார்களா? இந்த விசித்திரமான பூமாலை யார் கொடுத்தார்கள்? ஏன் கவலையுற்றிருக்கிறாய்?" என்று விபாண்டகர் கேட்டார்.

"அற்புத வடிவமான பிரம்மசாரி ஒருவர் வந்திருந்தார். அவருடைய தேஜஸையும் அழகையும் குரல் இனிமையையும் என்னால் சொல்லி விளக்க முடியாது. அவருடைய வாக்கும் கண்ணும் என்னுடைய அந்தராத்மாவில் விளக்க முடியாத வண்ணம் மகிழ்ச்சியும் சிநேகமும் உண்டாக்கிற்று. அவர் என்னைக் கட்டித் தழுவிய காலத்தில் எனக்கு உண்டான சந்தோஷம் இந்தப் பழங்கள் உண்டபோதும் உண்டாகவில்லை" என்று ஏதும அறியாத அப்பாவியான ரிஷியசிருங்கர், பிரம்மசாரி என்று தான் நினைத்த வேசியின் உடையையும் உருவத்தின் அழகையும் செய்கைகளையும் தகப்பனாரிடம் சொன்னார்.

"என் தேகம் எரிவது போலிருக்கிறது. அந்தப் பிரம்மசாரியைத் தொடர்ந்து போக வேண்டும்போல் எனக்கு இருக்கிறது. அவனை எப்படியாவது இங்கே தருவிப்பீராக. அவனுடைய விரதத்தையும் தேஜஸையும் என்னவென்று சொல்லுவேன்! அவனைக் காணாமல் என் உள்ளம் துடிக்கிறது" என்று ரிஷிய சிருங்கர் கதறினார்.

விபாண்டகருக்கு விஷயம் தெரிந்துவிட்டது. "மகனே! இது யாரோ ராக்ஷசன் செய்த மாயை. அரக்கர் எப்போதும் தவத்துக்கு இடையூறு செய்வார்கள். பலவித உபாயங்களையும் மோசங்களையும் செய்வார்கள். அவர்களைப் பக்கத்தில் வர இடம் கொடுக்கக் கூடாது" என்று சொல்லி, மோசம் செய்தவர்களைத் தேடிப் பிடிக்க மூன்று நாள் காட்டில் திரிந்து யாரும் சிக்காமல் திரும்பினார்.

பிறகு விபாண்டகர் கிழங்கும் பழங்களும் கொண்டு வர மறுபடியும் ஒருநாள் வெளியே போயிருந்த காலத்தில் வேசியானவள் ரிஷ்யசிருங்கர் இருந்த இடத்துக்கு மெதுவாக வந்தாள். தூரத்தில் அவள் வருவதைக் கண்டவுடனே ரிஷ்யசிருங்கர் திடீர் என்று கரை உடைந்த ஏரியினின்று தண்ணீர் ஓடுவதைப்போல் யுவதியண்டை குதித்து ஓடினார்.

“ஒளி வீசும் பிரம்மசாரியே! என் பிதா வருமுன் உம்முடைய ஆசிரமத்துக்கு நாம் இருவரும் போவோம்” என்று அவள் அழைக்காமலே ரிஷ்யசிருங்கர் அவளுடன் வேகமாகச் சென்றார்.

ஆசிரமமாகத் தோற்றம் கொடுக்கப்பட்டு நதியின் ஓரத்தில் கட்டப்பட்டிருந்த ஓடத்தில் ஏறினார்கள். ரிஷி குமாரர் ஏறினதும் வேசிகள் ஓடத்தை அவிழ்த்துவிட்டு அங்கத தேசத்து அரசனுடைய ராஜதானிக்குப் படகை ஓட்டிச் சென்றார்கள். வழியில் பல விநோதங்களைக் காட்டி ரிஷி குமாரரை வஞ்சித்துக்கொண்டே போய் அவரை அரசனிடம் ஒப்புவித்து விட்டார்கள்.

x x x

ரோமபாதன் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினான். ரிஷி குமாரரைத் தன் அந்தப்புரத்தில் சுகமாக அமைத்து விட்டு அவருக்கு எல்லாப் பணிவிடையும் செய்ய உத்தரவிட்டான். அப்போது மழை பொழிய ஆரம்பித்துவிட்டது. ஆறுகளும் ஏரிகளும் நிறைந்து பிரஜைகளும் களிப்புற்றார்கள். ரோமபாதன் தன் மகள் சாந்தாவை ரிஷி குமாரருக்குக் கொடுத்து விவாகமும் செய்து முடித்தான்!

x x x

எல்லாம் நினைத்தவாறு முடிந்தாலும், அரசனுக்குப் பயம். விபாண்டகர் தன் மகனைக் காணாமல் தேடிக் கொண்டு வருவார். சாபம் கொடுத்துவிடுவார் என்கிற பயம். இதற்காக மந்திரிகளுடன் ஆலோசனை செய்து வனத்திலிருந்து நகரத்துக்கு வரும் வழியில் ஏராளமான

காளைமாடுகளையும், பசுக்களையும், இடையர்களையும் அமைத்து, "முனிசிரேஷ்டர் விபாண்டகர் வருவார். அவரை நன்றாக உபசரியுங்கள். 'இந்தப் பசுக்களும் காளைகளும் வயல்களும் உம்முடைய புத்திரனுடையது. நாங்கள் உமக்கு அடிமைகள், உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?' என்று அவர் கோபம் தணியுமாறு பேசுங்கள்" என்று எச்சரிக்கை செய்து ஏற்படுத்தி வைத்தான்.

எங்கு தேடியும் மகனைக் காணாமல் உக்கிரமான கோபத்தை அடைந்த விபாண்டகர், இது அங்கத ராஜன் வேலையாகத்தான் இருக்கும் என்று சந்தேகங் கொண்டு அரசனை எரிப்பதற்குப் போவதுபோல் ஆறுகளையும் கிராமங்களையும் தாண்டி அரசனுடைய நகரத்தை நோக்கிச் சென்றார்.

அரசன் கட்டளைப்படி, வழியில் இடையர்கள் முனிவரை உபசரித்தார்கள். அதன் பயனாக அவர் பெரும்பாலும் கோபம் தணிந்து ராஜதானியை அடைந்தார்.

x x x

சுவர்க்கத்தில் தேவேந்திரன் இருப்பதைப்போல் அரசன் மாளிகையில் தம்முடைய புத்திரன் இருப்பதைக் கண்டார். மின்னலைப் போன்ற வடிவத்தோடு ஜொலிக்கும் ராஜகுமாரி பாணிக்கிரகணம் செய்யப்பட்ட மனைவியாகத் தன் மகனுடன் அமர்ந்திருப்பதையும் கண்டார்!

விபாண்டகர் அரசனை அனுக்கிரகம் செய்தார். புத்திரனைப் பார்த்து, "இந்த அரசனுக்குப் பிரியமானதெல்லாவற்றையும் செய். ஒரு புத்திரன் பிறந்தவுடன் வனத்துக்கு மறுபடியும் வந்து சேருவாயாக" என்றார். அவ்வாறே ரிஷியசிருங்கரும் செய்தார்.

"நளனுக்குத் தமயந்தியும் தசரத குமாரனுக்குச் சீதையும், வசிஷ்டருக்கு அருந்ததியும், அகஸ்தியருக்கு லோபாமுத்திரையும்போல், யுதிஷ்டிரனே! உனக்குத் திரௌபதியும் போல், சாந்தா ரிஷியசிருங்கருடன் வனத்

திற்குச் சென்று பிரீதியுடன் பணிவிடை செய்து தவத்தில் பங்கு பெற்றாள். ரிஷியசிருங்கருடைய ஆசிரமம் இருந்த இடம் இது. இந்த நதிக் கரையில் இறங்கி ஸ்நானம் செய்து பரிசுத்தனாகக்கடவாய்'' என்று லோமசர் யுதிஷ்டிரனுக்குக் கதையைச் சொல்லி முடித்தார். பாண்டவர்கள் அங்கே ஸ்நான ஜபங்கள் முடித்தனர்.

# பயனற்ற தவம் : யவக்கிரீதன் கதை

பாண்டவர்கள் யாத்திரை போன காலத்தில் ஒரு நாள் ரைப்யருடைய ஆசிரமம் என்று வழங்கும் இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார்கள்:

“அதோ பார், கங்காதீரம்” என்றார் லோமசர்.

“இதுதான் தசரத குமாரன் பரதன் ஸ்நானம்செய்த இடம். விருத்திரனை அதர்ம வழியில் கொன்றதனால் இந்திரன் அடைந்த பிரம்மஹத்தித் தோஷம் இந்தத் தீர்த்தத்தில்தான் கழுவப்பட்டது. சனத்குமாரர் சித்தியடைந்த க்ஷேத்திரமும இதுவே. தேவர்களின் தாயான அதிதி புத்திரப்பேறுபெற இந்த மலையில்தான் பொங்கல் வைத்தாள். யுதிஷ்டிரனே! இந்தப் புண்ணிய மலைமேல் ஏறி, உங்களுடைய புகழுக்கு வந்த இடையூறுகளை யெல்லாம் போக்கிக் கொள்ளுங்கள். இங்கே ஓடும் கங்கையில் நீராடினால் ஆணவமும் குரோதமும் நீங்கும” என்று லோமசர் பாண்டவர்களுக்கு அந்த இடத்தின் மகிமையை எல்லாம் விளக்கிச் சொன்னார்.

x x x

“ரிஷி புத்திரனான யவக்கிரீதன் இவ்விடத்தில் தான் நாச மடைந்தான்” என்று கதையைச் சொல்லுகிறார் :

“பரத்வாஜர், ரைப்யர் என்ற இரண்டு பிராமண சிரேஷ்டர்கள் வனத்தில் ஆசிரமங்கள் அமைத்துக் கொண்டு இருந்தார்கள். இருவரும் மிக நெருங்கிய சிநேகிதர்கள். ரைப்யரும் அவருடைய குமாரர்களான பராவசு, அர்வாவசு என்கிற இருவர்களும் நன்றாக வேதம் ஓதி, பெரிய வித்துவான்களாகப் புகழ் பெற்றார்கள். பரத்வாஜர் தவத்திலேயே தன் நேரத்தை யெல்லாம் கழித்துவந்தார். பரத்வாஜருக்கு ஒரு மகன் இருந்தான். அவன் பெயர் யவக்கிரீதன். பிராமணர்கள் வித்துவா

ஞான ரைப்யரை மதிப்பதுபோல் தன்னுடைய பிதாவை மதிக்கவில்லை யென்பதை யவக்கிரீதன் கண்டான். ரைப் யரும் அவர் குமாரர்களும் தங்கள் கல்வியின் பயனாக ஜனங்களிடம் அதிகமான மதிப்பைப் பெற்றிருப்பதைப் பார்த்து யவக்கிரீதன் பொறாமைப் பட்டுத் துயரம் அடைந்தான்.

x x x

யவக்கிரீதன் இந்தக்குறையைத் தீர்த்துக்கொள்ள இந்திரனைக் குறித்து, கடுந்தவம் புரிந்தான். நெருப்பில் தன் தேகத்தை வாட்டி, தேவராஜனுக்குச்சந்தாபம் உண் டாக்கினான். மனிதர்கள் தவம் செய்து உடலை வாட்டிக் கொள்ளுவது தேவர்களைத் துன்புறுத்தும். யவக்கிரீத னுடைய கடுந்தவத்தைக் கண்டு தேவராஜன் இரங்கி "ஏன் இந்தக் கோரமான தவம்!" என்றான்.

"பிராமணர்கள் இதுவரையில் ஓதியிராத வேதங் கள் எல்லாம எனக்கு வரவேண்டும். நான் பெரிய வித்து வானாகவேண்டும். அதற்காக இந்தத் தவம் செய்கிறேன். குருவின் வாயால் நீண்ட காலம் ஓதிக் கஷ்டப்பட்டு வேதங்களை அடைய வேண்டியதா யிருக்கிறது. அவ் வாறு இல்லாமலே அடைய நான் தவம் செய்கிறேன். எனக்கு அருள்வாயாக" என்றான் யவக்கிரீதன்.

இந்திரன் நகைத்தான். "பிராமணனே! நீ வழியில் லாத வழியில் செல்லுகிறாய். திரும்பிப் போய் தகுந்த குருவை நாடிக் கற்றறிந்து வேதங்களை அடைவாயாக. படிப்புக்கு வழி தவமல்ல. படிப்புக்கு வழி படிப்பேயாகும்" என்று சொல்லிவிட்டு மறைந்தான்.

பரத்வாஜ புத்திரன் விடவில்லை. இன்னும் மிகக் கோரமான முறையில் தவம் செய்தான். அதனால் தேவர் கள் மிகவும் துன்புறுத்தப் பட்டார்கள். இந்திரன் மறு படியும் வந்து யவக்கிரீதனைப் பார்த்து, "நீ சரியாக ஆராய்ந்து விஷயத்தை அறிந்து கொள்ளாமல் இந்தக் காரியத்தில் பிரவேசித்திருக்கிறாய். உன் தகப்பனாருக்கு வேதம் தெரியும். உன்னாலும் ஓத முடியும். போய்க்

கற்றுக்கொண்டு வேதங்களை அடைவாயாக. உடலைவாட்டித் தவம் செய்வதை நிறுத்து'' என்றான்.

இவ்வாறு இந்திரன் இரண்டாம் முறை சொன்னதையும் யவக்கிரீதன் கேட்கவில்லை. "என்னுடைய விருப்பத்தை நீ செய்யாமல் போனால் என்னுடைய சரீர அங்கங்களை ஒவ்வொன்றாக வெட்டி நெருப்பில் போட்டு ஹோமம் செய்யப் போகிறேன், விடுவதில்லை'' என்றான்.

x x x

அவ்வாறே கடுந்தவம் செய்தான். தவத்துக்கு இடையில் ஒரு நாள் காலை கங்கையில் ஸ்நானம் செய்யப் போனான். அங்கே நோய்ப்பட்டு மெலிந்திருக்கும் ஒரு வயோதிகப் பிராமணன் கங்கைக் கரையில் உட்கார்ந்து கொண்டு பிடிப்பிடியாக மணலை எடுத்துத் தண்ணீரில் போட்டுக்கொண்டிருந்தான்.

''என்ன செய்கிறாய், கிழவா?'' என்று கேட்டான் யவக்கிரீதன்.

''கங்கையைத் தாண்டச் சேது ஒன்று கட்டுகிறேன். இங்கே நதிக்குக் குறுக்காக ஒரு மணற் சேது கட்டி விட்டால் ஜனங்களுக்குச் சௌகரியமாக இருக்கும். இப்போது கங்கையைத் தாண்டிப் போக ரொம்பக் கஷ்டப்படுகிறார்கள். ஆகையால் இந்தக் காரியத்தில் இருக்கிறேன்'' என்றான் அந்தக் கிழவன்.

யவக்கிரீதன் நகைத்து, ''ஓடும் ஆற்றை இம்மாதிரி தடுத்துச் சேதுவை உண்டாக்க முடியாது. எழுந்து வேறு காரியம் செய்'' என்றான்.

''தாங்கள் வேதங்களை ஓதாமலே வேதங்களை அடையப் பெருந் தவம் செய்கிறீர்கள் அல்லவா? அவ்விதமே நானும் கங்கைக்குச் சேதுவைக் கட்ட முயற்சி செய்கிறேன்'' என்றான் கிழவன்.

x x x

யவக்கிரீதனுக்குக் கிழவன் யார்என்று இப்போது தெரிந்து விட்டது.

“தேவராஜனே, என்னுடைய முயற்சி வீண் என்று நீ எண்ணுவதாயிருந்தால், எவ்வாறு நான் வித்துவான் ஆவேனோ, அவ்வாறு எனக்கு வரம் தருவாயாக” என்று மறுபடியும் யவக்கிரீதன் இந்திரனை வருந்தி வேண்டினான்.

“சரி, வரம் தந்தேன். போய் வேதங்கள் அத்தியயனம் செய், நீ வித்துவான் ஆவாய்” என்று இந்திரன் யவக்கிரீதனை ஆசீர்வதித்துத் திருப்தி செய்தான்.

# யவக்கிரீதன் மாண்ட கதை

யவக்கிரீதன் வேதம் ஓதிப் பாண்டித்தியமும் அடைந்தான். "நான் இந்திரனிடம் வரம் பெற்று வேதங்களை அடைந்தேன்" என்று மிகுந்த கர்வம்கொண்டவனாக அலைந்தான். பரத்வாஜருக்கு இது பிடிக்கவில்லை. தம்முடைய நண்பர் ரைப்யரை இவன் அவமரியாதை செய்துவிட்டு நாசத்தை சம்பாதித்துக் கொள்வான் என்று பயந்தார்.

"பிடிவாதத் தவம் செய்யும் அற்பர்களுக்கும் தேவர்கள் வரங்களைக் கொடுப்பார்கள். அதனால் அவர்கள் அடக்கத்தை இழந்து மதிமயங்கிப்போய்ச் சீக்கிரமே அழிந்து போவார்கள்" என்று பரத்வாஜர் மகனுக்குச் சொன்னார். புராணக் கதை ஒன்றை யவக்கிரீதனுக்கு உதாரணமாகவும் சொன்னார்.

* * *

முன்னொரு காலத்தில் பாலதிஹி என்ற ஒரு புகழ் பெற்ற ரிஷி இருந்தார். அவருக்கு ஒரு குமாரன் இருந்தான். அவன் இறந்துவிட்டதைப் பார்த்து ரிஷியானவர் சோகத்தால் வருந்தி, சாகாத ஒரு மகனை அடைய வேண்டும் என்று பெருந்தவம் செய்தார்.

"மனித ஜாதி சாகாத வரம் பெற முடியாது. ஆயுளுக்கு ஒரு வரம்பு இருக்கத்தான் இருக்க வேண்டும். ஏதேனும் ஒரு வரம்பு உம் இஷ்டப்படி நீரே வைத்துக் கேளும்" என்று தேவர்கள் ரிஷிக்குச் சொல்ல, அவரும், "சரி, அப்படியானால் அதோ அந்த மலை இருக்கும் வரையில் என் மகனுடைய உயிரும் இருக்கக் கடவது" என்றார். அவ்வாறே வரம் பெற்றார். பிறகு அவருக்கு ஒரு மகன் உண்டானான். அவன் பெயர் மேதாவி.

தன்னுடைய உயிருக்கு அபாயமே இல்லை, மலைபோல் ஸ்திரமாக இருக்கலாம் என்று மேதாவி கர்வம் கொண்

டான். எல்லாரிடத்திலும் மரியாதை யின்றி நடந்து கொண்டு வந்தான்.

ஒரு நாள் இந்தத் துஷ்டன் தனுஷாக்ஷர் என்கிற மகாத்மாவினிடம் அபசாரமாக நடந்துகொண்டான். அவர் உடனே, "நீ சாம்பலாவாய்" என்று சாபமிட்டார்.

ரிஷி குமாரனுன மேதாவியோ அந்த சாபத்தினுல் ஒரு விதத்திலும் துன்பம் அடையாமல் ஆரோக்கியமாகவே நின்றுன். இதைக்கண்டு வியப்படைந்த பெரியவருக்கு இவன் பெற்றிருந்த வரத்தைப்பற்றி நினைவு வந்தது.

'அப்படியா?!' என்று தனுஷாக்ஷர் தன்னை ஒரு காட்டெருமையாகச் செய்துகொண்டு தன்னுடைய தவ வன்மையால் மலையை முட்டி உடைத்தார். மேதாவியின் ஆயுள் தீர்ந்து அவன் இறந்து கீழே விழுந்தான்.

x x x

"இந்தப் புராணக் கதையிலிருந்து அறிவு பெறு வாயாக. வரங்களைப் பெற்று கர்வப்பட்டு அழிந்துபோக வேண்டாம். அடக்கத்துடன் இருப்பாயாக. மரியாதையை மறக்காதே. மகான் ரைப்யரிடம் போகாதே" என்று பரத்வாஜர் யவக்கிரீதனுக்கு எச்சரிக்கை செய்தார்.

x x x

வசந்த காலம். மரங்களும் கொடிகளும் எல்லாம் அழகிய மலர்கள் நிறைந்து வனம் சோபித்தது.

உலகமெல்லாம் மன்மதன் வசமாக இருந்தது. ரைப் யருடைய ஆசிரமத்தில் புஷ்பித்த செடிகளின் மத்தியில் பராவசுவின் மனைவி தனியாக நடந்து கொண்டிருந்தாள். அழகும் தைரியமும் பரிசுத்தமும் ஒன்று கூடி ஒரு கின்னர ஸ்திரீயைப்போல் விளங்கினுள். அச்சமயம் யவக்ரீதன் அவ்விடம் வந்து அவள் வடிவத்தைப் பார்த்து மன மாறுதலை யடைந்தான்.

காமத்தால் மதியிழந்த யவக்கிரீதன், "அழகியே இங்கே வா!" என்று அவளை அழைத்தான். அவள்

வியப்பும் வெட்கமும் அடைந்தாள். ரிஷி புத்திரனுடைய சாபத்துக்குப் பயந்து அவன் சொன்னபடியே அவன் நின்ற இடத்திற்குச் சென்றாள். அவன் அவளைத் தனி இடத்துக்கு அழைத்துச் சென்று காம மயக்கத்தால் தூண்டப்பட்டு அவளுக்கு வெட்கம் உண்டாகும்படி நடந்து கொண்டான்.

x x x

ரைப்யர் ஆசிரமத்துக்குத் திரும்பி வந்தார். நடந்த நிகழ்ச்சியால் துன்புறுத்தப்பட்டு அழுதுகொண்டிருந்த மருமகளைப் பார்த்து, "ஏன் அழுகிறாய்? என்ன நடந்தது?" என்று விசாரித்தார். நடந்த அவமானத்தைச் சொன்னாள். ரைப்யர் கோபாவேசமாகி, தன் தலையிலிருந்து ஒரு ரோமத்தைப் பிய்த்து அக்கினியில் மந்திரம் சொல்லிப் போட்டார்.

அவருடைய மருமகளுடைய அழகுக்குச் சமான வடிவம்கொண்ட ஒரு பெண்ணுருவம் ஹோமத்தீயிலிருந்து கிளம்பிற்று. மறுபடியும் ஜடையிலிருந்து ஒரு ரோமத்தை எடுத்து ஹோமம் செய்தார். அதன் பயனாக ஒரு பயங்கரமான பூதம் நெருப்பிலிருந்து கிளம்பிற்று. இந்த இரண்டு உருவங்களையும் பார்த்து ரைப்யர், "போய் யவக்கிரீதனை வதம் செய்யுங்கள்" என்று நியமித்தார். "அப்படியே!" என்று அந்த இரு பூதங்களும் சென்றன.

x x x

காலைக்கடன் கழித்துக் கொண்டிருந்த யவக்கிரீதனருகில் பெண் பூதம் சென்று நகைத்தும் விளையாடியும் அவனை ஏமாற்றி அவன் கமண்டலத்தை எடுத்துக்கொண்டுபோய்விட்டது. அந்தச் சமயத்தில் ஆண் பேய் சூலத்தைக் கையில் ஓங்கி ரிஷி குமாரன்மேல் பாய்ந்தது.

யவக்கிரீதன் பயந்து எழுந்தான். அசுத்த நிலையில் தன் மந்திரங்கள் உதவமாட்டா என்று அறிந்து, கால் கழுவ கமண்டலம் எடுக்கப் போனான். அது இல்லாததைக் கண்டு தண்ணீர் இருக்கும் குளத்தைத் தேடி ஓடி

ஞன், குளம் வற்றிக் கிடந்தது. பக்கத்திலிருந்த ஓடைக்குச் சென்ருன. அதுவும் வற்றிக் கிடந்தது. இவ்வாறே எங்கு சென்ருலும் தண்ணீர் கிடைக்கவில்லை. பயங்கரத் தோற்றத்துடன் பூதம் துரத்திக்கொண்டே வந்தது. எங்கும் தண்ணீர் காணுமல் அரக்கனுல் துரத்தப்பட்டு விரத வலிமையிழந்து ஓடிய யவக்ரீதன், கடைசியாகத் தன் தகப்பனுருடைய அக்கினி ஹோத்திர சாலைக்குள் புகுந்து, தப்பித்துக் கொள்ளப் பார்த்தான். சாலை வாயிலில் இருந்த காவலாளி அரைக் குருடன். பயந்து கத்திக்கொண்டு ஓடிவரும் யவக்கிரீதனுடைய அடையாளம் தெரிந்து கொள்ளாமல் யாரோ என்று தடுத்தான். இதற்குள் அரக்கன் வந்து யவக்கிரீதனைச் சூலத்தால் குத்திக் கொன்ருன்.

x x x

பரத்வாஜர் ஆசிரமத்தை நோக்கி வந்தபோது யக்ஞ சாலை வழக்கம்போல் ஜொலிக்கவில்லை. வாயிலில் குத்துண்டு உயிர் நீங்கிக் கிடக்கும் தன் மகனையும் பார்த்தார். ரைப்பயிடம் ஏதோ மரியாதை தப்பி நடந்துவிட்டு இந்தக் கதி அடைந்தான் என்று மனதில் தீர்மானித்துக் கொண்டார்.

"ஐயோ! என் பிள்ளாய்! உன் கர்வத்தால் மாண்டாயா? பிராமணர்கள் யாரும் ஓதாத வேதங்களை நீ வரமாகப் பெற்றது ஒரு பெருந் தவறல்லவே! நீ ஏன் இதற்காகச் சபிக்கப் பட்டாய்? என் ஒரே புத்திரனை நான் இழக்கச் செய்த அந்த ரைப்யர், அவருடைய இரு குமாரர்களில் ஒருவனுல் கொல்லப்பட்டு மாள்வாராக" என்று புத்திர சோகத்திலுைம் கோபாவேசத்திலுைம் விசாரியாமல் சாபமிட்டார்.

பிறகு உடனே தெளிவு அடைந்து, "ஹா! புத்திரனைப் பெருதவர்களே புண்ணியவான்கள். பெற்ற புத்திரனை நான் இழந்தேன். தோழனையும் சபித்தேன்! நான் உயிருடன் இருந்து என்ன பயன்?" என்ருர். மகனுடைய பிரேதத்தை தகனம் செய்து அந்தத் தீயில் தானும் புகுந்து உயிர் நீத்தார்.

# படிப்பு மட்டும் போதாது

ரைப்ய ரிஷியினுடைய சிஷ்யன் பிருஹத்யும்னன் என்கிற அரசன் ஒரு பெரிய யாகம் செய்தான். அதை நடத்திக்கொடுக்க தன் ஆசாரியாருடைய குமாரர்களாகிய பராவசு, அர்வாவசு இருவர்களையும் அனுப்பும்படி அரசன் கேட்டுக் கொண்டான். பிதாவினுடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு அவர்களிருவரும் மிகவும் மகிழ்ச்சியடைந்து அரசனுடைய நகரத்துக்குச் சென்றார்கள்.

சத்ர யாகத்திற்காக ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கையில் ஒருநாள் பராவசு தன் மனைவியைப் பார்த்து வர விரும்பினான். இரவில் தனியாக நடந்து தன் ஆசிரமம் இருந்த வனத்திற்கு, பொழுது விடிவதற்குமுன் இருட்டிலேயே வந்து சேர்ந்தான். அப்போது அங்கே புதரண்டை தோல் போர்த்துக்கொண்டு இருட்டில இருந்த ரைப்யரைக் கண்டு காட்டு மிருகம் என்று எண்ணிப் பயந்து கையிலிருந்த ஆயுதத்தை வீசினான். அது அவரைக் கொன்றது.

பிறகு துக்கப்பட்டு இது பரத்வாஜர் இட்ட சாபத்தின் பயன் என்று தெரிந்துகொண்டான். பிதாவுக்குச் செய்ய வேண்டிய பிரேத காரியங்களை அவசர அவசரமாகச் செய்துவிட்டு அர்வாவசுவிடம் சென்று நடந்ததைச் சொன்னான். அரசனுடைய யாக காரியத்திற்குக் குந்தகம் ஏற்படக் கூடாது, தெரியாமல் தகப்பனைக் கொன்ற என் பிரம்மஹத்தி தோஷத்தை நீக்குவதற்குச் செய்ய வேண்டிய பிராயச் சித்த விரதத்தை நீ அனுசரித்து எனக்காக நடத்துவாயாக. கொல்ல வேண்டும் என்கிற எண்ணமில்லாமல் கொன்ற பாபத்திற்குப் பிராயச்சித்தம் உண்டு. எனக்காக நீ விரதம இருந்து இதை நடத்திவிட்டாயானால், நான் ஒருவனே அரசனுடைய யாகத்தைக் குந்தகமின்றி முடித்துவிடுகிறேன். தனியாக யாகத்தை நடத்த உன்னால் முடியாது.

ஆகையால் இவ்வாறு சொல்லுகிறேன்'' என்றான். தர்ம வானான தம்பி ஒப்புக்கொண்டு, அரசனுடைய சத்ர யாகத்தைச் சரிவர நீ நடத்திவிடு. அதற்கு என்னுடைய சாமர்த்தியம் போதாது. பிரம்மஹத்தி தோஷத்திற்கு நான் உமக்காகத் தவமிருந்து கடமை செலுத்துகிறேன்'' என்று சொல்லிவிட்டு வனம் சென்றான்.

அவ்வாறே தர்மாத்மாவான அர்வாவசு, அண்ணனுடைய பிரம்மஹத்தி தோஷத்தைத் தானே வகித்துக் கொண்டு பிராயச்சித்தம் செய்துவிட்டு, பிறகு சத்ர யாகத்திற்கு வந்து சேர்ந்தான்.

தானே பிராயச்சித்தம் செய்யாதபடியால் பராவசுவின் பிரம்மஹத்தி தோஷம் நீங்கவில்லை. அது அவன் உள்ளத்தில் பாப எண்ணங்களை உண்டாக்கிக்கொண்டே இருந்தது. யாகசாலைக்குத் தம்பி வந்ததைப் பார்த்ததும் பராவசு அவன் மேல் பொறாமை கொண்டான். தம்பியின் முகத்தில் வீசிய பிரம்ம தேஜஸ்ஸானது அண்ணன் உள்ளத்தில் பொறாமையைக் கிளப்பிற்று. அவன் மேல் அக்கிரமமாக அபவாதம் சுமத்தி அவமானப்படுத்த நிச்சயித்தான்.

''பிரம்மஹத்தியைச் செய்த இவன் எவ்வாறு யாக சாலையில் பிரவேசிக்கலாம்?'' என்று சபையிலிருந்த அரசனிடம் பராவசு உரக்கச் சொன்னான்.

இதை அரசன் கேட்டவுடன் அர்வாவசுவை உடனே அப்புறப்படுத்திவிட வேலைக்காரர்களுக்கு உத்தர விட்டான்.

''பிரம்மஹத்தி என்னால் செய்யப்பட்டதல்ல'' என்று அர்வாவசு முறையிட்டான். யாரும் அவன் பேச்சைக் கேட்கவில்லை. மிக்க அவமானத்துடன் யாகசாலையிலிருந்து துரத்தப் பட்டான்.

''சத்தியமாகச் சொல்லுகிறேன். பிரம்மஹத்தி செய்தது என் அண்ணன். அவனுக்காக நான் விரதம் இருந்து அவனைக் காப்பாற்றினேன்'' என்று அர்வாவசு திரும்பத் திரும்பச் சொன்னான்.

"பிரம்மஹத்தியும் செய்து விட்டு அதற்காக விரதமும் இருந்துவிட்டு, பொய்யாக அண்ணன்மேல் பழி போடுகிறாயா?" என்று அவனை அனைவரும் முன்னைவிட அதிகமாக ஏசித் துரத்தினார்கள்.

இவ்வாறு அநியாயமாக அபவாதத்துக்கு இரையாக்கப்பட்டு பொய்யன் எனறும் ஏசப்பட்ட தர்மாத்மாவான அர்வாவசு பேசாமல் வனம் சென்றான். பிறகு உக்கிரமான தவம் செய்தான்.

x x x

தேவர்கள் பிரசன்னமாகி, "நீ தர்மவான்! உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டார்கள்.

தனக்கு அண்ணன் இழைத்த அநியாயத்தினால் உண்டான கோபம் அதற்குள் முற்றிலும் இழந்தவனாகி தன்னுடைய பிதா மறுபடியும் உயிர் படைத்து வரவேண்டுமென்றும் தன் சகோதரன் தோஷ மில்லாதவனாக வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான்.

"அப்படியே ஆகுக" என்று தேவர்களும் வரம் கொடுத்தார்கள்.

இந்தக் கதையை லோமசர் யுதிஷ்டிரனுக்கு ரைப்யாசிரமத்தண்டை சொல்லி, "பாண்டவர்களே! கங்கையில் ஸ்நானம் செய்யுங்கள்! புண்ணிய நதியில் கோபத்தை ஒழியுங்கள்!" என்றார்.

அர்வாவசுவும் பராவசுவும் ஒரே தகப்பன் மக்கள், ரைப்யர் மகா வித்வான். அவரிடம் இருவரும் கூடவே படித்துப் பண்டிதர்களானார்கள். ஆயினும் படிப்பு வேறு குணம் வேறு. நன்மைக்கும் தீமைக்கும் உள்ள வித்தியாசத்தை அறிந்தபின் ஒருவன் தீய செயலில் புகமாட்டான் என்பது உண்மை. ஆனால் அடைந்த அறிவானது உள்ளத்தில் ஊடுருவிப் பாய்ந்து நிலையாக இருக்கவேண்டும். அப்போதே படிப்பும் சீலமும் ஒன்றாகும். உள்ளத்தில் ஊடுருவிப் பாயாத கல்வி சீலத்தை உண்டாக்காது. வெறும் பாண்டித்திய மாகத்தான் நிற்கும்.

# அஷ்டாவக்கிரன்

பாண்டவர்கள் வனவாசம் செய்துகொண்டு சுற்றித் திரிந்தபோது உபநிஷத்தில் சொல்லப்பட்ட உலகத்தாருடைய ஆசிரமம் என்று வழங்கும் வனத்துக்கு ஒரு நாள் வந்து சேர்ந்தார்கள். லோமசர் அந்த இடத்துக்குரிய கதையை யுதிஷ்டிரனுக்குச் சொன்னார்.

வேதாந்தம் உபதேசித்த பெரியோர்களில் சிறந்தவரான உத்தாலகருக்குக் கஹோளர் என்ற ஒரு சிஷ்யர் இருந்தார். அவர் மிகுந்த நியமமும் பக்தியும் கொண்டவர். ஆனால் அவருக்குக் கல்வி கற்கும் திறமை இல்லை. இதனால் அவரை மற்ற சிஷ்யர்கள் சிரித்துப் பரிகசிப்பார்கள். உத்தாலகர் இதைப் பொருட்படுத்தாமல் கஹோளருடைய நல்ல குணத்தையும் பக்தி சீலம் நியமம் இவற்றையும் பார்த்துத் திருப்தியடைந்து தன் குமாரத்தி சுஜாதையை விவாகம் செய்து கொடுத்தார்.

கஹோளருக்கும் சுஜாதைக்கும் ஒரு மகன் உண்டானான். தகப்பன் தாய் இருவர்களுடைய குண விசேஷங்களும் குழந்தைக்குப் பிறவிச் சம்பத்தாகும். உத்தாலகருடைய பேரனான இந்தக் குழந்தை தாய் வயிற்றிலிருக்கும்போதே வேதத்தை அறிந்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. கஹோளர் தப்பும் தவறுமாக அத்தியயனம் செய்வதை வயிற்றுக்குள்ளிருந்த குழந்தை கேட்டுப் பிழைகளை பொறுக்கமாட்டாமல் கருவிலேயே குழந்தை எட்டுக் கோணல் அடைந்துவிட்டதாம். அந்த கோணல்களுடன் பிறந்ததால் குழந்தைக்கு அஷ்டாவக்கிரன் என்று பெயர் வழங்கிற்று. வக்கிரம் என்றால் கோணல்.

x x x

அஷ்டாவக்கிரன் பால்ய பருவத்திலேயே சிறந்த வித்துவானாக வளர்ந்தான். பன்னிரண்டு வயதுக்குள்ளேயே வேத வேதாந்தங்களை ஓதி முடித்துவிட்டான்.

ஒரு நாள் மிதிலையில் ஜனகன் ஒரு பெரிய யாகம் நடத்துவதாகவும் அங்கே வழக்கம்போல் வித்துவான்கள் கூடி சாஸ்திரங்களை வாதிப்பார்கள் என்றும் கேள்விப் பட்டு அஷ்டாவக்கிரன் "மிதிலைக்குப் போகலாம் வா!" என்று தன் அக்காள் மகன் சுவேதகேதுவுக்குச் சொல்லி இருவரும் சென்றார்கள்.

மிதிலையில் யாகசாலைக்குப் போகும் வழியில் அரச னும் பரிவாரமும் சென்றுகொண்டிருந்தார்கள். "விலகு! விலகு! ராஜாவுக்கு வழிவிட்டு விலகு!" என்று வேலைக் காரர்கள் கத்திக்கொண்டு முன்னால் சென்றார்கள். அஷ்டாவக்கிரனை வேலைக்காரன் விலகச் சொன்ன போது அவன்:

"ராஜ சேவகர்காள்! குருடனுக்கும் அங்கஹீனர்க ளுக்கும் பெண்களுக்கும் சுமை தூக்கிக்கொண்டு செல்ப வர்களுக்கும் அரசனுமே விலகி வழிவிட வேண்டும். பாதையில் வேதம் ஓதிய அந்தணன் சென்றுகொண்டிருந் தால் அவனை விலகிச் செல்லும்படி அரசன் சொல்ல லாகாது. இது சாத்திரம்" என்றான்.

பிராமணப் பையனுடைய கம்பீரப் பேச்சைக் கேட்ட அரசன் பிரமித்து "பிராமணச் சிறுவன் சொல்லுவது சரியே! நெருப்பில் சிறியதென்றும் பெரியதென்றும் இல்லை; சிறு நெருப்பும் சுடும்" என்று தன் பரிவாரத்துக் குச் சொல்லி வழிவிட்டு விலகினான்.

x x x

**யா**க சாலையில் அஷ்டாவக்கிரனும் சுவேதகேதுவும் நுழைந்தார்கள்.

"இந்த இடத்தில் சிறுவர்கள் பிரவேசிக்கக் கூடாது. வேதம் ஓதிய முதிர்ந்தவர்களே யாக சாலைக்குள் போக லாம்" என்று வாயில்காப்போன் தடுத்தான்.

"நாங்கள் சிறுவர்கள் அல்ல. விரதங்களை காத்து வேதம் ஓதியவர்களாவோம். வேதாந்த சாஸ்திரத்தின் முடிவுகளை அறிந்தவர்கள், வயதையும் வெளித் தோற்றத்

தையும் பார்த்து ஒருவனைச் சிறியவன் என்று நிச்சயிக்க மாட்டார்கள்'' என்றான் அஷ்டாவக்கிரன்.

துவாரபாலகன் "நில், நில்! வீண் பேச்சுப் பேசுகிறாய். தற்புகழ்ச்சி வேண்டாம். சிறுவனாகிய நீ எவ்வாறு உபநிஷத்தை ஓதி வேதாந்த உண்மையறிந்திருக்க முடியும்?'' என்றான்.

"இலவங்காயைப்போல் வெளி வடிவம் பருத்து உள்ளே வெறும் பஞ்சாக இருந்தால் என்ன பயன்? வெளித் தோற்றம் அறிவுக்குப் பிரமாணமாகாது. முதிர்ச்சி என்பது சரீர வடிவத்தில் இல்லை. உயரமாக வளராதவனும் ஞானம் அடைந்திருந்தால் சாஸ்திரப்படி முதிர்ந்தவன் ஆவான். அறிவு அடையாத மனிதன் வயதினால் மட்டும் முதிர்ந்தவன் ஆகமாட்டான். என்னைத் தடுக்காதே'' என்றான் சிறுவன்.

"சிறு பையனாயிருந்து ஏன் வீணாக முதிர்ந்தவனைப் போல் பேசுகிறாய்?'' என்றான் வாயில் காப்போன்.

"துவார பாலகனே! தலை நரைப்பது முதிர்ச்சிக்குப் பிரமாணமல்ல. வயதும், தலை நரைப்பும், பொருளும், பந்துக்களின் கூட்டமும் ஒருவனைப் பெரியவனாக்கும் என்று ரிஷிகள் சொல்லவில்லை. எவன் வேதங்களை அங்கங்களுடன் படித்து ஆராய்ந்து பொருள் அறிந்திருக்கிறானோ அவனே பெரியவன். நான் அரசனுடைய முக்கிய வித்துவானாகிய வந்தி பண்டிதனைப் பார்க்க வந்திருக்கிறேன். ஜனக ராஜனுக்கு என் விருப்பத்தைத் தெரிவிப்பாயாக'' என்று அஷ்டாவக்கிரன் சொன்னான்.

இதற்குள் அரசன் வந்து சேர்ந்தான். பையனுடைய சாகசத்தை வாயில்காப்போன் அரசனிடம் தெரியப்படுத்தினான். அஷ்டாவக்கிரனைப் பார்த்து, தான் முந்திப் பார்த்த சிறுவன் என்பதை அரசன் தெரிந்துகொண்டான்.

"என்னுடைய வித்துவான் வந்தி பல பெரிய வித்துவான்களை இதற்குமுந்தி வாதத்தில் தோற்கடித்து அவர்

களை கடலில் வீழ்த்தும்படி செய்திருக்க, சிறுவனாகிய நீ ஏன் இந்தத் துணிச்சல் காரியம் செய்கிறாய்?'' என்று அரசன் கேட்டான்.

"உம்முடைய வித்துவான் என்னைப்போல் வேதாந்தப் பயிற்சி பெற்றவர்களுடன் வாதிக்கவில்லை. பண்டிதர் களாகாதவர்களைத் தோற்கடித்து ஆகம்பாவம் கொண்டிருக்கிறார். என் தகப்பனாரை இவர் வென்று அவரை நீரில் மூழ்கவைத்ததாக என தாயாரிடம் நான் அறிந்து அதற்காகவே கடன் தீர்க்க வந்திருக்கிறேன். இவரை நான் எதிர்த்து வெல்லப் போகிறேன். அச்சு முறிந்து வண்டி வீழ்வதைப்போல் உம்முடைய வித்துவான என முன் வீழ்வதைப் பார்ப்பீர். உம்முடைய வந்தியை என் னருகில் அழைத்து வரச் செய்வீராக" என்றான் அஷ்டாவக்கிரன்.

x x x

வந்தியுடன் அஷ்டாவக்கிரன் வாதம் நடத்தினான். கேள்விகள் கேட்கப்பட்டு ஒருவர் சொல்லுக்கு ஒருவர் பதில் சொல்ல, மிதிலாநகரத்துப் பண்டிதனான வந்தி தோல்வியடைந்து அஷ்டாவக்கிரன் வெற்றியடைந்ததாகச் சபையிலுள்ளோர் அனைவரும் ஒப்புக்கொள்ள நேர்ந்தது. மிதிலா நகரத்துப் பண்டிதன தலை குனிந்தான். பந்தயப்படி அவன் கடலில் அமிழ்த்தப்பட்டு வருணாலயம் சென்றான்.

அப்போது அஷ்டாவக்கிரனுடைய தகப்பனான கஹோளருடைய ஆத்மா மகனுடைய புகழைக் கண்டு மகிழ்ச்சி யடைந்து சொன்னதாக பௌராணிகர் அவன் வாய் மூலம் தத்துவத்தை விளக்குகிறார்:

"தகப்பனைப்போல் மகன் இருக்க வேண்டியதில்லை. தேக பலமில்லாத தகப்பனுக்குத் தேக பலம் படைத்த மகனும், கல்வி கற்பதற்கு வேண்டிய திறமையைப் படைத்திராத ஒருவனுக்குப் பண்டித குமாரனும் உண் டாவதுண்டு. வடிவத்தையும் வயதையும் பார்த்து மனிதனுடைய பெருமையை நிர்ணயிப்பது தவறு. வெளித் தோற்றம் ஏமாற்றத்தைத்தான் தரும்."

# பீமனும் ஹனுமானும்

"அருச்சுனன் இல்லாமல் இந்தக் காம்யக வனம் எனக்கு அழகாகவே காணப்படவில்லை. சவ்யசாசியைக் காணுமல் எனக்குச் சந்தோஷமில்லை" என்று அடிக்கடி திரௌபதி சொல்லி வந்தாள்.

திவ்வியாஸ்திரங்களைப் பெறுவதற்காக அருச்சுனன் இமயமலையில் தவம் செய்துகொண்டிருந்த காலத்தில் அந்தப் பிரிவைப் பொறுக்க முடியாமல் பாண்டவர்களுக்கும் பாஞ்சாலிக்கும் வனவாசம் மிக்க கஷ்டமாயிருந்தது.

பாஞ்சாலியைப் பார்த்து, பீமசேனன் "கல்யாணி! நீ அருச்சுனனை நினைத்துச் சொல்லும் சொற்கள் என் உள்ளத்தில் அமிர்தம்போல் ஆனந்தமாய்ப் பாய்கின்றன. தம்பியைக் காணுத என் கண்களுக்கும் இந்த அழகிய வனம் ஒளியிழந்த இருட்டாகக் காணப்படுகிறது. பல்குனனைப் பாராமல் என் மனத்தில் அமைதி இல்லை. எல்லாத் திசைகளும் இருட்டில் மூடப்பட்டதுபோல் தோன்றுகிறது. சகதேவா, உனக்கு எப்படி இருக்கிறது?" என்ருன்.

"அண்ணனில்லாத இந்த ஆசிரமம் சூனியமாக இருக்கிறது. இந்த இடத்தைவிட்டு வேறு எங்கேயாவது போய் அவனை மறக்கப் பார்க்கலாம்" என்ருன் சகதேவன்.

யுதிஷ்டிரன், புரோகிதர் தௌமியரைப் பார்த்து, "அஸ்திரங்களைப் பெறுவதற்காகத் தம்பியை தேசாந்தரம் அனுப்பினேன். வீரனும் சமர்த்தனுமான அவன் இன்னும் திரும்பவில்லை. பீஷ்ம துரோணர்களையும் கிருபரையும் அசுவத்தாமரையும் ஜெயிக்கக் கூடிய அஸ்திரங்களை தேவராஜனிடமிருந்து அடைவதற்காக அவனை இமயமலைக்கு அனுப்பினேம். பீஷ்மரும் துரோணரும் கிருபரும் திருதராஷ்டிர புத்திரர்களின் பட்சத்தில் நின்று யுத்தம் செய்வார்கள் என்பது நிச்சயம். கர்ணனும் திவ்ய அஸ்தி

ரங்களை அறிந்த மகாரதன். அவன் அருச்சுனனோடு போர் புரிவதில் அதிக விருப்பம் கொண்டவன். அருச்சுனன் இந்திரனை நேரில் கண்டு அஸ்திரங்களைப் பெற்று வந்தானேயாகில் இந்த மகாரதர்களை எதிர்த்து வெற்றி பெறலாம் என்று ஆசைப்பட்டு அவனைத் தேசாந்திரம் அனுப்பினேன். மிகவும் கஷ்டமான காரியத்திற்கு அவனை அனுப்பிவிட்டு நாங்கள் இங்கே சுகமாக இருக்கிறோம். அவன் பிரிவை எங்களால் பொறுக்க முடியவில்லை. அவனோடு இருந்த இந்த இடத்தைவிட்டு வேறு எங்கேயாவது போய் அவன் பிரிவை மறக்கப் பார்க்கலாம என்று எண்ணுகிறேன். போகும்படியான இடங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும்'' என்று புரோகிதரைக் கேட்டான்.

தௌம்மியர் அநேக வனங்களையும் புண்ணிய தீர்த்தங்களையும் பற்றிச் சொன்னார். அந்த இடங்களுக்குச் சென்று அருச்சுனன் பிரிவை ஒருவாறு ஆற்றிக் கொள்ளலாம் என்று எல்லாரும் புறப்பட்டார்கள். பல ஸ்தலங்களுக்குச் சென்று, அந்த இடங்களின் புண்ணிய கதைகளைக் கேட்டுக்கொண்டே பல ஆண்டுகள் கழித்தனர். சில இடங்களில் மலைகள் ஏறியும் காடுகள் தாண்டியும் சிரமம் தாங்காமல் திரௌபதி சளைத்து விடுவாள். பீமன் அந்தச் சமயங்களில் எல்லாருக்கும் தைரியம் உண்டாகும்படியான சேவை செய்துவந்தான். அவனுக்குத் துணையாக சில சமயம் பீமனுடைய அசுர மனைவியின் மகன் கடோத்கஜனும் வந்து உதவுவான்.

X X X

இமயமலைப் பிரதேசத்தில் பல இடங்களைப் பார்த்துக் கொண்டே போனபோது, ஒரு இடத்தில் பயங்கரமான காட்டில் பாதை மிகக் கடினமாயிருந்தது. அதைக் கண்டு கவலையுற்ற யுதிஷ்டிரன் பீமசேனனைப் பார்த்து, "குந்திநந்தனா! திரௌபதி இந்த இடத்தில் நடப்பது கஷ்டம். நானும் நகுலனும் லோமச ரிஷியும் போவோம். நீ சகதேவனுடன் ஜாக்கிரதையாகத் திரௌபதியைப் பாதுகாத்துக்கொண்டு கங்கா துவாரத்தில் வசித்துக் கொண்டிரு. திரும்பிச் சென்று அந்த இடத்தில் நாங்கள் வரும் வரையில் இருப்பாயாக'' என்றான்.

"மகாராஜாவே! திரௌபதி இதற்கு ஒப்புக்கொள்ள மாட்டாள். அருச்சுனன் ஒருவனுடைய பிரிவே உமக்கு இவ்வளவு வருத்தம் தந்திருக்க, சகதேவனையும் என்னையும் திரௌபதியையும் பாராமல் நீர் மனவருத்தம் தாங்க மாட்டீர். ராக்ஷஸர்களும் மிருகங்களும் நிறைந்த இந்தக் காட்டில் உம்மைத் தனியாக அனுப்ப நான் ஒருபொழுதும் சம்மதிக்கமாட்டேன். பாஞ்சாலியும் இதற்கு ஒப்ப மாட்டாள். அவள் நடக்க முடியாத இடங்களில் நான் அவளைத் தூக்கிச் செல்வேன். நகுல சகதேவர்களையும் நான் தூக்கிச் செல்வேன். நீர் அதைப்பற்றிக் கவலைப் பட வேண்டாம்" என்றான் பீமசேனன.

இவ்வாறு தம்பி சொன்னதைக் கேட்ட தருமபுத்திரன் அவனைக் கட்டித் தழுவிக்கொண்டு, "பீமனே! உன்னுடைய தேகபலம் எப்போதும் வளர்ந்து கொண்டே போகக்கடவது!" என்று ஆசீர்வதித்தான்.

பாஞ்சாலி சிரித்துக்கொண்டு தருமராஜனைப்பார்த்து "என்னை யாரும் தூக்கிச் செல்ல வேண்டியதில்லை. நான் நடப்பேன். என்னைப் பற்றிக் கவலை வேண்டாம்!" என்றாள்.

x x x

இமயமலைப் பிராந்தியத்தில் சுபாகுவின் தேசமாகிய குலிந்த நாட்டை அடைந்தார்கள். அவ்விடம் அந்த அரசன் செய்த மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு களைப்பாறினார்கள். அதன் பிறகு மிக ரம்மியமான நாராயணாசிரம வனத்தை அடைந்தார்கள். அந்த இடத்தில் சில நாள் தங்கினார்கள்.

x x x

ஒரு நாள் வடகிழக்கிலிருந்து வீசிக்கொண்டிருந்த காற்றில் அடிக்கப்பட்டு ஒரு திவ்யமான மலர் பாஞ்சாலியிடம் வந்து விழுந்தது. அந்தப் புஷ்பத்தை திரௌபதி கையில் எடுத்து அதன் அழகினாலும் வாசனையாலும் பரவசமானாள்.

"பீமசேனா! இந்த மலரைப் பார், என்ன வாசனை! என்ன அழகு! இதை தர்மபுத்திரனுக்குக் கொடுப்பேன். நீ சென்று இந்த வகையைச் சேர்ந்த இன்னும் சில புஷ்பங்களை பறித்துக்கொண்டு வா! நம்முடைய காம்யக வனத்தில் இந்தச் செடியைக் கொண்டு போய் வளர்க்க வேண்டும்" என்றாள். இவ்வாறு பீமனுக்குச் சொல்லி விட்டுத் திரௌபதி புஷ்பத்தை எடுத்துக்கொண்டு யுதிஷ்டிரனிடம் ஒடினாள்.

காதலி சொன்ன சொல்லால் ஏவப்பட்டு பீமன் அந்த மலர் உண்டான செடியைத் தேடிக்கொண்டு சென்றான். மலரின் வாசனையைக் காற்றில் முகர்ந்து கொண்டே அந்தத் திக்கில் வெகு தூரம் தனியாகப் போனான். வழியில் அநேகக் காட்டு மிருகங்களைக் கண்டாலும் லட்சியம் செய்யாமல் சென்றான்.

பருவதத் தாழ்வரையில் ஒரு பெரிய வாழைமரச் சோலையை அடைந்தான். சோலையின் நடுவில் வழியை அடைத்துக்கொண்டு நெருப்பைப்போல் பிரகாசித்துக் கொண்டு ஒரு வானரம் தனிமையாகப் படுத்திருப்பதைக் கண்ட பீமன் தன்னையும் அறியாமல் ஒரு பெரிய சத்தம் போட்டான்.

வானரம், தன் கண்களைச் சிறிது திறந்து அலட்சியமாகப் பீமனைப் பார்த்து, "எனக்கு உடம்பு சரியாக இல்லை. படுத்திருக்கிறேன். நீ ஏன் என்னை எழுப்பினாய்? மனிதனாகிய நீ அறிவு படைத்திருக்கிறாய். விலங்குகளாகிய எங்களுக்குப் பகுத்தறிவு இல்லை. பகுத்தறிவு படைத்திருக்கும் மனிதர்கள் பிராணிகளிடம் கருணை காட்டுவது முறை. உன்னைப் போன்ற புத்திமான்கள் மிருகங்களை இம்சிக்கலாகாது. நீ தருமத்தை அறியவில்லைபோலிருக்கிறது. நீ யார்? எங்கே போக வந்திருக்கிறாய்? இந்த மலையில் இதற்கு மேல் செல்ல முடியாது. இது தேவலோகத்திற்குப் போகும் பாதை. மனிதர்கள் இதைத் தாண்டிப்போக முடியாது. உன் வரவு நல்வரவு ஆகுக. நீ இங்கே பழங்களைப் புசித்துவிட்டுத் திரும்பு. நான் சொல்வதைக் கேள்" என்றது வானரம்.

பீமனுக்குக் கோபம் பொங்கிற்று. "நீ யார்? வானர சரீரத்தை அடைந்து இவ்வளவு பேசுகிறாய்? நான் க்ஷத்திரியன். குரு வம்சத்தில் பிறந்த வீரன். குந்தி தேவியின் மகன். வாயுபுத்திரன் என்று என்னை அறிவாயாக. என்னைத் தடுக்காதே. வழியை விட்டு விலகு!" என்றான்.

குரங்கு இந்தப் பேச்சைக் கேட்டுக் கொஞ்சம் புன் சிரிப்புச் செய்து, "நான் ஒரு குரங்கு. இந்த வழியில் சென்றாயானால் நீ நாசத்தை அடைவாய்" என்றது.

பீமசேனன், "வானரமே! நான் நாசமடைந்தாலும் சரி, ஏதானாலும் சரி, உன்னை நான் கேட்கவில்லை. எழுந்து வழியை விட்டுப் போ. எனக்குக் கோபம் உண்டாக்க வேண்டாம்" என்றான்.

"எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை. நான் கிழக் குரங்கு. அவசியம் போக வேண்டுமானால் என்னைத் தாண்டிச் செல்வாயாக" என்றது வானரம்.

"பிராணியைத் தாண்டிச் செல்லலாகாது என்பது சாத்திரம். ஆகையால் நான் உன்னைத் தாண்டிச்செல்லவில்லை. இல்லாவிடில் ஹனுமான் சமுத்திரத்தைதாண்டியதுபோல் உன்னையும் மலையையும் ஒரே பாய்ச்சலாகத் தாவிச் சென்றிருப்பேன்" என்றான் பீமன்.

"நர சிரேஷ்டனே! கடலைத் தாண்டிய அந்த ஹனுமான் யார்? உனக்குத் தெரிந்திருந்தால் எனக்குச்சொல்ல வேண்டும்" என்றது வானரம்.

"ராமபத்தினியைத் தேடுவதற்காக நூறு யோசனை அகலமுள்ள கடலைத் தாண்டியவனும் எனக்கு அண்ணனுமான ஹனுமானை உனக்குத் தெரியாதா? பலத்திலும் பராக்கிரமத்திலும் நான் அவனுக்குச் சமானமானவேன்! ஒரு காரியமாக நான் இங்கே வந்திருக்கிறேன். வழியை விடு, எழுந்திரு; நான் சொன்னதைக் கேளாயாகில் உன்னை யமலோகத்திற்கு அனுப்புவேன்" என்று பீமன் வானரத்தை அதட்டினான்.

"வீரனே! தோஷமற்றவனே! கோபம் தணிவாயாக! முதுமையால் எனக்கு எழுந்திருக்கச் சக்தி இல்லை.

என்னைத் தாண்டிச் செல்ல உனக்கு ஆட்சேபனை இருந்தால் என்மேல் கருணை கொண்டு இந்த வாலை நகர்த்தி விட்டுச் செல்வாயாக'' என்றது வானரம்.

தன்னுடைய புஜபலத்தில் கர்வங்கொண்ட பீமன் இவ்வாறு சொல்லப்பட்டவுடன், ''இந்தக் குரங்கை வாலைப் பிடித்து இழுத்து அப்புறம் தள்ளுவேன்'' என்று எண்ணி அதனுடைய வாலைப் பிடித்தான்.

வாலை அசைப்பதற்கே முடியவில்லை! பீமன் வியப்படைந்தான். இரு கைகளையும் கொண்டு இழுத்துப் பார்த்தான். புருவங்கள் நெறிந்து விழி பிதுங்கி உடல் வியர்த்தது. வாலைத் தூக்கக்கூட முடியவில்லை. வெட்கப்பட்டுத் தலை குனிந்து நின்றான்.

''நீ யார்? என்னைப் பொறுக்க வேண்டும். நீர் சித்தரா? தேவரா? கந்தர்வரா? நீர் யார்? சிஷ்யன் கேட்கிறேன்; சரணம்'' என்றான் பீமன். பலவானைக் கண்டால் பீமனுக்கு உடனே பக்தி.

''தாமரைக் கண்ணனே! பாண்டவ வீரனே, சர்வ லோகங்களுக்கும் பிராணாதாரமான வாயுவின் மகன் ஹனுமான் நான்தான். தம்பி, பீம! யக்ஷரும் ராக்ஷதர்களும் இருக்கும் இந்த வழியில் நீ சென்றால் ஆபத்துக்கு ஆளாவாய் என்று உன்னை நான் தடுத்தேன். இது தேவ லோகம் போகும் வழி. இதில் மனிதர்கள் செல்ல முடியாது. நீ தேடி வந்த சௌகந்திகச் செடி இருக்கும் நீரோடையும் மடுவும் அதோ பார்!'' என்றான் ஹனுமான்.

''வானர சிரேஷ்டரே! உம்மைக் கண்டேனாதலால் என்னைக் காட்டிலும் பாக்கியசாலி யாருமில்லை. உம்முடைய கடல் தாண்டிய வடிவத்தைப் பார்க்க ஆசைப்படுகிறேன்'' என்று சொல்லி பீமன் ஹனுமானை நமஸ்கரித்தான்.

ஹனுமான் நகைத்துத் தன்னுடைய உருவத்தை விருத்தி செய்துகொண்டு இரண்டாவது மலைபோல் திசைகளை வியாபித்து நின்றான். பீமசேனன் அது வரையில் கேள்விப்பட்டுமட்டும் மகிழ்ந்துவந்த தன் அண்ண

னுடைய திவ்ய ரூபத்தை இப்போது நேரில் பார்த்து ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்தான். சூரியனைப்போல் ஜொலிக்கும் அந்தப் பிரகாசத்தைத் தாங்காமல் கண்ணை மூடிக்கொண்டான்.

"பீமனே! இதற்குமேல் வளர்ந்து உனக்குக் காட்ட இது சமயமல்ல. பகைவரின்முன் என் சரீரம் இன்னும் பெரிதாக வளரும்" என்றான்.

பிறகு ஹனுமான் தன் வடிவத்தை முன்போல் சுருக்கிக்கொண்டு பீமசேனனை அன்போடு தழுவிக் கொண்டான். மாருதியால் ஆலிங்கனம் செய்யப்பட்டு பீமனுடைய சிரமம் எல்லாம் நீங்கி அவனுக்கு முன்னைவிட அதிக பலம் உண்டாயிற்று என்கிறார் வியாச பகவான்.

"வீரனே! உன் இருப்பிடத்துக்குப் போ! சமயம் நேரிட்டபோது என்னை நினைக்கக் கடவாய். உன்னுடைய மானிட தேகத்தை நான் ஆலிங்கனம் செய்தபோது முன் நாட்களில் ஸ்ரீ ராமனுடைய தேகத்தைத் தீண்டியது போல் மகிழ்ச்சி யடைந்தேன். உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்" என்றான் ஹனுமான்.

"வானர சிரேஷ்டரே! உம்மை நான் கண்டதால் பாண்டவர்கள் எல்லாருமே பாக்யசாலிகள் ஆனோம். உம்முடைய பலத்தினால் நாங்கள் எல்லாச் சத்துருக்களையும் ஜெயிப்போம்" என்றான் பீமன்.

"நீ யுத்தத்தில் எப்போது சிம்மநாதம் செய்வாயோ அப்போது என்னுடைய குரலும் உன்னுடைய சத்தத்துடன சேர்ந்து பகைவர்களை நடுங்கச் செய்யும். உன் தம்பி அருச்சுனனுடைய தேரின் கொடியில் நான் இருப்பேன். உங்களுக்கு வெற்றி உண்டாகும்" என்று தம்பியை அண்ணனாகிய மாருதி ஆசீர்வதித்தான். பக்கத்தில் நீர் ஓடையில் பீமன் தேடி வந்த சௌகந்திக மலர்களையும் காண்பித்தான்.

அதைக் கண்டதும் வனவாசத்தால் பீடிக்கப்பட்டு வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் திரௌபதியிடம் பீமன் மனம் சென்றது. புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு திரும்பி வேகமாகச் சென்றான்.

# நான் கொக்கல்ல

பாண்டவர்கள் வனத்தில் வசித்த காலத்தில் ஒரு நாள் மார்க்கண்டேயர் வந்திருந்த சமயத்தில் தரும புத்திரன் ஸ்திரீகளின் குணங்களை மிகவும் புகழ்ந்து பேசினான்.

"ஸ்திரீயின் பொறுமையையும் கற்பையும்விட வேறு என்ன வியப்பு உலகத்திலிருக்கிறது? கர்ப்பத்தை வயிற்றில் பத்து மாத காலம் காத்துத் தன் உயிருக்கே சந்தேகம் உண்டாக்கும் ஆபத்தையும், சொல்லுக்கு அடங்காத வேதனையையும் சகித்து ஸ்திரீயானவள் குழந்தையைப் பெறுகிறாள். அந்தக் குழந்தையை மிக்க அன்புடன் வளர்த்து இவன் எத்தகையோன் ஆவானோ என்று கவலைப்படுகிறாள். கொடிய கணவனை அடைந்த மனைவி அவனால் வெறுக்கப் பட்டாலும் பல துன்பங்களுக்கு ஆளாக்கப் பட்டாலும் எல்லாவற்றையும் பொறுத்துக் கொண்டு அவனிடம் பக்தியாகவே இருப்பதைப் பார்க்கிறோம். இது எவ்வளவு அற்புதமான விஷயம்!" என்றான்.

இதைக் கேட்ட மார்க்கண்டேயர் ஒரு புண்ணிய கதையைச் சொல்லலானார்:

மிக்க நியமத்துடன் பிரமசரிய விரதம் காத்த பிராமணன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் கௌசிகன். ஒரு நாள் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு வேதம் ஓதிக்கொண்டிருந்தான். அப்போது மரத்தின் மேலிருந்து அவன் தலையில் பறவையின் எச்சம் விழுந்தது. மரக் கிளை ஒன்றில் ஒரு கொக்கு இருப்பதைப் பார்த்து அதுதான் எச்சம் இட்டதென்று பிராமணனுக்கு அதன் பேரில் கோபம் உண்டாயிற்று. அவனுடைய பார்வை பறவையின் பேரில் பட்டதும் அது செத்துக் கீழே விழுந்தது. உயிரற்றுப் பூமியில் கிடந்த கொக்கைப் பார்த்ததும் பிராமணனுக்கு துயரம் மேலிட்டது.

மனத்தில் எழும் எண்ணங்கள் நிகழ்ச்சிகளாக வடிவம் கொள்ளுவதற்குப் பல புறக் காரணங்களும் சேர வேண்டும். அவை வந்து சேராத காரணத்தினால் அல்லவோ பல தீமைகளிலிருந்து தப்புகிறோம்? எண்ணிய எண்ணங்களெல்லாம் எண்ணியவாறு உடனே ஆகிவிடுவதாக இருந்தால் உலகத்தின் கொடுமைகளைப் பொறுக்க முடியாமல் போகும்.

"கோபத்தால் நான் எண்ணிய எண்ணம் இந்த வேலையைச் செய்துவிட்டதே! ஒரு பாவமும் அறியாத பறவையைக் கொன்றேனே!" என்று கௌசிகன் துயரப்பட்டான். பிறகு வழக்கம்போல் பிக்ஷை எடுக்கச் சென்றான்.

ஒரு வீட்டின் வாயிலில் பிக்ஷைக்காக நின்றான். அப்போது அந்த வீட்டுக்காரனுடைய மனைவி உள்ளே பாத்திரங்கள் சுத்தம் செய்து கொண்டிருந்தாள். தன் வேலையை முடித்துவிட்டுத் தன்னைக் கவனிப்பாள் என்று கௌசிகன் காத்துக் கொண்டிருந்தான். அப்போது அந்தஸ்திரீயின் கணவன் வெளியில் போயிருந்தவன் வீட்டுக்குத் திரும்பிவந்தான். வந்தவுடனே உள்ளே நுழைந்து "பசியாக இருக்கிறது" என்றான். அதைக் கேட்ட மனைவி பிக்ஷைக்காக வெளியில் காத்திருந்த பிராமணனைக் கவனியாமல் ஜலம் கொண்டுவந்து புருஷனுடைய கால்களைச் சுத்தம் செய்து ஆசனம் அமைத்து அவனுக்கு ஆகாரம் கொண்டுவந்து வைத்து உபசரித்தாள்.

வாயிலில் பிராமணன் காத்துக் கொண்டேயிருந்தான். புருஷன் சாப்பிட்டு முடிந்தபின் காத்திருந்த கௌசிகனுக்குப் பிக்ஷை எடுத்துக்கொண்டு வந்தாள். "தங்களை வெகு நேரம் காக்கவைத்தேன். மன்னிக்க வேண்டும்" என்று சொன்னாள்.

கோபத்தினால் நெருப்பைப் போல் ஜொலித்துக் கொண்டிருந்த கௌசிகன், "அம்மா! பல வீடுகளுக்குப் போக வேண்டியவனை இவ்வாறு அலட்சியம் பண்ணிக் காக்க வைத்தாய்! இது தகாது" என்றான்.

பிராமணனைப் பார்த்து ஸ்திரீயானவள் "பிராம ணோத்தமரே! பொறுத்துக்கொள்ள வேண்டும். என் புருஷனுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தேன். அதனால் நேரமாகிவிட்டது" என்றாள்.

"புருஷனைக் கவனிப்பது தருமமே! ஆனால் பிராம ணர்களை அவமதித்தல் கூடாது. நீ கர்வம் கொண்டவ ளாக இருக்கிறாய்" என்றான்.

"கோபிக்காதீர்! புருஷனைக் கவனித்துக் கொண் டிருந்த ஸ்திரீயின் பேரில் நீர் பொறுமையை இழத்தலா காது. நான் கொக்கல்ல! கணவனுக்குப் பணிவிடை செய்வதில் ஈடுபட்டிருக்கும் ஸ்திரீயை உம்முடைய கோபம் ஒன்றும் செய்ய இயலாது" என்றாள்.

பிராமணனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. "கொக்கைப் பற்றி இவளுக்கு எப்படித் தெரிந்தது?" என்று வியந்தான்.

ஸ்திரீ இன்னும் சொல்லலானாள்: "பெரியவரே! உமக்குத் தருமத்தின் ரகசியம் தெரியவில்லை. மனிதனுக் குக் கோபம் சரீரத்துக்குள்ளேயே இருக்கும் பெரும் பகை யாகும். அதை நீர் அறியவில்லை. என் குற்றத்தை மன் னித்து நீர் மிதிலைக்குச் சென்று அவ்விடமிருக்கும் தரும வியாதனிடம் உபதேசம் பெறுவீராக!" என்றாள்.

பிராமணன் ஆச்சரியமடைந்தான். "அம்மணி! உனக்கு மங்களம்! நீ என்னை நிந்திப்பது எனக்கு நன்மை யென்றே கருதுகிறேன். நீ எல்லா பாக்கியமும் அடைவா யாக" என்று சொல்லிவிட்டு மிதிலைக்குச் சென்றான்.

x x x

கௌசிகன் மிதிலைக்குப்போய் தருமவியாதன் எவ் விடமிருக்கிறான் என்று விசாரித்துத் தேடினான்.

தனக்குத் தருமத்தை உபதேசிக்கத் தக்கவராகச் சொல்லப்பட்ட பெரியவர் ஏதோ ஒரு தனித்த ஆசிரமத் தில் இருப்பார் என்று நினைத்துத் தேடிப்போன பிராம மணன் பல அழகிய வீடுகளும் தோட்டங்களும் தாண்டிய

பிறகு ஒரு கசாப்புக் கடையிலே ஒருவன் இறைச்சி விற்றுக் கொண்டிருந்ததைப் பார்த்தான். அவனை "இவர் தான் தருமவியாதர்" என்று ஜனங்கள் காட்டினார்கள்!

பிராமணனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. தூரத்தில் வெறுப்புடன் நின்றான். கசாப்புக் கடைக்காரன் பரபரப்பாக எழுந்து பிராமணனிடம் வந்து, "பகவானே! உமக்குச் சுபம்! அந்த மகா பதிவிரதையான பிராமண ஸ்திரீ உங்களை என்னிடம் அனுப்பினாளா?" என்று கேட்டான்.

பிராமணன் பிரமித்துப் போனான்.

"சுவாமி! நீர் வந்த காரியம் எனக்குத் தெரியும். வாரும்!" என்று கசாப்புக் கடைக்காரன் பிராமணனைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றான். அவ்விடம் அவன் தன் தாய் தந்தையர்களுக்குப் பக்தியுடன் பணிவிடை செய்வதைக் கண்டான். பிறகு கௌசிகன் அந்த மாமிசம் விற்பவனால் மனித வாழ்க்கையைப் பற்றியும் தொழிலைப் பற்றியும் கடமைகளைப்பற்றியும் உபதேசம் பெற்றான். பிறகு தன் ஊருக்குத் திரும்பிச் சென்று அது வரையில் சரியாகக் கவனிக்கப்படாத தன் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்யத் தொடங்கினான்.

தருமவியாதர் கதையே கீதையின் உபதேசமும். எல்லாப் பொருள்களிலும் ஈசன் இருப்பதால் எந்தத் தொழிலும் அவன் தொழிலே. சமுதாய அமைப்பினாலோ, விசேஷ சந்தர்ப்பத்தின் காரணமாகவோ, அல்லது தன் முயற்சியின் பயனாகவோ, மனிதனுக்குத் தொழில்கள் ஏற்படுகின்றன. எந்தத் தொழிலையும் தருமம் தவறாமல் சரிவரச் செய்து வந்தால் அதுவே பகவானை உபாசித்தபடியாகும். கசாப்புக் கடை வேலையும் இதில் சேரும் என்கிற இந்தப் பிரசித்தியான கதையை மார்க்கண்டேய ரிஷி சொல்லித் தருமபுத்திரன் கேட்டதாக மகா பாரதத்தில் வேத வியாசர் அற்புதமாய் சேர்த்திருக்கிறார்.

# துஷ்டர்களுக்குத் திருப்தி ஏது?

வனவாசத்திலிருந்து பாண்டவர்களைப் பார்த்துவிட்டுத் திரும்பிவந்த ஒரு பிராமணன் ஹஸ்தினாபுரத்தில் அரண்மனைக்குச் சென்று திருதராஷ்டிரன் செய்த மரியாதைகளைப் பெற்றுக் கொண்டு பாண்டவர்கள் இருந்த நிலைமையைப்பற்றி அரசனுக்குச் சொன்னான். காற்றிலும் வெய்யிலிலும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த ராஜகுமாரர்களைப்பற்றி பிராமணன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் இந்த அனர்த்தம் எந்த விதமாக முடியுமோ என்று கவலைப்பட்டான்.

யுதிஷ்டிரனுடைய கட்டளைக்கு அடங்கி பீமன் எவ்வளவு காலம் தன் கோபத்தைத் தடுத்துக் கொள்வான்? என்றைக்காவது ஒரு நாள் பாண்டவர்களுடைய கோபம் கரை உடைந்து பிரவாகமாகப் புரண்டோடும் என்பது திருதராஷ்டிரனுடைய பயம்.

"அருச்சுனனும் பீமனும் நம்மை நிச்சயமாக தண்டிப்பார்கள். சகுனியும் கர்ணனும் துரியோதனனும் மந்தபுத்தியுள்ள துச்சாதனனும் கொம்புத் தேனுக்காகமரத்து நுனியில் ஏறிவிட்டு அங்கே தொங்குகிறார்கள். கீழே பீமனுடைய கோபம் என்கிற படுகுழி அவர்களுடைய நாசத்திற்காக வாய் திறந்து காத்திருப்பது அவர்களுக்குத் தெரியவில்லையே" என்று அரசன் ஏங்கினான்.

"ஐயோ! என்ன காரணத்தினால் பேராசைக்கு இரையானோம்? நமக்கு ஒரு குறையுமில்லாதிருக்க ஏன் இவ்வாறு செய்தோம்? எதற்காக அநீதியில் இறங்கினோம் இருக்கும் பொருளை நல்ல வழியில் செலவுசெய்து சுகமாக இருக்காமல் துராசைப் பட்டோம். நாம் செய்த பாவம் தன் பயனைத் தராமல் போகாது. தனஞ்சயன் இந்திரலோகம் சென்று திவ்யாஸ்திரங்களைப் பெற்று திரும்பி வந்திருக்கிறான். சரீரத்தோடு சுவர்க்கம் சென்ற அருச்சுனன் திரும்பி வந்திருக்கிறான். எங்கள் பேரில் பழிவாங்க

வேண்டும் என்றல்லவோ இவ்வாறு செய்திருக்கிறான்! இல்லாவிடில் எந்த மனிதன் இந்திரலோகம் அடைந்தும் அதை விட்டுவிட்டுத் திரும்புவான்?'' என்றிவ்வா றெல்லாம் எண்ணி எண்ணித் திருதராஷ்டிரன் சிந்தனை யில் ஆழ்ந்தான்.

x x x

திருதராஷ்டிரன் இவ்வாறு கவலைப்பட்டான். ஆனால் சகுனியும் கர்ணனும் துரியோதனனும் கவலைப் படவில்லை. அவர்கள் போக்கே வேறாக இருந்தது. நல்ல அதிருஷ்டம் அடைந்தோம் என்று அவர்கள் ஒருவரை ஒருவர் புரோத்ஸாகப் படுத்திக் கொண்டு மகிழ்ந்தவர்க ளாக இருந்தார்கள். "யுதிஷ்டிரனிடத்தில் ஜொலித்துக் கொண்டிருந்த ராஜ்ய லக்ஷ்மி, எங்களிடம் வந்துவிட்டது. இனிப் பொறாமையால் நாம் வாடி வதங்க வேண்டிய தில்லை. இதற்கெல்லாம் உன் கூர்மையான புத்தியே கார ணம்'' என்று கர்ணனும் சகுனியும் துரியோதனனுக்குச் சொன்னார்கள். இதைக் கேட்ட துரியோதனன், "கர்ணா! நீ சொல்லுகிறதெல்லாம் உண்மை. ஆனால் பாண்டவர் கள் கஷ்டப்படுவதை என் கண்ணால் பார்க்க வேண்டுமே! நம்முடைய சந்தோஷத்தையும் அவர்கள் பார்க்க வேண் டும்! பகைவர்களுடைய கஷ்டத்தை நாம் கண்ணால் நேரில் பார்த்தாலல்லவோ நம்முடைய மகிழ்ச்சி பூர்த்தி அடை யும். இதற்கு என்ன செய்யலாம்? வனத்திற்குப் போய்ப் பாண்டவர்களைக் காணவேண்டும். ஆனால் தகப்பனார் இதற்கு அனுமதி தரமாட்டார்'' என்று சொல்லி வருந்தப்பட்டான்.

"நம்மைவிடப் பாண்டவர்கள் தவவன்மை பெற்றிருப் பதாக எண்ணி அவர்களைக் கண்டு அரசர் பயப்படுகிறார். வனம் சென்று பாண்டவர்களைச் சந்தித்தால் ஏதோ ஆபத்து நேரிடும் என்று எண்ணி அனுமதி தரமாட் டேன் என்கிறார். திரௌபதியும் பீமனும் அருச்சுனனும் அரணியத்தில் கஷ்டப்படுவதைப் பார்க்காமலிருந்தால் இவ்வளவு செய்தும் என்ன பிரயோஜனம்? வெறுமனே

இவ்விடம் ராஜ்யலாபம் பெற்றுச் சுகமாக இருப்பதில் நான் திருப்தி அடையவில்லை. வனத்துக்குப் போய்ப் பாண்டவர்களைப் பார்க்க, திருதராஷ்டிரருடைய அனுமதியைப் பெற நீயும் சகுனியும் எப்படியாவது ஒரு வழி தேட வேண்டும்'' என்று துரியோதனன் கர்ணனை வேண்டிக் கொண்டான்.

மறுநாள் காலை, கர்ணன் வெகு சீக்கிரமாக எழுந்து துரியோதனனிடம் வந்தான். கர்ணனுடைய முகத்தில் சந்தோஷக் குறியைக் கண்டு துரியோதனன் என்னவென்று விசாரித்தான். ''உபாயம் கண்டேன். துவைத வனத்தில் நம்முடைய இடைச்சேரிகள் இருக்கின்றன. அந்தப் பசுக் கூட்டங்களை வருஷத்துக் கொருமுறை எண்ணிக் கணக்கெடுத்து இடையர்களையும் விசாரித்து வரவேண்டியது நம்முடைய கடமை. புராதனமாக இவ்வாறு நடைபெற்று வருகிறது. அதை வியாஜமாக வைத்துக்கொண்டு அரசர் அனுமதியைப் பெறலாம்'' என்று கர்ணன் சொன்னதும் துரியோதனனுக்கும் சகுனிக்கும் அளவற்ற சந்தோஷ முண்டாயிற்று. ''நல்ல உபாயம்! நல்ல உபாயம்!'' என்று ஒருவருக் கொருவர் கைகொடுத்துச் சிரித்து மகிழ்ந்தார்கள்.

இடையர்களின் தலைவனுக்குச் சொல்லியனுப்பி அவனுடனும் பேசி முடித்தார்கள்.

''பசுக்கள் தயாராக இருக்கின்றன. வனத்தில் அழகிய இடத்தில் எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கிறோம். ராஜ குமாரர்கள் வந்து கால் நடைகளின் வயது, நிறம், ஜாதி, பெயர் இவைகளைப் பார்த்து வழக்கம்போல் கணக்கெடுத்துக் குறித்துக் கொண்டு கன்றுகளுக்கு அடையாளமுமிட்டு வனத்தில் வேட்டையாடிப் பசு யாத்திரை முடித்துக் கொண்டு நகரம் திரும்பலாம்'' என்று இடையர்களின் தலைவன் திருதராஷ்டிரனிடம் விண்ணப்பம் செய்தான். ராஜகுமாரர்களும் ''இதற்கு அனுமதி தரவேண்டும்'' என்று தகப்பனை வற்புறுத்தினார்கள்.

திருதராஷ்டிரன் ஒப்பவில்லை. "ராஜகுமாரர்களுக்கு வேட்டை நல்லதுதான், பசுக்களைப் பரிசீலனை செய்வதும் நல்லதே. ஆனால் இந்த வனத்தில் பாண்டவர்கள் இருப்பதாகக் கேள்விப் பட்டேன். அவ்விடம் நீங்கள் செல்வதும் சரியல்ல. கோபத்துக்குக் காரணம் இருக்கும் காலத்தில் அந்த பீமார்ஜுனர்களிடம் உங்களை அனுப்ப நான் சம்மதிக்க மாட்டேன்" என்றான்.

"அவர்கள் இருக்குமிடம் நாங்கள் போகமாட்டோம். மிகவும ஜாக்கிரதையாக இருப்போம்" என்றான் துரியோதனன.

"நீங்கள் எவ்வளவு ஜாக்கிரதையாக இருந்தாலும் அபாயம் உண்டாகும். வனவாசத்தினால் வருத்த மடைந்திருக்கும் பாண்டவர்கள் இருக்கு மிடத்திற்கு நீங்கள் போவது சரியல்ல. உங்கள் பரிவாரத்தில் யாராவது ஒரு போர்வீரன் பாண்டவர்கள் இருக்குமிடம் சென்று அறிவீனத்தினால் மரியாதைக் குறைவாக நடந்துகொள்வான். அதனின்று பெரும் கலகம் நேரிடும். வேறு யாராவது உங்களுக்காகப்போய் பசுக்களை எண்ணும் காரியத்தை முடித்துவிட்டு வரலாம்" என்றான் அரசன்.

சகுனி "அரசனே! யுதிஷ்டிரன் தருமத்தை அறிந்தவன், சபையில் பிரதிஜ்ஞை செய்திருக்கிறான். பாண்டவர்கள் அனைவரும் அவன் கட்டுப்பாட்டுக்கு அடங்கி நிற்பார்கள். நம்மிடம் குந்தி புத்திரர்கள் கோபத்தைக்காட்ட மாட்டார்கள். வேட்டையில் பிரிய முள்ள துரியோதனனைத் தடுக்க வேண்டாம். வழக்கம் போல் பசுக்களைப் பரிசீலனை செய்து வரட்டும். நானும் கூடப் போய்ப் பார்த்துக் கொள்ளுகிறேன். வனத்தில் பாண்டவர்கள் இருக்கும் இடத்திற்கு நாங்கள் யாருமே போக மாட்டோம்" என்று வாக்குறுதி செய்து அனுமதி கொடுக்கும்படி கேட்டுக்கொண்டான்.

"சரி, இஷ்டப்படி செய்யுங்கள்!" என்றான் அரசன்.

x x x

துவேஷம் கொண்ட உள்ளத்துக்குத் திருப்தி என்பது கிடையாது. எரியும் தீயைப்போல் விறகு போடப் போட இன்னும் பெரிதாக எரிந்துகொண்டு, "போதாது, போதாது" என்று இரை கேட்டுக்கொண்டேயிருக்கும்.

# துரியோதனன் அவமானப்பட்டது

பெரிய சேனையும் பரிவாரமும் கூட்டிக்கொண்டு கௌரவர்கள் துவைதவனம் சென்றார்கள். பாண்டவர்களுடைய கஷ்டநிலைமையைக் கண்ணால் பார்த்து ஆனந்தம் அடைவோம் என்று துரியோதனனும் கர்ணனும் அடக்க முடியாத மகிழ்ச்சியுடன் போனார்கள். பாண்டவர்கள் இருந்த இடத்துக்கு நான்கு நாழிகை தூரத்தில் தங்களுடைய பரிவாரத்துக்கு இடம் பார்த்து விடுதிகளும் அமைத்துக் கொண்டார்கள்.

அங்கங்கே இருந்த மாட்டு மந்தைகளை யெல்லாம் பார்த்து எண்ணி, அடையாளமிட்டார்கள். பசுக்களையும் காளைகளையும் கன்றுகளையும் கணக்கெடுத்து முடிந்த பிறகு இடைச்சேரிகளில் ஆட்டமும் நர்த்தனமும் பார்த்து மகிழ்ந்தார்கள். அதன் பிறகு, காட்டிலுள்ள மிருகங்களை வளைத்து வேட்டையாடினார்கள்.

வேட்டை ஆடிக்கொண்டே சென்ற துரியோதனன் பாண்டவர்களுடைய ஆசிரமத்தண்டை யிருந்த தடாகத்தை அடைந்தான். அங்கேயே சிலநாள் தங்கலாம் என்று தன் பரிவாரத்துக்கு உத்தரவிட்டான்.

x x x

துவைத வனத்துத் தடாகத்தண்டை கந்தர்வ ராஜன் சித்திரசேனனும் அவன பரிவாரமும் வந்து தங்கியிருந்தார்கள். துரியோதனனுடைய உத்தியோகஸ்தர்களை "இவ்விடம் நீங்கள் தங்கக் கூடாது. போங்கள்" என்று கந்தர்வர்கள் தடுத்து விட்டார்கள். அவர்கள் துரியோதனனிடம் சென்று தடாகத்தண்டை வேறு யாரோ சிற்றரசன் தன் பரிவாரத்தோடு இருப்பதாகவும், தங்களைத் தடுத்ததாகவும் சொன்னார்கள்.

துரியோதனன் கோபங்கொண்டு "என் உத்தரவைத் தடுக்கும்படியான அரசன் யார்? திரும்பிப் போய் அவர்களைத் துரத்திவிட்டு மறு காரியம் பாருங்கள்" என்றான்.

அவ்வாறே வேலைக்காரர்கள் தடாகத்தண்டைபோய் விடுதிகள் கட்ட ஆரம்பித்தார்கள். கந்தர்வர்கள் அவர் களை அடித்து விரட்டி அப்புறப்படுத்தி விட்டார்கள்.

துரியோதனனுக்கு இந்தச் செய்தி எட்டியதும் மகா கோபங்கொண்டு பெருஞ் சேனையோடு தடாகத்தண்டை இருக்கும் குறும்புக்காரர்களை யெல்லாம் துவம்சம் செய்து விடப் போனான்.

கந்தர்வர்களுக்கும் துரியோதனன் படைக்கும் பெரும் யுத்தம் நடந்தது. முதலில் சாதாரண முறையில் யுத்தம் நடந்தது. அதில் கந்தர்வர்கள் தோல்வி யடைந்தார்கள். இது தெரிந்ததும் கந்தர்வ ராஜனான சித்திரசேனன் கோபங்கொண்டு தன்னுடைய மாயை அஸ்திரங்களைப் பிரயோகித்தான். கர்ணனுடன் மற்ற கௌரவ வீரர்களும் தேரும் ஆயுதமும் இழந்து புறங்காட்டி ஓடவேண்டியதா யிற்று. துரியோதனன் ஓடாமல் யுத்தகளத்தில் நின் றான். சித்திரசேனன் அவனை உயிருடன் பிடித்துக் கயிற்றால் கட்டி, தன் ரதத்தில் தூக்கிப் போட்டுக் கொண்டு சங்கநாதம் செய்தான். கௌரவ வீரர்களில் முக்கியமானவர்கள் பலரை கந்தர்வர்கள் சிறைப்படுத்தி னார்கள். கௌரவ சேனை சிதறியடிக்கப்பட்டுச் சிலர் பாண்டவர்களுடைய ஆசிரமத்துக்கு ஓடிப்போய் முறை யிட்டார்கள்.

x x x

பீமனுக்குச் சந்தோஷம் பொங்கிற்று. "நாம் செய்யவேண்டியதை இந்தக் கந்தர்வர்கள் செய்தார்கள். நம்மைப் பார்த்து ஏளனம் செய்யவந்த இந்தத் துரியோ தனனுக்குத் தகுந்த சிட்சை ஏற்பட்டது நாம் செய்ய வேண்டிய பொறுப்பை இந்தக் கந்தர்வ நண்பன் ஏற்றுக் கொண்டான். அவனுக்கு நாம் நன்றி செலுத்த வேண் டும்" என்று பீமன் தன மகிழ்ச்சியை யுதிஷ்டிரனிடம் தெரிவித்துக் கொண்டான்.

"அப்பனே! நீ மகிழ்வது சரியல்ல, நம்முடைய குலத்தவர்கள் சிறைப்பட்டு இருப்பதை யறிந்து நாம்

சும்மா இருக்கலாகாது. போய் துரியோதனனை விடுவிப் பாயாக!'' என்றான் தருமபுத்திரன்.

பீமனுக்கு யுதிஷ்டிரன் சொன்னது பிடிக்கவில்லை.

''நம்மை வஞ்சித்து அரக்கு மாளிகையில் எரித்துக் கொல்லப் பார்த்த இந்தப் பாதகனை நான் ஏன் போய் மீட்க வேண்டும்? என் உணவில் விஷம் கலந்து என்னைக் கட்டிப் போட்டுக் கங்கையில் மூழ்க வைத்துச் சாகடிக்கப் பார்த்த இந்தத் துரியோதனன்மேல் ஏன் இரக்கம்கொள் கிறீர்? திரௌபதியைச் சபையின் முன் இழுத்து அவ மானம் செய்த இந்தக் கொடிய நீசர்களிடம் ஏன சகோதர பாவம் வைக்க வேண்டும் என்கிறீர்?'' என்றான்.

அந்தச் சமயத்தில் பிடிப்பட்ட துரியோதனனுடைய கூக்குரல் கேட்டது. தர்ம புத்திரன் பரபரப்புடன், ''பீமனுடைய ஆட்சேபணை தகாது'' என்று சொல்லித் தம்பிகளை உடனே போய்க் கௌரவர்களை மீட்டுக் கொண்டுவர உத்தரவிட்டான்.

இதன்மேல் பீமனும தனஞ்சயனும் தோல்வியடைந்த கௌரவர்களுடைய சேனையை மறுபடியும் திரட்டிக் கூட்டிக்கொண்டுபோய்க் கந்தர்வர்களுடன் யுத்தம் துவக் கினார்கள்.

பாண்டவர்கள் வந்ததும் சித்திரசேனன் தன் கோபத்தை விட்டான், ''துராத்மாக்களான கௌரவர் களுக்குப் பாடம கற்பிக்கத்தான் இவ்வாறு செய்தேன், என்று சொல்லி, கட்டுகளை அவிழ்த்து விட்டு, ''ஊருக்கு உடனே போங்கள்'' என்று துரியோதனாதியர்களை அனுபபி விட்டான். அவமானப்பட்ட கௌரவர்களும் ஹஸ்தினாபுரத்துக்கு விரைவாகத் திரும்பினார்கள். புறங் காட்டி ஓடிய கர்ணன் துரியோதனனை வழியில் சந்தித் தான்.

''கர்ணனே! நான் அந்தச் சித்திரசேனனால் கொல்லப் பட்டு மாண்டுபோயிருந்தால் நன்றா யிருந்திருக்கும்'' என்றான் துரியோதனன்.

கர்ணன் என்ன சமாதானம் சொல்லியும் துரியோதனன் கேட்கவில்லை. "நான் இவ்விடமே உபவாசமிருந்து உயிர் நீப்பேன் துச்சாதனா! நீ பட்டம் பெற்றுக் கொண்டு ராஜ்யத்தை ஆள்வாய். பகைவர்கள் முன் பரிகசிக்கப் பட்டு இனி என்றால் உயிர் வைத்துக் கொண்டிருக்க முடியாது" என்றான்.

துச்சாதனன் அண்ணன் காலைப் பிடித்துக்கொண்டு வேண்டாம் என்று அழுதான். இவ்வாறு சகோதரர்கள் புலம்பிக் கொண்டிருப்பதைப் பார்த்துக் கர்ணனுக்குப் பொறுக்கவில்லை.

"குரு வம்சத்தவர்களே! இது உங்களுக்குத் தகாது. அற்பர்களைப்போல் ஏன் புலம்புகிறீர்கள்? சோகத்தில் என்ன நன்மையைக் காண்கிறீர்கள்? தைரியத்தை அடையுங்கள். நீங்கள் துயரப்பட்டால் உங்களுடைய பகைவர்களுக்கு அதில் மகிழ்ச்சி உண்டாகுமே ஒழிய வேறு பயனில்லை. பாண்டவர்களைப் பாருங்கள்! அவர்களுக்கு நேர்ந்த அவமானங்களைக் கண்டு அவர்கள் பிராயோபவேசம் செய்யவில்லை" என்றான் கர்ணன்.

சகுனி பேச ஆரம்பித்தான். "கர்ணன் சொன்னதைக் கேள். பாண்டவர்களிடமிருந்து பறிக்கப்பட்ட ராஜ்யத்தை நீ அனுபவிக்க வேண்டியதாயிருக்க ஏன் உயிரைத் துறக்க வேண்டும் என்கிறாய்? உன்னுடைய யோசனை விபரீதமாக இருக்கிறது. எழுந்து வா! அல்லது இதுவரையில் செய்ததற்கு வருத்தப்படுவதா யிருந்தால் பாண்டவர்களோடு சிநேகிதம் செய்துகொண்டு அவர்களுக்கு ராஜ்யத்தை திருப்பிக் கொடுத்துவிட்டுச் சுகத்தை அடை!" என்றான்.

இந்தப் பேச்சைக் கேட்டதும் துரியோதனனுக்கு மறுபடியும் துர்ப்புத்தி மேலோங்கிற்று. அது வரையில் தான் சொல்லி வந்தது ஏதோ சுவப்பனம்போல் தோன்றிற்று. "பாண்டவர்களை ஜயிப்பேன்" என்று கத்தினான்.

"பேஷ்!" என்றான் கர்ணன்.

"மரணத்தில் என்ன நன்மை இருக்கிறது? உயிரோடு இருந்தாலல்லவோ நன்மைகளை அடையலாம்?" என்று சொல்லிக் கர்ணன் துரியோதனனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

எல்லாரும் ஊர் திரும்பினார்கள். போகும்போது கர்ணன் "நான் உனக்குச் சபதம் செய்து வாக்குத் தருகிறேன். பதின்மூன்று வருஷங்கள் கழிந்ததும் நான் யுத்தத்தில் அருச்சுனனைக் கொல்லுவேன்" என்று கத்தியைத் தொட்டுத் துரியோதனனுக்குப் பிரதிஜ்ஞை செய்து கொடுத்தான்.

# கண்ணன் பசி

பாண்டவர்களின் வனவாச காலத்தில் துரியோதனன் ஒரு பெரிய யாகம் செய்து சிறப்பாக முடித்தான். முதலில் ராஜசூய யாகமே செய்யலாம் என்று ஆரம்பித்தான். ஆனால் பிராமணர்கள் "யுதிஷ்டிரனும் திருதராஷ்டிரனும் உயிருடன் இருக்கும்போது நீ ராஜசூயம் செய்ய இயலாது, வைஷ்ணவம் என்கிற சிறந்த யாகம் ஒன்று உண்டு. ராஜசூயத்திற்கு பதிலாக அதைச்செய்யலாம்" என்றார்கள்.

அவ்வாறே செய்தான். யாகம் முடிந்தபின் நகரத்தில் சிலர் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். "இது என்ன யாகம்? யுதிஷ்டிரன் செய்வித்த ராஜசூயத்தின் பதினாறில் ஒரு அம்சத்துக்கு ஈடாகாது" என்றார்கள். ஆனால் துரியோதனனுடைய நண்பர்கள் அவனைப் புகழ்ந்து அவன் செய்த யாகத்தின் சிறப்பை எடுத்துப் பேசி, அது யயாதி, மாந்தாதா, பரதன் முதலானோர் செய்த யாகத்துக்குச் சமானமாகும் என்றார்கள். துரியோதனன் இந்தப் புகழ்ச் சொற்களைக் கேட்டுச் சந்தோஷமடைந்தான்.

அரண்மனையை அண்டிப் பிழைத்த மற்ற ஸ்துதிக்காரர்களும் துரியோதனனை ஸ்தோத்திரம் செய்து அவன் மேல் பொரியும் சந்தனத் தூளும் வாரி இறைத்தார்கள். அச்சமயத்தில் கர்ணன் எழுந்து துரியோதனனைப் பார்த்து "சீக்கிரம் யுத்தத்தில் பாண்டவர்கள் தோல்வி யடைந்து கொல்லப்படுவார்கள். பிறகு நீ ராஜசூய யாகமும் செய்வாய். அருச்சுனனை நான் வதம் செய்வேன். அது வரையில் நான் என் கால்களைத் தண்ணீர்விட்டு அலம்பமாட்டேன். மாமிசம் உண்ண மாட்டேன். மதுவைத் தீண்ட மாட்டேன். எவன் என்னை யாசித்தாலும் இல்லை என்று சொல்லமாட்டேன்" என்று சபையில் பிரதிஜ்ஞை செய்தான்.

இதைக் கேட்டு மகிழ்ச்சி யடைந்த திருதராஷ்டிர புத்திரர்கள் பேராரவாரம் செய்தார்கள். மகாரதனை கர்ணனுடைய சபதத்தைக் கேட்டதும் பாண்டவர்களு டைய கதி முடிந்ததே என்று அவர்கள் நிச்சயம் செய்து கொண்டார்கள்.

x x x

கர்ணன் அருச்சுனனைக் கொல்வேன் என்று யாக சபையில் பிரதிஜ்ஞை செய்ததைப்பற்றி வனத்திலிருந்த பாண்டவர்களிடம் சாரணர்கள் போய்ச் சொன்னார்கள். இந்தப் பேச்சைக் கேட்ட தருமபுத்திரன் துயரத்தில் ஆழ்ந்தான். நெடுநேரம் தரையைப் பார்த்தவண்ணம் இருந்தான். "கர்ணன் தெய்வீகக் கவசம் படைத்தவன். அற்புதமான பராக்கிரமசாலி. காலமும் நமக்கு விரோத மாக இருக்கிறது" என்று எண்ணிக் கவலைப்பட்டான்.

ஒரு நாள் காலையில் யுதிஷ்டிரன் தூக்கத்தின் முடி வில் ஒரு கனவு கண்டான். அநேகமாகக் கனவுகள் தூக் கத்தின் முதலிலும் தூக்கத்தின் முடிவிலுமே வரும். துவைத வனத்திலிருந்த துஷ்ட மிருகங்கள் வந்து தன் னிடம் முறையிட்டதாகக் கனவு கண்டான். "எங்களை வேட்டை ஆடிப் பெரும்பாலும் கொன்று தீர்ந்து விட் டீர்கள். நாங்கள் அடியோடு நாசமாகாமலிருக்க வேண் டும். தயவு செய்து நீங்கள் வேறு இடம் சென்று வன வாசம் செய்யுங்கள். நாங்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைந்து விட்டோம். மிச்ச மிருக்கிற நாங்கள் சிலரே எங்கள் குலத்துக்கு வித்தாக இருக்கிறோம். உம்முடைய அருளால் நாம் விருத்தி அடையக் கடவோம். உமக்கு மங்களம். எங்கள்மீது தயை செய்யக் கடவீர்" என்று கண்ணீரும் கம்பலையுமாக மிருகங்கள் கனவில் சொல்லின. இந்தக் கனவு யுதிஷ்டிரனை மிகவும் வாட்டிற்று. சகோ தரர்களுக்கு விஷயத்தைச் சொல்லி, அவர்களும் உடன் பட, எல்லாரும் வேறு வனம் சென்றார்கள்.

காட்டையும் காட்டு மிருகங்களையும் அழித்து விட லாகாது என்பது நம்முடைய முன்னோருக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது.

x x x

ஒருநாள் துருவாச ரிஷி பதினாயிரம் சிஷ்யர்களுடன் துரியோதனனிடம் வந்தார். ரிஷியின் சாபத்துக்குப் பயந்து மிகவும் கவனமாக நேரில் தானே எல்லாக் காரியங்களையும் துரியோதனன் வகித்து, அதிதி பூஜையை வெற்றிகரமாகவே முடித்தான். ரிஷியும் திருப்தி அடைந்து உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டார்.

அதிக் கோப சுபாவமுள்ள அந்த முனிவரைத் திருப்தி செய்தது, தான் மறுபடியும் பிறந்தமாதிரி என்று துரியோதனன் மகிழ்ந்தான். என்ன வரம் கேட்கலாம் என்று ஆலோசித்தான். பாப சுபாவம் படைத்த அந்த ராஜகுமாரன் கேட்ட வரமாவது:—

"சுவாமி, சிஷ்யர்களோடு எனக்கு அதிதியாக வந்ததைப் போலவே, வனத்திலிருக்கிற எங்கள் சகோதரர்களான பாண்டவர்களிடமும் போய் அதிதியாக இருக்க வேண்டும். மகாராஜனும் எங்கள் குலத்தில் மிக்க சிறப்புப் படைத்தவருமான யுதிஷ்டிரரிடம் தாங்கள் செல்ல வேண்டும். என்னிடத்தில் அனுக்கிரகம் வைத்து, அவருக்கு அதிதியாகக் கடவீர். ராஜபுத்திரி பாஞ்சாலியானவள் பாண்டவர்களுக்கும் அவர்களுடைய பரிவாரத்திலுள்ள எல்லாருக்கும் போஜனம் செய்வித்துக் களைப்பாறிக் கொண்டு சுகமாக உட்கார்ந்திருக்கும் பொழுது தேவரீர் அவர்களிடம் செல்ல வேண்டும் என்பது என் வேண்டுகோள்."

இவ்வாறு துரியோதனன் சொன்னதும் ஜனங்களைப் பரீட்சை செய்வதில் எப்போதும் பிரியம் கொண்ட துருவாசரும், "அப்படியே செய்கிறேன்" என்றார்.

துரியோதனன் இவ்வாறு கேட்டுக்கொண்ட தன் நோக்கம், அதிதி பூஜையைத் திருப்தியான முறையில் செய்யச் சக்தியில்லாமல் பாண்டவர்கள் முனிவருடைய கோபத்துக்கு இரையாகிச் சாபத்தை அடைவார்கள் என்கிற கெட்ட எண்ணம். முனிவரிடம் வரம் பெற்று ஏதாவது தான் நன்மை அடைவதற்குப் பதிலாகத் தனக்கு

வேண்டாதவர்களுக்குத் தீமை விளைவிப்பதையே பெரி தாகத் துரியோதனன் எண்ணினான். இதுவே தீயவர் களுடைய சுபாவம்.

துரியோதனன் கேட்டுக் கொண்டபடியே துருவாசர் சிஷ்யர்களுடன் வனத்திலிருந்த யுதிஷ்டிரனிடம் சென்றார். தம்பிமார்களுடன் தருமபுத்திரன் முனிவரை எதிர் கொண்டு நமஸ்கரித்து உபசரித்தான். பிறகு, "ஆற்றில் குளித்துவிட்டு வருகிறோம்; சாப்பாடு தயாராக இருக்க வேண்டும்" என்று சொல்லிவிட்டு முனிவரும் சீடர்களும் அவசரமாக ஸ்நானத்துக்குச் சென்றார்கள்.

* * *

வனவாச ஆரம்பத்தில் யுதிஷ்டிரன் செய்த தவத் தினால் சூரிய பகவான் பிரத்தியட்சமாகி ஒரு அட்சய பாத் திரத்தைப் பாண்டவர்களுக்குத் தந்தான். "இதைப் பெற்றுக்கொள். பன்னிரண்டு வருஷம் இதன் மூலம் உனக்கு அன்னம் தருவேன். தினமும் திரௌபதி இந்தப் பாத்திரத்தைக் கொண்டு எவ்வளவு பேருக்கு அன்னம் அளிக்க விரும்புகிறாளோ, அதுவரையில் அன்னம் வளரும். அனைவருக்கும் உணவு அளித்துவிட்டுத் திரௌபதி புசித்தபின் அதன் சக்தி அன்றைக்கு மறைந்துவிடும்"—இவ்வாறு சூரியபகவான் வரம் கொடுத் திருந்தான்.

இதன் படி தினமும் பிராமணர்களும் அதிதிகளும் புசிப்பார்கள். பிறகு தம்பிகள் உண்டபின் தருமபுத்திரன் போஜனம் செய்வான். அதன்பின் கடைசியாகத் திரௌ பதி உண்பாள். துருவாசர் வந்த சமயம் எல்லாரும் போஜனம் முடித்துவிட்டுத் திரௌபதியும் சாப்பிட்டு முடிந்திருந்த படியால், அட்சய பாத்திரத்தின் சக்தி அன்று தீர்ந்து போயிருந்தது.

முனிவரும் சிஷ்யர்களும் குளித்துவிட்டு வருவார் களே, என்ன செய்வது என்று பெருங் கவலையுடன் ஒரு வழியும் தோன்றாமல் திரௌபதி பகவானைத் துதித்தாள். "பிரபுவே! சரணமடைந்தவர்களைக் காப்பவனே! கதியற்ற

வர்களுக்குக் கதியைக் கொடுப்பவனே! துருவாசருடைய கோபத்துக்கு ஆளாகாதபடி என்னைக் கரையேற்ற வேண்டும்!'' என்று இறைஞ்சினாள்.

உடனே திரௌபதியின் சங்கடத்தைத் தீர்க்க வாசுதேவன் வனத்தில் சமையற் கட்டிலிருந்த திரௌபதியண்டை நேராகச் சென்றான். "மிக்கப் பசியாக வந்திருக்கிறேன். சீக்கிரம் அன்னம் கொண்டுவா! பிறகு எல்லாக் காரியமும்!'' என்றான.

திரௌபதி, "ஐயோ! இதென்ன பரீட்சை? கண்ணனே! நான் போஜனம் செய்துவிட்டேன். சூரியனால் கொடுக்கப்பட்ட பாத்திரத்தின் சக்தி இன்று முடிந்து விட்டது. துருவாசர் இச்சமயம் வந்திருக்கிறார். நான் என்ன செய்வேன்? முனிவரும் சீடர்களும் குளித்துவிட்டு வந்துவிடுவார்கள். போதாததற்கு நீரும் இப்போது வந்து பசி என்கிறீர்!'' என்று சொல்லித் தத்தளித்தாள்.

"நான் பசியால் வருந்துகிறேன். இது பரிகாசத்திற்குச் சமயமல்ல. பாத்திரத்தைக் காட்டு, பார்க்கலாம்'' என்றான் கண்ணன். திரௌபதி எடுத்துக் காட்டினாள். அதன் விளிம்பில் கொஞ்சம் கீரையும் ஒரு சோற்றுப் பருக்கையும் ஒட்டிக் கொண்டிருந்தது. அதைக் கண்ணன் கீறி எடுத்து, "இது விசுவரூபனாகிய ஹரிக்கு உணவாகி அவன் பசி தீர்ந்து, பிரீதி அடைவானாக!' என்று மனதில் சொல்லிச் சோற்றுப் பருக்கையையும் கீரையையும் வாயில் போட்டுக்கொண்டான்.

திரௌபதி வெட்கமும் கவலையும் கொண்டு, "ஐயோ, நான் பாத்திரத்தை நன்றாக அலம்பாததால் அதில் ஒட்டிக்கொண்டிருந்த சோற்றுப் பருக்கையை எடுத்து வாசுதேவன் உண்டானே!'' என்று எண்ணி வருத்தப்பட்டாள். கண்ணன் வெளியே போய்ப் பீமசேனனைப் பார்த்து, "சீக்கிரம் ஆற்றுக்குச் சென்று முனிவர்களைப் போஜனத்துக்கு அழைத்து வா'' என்று சொல்லி அனுப்பினான்.

பீமசேனன் விரைந்து சென்று ஆற்றிலிருந்த துருவாசர் முதலிய ரிஷிகள் இருந்த இடத்துக்குப் போனான்.

அவர்கள் அனைவரும் போஜனம் செய்து திருப்தி அடைந்தவர்கள் போல் ஏப்பம் விட்டுக் கொண்டிருந்தார்கள்! "தரும புத்திரனை அன்னம் தயார் செய்யச் சொல்லி வந்தோமே, எங்களுக்கு வயிறு நிறைந்து பொறுக்க முடியாமலிருக்கிறதே!" என்று சீடர்கள் துருவாசருக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். பிறகு துருவாசரும் பீமசேனனிடம் "நாங்கள் சாப்பிட்டாயிற்று. எங்களுடைய தவறை மன்னிக்கவேண்டும் என்று தரும புத்திரனுக்குச் சொல்" என்று கேட்டுக்கொண்டு அனைவரும் மறைந்தார்கள்.

அகில விசுவமும் கண்ணனுக்குள் அடங்கி யிருந்தபடியால், அவன் உண்ட ஒரு சோற்றுப் பருக்கை ரிஷிகளுக்கெல்லாம் பசியாற்றி விட்டது.

வியாசர் விருந்து

# நச்சுப் பொய்கை

பாண்டவர்களுடைய பன்னிரண்டு வருஷ வனவாசம் முடியும் காலம் நெருங்கிற்று.

ஒரு நாள் வனத்தில் வசித்துவந்த ஒரு ஏழைப் பிராமணனுடைய அரணிக் கட்டையின்மேல் ஒரு மான் உடலை உராய்ந்துவிட்டுத் திரும்பிச் செல்லும்போது அரணிக் கட்டை அதன் கொம்பில் மாட்டிக்கொண்டது.

அரணி என்பது தீக்குச்சி இல்லாத அந்த நாட்களில் நெருப்பு உண்டாக்குவதற்காக ஆசிரமங்களில் வசிப்பவர்கள் வைத்துக்கொண்டிருந்த கடைக்கோலும் கீழ்க் கட்டையுமான ஒரு எந்திரம்.

கொம்பில் அரணிக்கட்டை மாட்டிக்கொண்டதும் மான் மிரண்டு வேகமாக ஓடிற்று. பிராமணன், "ஐயோ, என் அரணியைத் தூக்கிக்கொண்டு போய்விட்டதே. அக்கினி ஹோத்திரத்திற்கு நான் என்ன செய்வேன்!" என்று கத்திக்கொண்டு பக்கத்தில் குடிசையில் வசித்து வந்த பாண்டவர்களிடம் ஓடிப்போய் முறையிட்டான்.

பாண்டவர்கள் மானைப் பிடிக்க ஓடினார்கள். அரணியைத் தூக்கிக் கொண்டு போன மான் மாய மான். அது துள்ளிக் குதித்து வேகமாகச் சென்று பாண்டவர்களைக் காட்டில் வெகு தூரம் இட்டுக்கொண்டு போய் மறைந்து விட்டது.

பாண்டவர்கள் மிக்கக் களைப்படைந்து ஒரு ஆல மரத்தடியில் உட்கார்ந்தார்கள். எல்லாரும் பெருந்தாகத்தால் வருந்தினார்கள். நகுலன் யுதிஷ்டிரனைப் பார்த்து, "அந்தப் பிராமணனுக்காக இந்த அற்ப காரியத்தைக் கூட நம்மால் செய்து முடிக்க இயலாமல் போய்விட்டதே! நாம் என்ன தாழ்ச்சியை அடைந்துவிட்டோம்" என்றான்.

இவ்வாறு நகுலன் வருத்தப்பட்டபோது பீமன், "திரௌபதியைச் சபைக்கு இழுத்து வந்தார்களே, அப்

போது நாம் அந்த நீசர்களைக் கொன்றிருக்க வேண்டும். அது செய்யாதபடியால் அல்லவா நாம் இந்தச் சங்கடங்களை அடைந்தோம்?" என்று சொல்லி அருச்சுனனை வருத்தத்தோடு பார்த்தான்.

அருச்சுனனும், "ஆம்! அந்தத் தேரோட்டி மகன் சொன்ன கடுஞ் சொற்களைக் கேட்ட பின்னும் நான் சும்மா நின்றேன். அதனால் இந்த நிலைமையில் இருக்கிறோம்" என்றான்.

எல்லாரும் களைப்பினால் பொறுமையும் தைரியமும் இழந்திருப்பதைக் கண்ட யுதிஷ்டிரனுக்கு ஒன்றும்சொல்லத் தோன்றவில்லை. பொறுக்க முடியாத தாகம் வாட்டிற்று. நகுலனைப் பார்த்து, "தம்பீ! அந்த மரத்தின் மேல் ஏறிச் சமீபத்தில் எங்கேயாவது ஜலம் இருக்கிற குளமாவது, ஆறாவது தென்படுகிறதா!" பார் என்றான்.

நகுலன் மரத்தின் மீது ஏறிப்பார்த்துவிட்டு இறங்கி வந்து, "கொஞ்ச தூரத்தில் ஜலத்தை அடுத்து வளரும் செடிகளைகளும், கொக்குகளுந் தென்படுகின்றன. அந்த இடத்தில் கட்டாயம் ஜலம் இருக்கும்" என்றான்.

"போய்ப் பார்த்து அவ்விடத்தில் ஜலம் கிடைத்தால் சீக்கிரம் எடுத்துக் கொண்டு வா!" என்று யுதிஷ்டிரன் சொல்ல நகுலன் விரைவாகப் போனான்.

போன இடத்தில் எதிர் பார்த்தபடி ஒரு பொய்கையைக் கண்டு மிகவும் மகிழ்ச்சியடைந்தான். தன் தாகத்தையும் தீர்த்துக்கொண்டு அம்புத் தூணியிலும் தண்ணீர் நிரப்பிக்கொள்ளலாம் என்று நகுலன் பொய்கையில் இறங்கினான். நிர்மலமான ஜலத்தில் கையைத் தோய்த்ததும் ஒரு அசரீரிப் பேச்சு ஆகாயத்தில் உண்டாயிற்று.

"சாகசம் செய்யாதே! இது என் வசமுள்ள குளம். மாத்ரீ புத்திரனே! என் கேள்விக்கு விடை கூறிவிட்டுப் பிறகு தண்ணீரைக் குடி!" என்றது.

நகுலன் திடுக்கிட்டான். ஆனால் தாகத்தின் வேகத்தினால் அதைக் கவனியாமல் ஜலத்தை எடுத்துக் குடித்

தான். குடித்துவிட்டுக் கரை ஏறினதும் மயக்கம் உண்டாகிக் கீழே விழுந்தான்.

x x x

போனவன் திரும்பி வரவில்லையென்று தருமபுத்திரன் சகதேவனை அனுப்பினான். சகதேவன் பொய்கையண்டை சேர்ந்ததும் அங்கே பூமியில் படுத்துக் கிடந்த சகோதரனைக் கண்டான். அவனை யாரோ கொன்றுவிட்டார்கள் என்று ஊகித்துக்கொண்டே தாகம் பொறுக்காமல் தண்ணீரண்டை சென்றான்.

அசரீரி முன்போலவே, "சகதேவா! இது என் பொய்கை. என்னுடைய கேள்விக்கு விடை சொன்ன பிறகே தாகம் தீர்த்துக் கொள்ளலாம்" என்றது.

நகுலனைப் போலவே தாகம் மேலிட்ட சகதேவனும் அசரீரி எச்சரிக்கையை கவனியாமல் தண்ணீரைக் கண்டதும் எடுத்துக் குடித்தான். அவனும் உடனே இறந்து கீழே விழுந்தான்.

சகதேவனும் திரும்பி வாராததைக் கண்டு யுதிஷ்டிரன் அருச்சுனனைப் பார்த்து, "ஜலத்திற்காகப் போனவர்கள் வெகு நேரமாகியும் என்ன காரணமோ திரும்பி வரவில்லை. நீ போய் அவர்களுக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டதா, பார். ஜலமும் கொண்டு வா!" என்று சொல்லி அனுப்பினான்.

அருச்சுனன் வேகமாகவே சென்றான். குளத்தண்டை தம்பிகள் இருவரும் செத்துக் கிடப்பதைப் பார்த்தான். திடுக்கிட்டு இதற்குக் காரணம் யாராக இருக்கலாம் என்று யோசித்துக்கொண்டே அவனும் தாகத்தைத் தீர்த்துக் கொள்ளப் பொய்கையில் இறங்கினான். அப்போது, "நான் கேட்கும் வினாக்களுக்கு விடை சொல்லிவிட்டுப் பிறகு தாகம் தீர்த்துக்கொள்வாய். இது என்னுடைய வசமுள்ள பொய்கை. மீறினாயானால் நீயும் தம்பிகளைப் போல் மாள்வாய்" என்றது அசரீரி.

அருச்சுனனுக்குக் கோபம் மேலிட்டது, "நீ யார்? கண்ணுக்கெதிரில் நின்று தடு. இதோ இந்தப் பாணங்களால் உன்னைக் கொல்வேன்" என்று சொல்லிச் சத்தத்தைக் கொண்டே குறிபார்த்து பாணங்களை விட்டான். அசரீரி அம்புகளை அலட்சியம் செய்து, "உன்னுடைய பாணங்கள் என்னைத் தீண்டா. என்னுடைய கேள்விகளுக்கு விடை சொல்லிவிட்டுத் தாகம் தீர்த்துக்கொள். அவ்வாறு செய்யாமல் தண்ணீரைப் பருகினையாகில் இறந்து போவாய்" என்றது.

செலுத்திய பாணங்கள் வீணானதைக் கண்டு அருச்சுனன் கோபத்தோடு கடும் யுத்தம் புரிவதற்கு ஆயத்தமானான். பெரிய யுத்தத்தில் இறங்குவதற்குள் தாகம் தீர்த்துக் கொள்ளலாம் என்று பொய்கையில் இறங்கித் தண்ணீர் குடித்தான். குடிக்கவே அவனும் இறந்தான்.

x x x

"அப்பா பீமசேனா! சத்துருக்களைச் சம்ஹாரம் செய்பவனே! அருச்சுனனும் திரும்பவில்லை! நீ போய்ச் சகோதரர்கள் என்னவானார்கள் என்பதைப் பார்த்து விட்டுத் தண்ணீரும் கொண்டுவா! காலம் நமக்கு விரோதமாக இருக்கிறது. உனக்கு மங்களம்! எனக்குத் தாகம் பொறுக்க முடியவில்லை" என்றான் யுதிஷ்டிரன். பீமன் வேகமாகப் போனான்.

பொய்கையண்டை மூன்று சகோதரர்களும் உயிர் துறந்தவர்களாக விழுந்து கிடப்பதைப் பார்த்து பீமனுக்குத் தாங்கமுடியாத துக்கம் மேலிட்டது. "இது யக்ஷர்களுடைய வேலையாகத்தான் இருக்க வேண்டும். அவர்களைப் போர் புரிந்து வீழ்த்துவேன். அதற்குள் தண்ணீர் குடித்து என் தாகத்தைத் தீர்த்துக்கொள்வேன்" என்று எண்ணிப் பொய்கையில் இறங்கப் போனான்.

"அப்பா பீமசேனா! சாகஸம் செய்யாதே! என் வினாக்களுக்குப் பதில் சொல்லி விட்டுத்தான் குளத்தில்

இறங்க வேண்டும். நான் சொன்னதை மீறித் தண்ணீர் குடித்தாயானால் சாவாய்!" என்றது அசரீரி.

"நீ யாரடா என்னைத் தடுக்க?" என்று சொல்லிக் கொண்டே பீமன் நச்சுத் தண்ணீரைக் குடித்துவிட்டுச் சகோதரர்களைப் போல் தானும் கீழே விழுந்தான்.

"ஒரு நாளும் நடவாத விஷயமாக இருக்கிறதே? நெடுநேரமாகியும் போன சகோதரர்கள் யாரும் திரும்பாம லிருப்பதற்கு என்ன காரணம்? ஏதேனும் சாபத்தை அடைந்து விட்டார்களோ? ஜலத்தைக் காணாமல் காட் டில் திரிந்துகொண் டிருக்கிறார்களோ? நானே போய்த் தான் பார்க்க வேண்டும்" என்பதாக யுதிஷ்டிரன் நிச்ச யித்து வனத்திற்குள் சகோதரர்களைத் தேடிக்கொண்டு போனான்.

ஜன சஞ்சார மில்லாததும் புள்ளிமான்களும் பன்றிகளும் பறவைகளும் நிறைந்திருந்ததுமான நச்சுப் பொய்கை வனத்தண்டை தருமபுத்திரன் போனான். அழு கான பச்சைப் புல். அதன்மேல் விழா தீர்ந்த இந்திரத் துவஜங்களைப்போல் சகோதரர்கள் நால்வரும் வீழ்ந்து கிடப்பதைக்கண்டு ஆச்சரியமும் துக்கமும் அடைந்தான். சோகத்தைத் தாங்க முடியாமல் கண்ணீர் விட்டான்.

"அப்பா! பீமனே! உன் சபதம் எல்லாம் வீணா யிற்றே! வனவாசம் முடியப்போகும் சமயத்தில் இறந்து விட்டாயே! தெய்வங்கள் சொன்ன வாக்கெல்லாம் பொய்யாகி விட்டதே" என்று உயிரற்று வீழ்ந்து கிடக் கும் பீமனையும் அருச்சுனனையும் தழுவிப் புலம்பினான்.

"எந்தப் பகைவன் உங்களனைவரையும் கொல்லும் சாமர்த்தியம் படைத்தான்!" என்று மீண்டும் மீண்டும் சகோதரர்களைப் பார்த்துக் குழந்தைபோல அழுதான். "உயிரற்றுக் கிடக்கும் இந்த நகுல சகதேவர்களைப் பார்த் தும் என்னுடைய எஃகு இதயம் வெடிக்காமலிருக்கிறதே! நான் இந்த உலகத்தில் இனி என்ன செய்வதற்காக உயி ருடன் இருக்கவேண்டும்?" என்று தன்னைத் தானே நொந்துகொண்டான்.

பிறகு நன்றாகக் கவனித்துப் பார்த்து, "இது ஏதோ மாயமாகத் தோன்றுகிறது. இவர்களுடைய உடல்களில் காயம் ஏதும் இல்லை. உறங்குகிறவர்கள் போல் முகத்தில் எவ்வித மாறுபாடும் இல்லாமல் கிடக்கிறார்கள். விரோதிகளுடைய காலடிகள் கூட மண்ணில் காணப்படவில்லை. இது துரியோதனனுடைய சதியாகவே இருக்கலாம். ஜலத்தில் விஷம் கலந்திருக்கலாம்" என்று தனக்குத்தான் சொல்லிக்கொண்டே தாகத்தினால் ஏவப்பட்டுப் பொய்கையில் இறங்கினான். உடனே அசரீரி பேச ஆரம்பித்தது:

"உன் தம்பிகள் என் பேச்சைக் கேளாமல் தண்ணீர் அருந்தினார்கள். அவ்வாறு நீயும் செய்யாதே. என் வினாக்களுக்கு விடை கொடுத்துவிட்டுப் பிறகு பொய்கையில் இறங்கித் தாகம் தீர்த்துக்கொள். இது என்னுடைய வசத்தில் இருக்கிற குளம்" என்றது.

x x x

யுதிஷ்டிரன் இது யாரோ யக்ஷன் வாக்கு என்று தெரிந்துகொண்டு அசரீரியினுடைய பேச்சுக்கு இணங்கி "உன் கேள்விகளைக் கேள்" என்றான்.

ஒன்றன்பின் ஒன்றாக அசரீரி பல கேள்விகளைக் கேட்டது.

"எது தினமும் ஆதித்யனை உதிக்கச் செய்கிறது?" என்றது அசரீரி.

"பிரம்மம்" என்றான் யுதிஷ்டிரன்.

"மனிதன் எதனால் எப்போதும் துணை யுள்ளவனாகிறான்?" என்றான் யக்ஷன்.

"தைரியமே மனிதனுக்குத் துணை" என்றான் யுதிஷ்டிரன்.

"எந்த சாஸ்திரம் படித்து மனிதன் புத்திமான் ஆகிறான்?"

"எந்த சாஸ்திரம் படித்துமல்ல; பெரியோர்களை அடுத்தே மனிதன் புத்திமான் ஆகிறான்" என்றான் தரும புத்திரன்.

"பூமியைக் காட்டிலும் கனமானது எது?" என்றான் யக்ஷன்.

"மக்களைத் தாங்கும் தாய் பூமியைக் காட்டிலும் கனமானவள்" என்றான் யுதிஷ்டிரன்.

"ஆகாயத்தைக் காட்டிலும் உயர்ந்தது எது?"

"பிதா."

"காற்றைக் காட்டிலும் விசை கொண்டது எது?"

"மனம்" என்றான் யுதிஷ்டிரன்.

"புல்லிலும் அற்பமானது எது?"

"கவலை."

"தேசாந்திரம் போகிறவனுக்கு யார் தோழன்?"

"வித்தை."

"வீட்டிலிருப்பவனுக்கு யார் தோழன்?"

"மனைவி."

"சாகப்போகிற கிழவனுக்கு யார் நண்பன்?"

"தானம். அதுதான் மரணத்தின்பின் தனியாகச் செல்லும் உயிரின் கூடப் போகும்."

"பாத்திரங்களுக்குள் எது பெரியது?"

"எல்லாவற்றையும் தனக்குள் அடக்கக் கூடிய பெரிய பாத்திரம் பூமி" என்றான் யுதிஷ்டிரன்.

"எது சுகம்?" என்றான் யக்ஷன்.

"சுகம் நல்லொழுக்கத்திலே நிலைபெறுகிறது" என்றான் தரும புத்திரன்.

"எதை விட்டுப் பிரிந்தால் மனிதன் எல்லாருக்கும் பிரியனாகிறான்?"

"தன்னைப் பற்றிய கர்வத்தை விட்டால் மனிதன் மற்றவர்களுக்குப் பிரியமானவனாகிறான்" என்றான்.

"எதை இழந்து விடுவதில் துயரம் இல்லை?"

"கோபத்தை விட்டால் துயரம் அண்டாது" என்றான் தருமபுத்திரன்.

"எதை இழந்தால் மனிதன் தனவான் ஆகிறான்?"

"ஆசையை விட்டால் மனிதன் சம்பத்து அடைகிறான்."

"பிராம்மண்யமானது குலத்தினாலா? ஒழுக்கத்தினாலா? படிப்பினாலா? நிச்சயமாகச் சொல்லு" என்றான் யக்ஷன்.

"குலமும் படிப்பும் பிராம்மண்யத்திற்குக் காரணம் அல்ல; ஒழுக்கமே காரணம். ஒழுக்கத்தில் குறைபட்டவன் பிராம்மணன் ஆகமாட்டான். எவ்வளவு படித்தவன் ஆனாலும் கெட்ட வழக்கங்களில் சிக்கியவன் பிராம்மணன் ஆகமாட்டான். நான்கு வேதங்களை ஓதியிருந்தாலும் கெட்ட நடத்தையுள்ளவன் இழிகுலத்தவனாவான்" என்றான் யுதிஷ்டிரன்.

"உலகத்தில் எது பெரிய ஆச்சரியம்?"

"நாள்தோறும் பிராணிகள் யமன் வீட்டுக்குப் போய்க்கொண்டே இருப்பதைப் பார்த்தும் மிஞ்சி உள்ள மனிதர்கள் தாம் நிலையாக இருக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். இதுவே பெரிய ஆச்சரியம்."

இவ்வாறு இன்னும் பல கேள்விகள் யக்ஷன் கேட்டான். எல்லா வினாக்களுக்கும் யுதிஷ்டிரன் அற்புத அறிவுடன் விடை தந்தான்.

முடிவில் யக்ஷன், "அரசனே! இறந்த சகோதரர்களில் ஒருவன் பிழைக்கக் கூடும்! நீ எவனை விரும்புகிறாயோ அவன் பிழைப்பான்" என்றான்.

யுதிஷ்டிரன் ஒரு கணம் யோசித்தான். பிறகு, "சியாமள நிறமும் தாமரைக் கண்களும் அகன்ற மார்பும்

நீண்ட கைகளும் கொண்டு ஆச்சா மரம்போல் விழுந்து கிடக்கும் நகுலன் உயிரோடு எழுந்திருக்கட்டும்'' என்றான்.

அப்போது யக்ஷன் யுதிஷ்டிரனுக்குப் பிரசன்னமாகி ''பதினாயிரம் யானைகளுக்குச் சமமான பலம் படைத்த பீமனை விட்டுவிட்டு ஏன் நகுலனுடைய உயிரைக் கேட்டாய்? பீமசேனன் உனக்கு ரொம்பப் பிரியம் என்றல்லவோ எல்லோரும் சொல்கிறார்கள்? அருச்சுனனுடைய சாமர்த்திய மல்லவோ உங்களுடைய பாதுகாப்பு? அவ்விருவரையும் விட்டுவிட்டு ஏன் நகுலன் பிழைத் தெழுந்திருக்க விரும்பினாய்?'' என்று யக்ஷன் கேட்டான்.

''யக்ஷனே! தருமமே மனிதனைப் பாதுகாக்கிறது. பீமனுமல்ல, அருச்சுனனுமல்ல. புறக்கணிக்கப்பட்டால் தருமமே மனிதனைக் கொல்லுகிறது. என் பிதாவுக்குக் குந்தியும் மாத்ரியும் இரு மனைவிகள். நான் குந்திக்கு ஒரு புத்திரன் மிஞ்சினேன், மாத்ரி புத்திரனும் ஒருவன் உயிருடன் இருந்தால் சமமாக இருக்கும். நகுலன் பிழைத்து எழுந்திருக்கட்டும்'' என்றான்.

''பட்சபாத மறியாத என் மகனே! உன்னுடைய எல்லாத் தம்பிமார்களும் உயிர் பெற்று எழுவார்கள்'' என்று யக்ஷன் வரம் தந்தான்.

மானாகவும் யக்ஷனாகவும் வந்தது தரும தேவதையே. தன் மகனான யுதிஷ்டிரனை நேரில் பார்த்து அவன் குணாதிசயத்தைச் சோதித்து மகிழ்ச்சி யடைவதற்காக வந்த தரும தேவன் யுதிஷ்டிரனைத் தழுவிக்கொண்டு ஆசீர்வதித்தான்.

''பன்னிரண்டு வருஷ வனவாசம் முடிவதற்கு இன்னும் வெகு சில நாட்களே இருக்கின்றன. இனி பதின்மூன்றாவது வருஷத்தில் செய்து கழிக்க வேண்டிய மறைவுப் பிரதிஜ்ஞையும் சரியாகவே பூர்த்தியாகும். உன்னையும் உன் தம்பிமார்களையும் பகைவர்கள் யாரும் கண்டு பிடிக்க முடியாமல் உங்கள் தவத்தை வெற்றிகரமாகவே

முடிப்பீர்கள்" என்று யமதருமன் யுதிஷ்டிரனுக்கு வரம் தந்து மறைந்தான்.

**பா**ண்டவர்கள் வனவாசத்தின் கஷ்டங்களை யெல்லாம் பொறுத்தார்கள். அருச்சுனன் தகப்பனை இந்திரனிடமிருந்து அஸ்திரங்களை அடைந்து திரும்பினான்.

பீமனும் அண்ணன் மாருதியை ஸௌகந்தித் தடாகத்தண்டை சந்தித்து அவனைக் கட்டி யணைந்து பன் மடங்கு பலம் பெற்றுவிட்டான்.

நச்சுப் பொய்கையண்டை யுதிஷ்டிரன் தன்னுடைய பிதாவான சாக்ஷாத் தரும தேவதையால் ஆலிங்கனம் செய்யப்பட்டுத் தகப்பனுக்குத் தகுந்த புத்திரனாக விளங்கினான்.

"**த**ருமபுத்திரன் தன் பிதாவைத் தரிசித்த இந்தப் புண்ணிய கதை கேட்டவர்களுடைய மனமானது எந்தக் காலத்திலும் அதர்மத்தில் செல்லாது. மித்திர பேதத்திலும் பிறர் பொருளைக் கவர்வதிலும் பிரவேசிக்காது. தனக்கு உரிமை யில்லாத ஸ்திரீயையாவது புருஷனை யாவது கண்டு மயங்க மாட்டார்கள். அற்பப் பொருள்களில் பற்றுதல் கொள்ளமாட்டார்கள்" என்று இந்த யக்ஷப் பிரச்சினைக் கதையைப்பற்றி ஜனமேஜய ராஜாவுக்கு வைசம்பாயனர் சொல்லுகிறார். குற்றங் குறையுடன் சுருக்கமாகத் தமிழில் நான் எழுதி யிருப்பதை அன்புடன் படித்த மக்களும் மகளிரும் அதே நற் பயனைப் பெறுவார்களாக!

# அடிமைத் தொழில்

"பிராமணோத்தமர்களே! நாங்கள் திருதராஷ்டிர குமாரர்களால் வஞ்சிக்கப்பட்டு ராஜ்யம் இழந்து தரித்திர நிலை அடைந்தோமானாலும் சந்தோஷமாக வனத்தில் உங்களோடு இவ்வளவு காலம் கழித்தோம். பதின்மூன்றாவது வருஷம் வந்துவிட்டது. இனித் துரியோதனனுடைய ஒற்றர்களால் கண்டுபிடிக்கப்படாமல் பன்னிரண்டு மாதம் கழிக்கவேண்டும். உங்களை விட்டுப் பிரிய வேண்டியிருக்கிறது. நாங்கள் ராஜ்யத்தை மறுபடி அடைந்து உங்களோடு சேர்ந்து சுகமாகச் சத்துருக்களைக் குறித்துப் பயப்படாமல் வாழும் காலம் என்று வருமோ! அது ஈசுவரனுக்குத் தெரியும். இப்போது உங்கள் ஆசீர்வாதத்தைக் கேட்கிறேன்! திருதராஷ்டிரர்களிடம் பயந்தோ பொருள் பெறவோ எங்களைக் காட்டிக் கொடுத்துவிடக் கருதுகிறவர்களுக்கு நாம் இன்னார் என்று தெரியாமல் மறைந்திருந்து பன்னிரண்டு மாதங்கள் கழிக்க வேண்டும்" என்று யுதிஷ்டிரன் அதுவரையில் தன்னுடன் வசித்து வந்த பிராமணர்களைப் பார்த்துச் சொன்னான். சோகத்தினால் அவனுடைய நா தடுமாறிற்று.

தௌமியர் சமாதானம் செய்து "அப்பனே! கற்றறிந்தவனாகிய நீ இவ்வாறு மனம் தளர்தல் கூடாது. தைரியமாக இனிச் செய்ய வேண்டியதை யோசிப்பாயாக. சத்ருக்களால் வஞ்சிக்கப்பட்ட இந்திரன் முன் நாட்களில் பிராமண வேஷம் தரித்து நிஷத தேசத்தில் மறைந்து வாசம் செய்யவில்லையா? அவ்வாறு ஒளிந்திருந்து இந்திரன் தன்னுடைய பகைவர்களுடைய பலத்தை அழிக்கும் காரியங்களைச் செய்தான். நீயும் அவ்வாறே செய்ய வேண்டும். மகாவிஷ்ணுவானவர் [illegible] அதிதி வயிற்றில் [illegible] ஒடுங்கியிருந்த மனிதனாகப் பிறந்து பலிச் சக்கரவர்த்தியினிடமிருந்து ராஜ்யத்தை அடைந்து உலகத்தைக் காப்பாற்றினாரல்லவா? விருத்தாசுரனை வெல்லுவதற்காக நாராயணன் இந்திரனுடைய ஆயுதத்தில் பிரவே

சித்து மறையவில்லையா? தேவகாரியமாக அக்கினி பகவான ஜலத்தில் மறையவில்லையா? சூரியன் தினசரி பூமியில் மறைந்து நிற்பதைக் காணவில்லையா? ராவணனைச் சம்ஹாரம் செய்வதற்காக மகாவிஷ்ணு தசரதனுடைய வீட்டில் மனிதனாகப் பிறந்து துக்கப்பட்டுப் பல்லாண்டுகள் கழிக்கவில்லையா? இவ்வாறு பூர்வத்தில் அநேக மகாத்மாக்கள் மறைந்தும் ஒளிந்தும் காரியசித்தி அடைந்திருக்கிறார்கள். அப்படியே நீயும் பகைவரை வென்று பாக்கியம் பெறுவாய்'' என்று தேற்றினர்.

X X X

யுதிஷ்டிரன் பிராமணர்களிடம் அனுமதி பெற்று அவர்களையும் மற்ற எல்லாப் பரிவாரத்தையும் ஊருக்குத் திரும்பிப் போகச் சொன்னான். அவர்களும் அவ்வாறே நகரத்துக்குப் போய் பாண்டவர்கள் எங்களை நடு நசியில் விட்டுவிட்டு எங்கேயோ போய்விட்டார்கள் என்று சொல்ல, ஜனங்கள் மிகவும் துயரமடைந்தார்கள்.

பாண்டவர்கள் வனத்தில் ஒரு தனியான இடத்தில் உட்கார்ந்து யோசிக்கலானார்கள். ''அருச்சுனா! நீதான் உலக விவகாரம் நன்றாகத் தெரிந்தவன். பதின்மூன்றாவது வருஷத்தை எந்த இடத்தில் கழிப்பது நலம்?'' என்று தருமபுத்திரன் கேட்டான்.

அருச்சுனன், ''மகாராஜாவே! யமதேவனிடம் இதற்காக வரம் பெற்றிருக்கிறீர். நாம் யாராலும் அறியப்படாமல் பன்னிரண்டு மாதங்களை எளிதாகவே கழிப்போம். எல்லாரும் ஓரிடத்திலேயே இருப்போம். மனத்துக்கு இனிமையான பல தேசங்கள் இருக்கின்றன. பாஞ்சால தேசம் இருக்கிறது. மத்ஸ்யதேசம் இருக்கிறது. சால்வம், வைதேகம், பாஹ்லிகம், தசார்ணம், சூரஸேன நாடு, கலிங்கம், மகதம் இந்த நாடுகள் எல்லாம் இருக்கின்றன. இவற்றில் எது உமக்குப் பிரியமோ அந்தத் தேசத்துக்குப் போகலாம். என்னைக் கேட்டால் விராடனுடைய தேசமான மத்ஸ்ய தேசமே மேலானது என்பேன். விராட நகரம் மிக்க அழகும் ஐசுவரியமும் நிரம்பியது. உம்மு

டைய இஷ்டத்தைச் சொல்லவும். நீர் துக்கப்படலாகாது'' என்றான்.

''மத்ஸ்ய தேசாதிபதி விராடன் மிகுந்த பலமுடைய அரசன். நம்மிடத்தில் பிரியம் வைத்திருப்பவன். தரும சீலன். வயது முதிர்ந்தவன். துரியோதனன் பேச்சைக் கேளாதவன. விராடராஜன் அருகில் மறைந்து வாசம் செய்வதே நலம் என்று எண்ணுகிறேன்'' என்றான் யுதிஷ்டிரன்.

'' அவ்வாறே நிச்சயம் செய்வோம், அரசனே! நீர் விராடனிடத்தில் என்ன காரியத்தில் அமர்வீர்!'' என்றான் அருச்சுனன்.

இவ்வாறு கேட்கும்போது அருச்சுனனுக்குத் துயரம் மேலிட்டது. ''கபடமறியாத மகாத்மா, ராஜாதி ராஜனுக ராஜசூய யாகம் செய்து புகழ்பெற்ற யுதிஷ்டிர மகாராஜன்—மற்றொரு அரசனிடம் மாறு வேஷம் தரித்துச் சேவகத்தில் அமர நேரிட்டதே!'' என்று எண்ணித் துக்கப்பட்டான்.

யுதிஷ்டிரன் சொல்லலானான் :

''நான் விராடனிடம் ஆஸ்தான பணிவிடைவேலைக்கு என்னை எடுத்துக்கொள்ளக் கேட்கலாம் என்றிருக்கிறேன். அரசனுடன் உட்கார்ந்து பாச்சிகை விளையாட்டு விளையாடி அதில் சாமர்த்தியம் காட்டிச் சந்தோஷப்படுத்துவேன். சந்நியாசி வேஷம் தரித்துக் கங்கன் என்ற பெயரிட்டுக்கொண்டு சொக்கட்டான் விளையாடுவதோடு, அரசனுக்கு ஜோதிடம், பட்சி முதலிய சகுனங்கள், வேதம், வேதாந்தங்கள் நீதி சாஸ்திரம் முதலியவற்றில் பண்டிதனாக இருந்து அரசனைச் சந்தோஷப்படுத்துவேன். சபைப் பணிவிடையும் செய்வேன். நான் முந்தி யுதிஷ்டிரனுக்குப் பிராண சிநேகிதனாக இருந்து இதையெல்லாம் கற்றேன் என்று சொல்லி ஜாக்கிரதையாகவே இருந்து வருவேன். நீங்கள் என்னைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். பீமசேனனே! விராடனிடம் நீ எந்த விதமான வேலையில் அமர்வாய்? யக்ஷராக்ஷதர்களை அடக்கின

வனே! பிராமணனுக்காக பகாசுரனை வதம் செய்து ஏக சக்ரபுரத்தைக் காப்பாற்றினாய். இடிம்பனைக் கொன்றாய். ஜடாசுரனை வதம் செய்து எங்களைப் பிழைப்பித்தாய். கோபமும், பலமும் பொங்கி வழியும் வீரனாகிய நீ மத்ஸ்ய ராஜனிடத்தில் எவ்விதம் அடங்கி ஒடுங்கி எந்த வேலையில் அமர்வாய்?" என்று கண்களில் நீர் ததும்பப் பீமனைக் கேட்டான்.

பீமசேனன், "நராதிபனே! நான் விராடன் அரண்மனையில் சமையல் வேலை கேட்டுப் பெறலாம் என்று இருக்கிறேன். எனக்கு மடைப்பள்ளி வேலை நன்றாகத் தெரியும் என்பதை அறிவீர்கள். இதற்கு முன் விராடன் கண்டிராத ருசியுள்ள பதார்த்தங்களைப் பக்குவம் செய்து அவனைத் திருப்திப் படுத்துவேன். காட்டிலிருந்து மரங்களை வெட்டி அடுப்புக்கு ஏராளமாக விறகுச் சுமைகளை கொண்டுவந்து போடுவேன். அரசனிடம் வரும் குஸ்திக்காரர்களுடன் போட்டிபோட்டு மல்யுத்தத்தில் அவர்களை வென்று ராஜாவுக்கு மகிழ்ச்சி உண்டாக்குவேன்" என்றான்.

இதைச் சொல்லவும் யுதிஷ்டிரனுக்குக் கவலை உண்டாயிற்று. குஸ்தியில் பீமன் புகுந்தானால் ஆபத்து என்பது அவன் பயம். உடனே பீமன் அவனுக்குச் சமாதானம் சொன்னான் :

"நான் யாரையும் கொல்லமாட்டேன். நன்றாகக் கசக்கித் துன்பப்படுத்துவேனே யொழிய யமலோகத்துக்கு அனுப்பிவிட மாட்டேன். மதங்கொண்ட காளைகளையும் எருமைக் கடாக்களையும் காட்டு மிருகங்களையும் அடக்கி விராடனுக்கு வேடிக்கை காட்டுவேன்" என்றான்.

x x x

பிறகு யுதிஷ்டிரன் அருச்சுனனை நோக்கி, "உனக்கு எந்தத் தொழிலில் அமர எண்ணம்? அப்பனே, ஒளிக்க முடியாத உன் வீரியத்தை எவ்வாறு ஒளிப்பாய்?" என்றான். இவ்வாறு அருச்சுனனைக் கேட்கும்போது அவ

னுடைய பிரதாபக் காரியங்களையும் கீர்த்தியையும் எடுத்துச் சொல்லப் புகுந்த யுதிஷ்டிரன் நிறுத்த முடியாதவனாக இருபது சுலோகங்கள் வரையில் தம்பியை வருணித்துக்கொண்டே போகிறான். புகழுக்குத் தகுந்தவன் அருச்சுனனைப்போல் உலகத்தில் வேறு யார்?

“அண்ணன்மார்களே! வில்லின் நாண் தேய்த்துத் தழும்பு ஏறிய என்னுடைய கைகளை யாரும் பார்க்காதபடி எப்போதும் ரவிக்கை தரித்து அரசனுடைய ஸ்திரீகளுக்கிடையில் அவர்களுக்கு வேலை செய்யும் நபும்ஸகனாக நான் அமர்ந்து என்னை மறைத்துக் கொள்வேன். இவ்வாறான சாபமும் எனக்கு ஊர்வசி தந்திருக்கிறாள். இந்திரனிடம் சென்றிருந்தபோது என்னை அவள் விரும்பிய காலத்தில் நீ எனக்குத் தாயைப் போன்றவள் என்று நான் மறுத்தேன். அவள் கோபங்கொண்டு நீ புருஷத்தன்மையை இழப்பாய் என்று என்னைச் சபித்தாள். அந்த சாபம் நான் வேண்டும்போது ஒரு வருஷ காலம் மட்டும் என்னை அண்டும் என்று இந்திரன் அனுக்கிரகித்திருக்கிறான். அது இப்பொழுது நமக்கு உதவும். வெண்சங்கினால் செய்யப்பட்ட வளையல்களை அணிந்து ஸ்திரீகளைப் போல் தலைமயிரைப் பின்னி விட்டுக்கொண்டு ரவிக்கை தரித்து விராடன் அந்தப் புரத்து வேலையில் இழி தொழிலில் அமர்ந்து மறைவேன். ஸ்திரீகளுக்கு நர்த்தனம், கானம் கற்பிப்பேன். யுதிஷ்டிரனுடைய அரண்மனையில் திரௌபதிக்குப் பரிசாரகம் செய்து பழக்கப்பட்டிருக்கிறேன் என்று விராடன் அந்தப்புரத்தில் வேலைக்கு வைத்துக்கொள்ளக் கேட்பேன்” என்று சொல்லித் திரௌபதியைப் பார்த்துச் சிரித்தான் தனஞ்சயன்.

யுதிஷ்டிரன் “ஹா! உலகத்தில் கீர்த்தியினாலும் பராக்கிரமத்தாலும் வாசுதேவருக்குச் சமமானவன். பரதவம்சத்தில் உதித்தவன், மேரு மலையைப் போன்றவன். விராடனிடத்தில் ‘நான் நபும்சகன்; எனக்கு அந்தப்புர வேலை தா’ என்று கேட்கப் போகிறானா? இதுவும் நம்முடைய விதியா?” என்று மீண்டும் துக்கத்தில் ஆழ்ந்தான்.

x x x

பிறகு தருமபுத்திரன் நகுல சகாதேவர்களைப்பார்த்தான். "அப்பா, நகுலனே! அழகிய சியாமள நிறத்தவனே! சுகானுபவத்துக்குத் தகுந்தவனே! துக்கத்துக்குத் தகாதவனே! நீ என்ன வேலையில் அமரப்போகிறாய்?" என்று மாத்ரியை நினைத்துக்கொண்டு பரிதபித்துக் கேட்டான்.

"நான் விராடனுடைய குதிரை லாயத்தில் வேலைக்கு இருக்கப் போகிறேன். குதிரைகளைப் பழக்குவதிலும் பார்த்துக்கொள்வதிலும் என் மனம் சந்தோஷமடையும். குதிரைகளுக்குச் செய்ய வேண்டிய வைத்தியமும் நான் நன்றாய்ப் படித்திருக்கிறேன். எந்தக் குதிரைக் குட்டியையும் என்னால் அடக்க முடியும். ஏறிச் சவாரி செய்து பழக்குவதிலும், வண்டி தேர் முதலிய வாகனங்களில் கட்டிப் பழக்குவதிலும் நான் சாமர்த்தியம் பெற்றிருக்கிறேன். பாண்டவர்களிடத்தில் நான் குதிரைகளைப் பார்த்துக் கொண்டிருந்தேன் என்று சொல்லி நான் விராட ராஜனிடம் தகுந்த வேலை சம்பாதித்துக் கொள்வேன்" என்றான்.

"பிருஹஸ்பதிக்குச் சமானமான புத்தி படைத்த சகதேவன், நீதிசாஸ்திரத்தில் சுக்கிரன்போன்ற நிபுணன். மந்திராலோசனையில் ஒப்பற்ற இவன் என்ன செய்வான்?" என்றான் யுதிஷ்டிரன்.

"நகுலன் குதிரைகளைப் பார்க்கட்டும். நான் மாடுகளைப் பார்த்துவரும் வேலையில் அமரலாம் என்றிருக்கிறேன். விராடனுடைய பசுக்களையும் காளைகளையும் நோய்களாவது காட்டு மிருகங்களாவது அண்டாமல் காத்து வருவேன். மத்ஸ்ய ராஜனுடைய பசுக்கள் எண்ணிக்கையில் பெருகி, புஷ்டியாக வளர்ந்து நிறையப் பால் தரும்படியாகப் பார்த்து வருவேன். காளைகளின் லட்சணங்களும் எனக்கு நன்றாய்த் தெரியும்" என்றான் சகதேவன்.

"கிருஷ்ணையே! நீ என்ன வேலை செய்ய முடியும்?" என்று திரௌபதியைக் கேட்க நினைத்த தருமபுத்திரன் அந்தக் கேள்வியைக் கேட்க முடியாதவனாகத் திகைத்

தான். பிராணனைக் காட்டிலும் பிரியமானவள்; பெற்ற தாயைப்போல் பூஜித்துக் காப்பாற்றத் தக்கவள், மிருது வான தேகத்தைக் கொண்ட அரச குமாரி, எந்த சேவக வேலையில் எவ்வாறு அமர முடியும் என்று திகைத்தான்.

"ராஜேந்திரனே! என் காரணமாக நீர் சோகத்தில் திகைக்க வேண்டாம். என்னைப்பற்றி மனக் கவலைப் படாமல் இருக்க வேண்டும். பிரபுவே! நான் விராட னுடைய அந்தப்புரத்தில் வேலைக்கு இருப்பேன். ராஜ ஸ்திரீகளுக்குத் தோழியாகவும் பரிசாரகம் செய்தும் வருவேன். என் சுதந்திரத்தையும் கற்பையும் காப்பாற்றி வருவேன். ஸைரந்திரிகளுக்கு இந்த உரிமை உண்டு. தலை மயிர் பின்னுவதிலும அந்தப்புர ஸ்திரீகளுடன் சந்தோஷ மாகச் சம்பாஷணை செய்து காலம் கழிக்கச் செய்யும் வேலை யிலும் நான் இருப்பேன். யுதிஷ்டிரனுடைய அரண்மனை யில் திரௌபதி தேவிக்கு இவ்வாறே சேவை செய்து பழகி யிருக்கிறேன் என்று சொல்லி, விராட ராஜனுடைய மனைவியிடம் வேலை சம்பாதித்துக் கொண்டு மறைந்து இருப்பேன்" என்றாள்.

"கல்யாணி! உன்னுடைய குலத்துக்குத் தகுந்த மங்களகரமான வார்த்தையைப் பேசினாய்!" என்று யுதிஷ் டிரன் திரௌபதியின் தைரியத்தைப் பாராட்டினான்.

x x x

இவ்வாறு பாண்டவர்கள் தீர்மானித்த பிறகு, தௌம்யர் அவர்களை ஆசீர்வதித்து, அவர்களுக்குப் புத்தி மதிகளும் சொன்னார்: "ராஜக் கிரகத்தில் வேலைக்கு இருக் கிறவர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அதிக மாகப் பேசாமல் அரசனை உபாசிக்க வேண்டும். கேட்ட பின்னரே யோசனை சொல்ல வேண்டும். கேளாமல் ஒரு போதும் அரசனுக்கு யோசனை சொல்லப் புகலாகாது சமயம் பார்த்து அரசனைப் புகழ வேண்டும். அற்பக் காரியமாயினும் அரசனிடத்தில் தெரிவித்தே செய்ய வேண்டும். அரசன் மனித உருவம் கொண்ட நெருப்பு ஆவான். அதிகம் கிட்ட நெருங்கக் கூடாது. அலட்சியம்

செய்யக் கூடாது. எவ்வளவு நம்பிக்கையும் அதிகாரமும் பெற்றபோதிலும் எந்தச் சமயமும் உடனே நீக்கப்படலாம் என்று வாயிலைப் பார்த்த வண்ணமாகவே எப்போதும் இருக்க வேண்டும். அரசர்களிடத்தில் நம்பிக்கை வைத்தல் மூடத்தனமாகும். அரசனுடைய அன்பைப் பெற்று விட்டதாக எண்ணி அவனுடைய வாகனத்திலாவது ஆசனத்திலாவது ரதத்திலாவது ஏறக்கூடாது. அரசனிடத்தில் சேவை செய்கிறவன் சோம்பலற்று மனத்தை அடக்கினவனுகவே இருக்க வேண்டும். அரசனால் கௌரவிக்கப்பட்டாலும் அவமதிக்கப்பட்டாலும் சந்தோஷமாவது மனவருத்தமாவது காட்டக் கூடாது.

"ரகசியமாகச் சொல்லப்பட்ட வார்த்தைகளை வெளியில் பேசக்கூடாது. குடிகளிடமிருந்து எந்த விதமான பரிதானமும் வாங்கக் கூடாது. வேறொரு சேவகனைப் பார்த்துப் பொறுமைப் படக்கூடாது. அறிவுள்ளவர்களை விட்டு மூடர்களை அதிகாரத்தில் அரசன் வைப்பான். அதைக் கண்டு மனக்கசப்பு அடையக் கூடாது. அரண்மனை ஸ்திரீகள விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அவர்களிடத்தில் நேசம் பாராட்டக்கூடாது."

இவ்வாறு ராஜ சேவகர்களுக்கு வேண்டிய இன்னும் அநேக எச்சரிக்கைகளைத் தௌம்யர் உபதேசம் செய்துவிட்டு, "பாண்டவர்களே! ஒரு வருஷம் விராடனிடத்தில் சேவக விருத்தியில் இவ்வாறு பொறுமையுடன் இருந்து முடிந்தீர்களானால், பிறகு உங்களுடைய ராஜ்ய பதவியை அடைந்து சுகமாக வாழ்வீர்கள்" என்று ஆசீர்வதித்தார்.

# மானம் காத்தல்

தருமபுத்திரன் சந்நியாசி வேஷம் தரித்தான். அருச்சுனன் ஒரு நபும்ஸகனுகவே மாறி விட்டான். மற்றவர்களும் தோற்றம் மாறி யாரும் கண்டு கொள்ளாதவாறு ஆனார்கள். உருவம் மாறி இருந்தாலும் அவர்களுக்கு இயற்கையான வசீகரத் தோற்றமும் தேஜஸும் பழைய படியே இருந்தன. ஆகையால் விராட ராஜனிடம் வேலையில் அமர்வதற்காகப் போன காலத்தில், இவர்கள அரசு புரியும் யோக்கியதை படைத்தவர்களாகக் காணப்படுகிறார்கள்; குற்றேவல் செய்யத் தகுந்தவர்களல்ல என்று ஒவ்வொருவரைப் பற்றியும் எண்ணி வேலையில் அமர்த்திக் கொள்ள விராடன் முதலில் தயங்கினான். ஆயினும் பாண்டவர்கள் வற்புறுத்தியதின் மேல் தைரியங் கொண்டு, சந்தோஷமாகவே அவர்கள் கேட்டுக்கொண்ட பணிவிடை ஸ்தானங்களில் அவரவர்களை அமைத்தான்.

யுதிஷ்டிரன் விராட ராஜனுக்கு ஆஸ்தானத் தோழனாக இருந்துகொண்டு அவனுடன் சொக்கட்டான் ஆடிக் கொண்டு காலம் கழித்து வந்தான். பீமன் மடைப்பள்ளித் தலைவனாக வேலைசெய்து வந்தான். அவ்வப்போது பிரசித்தி பெற்ற மல்லர்களுடன் குஸ்தி பிடித்தும் துஷ்ட மிருகங்களைச் சமாளித்தும் அரசனை மகிழ்வித்து வந்தான்.

அருச்சுனன் பிருகன்னளை என்ற பெயருடன் அந்தப்புரப் பெண்களுக்கு, முக்கியமாக விராடன் மகள் உத்தரைக்கும் அவளுடைய தோழிகளுக்கும் வேலைக்காரர்களுக்கும் நிருத்தியமும் கானமும் வாத்தியங்கள் வாசிக்கவும் கற்பித்து வந்தான். நகுலன் குதிரைகளைப் பழக்குவதிலும் அடக்குவதிலும் அவற்றின் நோய்களுக்குச் சிகிச்சை செய்வதிலும் பாதுகாப்பதிலும் மிகுந்த திறமை காட்டி விராடனுக்குச் சேவை செய்து வந்தான். சகதேவன் பசுக்களையும் காளைகளையும் கவனித்து வந்தான்.

டல தாசிகளுடைய பணிவிடையைப் பெறத் தக்க ராஜகுமாரியான பாஞ்சாலி விராடன் மனைவி சுதேஷ்ணைக்கு ஊழியம் செய்து கொண்டு, அந்தப்புர ஸைரந்தரியாகக் காலம் கழித்தாள். பர்த்தாக்களுடைய சத்தியப் பிரதிஜ்ஞையைக் காப்பாற்றும் பொருட்டு மானத்துக்கு ஒவ்வாத குற்றேவல் பணிகளில் ஈடுபட்டாள்.

சுதேஷ்ணையின் சகோதரன் கீசகன விராடனுடைய சேனைத் தலைவன. அவனும் அவன் குலத்தவரும் விராடனுடைய படை வீரர்களாக இருந்து விருத்தனை விராட ராஜனுடைய பலத்தை மிகப் பெருக்கினார்கள். மத்ஸ்ய தேசத்திற்கு உண்மை அரசன் கிழவன் விராடன அல்ல. கீசகனே என்று பாமர ஜனங்கள் சொல்லி வந்தார்கள். அவனுடைய செல்வாக்கு அவ்வளவு ஓங்கிவிட்டிருந்தது.

அந்தக் கீசகன் தன் பலத்தாலும் அரசனிடம் தனக்கிருந்த செல்வாக்காலும் செருக்கடைந்து மதி இழந்தவனானன். திரௌபதியைக் கண்ட முதற்கொண்டு காம விகாரமடைந்து இவள் ஒரு வேலைக்காரிதானே, இவளை எளிதில் அடையலாம் என்று எண்ணிப் பல தடவை முயற்சி செய்தான்.

சுதேஷ்ணையிடமாவது மற்றவர்களிடமாவது இதைப் பற்றிச் சொல்லிக்கொள்ள திரௌபதி கூச்சப்பட்டாள். தன்னை யாராவது அவமதித்தால் அவர்களைத் தன்னுடைய பதிகளான கந்தர்வர்கள் ரகசியமாக வதம் செய்துவிடுவார்கள் என்று சொல்லிக்கொண்டு வந்தாள். அவளுடைய ஒழுக்கத்தையும் தேஜஸையும் பார்த்துக் கந்தர்வர்களைப் பற்றி அவள் சொன்னதை எல்லாரும் நம்பி வந்தார்கள். ஆனால் கீசகன் கந்தர்வர்களைப் பொருட்படுத்தவில்லை. பல தடவை திரௌபதியை அடைய முயற்சித்தும் பயன் பெறாமல் கடைசியில் தன்னுடைய சகோதரி சுதேஷ்ணையிடம் விஷயத்தைத் தெரிவித்தான்.

x x x

"உன்னுடைய ஸைரந்திரியைப் பார்த்தது முதல் எனக்குத் தூக்கமில்லை, சுகமுமில்லை. அவளை எப்படியாவது என்னிடம் நீ சேர்ப்பிக்க வேண்டும்" என்று சகோதரியைக் கெஞ்சினான்.

சொல்ல வேண்டிய புத்திமதியும் நல்ல வார்த்தைகளும் அவள் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். கீசகன் கேட்கவில்லை. முடிவில் சுதேஷ்ணை கீசகன் சொன்னதை ஒப்புக்கொண்டாள். இருவருமாக ஒரு யுக்தி செய்து திரௌபதியை வலையில் சிக்கவைக்கத் தீர்மானித்தார்கள்.

ஒரு நாள் இரவில் கீசகனுடைய வீட்டில் விசேஷமான பணியாரங்களும் மதுபானமும் தயார் செய்து, அந்தச்சமயம் சுதேஷ்ணை ஸைரந்திரியைக் கூப்பிட்டு, "நீ தம்பி கீசகன் வீட்டுக்குப் போய் இன்று அங்கே பக்குவமாகி யிருக்கும் மதுபானத்தை இந்தப் பாத்திரம் நிறைய வாங்கி வா" என்று ஒரு அழகிய பொன் கலசத்தை அவளிடம் கொடுத்தாள்.

"நான் இந்த நேரத்தில் கீசகன் வீட்டுக்குத் தனியாகப் போகமாட்டேன். எனக்குப் பயமாக இருக்கிறது. வேறு யாரையாவது அனுப்புங்கள். எத்தனையோ வேலைக்காரிகள் இருக்கிறார்களே!" என்று சொல்லிப்பலவாறாகத் திரௌபதி வேண்டிக் கொண்டாள்.

சுதேஷ்ணை கேட்கவில்லை. கோபித்துக் கொண்டவள் போல் நடித்து, "நீயே போகவேண்டும். வேறு யாரையும் அனுப்பமுடியாது" என்று திரௌபதியை அனுப்பினாள்.

கீசகன் வீட்டில் அவள் பயந்தவாறே நடந்தது. காமவெறி கொண்ட அந்த நீசன் திரௌபதியைக் கெஞ்சியும் வற்புறுத்தியும் தொந்தரவு செய்தான்.

"ராஜ குலத்தைச் சேர்ந்த நீ கீழ் ஜாதியைச் சேர்ந்த என்னை ஏன் விரும்புகிறாய்? அதர்மத்தில் ஏன் பிரவேசிக்கிறாய்? கணவனைப் படைத்த ஒரு ஸ்திரீயை ஏன் தீண்டப் பார்க்கிறாய்? நசித்துப் போவாய். எனக்குக் காவ

லாக இருக்கும் கந்தர்வர்கள் கோபங்கொண்டு உன்னை வதம் செய்து விடுவார்கள்!'' என்று அவன் விருப்பத்தை மறுத்தளித்தாள்.

எவ்வளவு வற்புறுத்தியும் திரௌபதி கேளாததைக் கண்டு கீசகன் அவளுடைய கையைப் பிடித்து இழுத்தான். திரௌபதி தன் கையிலிருந்த பாத்திரத்தைக் கீழே போட்டுவிட்டு அவனை உதறித் தள்ளி வெளியே ஓடினாள். கீசகன் கோபம் மேலிட்டு அவளைப் பின் தொடர்ந்தான். ராஜ சபை யண்டை முறையிட்டுக் கொண்டு ஓடின அவளை அதிகாரத்தினாலும் செல்வாக்கினாலும் மதம் கொண்டு யாரையும் லட்சியம் செய்யாமல், "சீ! தாசி!'' என்று சொல்லிப் பல பேரும் பார்க்கக் காலால் உதைத்தான். விராடனைத் தன் வசப் படுத்திக் கொண்டு சகல அதிகாரமும் பெற்றிருந்த சேனைத் தலைவனைக் கண்டு எல்லாருக்கும் பயம். அவன் அக்கிரமத்தைத் தைரியமாக நின்று கண்டிக்க யாரும் முன்வரவில்லை.

திரௌபதியானவள் தனக்கு நேர்ந்த அவமானத்தையும் திக்கற்ற நிலையையும் நினைத்துத் துயரமும் கோபமும் தாங்க முடியாமல், தாங்கள் இன்னார் என்று உலகத்துக்குத் தெரிந்து விட்டால் நேரிடும் விபத்தையும் பொருட்படுத்தாமல், இரவில் பீமன் படுத்திருந்த இடத்திற்குப் போய் அவனை எழுப்பினாள்.

"இதை என்னால் பொறுக்க முடியவில்லை. நீசனான இந்தக் கீசகனை உடனே வதம் செய்வாய். உங்களுடைய பிரதிஜ்ஞையை காப்பாற்றுவதற்காக நான் விராடனுக்குச் சந்தனம் அரைத்துத் தரும் தாசியாக இருந்து வருகிறேன். மதிப்புக்குரியவரல்லாதவர்களுக்குப் பணிவிடை செய்து வருகிறேன். உனக்கும் குந்தி தேவிக்குமே நான் எப்பொழுதும் பயப்பட்டதில்லை. ஆனால் இப்போது இந்த அந்தப்புரத்தில் நடுங்கிக் கொண்டு பணிவிடை செய்து வருகிறேன். என் கைகளைப் பார்!'' என்று சொல்லிச் சந்தனம் அரைத்துத் தழும்பேறிய கைகளை

பீமனுக்குக் காண்பித்தாள். விருகோதரன் அவள் கைகளை முகத்தில் ஒத்திக் கொண்டான்.

அவளுடைய கண்ணீரைத் துடைத்துவிட்டு, "கல்யாணி! நான் இனி யுதிஷ்டிரனுடைய பிரதிக்ஞையையும் அனுசரிக்கமாட்டேன். தனஞ்சயனுடைய யோசனையும் கவனிக்க மாட்டேன். நீ என்ன சொல்லுகிறாயோ அதைச் செய்வேன். கீசகனை அவன் சகல பந்துக்களோடு இப்போதே கொல்வேன்!" என்று எழுந்தான்.

பிறகு திரௌபதி அவசரப்பட வேண்டாம் என்று பீமனை எச்சரிக்கை செய்து தடுத்தாள். இருவரும் ஒரு யோசனை செய்து முடித்தார்கள். கீசகனை ஏமாற்றி இரவில் தனியாக நடனசாலையில் யாருமில்லாத இடத்திற்கு வரச் சொல்லி, அவனை அங்கே வதம் செய்து விடுவதென்று தீர்மானித்தார்கள்.

மறுநாள் விடிந்ததும், கீசகன் திரௌபதியைப் பார்த்து, "ஸைரந்திரி! அரசனுக்கெதிரில் உன்னை நான் கீழே தள்ளிக் காலால் உதைத்தேன். உன்னைக் காக்க ஒருவனும் முன் வரவில்லை. பெயருக்கு மாத்திரம் இந்த விராடன் மத்ஸ்ய தேசத்துக்கு அரசன். உண்மையில் சேனாதிபதியாகிய நான்தான் அரசன் என்று அறிவாய். என்னைச் சுகமாக வந்து அடை. நீ மகாராணியைப்போல் எல்லா போகங்களையும் அனுபவிப்பாய்! உனக்கு நான் தாசனாக இருப்பேன்" என்று மறுபடியும் காமாதுரனாக வற்புறுத்தினான்.

திரௌபதி அவனுக்கு இணங்கிவிட்டதாகக் காட்டிக் கொண்டு, "கீசக! நான் சொல்லுகிற வார்த்தையை உண்மையாக நம்பு. என்னோடு நீ சேருவதை உன்னுடைய தோழர்களாவது சகோதரர்களாவது யாரும் அறியக் கூடாது. நான் பழிக்குப் பயந்தவள். யாருக்கும் தெரியாமல் காப்பாற்றுவதாகச் சபதம் செய்தாயானால் உனக்கு நான் வசப்படுவேன்" என்றாள்.

கீசகன் மகிழ்ச்சிப் பரவசமாகிவிட்டான். அவள் இருக்கும் வீட்டுக்குத் தனியாகத் தான் அன்று வருவதாக ஒப்புக் கொண்டான்.

"நடன சாலையில் பகலில் பெண்கள் நர்த்தனம் பழகுகிறார்கள். இரவில் அவரவர்கள் இருக்குமிடத்திற்குப் போய் விடுகிறார்கள். அங்கே யாரும் இருக்கமாட்டார்கள். இன்றிரவு அந்த இடத்திற்கு நீ வந்து சேர். நான் கதவுகளைத் திறந்து வைத்து அங்கே படுத்திருப்பேன். அவ்விடத்தில் நான் உனக்கு உடன்பட்டவளாவேன்" என்றாள்.

கீசகன் ஆனந்தத்தில் மூழ்கினான்.

x x x x

அன்றிரவு ஸ்நானம் செய்து நிறைய அலங்காரங்கள் செய்துகொண்டு கதவு திறந்து வைக்கப்பட்டிருந்த நர்த்தன சாலைக்குள் யாருக்கும் தெரியாமல் மெதுவாகப் பிரவேசித்தான்.

ஒரு கட்டிலில் யாரோ படுத்திருந்ததாகக் காணப்பட்டது. அது ஸைரந்திரியாக இருக்க வேண்டும் என்று எண்ணினான். கட்டிலண்டை இருட்டில் சென்றான். கட்டிலின் மேல் மெல்லிய ஒரு வெண்பட்டு வஸ்திரம் தரித்துக் கொண்டு படுத்திருந்த பீமசேனனை ஸைரந்திரி என்று எண்ணிக் கையினால் மெதுவாகத் தொட்டான். உடனே பீமன் எழுந்து சிம்மம் மானைப் பிடிப்பதுபோல் கீசகனை பிடித்துக் கீழே தள்ளினான்.

இருட்டில் இருவருக்கும் மல் யுத்தம் நடந்தது. இவன் ஸைரந்திரியின் கந்தர்வர்களில் ஒருவன் என்றே கீசகன் எண்ணினான். கீசகனும் பீமனைப் போலவே மிக்க பலசாலி. அத்தக் காலத்தில் பீமன், பலராமன், கீசகன் மூவர்களும் மல் யுத்தத்தில் சம புகழ் பெற்றவர்கள். வாலி சுக்ரீவர்களுடைய யுத்தத்தைப்போல் பீமனுக்கும் கீசகனுக்கும் போர் நடந்தது.

முடிவில் பீமன் கீசகனைக் கொன்று அவன் உடலைக் கசக்கி ஒரே உருண்டைப் பிண்டமாக்கிவிட்டு, திரௌபதியிடம் விடை பெற்றுக் கொண்டு விரைவாக மடைப்

16

பள்ளிக்குச் சென்று ஸ்நானஞ் செய்து சந்தனம் பூசிக் கொண்டு திருப்தியுடன் படுத்துக் கொண்டான்.

திரௌபதி நர்த்தன சபைக் காவலாளிகளை எழுப்பி, "கீசகன் என்னை இம்சிக்க வந்தான். எனனுடைய நாதர்களான கந்தர்வர்கள் கீசகனை வதம் செய்து விட்டார்கள். அதர்ம வழியில் ஆசை கொண்ட உங்கள் சேனுபதி கந்தர்வர்களால் கொல்லப்பட்டு இறந்து கிடப்பதைப் பாருங்கள்" என்று சொல்லி உருவம் தெரியாத சவமாகக் கிடக்கும் கீசகனைக் காண்பித்தாள்.

# விராடனைக் காத்தது

கீசக வதத்தின் பயனாக விராடனுடைய நகரத்தில் திரௌபதியைக் கண்டு எல்லோருக்கும் பெரும் பயம். இவளோ அழகாயிருக்கிறாள். யாவருமே இவளுடைய தோற்றத்தால் இழுக்கப் படுகிறார்கள். இவளுக்குக் காவலோ கந்தர்வர்கள். கண்ணெடுத்துப் பார்த்தாலும் குற்றமாகலாம். இது நகரத்தாருக்கும் அரண்மனையில் உள்ளவர்களுக்கும் பெரிய ஆபத்து. கந்தர்வர்கள்கோபங் கொண்டு ஏதேனும் செய்துவிடுவார்கள். இவளை நகரத்தை விட்டு வெளிப்படுத்திவிடுவதே நலம் என்று எண்ணி எல்லாரும் சுதேஷ்ணையைக் கேட்டுக் கொண்டார்கள்.

"அம்மா! நீ ரொம்ப புண்ணியசாலி. தயவு செய்து எங்கள் ஊரைவிட்டுப் போய்விடு. என்னிடம் இதுவரை நீ வேலை செய்தது போதும்" என்றாள் சுதேஷ்ணை திரௌபதியிடம்.

அஜ்ஞாதவாசத் தவணை இன்னும் ஒரு மாசமே இருந்தது. சுதேஷ்ணை சொன்னதைக் கேட்டு வருத்தம் மேலிட்டு திரௌபதி, "என் மேல் கோபம் கொள்ள வேண்டாம். நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. இன்னும் முப்பது நாள் பொறுத்திருங்கள். ஒரு மாதம் தீர்ந்ததும் என் பதிகளான கந்தர்வர்கள் காரிய சித்தி அடைந்து விடுவார்கள். அப்போது நான் அவர்களுடன் சேர்ந்து விடுவேன். கந்தர்வர்கள் விராட ராஜனுக்கும் உனக்கும் என்றென்றைக்கும் நன்றியுள்ளவர்களாக இருப்பார்கள்! என்னைப் போகச் சொல்லாதே" என்றாள்.

திரௌபதிக்குக் கோபம் வருமே என்று சுதேஷ்ணையும் பயந்து அவள் சொல்லுக்கு இசைந்தாள்.

பன்னிரண்டு வருஷங்கள் முடிந்து அஜ்ஞாத வாச காலம் ஆரம்பமானது முதல் துரியோதனனுடைய சாரணர்கள் அவன் கட்டளைப்படி அநேக தேசங்களிலும்

கிராமங்களிலும் நகரங்களிலும் ஜனங்கள் மறைந்திருக்கும்படியான எல்லா இடங்களிலும் இடை விடாமல் பாண்டவர்களைத் தேடினார்கள். இவ்வாறு பல மாதங்கள் சென்றன. பாண்டவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லையென்று சாரணர்கள் துரியோதனனிடம் தெரிவித்தார்கள்.

"மனுஷ்யேந்திரரே! ஜனசஞ்சாரமில்லாத இடங்களெல்லாம் பார்த்து விட்டோம். புதர்கள் நிறைந்த காடுகளிலும் பார்த்துவிட்டோம். ஆசிரமங்களிலும் மலைச் சிகரங்களிலும் தேடினோம். ஜனங்கள் நிறைந்திருக்கின்ற நகரங்களிலும் நன்றாக விசாரித்துத் தேடினோம். யாதொரு துப்பும் கிடைக்கவில்லை. அவர்கள் நசித்தே போய் விட்டார்கள் என்பது உறுதி" என்றார்கள்.

மிக்க பலவானான கீசகனை யாரோ கந்தர்வர்கள் ஒரு ஸ்திரீ விஷயமாகக் கொன்று விட்டார்கள் என்கிற விருத்தாந்தம் ஹஸ்தினாபுரத்துக்கும் வந்தது. கீசகனைக் கொல்லும் சக்தி வாய்ந்தவர்கள் உலகத்தில் இருப்பவர் மூவரே. அவர்களில் பீமன் ஒருவன். கீசகனைக் கொன்றவன் பீமனாகவே யிருக்கலாம். கொலைக்குக் காரணம் திரௌபதியாகவும் இருக்கலாம் என்று துரியோதனன் ஊகித்தான். இவ்வாறு அவன் சந்தேகித்ததை சபையிலும் சொன்னான்.

"விராட நகரத்தில் பாண்டவர்கள் மறைந்திருப்பதாக நான் எண்ணுகிறேன். விராட ராஜன் என்னிடம் சிநேகம் வைத்துக்கொள்ள மறுத்து வருகிறான். அவனுடைய தேசத்தை நாம் படையெடுத்துப் போய்த் தாக்குவதே நல்லது. பசுக் கூட்டத்தைக் கைப்பற்றுவோம். அங்கே பாண்டவர்கள் இருந்தால் நிச்சயம் போருக்கு வருவார்கள். பிரதிஜ்ஞை செய்யப்பட்ட காலத்திற்குள் அவர்களை நாம் கண்டுவிட்டால் மறுபடியும் பன்னிரண்டு வருஷ காலம் அவர்கள் வனம் போக வேண்டியதாகும். பாண்டவர்கள் அவ்விடமில்லாவிட்டாலும் நமக்கு நஷ்டம் ஏதும் இல்லை" என்றான்.

இவ்வாறு துரியோதனன் சபையில் சொன்னதும் திரிகர்த்த தேசாதிபதியான சுசர்மராஜன் எழுந்து தன் யோசனையைச் சொன்னான் ; " மத்ஸ்ய தேசத்து ராஜா எனக்கு விரோதியாவான். கீசகன் என்னை மிகவும் பாடு படுத்தி யிருக்கிறான். அவன் இறந்துவிட்ட படியால் விராடனுடைய பலம் இப்போது குறைந்திருக்கிறது. இந்தச் சமயத்தில் விராடனை எதிர்த்துப் படை யெடுத்துப் போக எனக்கு அனுமதி கொடுக்க வேண்டும் " என்றான்.

கர்ணன் இந்த யோசனையை ஆதரித்தான். பிறகு எல்லாரும் சேர்ந்து முடித்த யோசனை, சுசர்மன் தன்னுடைய யோசனையைக் கொண்டு மத்ஸ்ய தேசத்தில் தென் பக்கத்திலிருந்து பிரவேசித்துத் தாக்க வேண்டியது. அப்போது விராடனுடைய சேனை யெல்லாம் சுசர்மனை எதிர்க்கச் செல்லும். அதன் பிறகு துரியோதனன் கௌரவப் படையுடன் எதிர் பாராதபடி விராட நகரத்தை வடக்கே தாக்குவதென்று தீர்மானித்தார்கள்.

சுசர்மன் விராடனுடைய தேசத்தில் தெற்கேயிருந்த பசுக் கூட்டங்களைக் கவர்ந்து தோட்டங்களையும வயல்களையும் பாழாக்கினான். இடையர்கள் ஓடிப்போய் விராடனிடம் முறையிட்டார்கள். விராடன் தன் மைத்துனன கீசகன் இந்த ஆபத்துக் காலத்தில் இல்லையே என்று பரிதபித்தான். அச்சமயம் கங்கன், அதாவது யுதிஷ்டிரன், "அரசனே ! நீர் கவலைப்பட வேண்டாம். நான சந்நியாசியாயிருந்தாலும் ஆயுதப் பயிற்சி பெற்றவன். நான் கவசம் பூண்டு ரதம் ஏறி உம்முடைய சத்துருக்களைத் துரத்தி விடுவேன். சமையற்காரனை வல்லனும உமது குதிரைக்காரன் தாமக்கிரந்தியும மாடுகளைப் பார்த்துவரும் தந்திரீபாலனும் ரதங்கள் ஏறி நமக்குத் துணையாக வர உத்தரவிடும். அவர்களும் வீரர்கள என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களுக்கெல்லாம் ரதங்களும் ஆயுதங்களும் தருவதற்கு உத்தரவு செய்வீராக " என்றான்,

விராடன் மிகவும் மகிழ்ச்சி யடைந்து அவ்வாறே உத்தரவிட்டுத் தேர்கள் தயாராயின. அருச்சுனனைத்

தவிர மற்ற பாண்டவர்கள் நால்வரும் விராடனுடைய சேனையுடன் சுசர்மனை எதிர்க்கச் சென்றார்கள்.

சுசர்மனுடைய சேனைக்கும் விராடனுடைய சேனைக்கும் கடும் போர் நடந்தது; இருதரப்பிலும் பலர் மாண்டார்கள். சுசர்மன் தன் துணையாளர்களுடன் விராடனை எதிர்த்து அவனுடைய தேரைச் சூழ்ந்து கொண்டான், விராடன தேரை விட்டு இறங்கி யுத்தம் செய்ய வேண்டியதாயிற்று. சுசர்மன் விராடனை உயிரோடு பிடித்துத் தன் தேரில் ஏற்றி வைத்துக்கொண்டு வெற்றியுடன் சென்றான். விராடன் இவ்வாறு பிடிபட்டவுடனே மத்ஸ்ய ராஜ்யச் சைனியம் தைரியம் இழந்து சிதறி ஓட ஆரம்பித்தது.

அப்போது யுதிஷ்டிரன பீமசேனனுக்கு உத்தரவிட்டான்; "இனி நீ உபேட்சையாக இருத்தலாகாது. விராடனை விடுவித்துச் சிதறி ஓடும் மத்ஸ்ய சேனைக்குத் தைரியம் உண்டாக்கி, சுசர்மனை எதிர்க்க வேண்டும்" என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொன்னதும் பீமன் ஒரு மரத்தைப் பிடுங்கப் போனான். யுதிஷ்டிரன் அதைத் தடுத்து "நீ உன் வழக்கப்படி மரத்தை எடுத்துச் சிம்மநாதம் செய்தாயானால் உன்னைக் கண்டு கொள்வார்கள். சாதாரண முறையில் தேரின் மேலிருந்த வில்லை யெடுத்து யுத்தம் செய்" என்றான்.

அவ்வாறே பீமன் தேர் ஏறி எதிரிகளைத் தாக்கி விராடனை விடுவித்துச் சுசர்மனையும் சிறைப்படுத்தினான். பயந்தோடிய மத்ஸ்ய தேசத்துச் சேனை மறுபடி ஒழுங்காக நின்று போர் புரிந்து சுசர்மனுடைய படையை வென்றது.

x x x

சுசர்மன் தோல்வி யடைந்தான் என்கிற செய்தி நகரத்துக்கு எட்டியவுடன் ஊரரெல்லாம் நகரத்தை அலங்கரித்து வெற்றியுடன் திரும்பிவரும் அரசனை எதிர்கொள்ளச் சென்றார்கள்.

இவ்வாறு விராட நகரம் அரசனை எதிர் நோக்கிக் கொண்டிருந்தபொழுது திடீர் என்று நகரத்துக்கு வடக்கி லிருக்கும் இடைச் சேரிகளிலுள்ள பசுக் கூட்டங்கள் துரி யோதனனுடைய பெருஞ் சேனையால் பிடிக்கப்பட்டன. கௌரவ சேனை அட்டகாசம் செய்துகொண்டு லக்ஷக் கணக்கான பசுக்களை வளைத்து ஓட்டிச் சென்றது. மாட் டுக்காரர்களுடைய தலைவன் நகரத்துக்கு ஓடிவந்து விராட னுடைய குமாரன் உத்தரனைக் கண்டு முறையிட்டான்.

"ராஜகுமாரனே! கௌரவர்கள் நம்முடைய பசுக் களை ஓட்டிக்கொண்டு போகிறார்கள். விராட ராஜன் தெற்கே திரிகர்த்தர்களை எதிர்க்கச் சென்றுவிட்டான். எங்களுக்கு யாரும் காப்பு இல்லாமல் தவிக்கிறோம். அரச னுக்குப புத்திரனாகிய நீதான் வந்து பசுக்களை மீட்டுக் கொண்டு வரவேண்டும். குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவாயாக!" என்றான்.

இவ்வாறு இடைச் சேரித் தலைவன் மகாஜனங்களுக் கும் அந்தப்புர ஸ்திரீகளுக்கும் எதிரில் உத்தரனிடம் முறையிட்டபோது இராஜகுமாரனும் உற்சாகம் அடைந் தான். "தேரை ஓட்டக்கூடிய ஒரு சாரதி இருந்தானானால் நான் ஒருவனாகவே சென்று பசுக்களைத் திருப்பிக்கொண்டு வந்து சேருவேன். நான் போய்ச் செய்யும் யுத்தத்தைக் கண்டு இவன் அருச்சுனனோ என்று எல்லாரும் திகைப் பார்கள்!" என்றான்.

இவ்வாறு உத்தரன் சொன்னபோது திரௌபதி யானவள் அந்தப்புரத்தில் இருந்தாள். அவள் உத்தரை யிருந்த விடத்துக்கு ஓடிச் சென்று, "ராஜ குமாரியே! தேசத்துக்கு ஆபத்து நேரிட்டிருக்கிறது. கௌரவப் படை வடக்கே நகரத்தைத் தாக்கி வருவதாகவும் மத்ஸ்ய தேசத்துப் பசுக்கள் பிடிபட்டதாகவும் கோபாலர்கள் இளவரசனிடம ஓடி வந்து முறையிடுகிறார்கள். உத்தர னுக்குச் சாரதி வேண்டும். அதனால் வேலை தடைப்பட் டிருக்கிறது. பிருகன்னளை அருச்சுனனுக்குச் சாரத்தியம் செய்திருக்கிறாள். நான் பாண்டவர்களுடைய அந்தப் புரத்தில் வேலையிலிருந்துபோது இதைப்பற்றிக் கேள்விப்

பட்டிருக்கிறேன். பிருகன்னளை அருச்சுனனிடம் வில் வித்தையும் பயின்றிருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும். இவளை நீ உடனே உத்தரனுக்குச் சாரதியாகப் போக கட்டளையிடவேண்டும்'' என்றாள்.

உத்தரை தன் சகோதரனிடம் சென்றாள். ''தேரோட்டுவதில் பிருகன்னளை பெரிய சாமர்த்தியசாலி என்று தெரியவருகிறது. அவளை அழைத்துக்கொண்டு நீ போய் ஊரைக் காப்பாற்று. இந்த பிருகன்னளை பாண்டவ வீரனான அருச்சுனனுக்கு தேரோட்டியாயிருந்திருக்கிறாளாம்; நமமுடைய ஸைரந்திரி சொல்லுகிறாள்'' என்றாள்.

''சரி'' என்று உத்தரன் சொன்னவுடன் உததரை நடனசாலைக்கு ஓடிப்போய் அருச்சுனனாகிய பிருகன்னளையிடம் விஷயத்தைத் தெரியப்படுத்தினாள்.

''பிருகன்னளையே! என் பிதாவினுடைய தனத்தையும் பசுக்களையும் கௌரவர்கள் கவர்ந்து கொண்டு போகிறார்கள். அரசன் நகரத்தில் இல்லாத சமயம் பார்த்து இந்த துஷ்டர்கள் வந்திருக்கிறார்கள். நீ அருச்சுனனுக்கு ரதம் ஓட்டியிருக்கிறாயென்றும் யுத்தப்பயிற்சி பெற்றிருக்கிறாய் என்றும் ஸைரந்திரி சொல்லுகிறாள். ராஜகுமாரனுக்கு நீ சாரதியாகச் செல்ல வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டாள்.

அருச்சுனன் கொஞ்ச நேரம் தயங்குவதைப் போல் காட்டிக்கொண்டான். பிறகு ஒப்புக்கொண்டான். கவசத்தைப் பெற்றுக்கொண்டு ஏதொன்றும் தெரியாதது போல் தலைகீழாக அணிந்து கொள்ளப் போனான். அந்தப்புரத்திலிருந்த ஸ்திரீகள் அதைக் கண்டு சிரித்தார்கள். இவ்வாறு கொஞ்ச நேரம் வேடிக்கை செய்த பிறகு பிருகன்னளை குதிரைகளைப் பிடித்துத் தேரில் பூட்டும்போது தேர்ச்சி பெற்ற சாரதியைப் போலவே தோன்றினாள். கடிவாளம் பிடித்துக் குதிரைகளையும் நன்றாகவே ஓட்டினாள். உத்தரனும் ஏறிச் சிம்மக்கொடி பறக்க ரதம் சென்றது.

"இராஜகுமாரன் வெற்றி பெறுவான். எதிரிகள் அணிந்திருக்கும் வஸ்திரங்களைப் பறித்துக் கொண்டு வந்து வெற்றிப் பரிசாக உங்களுக்கெல்லாம் தருவேன்" என்று பிருகன்னளை ஸ்திரீகளுக்குச் சொல்லிய போது அந்தப்புரப் பெண்கள் எல்லோரும் ஜயகோஷம் செய்தார்கள்.

# உத்தரன்

**1** பிருகன்னளையைத் தேர்ப் பாகனாக அமைத்துக் கொண்டு விராடனுடைய மகன் உத்தரன் நகரத்திலிருந்து உற்சாகமாகவே புறப்பட்டான். "வேகமாக ஓட்டு! கௌரவர்கள் பசுக்களை வளைத்து ஓட்டிக் கொண்டு போகும் திசையை நோக்கிச் செலுத்து" என்று சொன்னான்.

குதிரைகளும் வேகமாகச் சென்றன. கௌரவ சேனை கண்ணுக்குத் தென்பட்டது. ஆகாயம் அளாவிய புழுதிக்குப் பின் நான்கு திசைகளையும் அடைத்துக்கொண்டு கடல்போல் பரவி நின்றது அந்தச் சேனை. பீஷ்மரும் துரோணரும் கிருபரும் துரியோதனனும் கர்ணனும் அணிவகுத்து நடத்தும் பிரம்மாண்டமான படையைக் கண்டான்.

அப்போது உத்தரனுக்குத் தன்னையும் அறியாமல் நடுக்கமும் மயிர்க் கூச்சமும் உண்டாயின. பயத்தினால் இரண்டு கண்களையும் கைகளால் மூடிக் கொண்டான். அவனால் தாங்க முடியவில்லை.

"இவ்வளவு பெரிய படையை நான் எவ்வாறு எதிர்ப்பேன்? கௌரவர்களோடு போர் புரிவதற்கு நான் திறமை யுள்ளவன் அல்ல. என்னுடைய பிதாவான அரசர் நம்முடைய சேனை முழுவதையும் திரட்டிக் கொண்டு சுசர்மனை எதிர்க்கப் போய்விட்டார். நகரத்தைக் காப்பின்றிச் செய்து விட்டார். எனக்குப் படையுமில்லை; படைத் தலைவர்களுமில்லை. ஒருவிதத் துணையுமில்லை. உலகப் பிரசித்தி யடைந்திருக்கும் இந்த வீரர்களை நான் எவ்வாறு எதிர்ப்பேன்? பிருகன்னளையே! தேரைத் திருப்பு!" என்றான்.

பிருகன்னளை சிரித்தாள். "உத்தரனே! ராஜ குமாரனே! ஸ்திரீகளுக்கு முன் தற்புகழ்ச்சி பேசிவிட்டு

என்னையும் அழைத்துக் கொண்டு யுத்தத்துக்குப் புறப் பட்டாய். பிரதிஜ்ஞை செய்துவிட்டுத் தேரின் மீதேறி னாய். ஊர் ஜனங்கள் உன்னை நம்பி யிருக்கிறார்கள். ஸைரந்திரியும் என்னைப் புகழ்ந்து நீயும் ஒப்புக்கொண்டு நான் உன்னுடன் வந்துவிட்டேன். பசுக்களை மீட்காமல் ஊர் திரும்பினோமானால் எல்லாரும் பரிகசிப்பார்கள்! நான் திரும்ப முடியாது. நீ உறுதியாக நின்று யுத்தம் செய். பயப்பட வேண்டாம்'' என்று சொல்லி தேரை நிறுத்தாமல் ஓட்டிக்கொண்டு போனாள். பகைவர்க ளுடைய சேனைக்கு அருகே வந்து விட்டார்கள். உத்தர னுடைய பயம் முன்னைவிட அதிகரித்தது.

''முடியவே முடியாது. கௌரவர்கள் பசுக்களை இஷ் டப்படி கொண்டு போகட்டும். ஸ்திரீகள் என்னைப் பரிகா சம் செய்தாலும் செய்யட்டும். யுத்தத்தினால் என்னபயன்? ஒரு லாபமுமில்லை. நான் திரும்பித்தான் போவேன். நீ தேரைத் திருப்பு. இல்லாவிட்டால் நானே தனியாக நடந்து போவேன்'' என்று சொல்லி உத்தரன் அம்புகளை யும் வில்லையும் எறிந்து விட்டுத் தேரினின்று கீழே குதித்து, பயத்தினால் ஆவேசமாகிப் பைத்தியக் காரனைப் போல் நகரத்தை நோக்கி ஓட ஆரம்பித்தான்.

இது கதையில்தான் நடக்கும், உத்தரன் தான் இப் படிச் செய்தான் என்று யாரும் எண்ணக் கூடாது. இப் போது நடத்தும் யுத்தங்களிலும் கூட இம்மாதிரியே அநேக வீரர்களுக்கு முதல் முதலில் கிலி பிடித்து அடக்க முடியாத பயம் மேலிடுவது உண்டு. பல யுத்த வீரர்கள் இதைப் பற்றி எழுதியும் சொல்லியு மிருக்கிறார்கள். பயம் என்பது ஒரு தனிப்பட்ட உடல் வேகம். வீரர்களும் அத னுடன் போராடி யிருக்கிறார்கள். முடிவில் அதை ஆத்ம சக்தியினால் துரத்தி விட்டு வெற்றியோடு விளங்குகிறார் கள்.

''ராஜகுமாரா! நில்! ஓடாதே! க்ஷத்திரியன் இவ் வாறு செய்யலாகாது'' என்று சொல்லி ஓடும் உத்தரனை அருச்சுனன் துரத்திக் கொண்டு போனான். தொங்கும் தலைப் பின்னல் ஆட, உடுத்தியிருந்த புடவையும் வீசி

வீசி ஆட, பிருகன்னளேயானவள் உத்தரனைத் துரத்திக் கொண்டு ஓடினாள். உத்தரன் அவள் கைக்குச் சிக்காமல் புலம்பிக் கொண்டு இங்கு மங்கும் ஓடினான். எதிரில் கௌரவச் சேனையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்கு இந்தக் காட்சி மிக வியப்பாகவும் வேடிக்கையாகவும் இருந்தது.

"இது யார்? புருஷனைப் போலும் காணப்படுகிறான். ஆனால் ஸ்திரீ வேஷமாகவும் இருக்கிறது. இவன் ஒரு வேளை அருச்சுனனாக இருக்கலாமோ?" என்று துரோணர் சந்தேகித்தார்.

கர்ணன், "இவனாவது அருச்சுனனாவது? இருந்தாலும் என்ன? மற்ற பாண்டவர்கள் இல்லாமல் அருச்சுனன் ஒருவன் மட்டும் வந்து நம்மை என்ன செய்ய முடியும்? விராட ராஜன் தன் குமாரனைத் தனியாக ஊரில் விட்டு விட்டுச் சேனை முழுவதையும் கூட்டிக்கொண்டு சுசர்மனோடு யுத்தம் செய்யப் போய் விட்டிருக்கிறான். சிறுவனான ராஜகுமாரன் அந்தப் புரத்தில் பணி விடை செய்யும் அலியைத் தனக்குச் சாரதியாக அமைத்துக் கொண்டு தனியாக வந்திருக்கிறான். இவ்வளவே விஷயம்" என்றான்.

x x x

"என்னைப் பிடிக்க வேண்டாம். உனக்குப் பணம் தருவேன். புடவைகள் தருவேன். வேண்டியதையெல்லாம் உனக்குக் கொடுப்பேன். நான் ஊருக்குத் திரும்பிப் போகிறேன், நீ நல்லவள். என்னை விட்டுவிடு. என் தாயாருக்கு நான் ஒருவனே மகன். நான் சிறுவன். தாயாரின் பக்கத்தில் படுத்து வளர்ந்தவன். எனக்குப் பயமாயிருக்கிறது" என்று சொல்லிக் கொண்டும் கூச்சலிட்டுக் கொண்டும் உத்தரன் பிருகன்னளைக்குச் சிக்காமல் இங்கு மங்கும் ஓடினான்.

பிருகன்னளையும் அவனை விட்டபாடில்லை. துரத்திப் பிடித்து அவனைத் தேரின்மேல் பலாத்காரமாக ஏற்றினாள்.

"அறிவின்மையால் வீரியம் பேசினேன். ஐயோ! நான் என்ன செய்வேன்? என் விதியே!" என்று உத்தரன் அழுதான்.

"ராஜகுமாரனே: பயப்பட வேண்டாம். இந்தக் கௌரவர்களோடு நான் போர் புரிவேன். குதிரைகளை மட்டும் நீ பார்த்துக்கொள். நீ தேரை ஓட்டினுயானுல் மீதி எல்லாம் நான் செய்து முடிப்பேன். உனக்கு ஜய முண்டாகும். நிச்சயமாகச் சொல்லுகிறேன். ஓடிப்போவதினுல் உனக்கு ஒரு நன்மையும் உண்டாகாது. என்னுடைய முயற்சியால் இந்தச் சேனை தோல்வியடைந்து சிதறி ஓடும். நான் உன்னுடைய பசுக்களை மீட்டுக் கொண்டு வருவேன். உனக்குப் புகழ் உண்டாகும்" என்று சொல்லி அருச்சுனன் உத்தரனை ரதத்தின்மேல் ஏற்றிக் குதிரைக் கடிவாளங்களை அவன் கையில் கொடுத்தான். மயானத்திலிருக்கும் வன்னி மரத்துப் பக்கம் தேரை நடத்தச் சொன்னுன்.

x x x

இதை யெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த துரோணர் இவன் அருச்சுனனே என்று மனதில் தீர்மானித்துப் பீஷ்மருக்கும் குறிப்பாகச் சொன்னுர். துரியோதனன் கர்ணனைப் பார்த்து, "இவன் யாரா யிருந்தால் நமக்கு என்ன கவலை? பார்த்தனுக இருந்தால் நம்முடைய காரியம் நிறைவேறினதாகவே முடியும். பாண்டவர்கள் மறுபடி பனனிரண்டு வருஷம் காட்டுக்குப் போக வேண்டியதாகும்" என்ருன்.

x x x

வன்னி மரத்தண்டை வந்ததும் பிருகன்னளை உத்தரனைப் பார்த்து, "விராட புத்திரனே! உனக்கு ஜயம்! குதிரைகளை விட்டுவிட்டு இறங்கி இந்த மரத்தின் மீது ஏறி, மேலே கட்டியிருக்கும் ஆயுதங்களைக் கொண்டுவா" என்ருள்.

உத்தரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. திகைத்து நின்றான். மறுபடி அருச்சுனன் அந்தப் பிருகன்னளை, "ரதத்திலிருக்கும் இந்த ஆயுதங்கள் எனக்குப் போதியவை அல்ல. இந்த மரத்தின்மேல் பாண்டவர்களுடைய திவ்விய ஆயுதங்கள் கட்டி வைக்கப்பட்டிருக்கின்றன. அதை எடுத்து வா" என்றாள்.

"இந்த வன்னி மரத்தில் கட்டித் தொங்குவது வேடக் கிழவியின சவம் என்றல்லவோ சொல்லுகிறார்கள்? சவத்தை நான் எவ்வாறு தொடுவேன்? இந்த மாதிரியான காரியத்தை என்னைச் செய்யச் சொல்லுகிறாயே!" என்றான் உத்தரன் மிக்க வருத்தத்துடன்.

"கட்டித் தொங்குவது சவமல்ல, உத்தரனே! அது பாண்டவர்களுடைய ஆயுதங்கள் என்பது எனக்குத் தெரியும். தைரியமாக மரத்தின்மீது ஏறி அதைக் கொண்டு வா! தாமதம் செய்யாதே!" என்றான் அருச்சுனன்.

தடுத்து ஒன்றும் செய்ய முடியாதவனாகி உத்தரன் பிருகன்னளை சொன்னபடி மரத்தின்மீது ஏறி, கட்டியிருந்த மூட்டையை அருவருப்புடன் தூக்கிக்கொண்டு கீழே இறங்கினான். தோல் மூட்டையை அவிழ்த்ததும் சூரியன்போல் பளபள வென்று பிரகாசித்துக் கொண்டு ஆயுதங்கள் காணப்பட்டன.

உத்தரன் அவற்றின் ஒளியைக் கண்டு பிரமித்துக் கண்களை மூடிக்கொண்டான். பிறகு தைரிய மடைந்து மகிழ்ச்சியோடு அவற்றை யெல்லாம் தொட்டுத் தொட்டுப் பார்த்தான். அந்த ஸ்பரிசத்தினாலேயே உத்தரன் வீரியத்தை அடைந்தான்.

"சாரதியே! இது என்ன ஆச்சரியம்? இந்த விற்களும் அம்புகளும் கத்திகளும் பாண்டவர்களுடையன என்கிறாயே! அவர்கள் ராஜ்யத்தை இழந்து கானகம் சென்று காணமல் மறைந்தார்களே? பாண்டவர்களை நீ

அறிவாயா? அவர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று உற்சாகமாகக் கேட்டான்.

அப்போது அருச்சுனன் விராடன் மகனுக்குத் தான் யாரென்பதையும், தன் சகோதரர்களைப் பற்றியும், திரௌபதியைப பற்றியும எல்லாம் சொன்னான். "அரசனுக்குப் பணிவிடை செய்து வந்த கங்கரே தருமபுத்திரர். உன் பிதாவுக்கு ருசியான ஆகார வகைகளைப் பக்குவம் செய்து வந்த சமையற்கார வல்லனே பீமசேனன்! எவளை அவமானப்படுத்தினதினால் கீசகன் இறந்தானோ அந்த ஸைரந்திரியே புகழ் பெற்ற பாஞ்சாலி என்று அறிவாய்! குதிரைகளைக் கட்டுகிற தாமக்கிரந்தியும் பசுக்களைக் காக்கும் தந்திரீபாலனும் நகுல சகதேவர்கள் என்றறிவாய். நானே தனஞ்செயன்! நீ பயப்பட வேண்டாம். ராஜகுமாரனே! என்னுடைய வீரியத்தை இப்போது பார்ப்பாய். பீஷ்மரும் துரோணரும் அசுவத்தாமரும் பார்த்துக்கொண்டிருக்க இந்தக் கௌரவச் சேனையைத் தோற்கடித்துப் பசுக்களை மீட்டுக் கொண்டு வருவேன். நீயும் புகழ் பெறுவாய்" என்றான்.

அப்போது உத்தரன் கைகூப்பி வணங்கி "பார்த்தனே! நான் பாக்கியவான் ஆனேன். புகழ்பெற்ற தனஞ்சயனையா நான் இப்போது என் கண்களால் பார்க்கிறேன்? விசயனா என்னை வீரனாக்கினான்! அறியாமையால் செய்யப்பட்ட என் பிழையை பொறுக்க வேண்டும்" என்றான்.

பெருஞ் சேனையைப் பார்த்து உத்தரன் பயந்து போகாமலிருக்கவும் அவனுக்குப் பூரண தைரியம உண்டாவதற்காகவும் அருச்சுனன் தான் செய்த பல வீரியச் செயல்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போனான். பிறகு கௌரவ சேனையின் முன் தேரை நிறுத்திக் கீழே இறங்கிக் கடவுளை வணங்கிக் கையிலுள்ள சங்கு வளையல்களைக் கழற்றிவிட்டுத் தோல் கையுறைகளைப் போட்டுக் கொண்டான். தொங்கும் தன் தலைமயிரைத் தூக்கி வஸ்திரத்தினால் கட்டி முடிந்து கொண்டு, கிழக்கு முகமாக நின்று அஸ்திரங்களைத் தியானம் செய்துவிட்டுத் தேரில்

ஏறிக் காண்டீபத்தை ஏந்தினன். அதில் நாண் ஏற்றி மூன்று தடவை இழுத்துவிட்டான். அதனுலுண்டான பேரொலி எட்டுத் திக்குகளிலும் எதிரொலி உண்டாக்கிற்று. கௌரவர்களுடைய சேனையிலிருந்த வீரர்கள் அதைக் கேட்டதும், "இது காண்டீபம்!" என்று கத்தினார்கள். அருச்சுனன் தன் உருவம் நன்ருக விளங்கத் தேரின்மேல் நின்று தேவதத்தம் என்கிற தன்னுடைய சங்கை வாயில் வைத்து ஊதினன். கௌரவப் படை நடுங்கிற்று.

"பாண்டவர்கள் வந்துவிட்டார்கள்" என்று சேனை முழுவதும் பரபரத்தது.

* * *

அந்தப்புரப் பெண்களின் முன் சூரனைப்போல் பேசி, சேனையைக் கண்டதும் பயந்து ஓடிய உத்தரனுடைய கதை பாரதத்தில் அமைந்திருப்பது ஹாஸ்யத்திற்காக மட்டிலுமல்ல.

குணங்களைப் படைத்தவர்கள் அத்தகைய குணங்கள் இல்லாதவர்களைப் பார்த்து வெறுப்பது மனித சுபாவம். வீரியம் படைத்தவர்கள் வீரியம் காட்ட முடியாமல் பயப்படும் ஜனங்களைப் பார்த்து இகழ்வது சகஜம். ஆனல் தனஞ்சயன் அவ்வாறு செய்யவில்லை. மகாத்மாவும் உண்மை வீரனுமான அவன் உத்தரனுடைய நிலையைக் கண்டு அவனுக்கு வேண்டியதைச் செய்து அவனையும் வீரனாக்கினன். தான் படைத்த தைரியத்துக்குத் தன் பிறவிக் குணமே காரணம் என்று அறிந்து அகம்பாவத்தை அகற்றிய அருச்சுனன், தைரியம் இழந்த உத்தரனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்து அவனுக்கும் புகழ் சம்பாதித்துக் கொடுத்தான்.

இதுவே தனஞ்சயனுடைய தனிப் பண்பு. தன்னுடைய சக்தியை அளவு கடந்து உபயோகிக்க மாட்டான். கிட்டிய சௌகரியங்களைப் பயன் படுத்திக்கொண்டு வெறுக்கத்தக்க செயல்களை அருச்சுனன் ஒருநாளும்

செய்யமாட்டான். அவன் பெற்ற பல புகழ் பெயர்களில் பீபத்ஸு என்பதும் ஒரு பெயர். தகாத செயல்களைச் செய்யமாட்டான், கூச்சப்படுவான் என்பது அதன் பொருள்.

அருச்சுனனால் வீரனாக்கப்பட்ட உத்தரன் பிறகு பெரிய குருட்சேத்திர யுத்தத்தில் யானைமேல் சென்று சல்யனை எதிர்த்து வீர சுவர்க்க மடைந்தான் என்பது பின்னால் சொல்லப்படும்.

# பிரதிஜ்ஞை முடிந்தது

தனஞ்சயனுடைய போர்த்தேர் பூமி அதிர முன்சென்றது. காண்டீபத்தின் நாணொலியைக் கேட்ட கௌரவப் படையிலுள்ள வீரர்கள் நெஞ்சு பதைத்தது.

“சேனையை நன்றாக அணிவகுத்துக்கொண்டு ஒன்று கூடிக் கவனமாகப் போர் புரிய வேண்டும். அருச்சுனன் வந்துவிட்டான்” என்றார் துரோணர்.

துரோணருடைய கவலையும் மனக்கலக்கமும் துரியோதனனுக்குப் பிடிக்கவில்லை. “ஆட்டத்தில் தோல்வியடைந்த பாண்டவர்கள் காட்டில் பன்னிரண்டு வருஷமும் அதற்கு மேல் ஒரு வருஷம் யாராலும் அறியப்படாமல் வசித்து முடிக்கவேண்டும் என்பது பிரதிஜ்ஞை. பதின்மூன்றாவது வருஷம் இன்னும் முடியவில்லை. அதற்கு முன்னதாக அருச்சுனன் அறியப்பட்டான். ஆதலால் நமக்கு என்ன பயம்? பாண்டவர்கள் எப்படியும் மறுபடி பன்னிரண்டு வருஷம் வனவாசம் செய்யப்போக வேண்டும். துரோணர் வீணாகப் பயப்பட்டுச் சாகிறார். இது பண்டிதர்களுடைய சுபாவம். பிறருடைய குற்றங்களைத்தேடி எடுத்துக் காட்டுவதிலேயே அவர்கள் எப்போதும் தங்கள் திறமையைக் காட்டுவார்கள். இவர்களைப் பின் புறத்தில் நிறுத்திவிட்டு நாம் முன்னின்று போரை நடத்துவோம்” என்று கர்ணனைப்பார்த்துச் சொன்னான்.

கர்ணனும் துரியோதனனுடன் சேர்ந்து “இந்தச் சேனையிலுள்ள போர் வீரர்கள் போரில் மனத்தைச் செலுத்தாமல் பயத்தால் நடுங்கிக் கொண்டிருக்கிறார்கள். நம்மை நோக்கி வரும் தேரில் வில்லைப்பிடித்து நிற்பவன் அருச்சுனன் என்கிறீர்கள். அவன் பரசுராமனேயானாலும் நமக்கு என்ன பயம்! நான் ஒருவனே இவனைத் தடுப்பேன். துரியோதனனுக்கு நான் அந்தக்காலத்தில் செய்த பிரதிஜ்ஞையை இப்போது தீர்க்கப் போகிறேன். கௌரவ சேனையும் எல்லா வீரர்களும் சும்மா நின்றாலும் நிற்கட்டும். அல்லது; அவர்கள் மத்ஸ்ய ராஜனுடைய பசுக்களை

ஓட்டிக்கொண்டு போகட்டும். நான் மட்டும் நின்று இந்தப் பார்த்தனை எதிர்ப்பேன்" என்று வீரியம் பேசினான்.

கிருபாசாரியர் கர்ணன் பேசியதைக் கேட்டு, "இது சுத்த மடத்தனம்" என்றார். "பார்த்தனை நாம் எல்லாரும் சேர்ந்தே எதிர்த்துப் போர் புரிய வேண்டும். நாம் அறுவரும் அவனை நான்கு புறத்திலும் சூழ்ந்து கொண்டால்தான் நாம் தப்புவோம். நீ தனியாகச் சாகசம் செய்யாதே" என்றார்.

கர்ணனுக்குக் கோபம் வந்து விட்டது. "ஆசாரியருக்கு அருச்சுனனைப்புகழ்வதில் எப்போதும் சந்தோஷம். அவனுடைய பலத்தை அதிகப்படுத்திச் சொல்லுவதே இவருடைய வழக்கம். இது பயத்தினால் உண்டானதா அல்லது, சத்துருவினிடத்தில் அவருக்கு இருக்கும் அதிக அன்பினாலா என்பது எனக்குத் தெரியாது. பயந்தவர்கள் போர் புரிய வேண்டியதில்லை. சும்மா இருக்கலாம். எஜமானன் சோற்றை உண்ட பெரியோர்கள் அவர்களுடைய இஷ்டப்படி திரும்பிப் போகலாம். நான் இங்கே நின்று போர் செய்வேன். வேத மோதுகிறவர்களுக்கும் விரோதியைப் பாராட்டுகிறவர்களுக்கும் இங்கே என்ன வேலை?" என்றான்.

இவ்வாறு தகாத முறையில் ஆசாரியரைப்பரிகசித்ததைக் கேட்ட அசுவத்தாமனுக்குப் பொறுக்கவில்லை. அசுவத்தாமன் கிருபருடைய சகோதரி குமாரன். "கர்ணனே! நாம் இன்னும் பசுக்களைக்கூடப் பிடித்து ஹஸ்தினாபுரம் போய்ச் சேர்ப்பிக்கவில்லை. ஒரு காரியமும் செய்து முடிக்காமலேயே வீணாக தற்புகழ்ச்சி பேசிக்கொண்டிருக்கிறீர்கள். நாங்கள் க்ஷத்திரியர்களல்ல; வேதம் ஓதுகிறவர்கள்தான். சாஸ்திரம் படிக்கிறவர்கள் தான். அரசர்களைச் சூதாட்டத்தில் ஜெயித்து ராஜ்யம் அடையலாம் என்பதாக நான் படித்த எந்த சாஸ்திரத்திலும் சொல்லப்படவில்லை. போர் செய்து வெற்றி பெற்று ராஜ்யங்களை அடைந்தவர்களுங்கூடத் தங்களைப் புகழ்ந்து கொள்ளுகிறதில்லை. நீங்கள் என்ன காரியம் சாதித்து விட்டு இவ்வளவு பேசுகிறீர்கள்? நெருப்பு ஒன்

றும் பேசாமல் பதார்த்தங்களை மௌனமாகப் பக்குவம் செய்கிறது. சூரியன் பேசாமலே பிரகாசிக்கிறான். பூமியானது தன்னைப் பற்றிப் புகழ்ந்து பேசாமலே சகல சராசரங்களைத் தாங்குகிறது. சூதாட்டத்தால் ராஜ்யத்தைப் பெற்ற ஒரு க்ஷத்திரியனுக்கு என்ன புகழுரிமை? பறவைகளை மோசம் செய்து வலையில் பிடிக்கிற வேடனைப்போல் பாண்டவர்களுடைய ராஜ்யத்தைக் கவர்ந்தவர்கள் தற்புகழ்ச்சியில் இறங்காமலாவது இருக்க வேண்டும் ஏ! துரியோதனனே, ஏ! கர்ணனே, நீங்கள் எந்த யுத்தத்தில் பாண்டவர்களை வென்றீர்கள்? ஒற்றை ஆடை உடுத்தி இருந்த திரௌபதியைச் சபைக்கு இழுத்து வந்தீர்கள். அவளை எந்த யுத்தத்தில் நீங்கள் ஜெயித்தீர்கள்? மூடர்களே! வாசனையை விரும்பிப் பெரிய சந்தன மரத்தை வெட்டுகிற பாமரனைப்போல் கௌரவகுலத்தை வெட்டித் தள்ளினீர்கள். அன்று சூதாட்டத்தில் தாயக்கட்டையை வீசி இந்திரப் பிரஸ்தத்தைக் கவர்ந்தது போல் இப்போது பார்த்தனுடன் யுத்தம் செய்ய முடியாது. காண்டீபமானது கூரிய அம்புகளை எறியும். 'நாலு இரண்டு' என்று பாய்ச்சிகளை எறியாது. அகம்பாவம் கொண்ட மூடர்களே! சபையில் சகுனியுடன் சதிசெய்து சூதாடினது போல் யுத்தத்தில் நடக்காது'' என்றான்.

கௌரவ சேனைத் தலைவர்கள் பொறுமை யிழந்து மாறுபட்டு இவ்வாறு வாதாடிக் கொண்டிருப்பதைப் பார்த்த குலத்தலைவர் பீஷ்மர் வருத்தத்துடன் பேசலானார்.

''அறிவுள்ள மனிதன் ஆசாரியனை அவமதிக்க மாட்டான். தேச காலங்களை நன்றாக ஆலோசித்து யுத்தம் செய்ய வேண்டும். அறிந்தோர்களும் தம்முடைய காரியங்களில் புத்தி தடுமாறுகிறார்கள். மகா புத்திசாலியான துரியோதனனும் நம்முன் நிற்பது தனஞ்சயன் என்று தெரிந்து கொள்ளவில்லை. கோபத்தினால் புத்தி தடுமாறுகிறான். அசுவத்தாமரே! கர்ணன் சொன்னது ஆசாரியருடைய ஆத்திரத்தை வளர்ப்பதற்காகவே என்று கொள்ளவேண்டும். நீங்கள் அவன் பேச்சைப்பொறுத்துக் கொள்ளவேண்டும். விரோதங்கள் பாராட்டுவதற்கு இது

காலம் அல்ல. துரோணரும், கிருபரும், அசுவத்தாமரும் பொறுத்துக் கொள்ள வேண்டும். கௌரவ வீரர்களுக்கு ஆசாரியரான துரோணரையும் அவருடைய புத்திரர் அசுவத்தாமரையும் விட உலகத்தில் வேறு யாரிடத்தில் நான்கு வேதங்களும் க்ஷத்திரிய தேஜஸும் சேர்ந்தாப்போல் காண முடியும்? துரோணருக்குச் சமானமாகச் சொல்லக் கூடியவர் பரசுராமரைத் தவிர வேறு யாரைப் பற்றியும் நாம் கேட்டதில்லை. ஆசாரிய புத்திரர் பொறுத்துக் கொள்ள வேண்டும். உள் கலகத்துக்கு இது சமயமல்ல. பார்த்தனை நாம் அனைவரும் ஒன்று சேர்ந்தே வெல்லமுடியும். இனி ஆகவேண்டிய காரியத்தைத யோசிப்போம். நமக்குள் கலகம் உண்டானால் தனஞ்சயனை எதிர்க்க முடியாது."

இவ்வாறு கௌரவப் பிதாமகரான பீஷ்மர் துரியோதனனையும் கர்ணனையும கண்டித்துப் பேசியதும் கலகம் அடங்கிற்று.

பீஷ்மர் துரியோதனனைப் பார்த்து மறுபடியும் பேசலானார்: "ராஜேந்திரனே! தனஞ்சயன் வந்துவிட்டான். நேற்றைக்கே பதின்மூன்று வருஷ காலமும் முடிந்து விட்டது. உங்கள் கணக்குப் பிசகு. வருஷம், மாதம், பட்சம் முதலிய பிரிவினைகளையும், கால கதியையும் நன்றாக அறிந்த ஜோதிடர்கள் இதை விளக்குவார்கள். அதிக மாதங்களைக் கணக்கிட்டுக் கொண்டு ஏமாந்திருக்கிறீர்கள். இப்போது காண்டீபத்தை அருச்சுனன் ஒலிக்கச் செய்த போது, பிரதிஜ்ஞையின் காலம் பூர்த்தியாகிவிட்டது என்பது எனக்குத் தெரியும். போர் தொடங்குவதற்கு முன்னால் மனத்தைச் சோதனை செய்து நிச்சயம் செய்து கொள்ள வேண்டும். துரியோதனனே! நீ பாண்டவர்களோடு சமாதானத்தை விரும்புவாயாகில் அவ்வாறே தீர்த்துக் கொள்ளுவதற்கு இதுவே சமயம். தருமத்துடன் கூடிய சமாதானமா, போரா, எது உனக்கு விருப்பம்? முடிவாக யோசித்துச் சொல்!" என்றார்.

துரியோதனன், "பிரபுவே! நான் சமாதானத்தை விரும்பவில்லை. ஒரு கிராமத்தையுங்கூடப் பாண்டவர்

களுக்குக் கொடுக்க மாட்டேன். போருக்கு வேண்டிய காரியங்களை அனுஷ்டிக்கலாம்'' என்றான்.

அதன்மேல் துரோணர் உத்தரவிட்டார். "படையில் நாலில் ஒரு பாகத்தை அரசனான துரியோதனன் தனக்குக் காப்பாகக் கூட்டிக் கொண்டு விரைவாக ஹஸ்தினாபுரம் நோக்கிச் செல்ல வேண்டியது. மற்றொரு கால் பாகச் சைன்யம் பசுக்களை வளைத்துக்கொண்டு ஓட்டிப் போகட்டும். பசுக்களை ஓட்டாமல் விட்டு விட்டால் தோல்வியை ஒப்புக்கொண்டபடியாகும். மீதி பாதிப்படையுடன் நாங்கள் ஐவரும் நின்று அருச்சுனனை எதிர்ப்போம் இவ்வாறு செய்வதே அரசனுக்கு க்ஷேமமாகும்'' என்று சொன்னார்.

கௌரவ வீரர்கள் துரியோதனனைக் காப்பாற்ற அவ்வண்ணம் அணிவகுத்துக் கொண்டார்கள்.

அருச்சுனன், "உத்தரனே! அதோ காணப்படும் சத்துருப் படையில் துரியோதனனுடைய தேரைக் காணவில்லை. பீஷ்மர் கவசமணிந்து நிற்கிறார். துரியோதனனைக் காணவில்லை. இவர்களை விட்டு விலகி, துரியோதனனிருக்கும் இடத்துக்குத் தேரைச் செலுத்து. பசுக்களை ஓட்டிக்கொண்டு முன்னால் போகிறான் என்று எண்ணுகிறேன்'' என்று சொல்லி அருச்சுனன் கௌரவச் சேனையைவிட்டு விலகிப் பசுக்களையும் துரியோதனனையும் நோக்கிநேராகச் சென்றான். போகும்போது காண்டீபத்தை இழுத்து ஆசாரியர், பிதாமகர் இவர்கள் கால்களண்டை அம்புகள் மரியாதையாக விழும்படிச் செய்தான். அவர்களுக்கு அவ்வாறு வீர நமஸ்காரம் செய்து விட்டுத் துரியோதனனை நோக்கிச் சென்றான்.

x x x

அருச்சுனன் பசுக் கூட்டம் இருந்த இடத்தை யடைந்து சுற்றியிருந்த படையைச் சிதற அடித்துவிட்டு இடையர்களை நோக்கி "பசுக்களை உங்கள் இடைச்சேரிகளுக்குத் திருப்பி ஓட்டிக்கொண்டு போங்கள்'' என்றான். இவ்வாறு சொல்லிவிட்டு, துரியோதனனைத் துரத்திக்

கொண்டு போனான். இடையர்கள் களியாட்டத்தோடு பசுக்களை திருப்பி ஓட்டிச் சென்றார்கள்.

அருச்சுனன் துரியோதனனையே நோக்கிச் செல்வதைக் கண்ட பீஷ்மர் முதலிய கௌரவ வீரர்களும் அவனைப் பின் தொடர்ந்து சென்று சூழ்ந்துகொண்டு அவன்மேல் அம்புகளை வருஷித்தார்கள். அருச்சுனன் அற்புதப்போர் நடத்தினான். முதலில் கர்ணனை எதிர்த்து அவனை யுத்த களம் விட்டு ஓடச் செய்தான். பிறகு துரோணரைத் தாக்கினான். அவரும் தோற்றார். அவர் பலம் இழந்து நிற்பதைக் கண்டு அசுவத்தாமன் புகுந்து அருச்சுனனை எதிர்த்தான். அப்போது அருச்சுனன் துரோணர் விலகிப்போவதற்கு மெதுவாக இடங் கொடுத்தான். அவரும் அதையறிந்து விரைவாக விலகித் தப்பினார். அருச்சுனன் பிறகு அசுவத்தாமனுடன் கடும் போர் புரிந்தான். அசுவத்தாமனும் சளைத்துப் போனபின், கிருபர் வந்து எதிர்த்தார். அவரும் தோல்வியடைந்தார் சேனை முழுவதும் சிதறடிக்கப்பட்டு பயந்து ஓடிற்று.

இதைக் கண்ட பீஷ்மர் துரோணருக்கும் மற்றவர்களுக்கும் சொல்லி எல்லோரும் ஒன்று சேர்ந்து மறுபடியும் அருச்சுனனைத் தாக்க ஏற்பாடு செய்தார். தன்னைச் சுற்றிப் பாணங்களை எறிந்து மலையைப் பனி மூடுவது போல் செய்துகொண்டு அருச்சுனன் அவர்களனைவரையும் பலமாகத் தாக்கினான். பீஷ்மரும் அருச்சுனனும் போர் செய்த காலத்தில் அதைப் பார்ப்பதற்குத் தேவர்களும் வந்து விட்டார்களாம்.

துரியோதனனையே நோக்கிச் செல்லும் அருச்சுனனை ஐந்து மகா ரதர்களும் ஒன்று சேர்ந்து நிறுத்தப் பார்த்தும் முடியவில்லை. அருச்சுனன் துரியோதனனை அடைந்து அவனைப் பலமாகத் தாக்கினான். துரியோதனன் தோல்வி யடைந்து யுத்த களம் விட்டு ஓட ஆரம்பித்தான்.

"பெயரையும் புகழையும் இழந்து ஏன் ஓடுகிறாய்?" என்று அருச்சுனன் சொல்ல மறுபடியும் துரியோதனன்

சர்ப்பத்தைப் போல் சீறிக்கொண்டு திரும்பினான். பீஷ்மரும் மற்றவர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டு காத்துக் கொண்டே இருந்தனர். அருச்சுனன் அவர்களோடு நெடு நேரம் போர் புரிந்து முடிவில் மோகனாஸ்திரம் பிரயோகம் செய்து அவர்களனைவரையும் வீழ்த்தி அவர்களுடைய வஸ்திரங்களை யெல்லாம் கவர்ந்துகொண்டான். வஸ்திரங்களைப் பறிப்பதே அக்காலத்தில் முடிவான வெற்றியின குறி.

மயக்கமடைந்து வீழ்ந்த துரியோதனனுக்கு நினைவு வந்ததும பீஷ்மர் அவனை ஊருக்குத் திரும்பச் சொன்னார். சேனை முழுவதும் தோல்வியடைந்து ஹஸ்தினாபுரம் திரும்பிற்று.

"உத்தரனே! குதிரைகளைத் திருப்பு! உன்னுடைய பசுக்கள் மீட்கப்பட்டன. பகைவர்களும் ஓடிவிட்டனர். ராஜகுமாரனே! சந்தனமும் புஷ்பமும் அணிந்துகொண்டு உன்னுடைய நகரத்துக்குள் புகுவாய்!" என்றான் அருச்சுனன்.

போகும் வழியில் வன்னி மரத்தில் ஆயுதங்களையும துவஜங்களையும் முன்போல் வைத்துவிட்டுஅருச்சுனன் மறுபடி பிருகன்னளை வேஷம் தரித்துக் கொண்டான். குதிரைகளைத் தானே ஓட்டி உத்தரனைத் தேரில் உட்கார்ச்செய்தான். உத்தரன் ஜயித்தான் என்று நகரத்துக் குப்போய் கோஷிக்கும்படி தூதர்களையும் முன்னால் அனுப்பினான்.

# விராடனுடைய பிரமை

திரிகர்த்தாதிபதி சுசர்மனை ஜெயித்துவிட்டு விராட ராஜன் தன் நகரத்துக்குத் திரும்பினான். ஊர் ஜனங்கள் அவனை ஜய கோஷங்களுடன் எதிர்கொண்டு வரவேற்றார்கள். அரசன் அந்தப்புரத்தில் உத்தரனைக் காணமல், "உத்தரன் எங்கே?" என்று கேட்க அங்குள்ள ஸ்திரீகளும் மற்றவர்களும் அவன் கௌரவர்களை ஜெயிக்கப் போயிருக்கிறான் என்று மிக்க உற்சாகத்துடன் சொன்னார்கள். தங்கள் ராஜகுமாரன் அழகிய உத்தரன் உலகத்தையே ஜெயித்து விடுவான் என்பது அவர்கள் நம்பிக்கை. ஆகையால் அதைப்பற்றி அவர்கள் கவலையில்லாமல் விராடனிடம் பேசினார்கள்.

அரசன் திடுக்கிட்டு என்ன நடந்தது என்று விசாரித்தான். முழு விவரம் தெரிந்தவுடன் மிகுந்த பயமும் அடைந்தான்.

"நபும்ஸகன் ஒருவனைத் துணையாகக் கொண்டு ஆபத்தான காரியத்தில் பிரவேசித்துவிட்டான். என் அருமைப் புத்திரன் இதற்குள் இறந்தே போயிருப்பான்; சந்தேகமில்லை" என்று சொல்லித் துக்கத்தில் மூழ்கினான்.

பிறகு மந்திரிகளை அழைத்து "சேனையைத் திரட்டுங்கள். உத்தரன் உயிரோடு இருந்தால் சென்று அவனை எப்படியாவது காப்பாற்றிக் கொண்டு திரும்புங்கள்" என்று உத்தரவிட்டான்.

மிக வேகமாக ஒரு படையை முதலில் அனுப்பி உத்தரன் கதியை அறிந்து வரவும் கட்டளையிட்டான்.

தருமபுத்திரனை கங்க சந்நியாசி விராடனைத் தேற்றப் பார்த்தார். "ராஜகுமாரனைப் பற்றி நீர் கவலைப்பட வேண்டாம். பிருகன்னளை சாரதியாகப் போயிருக்கிறாள். அவளைப்பற்றி உமக்குத் தெரியாது. எனக்குத் தெரியும். அவள் சாரதியாக ஓட்டிய தேரில்

நின்று யுத்தம் செய்பவன் எவனும் நிச்சயமாக வெற்றி பெறுவான். சுசர்மன் தோல்வி யடைந்தான் என்கிற செய்தியும் இதற்குள் அங்கே எட்டியிருக்கும். கௌரவ வர்கள் திரும்பி ஓட்டம் பிடிப்பார்கள்" என்று சொல்லித் தேற்றினார்.

இதற்குள் உத்தரனால் அனுப்பப்பட்ட தூதர்கள் வந்து சேர்ந்தார்கள். "உத்தரன் ஜெயித்தான். கௌரவ சேனை சிதறடிக்கப்பட்டது. பசுக்கள் மீட்கப் பட்டன" என்று தூதர்கள் சொன்னது விராடனுக்கு வியப்பாக இருந்தது. அவன் நம்பவேயில்லை.

"அரசனே! சந்தேகப்பட வேண்டாம். தூதர்கள் சொல்லுவது உண்மையாகவே இருக்க வேண்டும். பிரு கன்னளை சாரதியாகப் போனபின் வெற்றியைப் பற்றிச் சந்தேகமே இல்லை. உம்முடைய குமாரன் ஜெயித்து விட்ட தில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. தேவேந்திரனுடைய சார தியும் கிருஷ்ணனுடைய சாரதியும் யாருமே பிருகன்ன ளைக்குச் சமானமாக மாட்டார்கள் என்பது எனக்குத் தெரியும்" என்று யுதிஷ்டிரன் அரசனுக்குச் சொன்னான்.

தூதர்கள் கொண்டு வந்த வெற்றிச் செய்தியைக் கேட்ட விராடன் மகிழ்ச்சி சாகரத்தில் மூழ்கினான். தூதர் களுக்கு ரத்தினங்களும் தனமும ஏராளமாக வெகுமதி யளித்தான்.

"ஊரை அலங்கரியுங்கள், நான் சுசர்மனை வென்றது பெரிதல்ல. ராஜகுமாரனுடைய வெற்றியே வெற்றி. எல்லா ஆலயங்களிலும் தேவார்ச்சனை செய்ய கட்டளை யனுப்புங்கள். ராஜ வீதிகளில் கொடிகள் கட்டி மங்கள வாத்தியம் கோஷிக்கச் செய்யுங்கள். என் இளஞ்சிங் கத்தைத் தக்க முறையில் எதிர்கொண்டு வரவேற்க எல்லா ஏற்பாடுகளும் செய்யுங்கள்" என்றான.

இவ்வாறு வெற்றியுடன் திரும்பி வரும் குமாரனை எதிர்கொண்டு அழைத்துவர மந்திரிகளையும் சேனையை யும் கன்னிப் பெண்களையும் அனுப்பிவிட்டு, விராடன் அந்தப்புரம் சென்று "ஸைரந்திரி, பாச்சிகைகள் கொண்டுவா! கங்கரே! என் சந்தோஷத்தைப்பொறுக்க

முடியவில்லை. விளையாடுவோம் வாரும்'' என்று சொல்லி அவனும் யுதிஷ்டிரனும் விளையாட உட்கார்ந்தார்கள்.

ஆடும்போது பேச்சும் நடந்தது. "பார்த்தீரா என் குமாரன் பூமிஞ்சயனுடைய சௌரியத்தை? புகழ் பெற்ற கௌரவவீரர்களைத் துரத்தி யடித்தான்'' என்றான்.

"ஆம், உம்குமாரன் பாக்கியசாலி. அப்படி யில்லா விட்டால் பிருகன்னளை அவனுக்குத் தேர் ஓட்ட அமைந் திருப்பாளா? ராஜகுமாரன அதிருஷ்டசாலி என்பதில் சந்தேகமில்லை'' எனறான் யுதிஷ்டிரன்.

"என்ன நீர் நபும்ஸகனைப் பற்றியே திரும்பத் திரும்ப உளறுகிறீர்! என் குமாரனுடைய ஜெயத்தைப பற்றி நான் பேசும போது இந்த அலியின் சாரத்யத்தை ஒரு பெரிய விஷயமாகச் சொல்லுகிறீர்'' எனறு விராடன் கோபமாகச் சொன்னன.

"அப்படிச் சொல்லலாகாது. பிருகன்னளை சாதாரண மானவளல்ல. அவள் ஓட்டியதேர் ஒருநாளும் தோற்காது. அவள நடத்தும் தேரில் நின்றவன் எதையும் செய்து முடிப்பான்'' என்று திரும்பவும் கங்கர் சொல்ல அரச னுடைய கோபம் அதிகரித்தது.

"ஓய் பிராமணரே! இம்மாதிரி பேசாதேயும்'' என்று சொல்லி விராடன் ஆட்டத்துக் காயை எடுத்து யுதிஷ் டிரன் முகததில் எறிந்து கையை ஓங்கி வீசிக்கணைத்தில் ஒரு அடி அடித்தான். யுதிஷ்டிரன் முகத்தில் காயமுண் டாகி ரத்தம் பெருக ஆரம்பித்தது.

உடனே பக்கத்தில் இருந்த ஸைரந்திரி தன் மெல்லிய உத்தரியத்தைக் கொண்டு காயத்தைத் துடைத்தாள். வஸ்திரம் நனைந்து போக அதை ஒரு பொன் கிண் ணத்தை எடுத்து அதில் பிழிந்தாள்.

"இது என்ன வேலை? ரத்தத்தை ஏன் கிண்ணத்தில் பிழிகிறாய்?'' என்று கேட்டான் இன்னும் கோபம் ஆறாத விராடன்.

"அரசனே! சந்நியாசியின் ரத்தம் கீழே விழலாகாது. விழுந்தால் அந்த ரத்தத்தில் எத்தனை பிந்துக்கள் உண்டோ அத்தனை வருஷங்கள் உம்முடைய ராஜ்யத்தில் மழை இல்லாமல் போகும். அதனால் இவ்வாறு கிண்ணத்தில் பிழிந்தேன். கங்கருடைய மேன்மை உமக்குத் தெரியாது" என்றாள்.

இதற்குள் வாயில் காப்போன் வந்து, "உத்தரனும் சாரதி பிருகன்னளையும் வந்திருக்கிறார்கள். அரசனைப் பார்க்க விரும்பி வாயலில் ராஜகுமாரன் நிற்கிறான்" என்று சொன்னதும் விராடன் பரபரப்புடன் எழுந்து "வரச் சொல்! வரச் சொல்!" என்றான்.

யுதிஷ்டிரன் மெதுவாகத் துவாரபாலகனிடம் "உத்தரன் ஒருவன் மட்டும் வரட்டும். பிருகன்னளை வரவேண்டாம்" என்று ரகசியமாகச் சொல்லியனுப்பினான்.

தன் முகத்தில் உண்டான காயத்தை அருச்சுனன் பார்த்தால் கோபம் தாங்கமாட்டான். காயம் யுத்தத்தில் பட்டதாக இருந்தால் லட்சியம் செய்யவே மாட்டான். ஆனால் மற்ற விதமாக ஒருவன் தருமபுத்திரனுக்குச் செய்த அபவாதத்தைப் பொறுக்கவே மாட்டான். ஏதாவது விபரீதம் நேரிடும் என்று யுதிஷ்டிரன் இவ்வாறு செய்தான்.

உத்தரன் உள்ளே வந்ததும் விராடனை நமஸ்கரித்து கங்கரையும் வணங்கப் போனான். அப்போது, அவர் முகத்தில் ரத்தப் பெருக்கைப் பார்த்துத் திகைத்தான். உத்தரனுக்குக் கங்கன் யுதிஷ்டிர மகாராஜா என்பது தெரியுமல்லவா?

"அரசனே! இந்த மகானை யார் உபத்திரவம் செய்தது?" என்றான்.

விராடன் அப்போது மகனைப் பார்த்து, "புத்திரனே! உன் வெற்றியைக் கேட்டு மகிழ்ந்த நான் உன்னைப் பற்றிப் புகழ்ந்து பேசியபோது இந்தப் பிராமணர் உனக்குத் தேரோட்டிய நபும்ஸகனைப் புகழ்ந்து புகழ்ந்து உன்

ஜெயத்தையும் வீரியத்தையும் குறைத்துப பேசினார். அதை என்னால் பொறுக்க முடியவில்லை. இவர் அரசு யைக்காரர். அவரை நான் அடித்துவிட்டேன். இதைப் பற்றி என்ன?'' என்றான்.

''ஐயோ! பெரும் பிழை செய்து விட்டீர்! உடனே அவர் காலில் விழுந்து வணங்கி க்ஷமிக்கும்படி கேட்டு அவர் மன்னிப்பை அடைய வேண்டும். இல்லாவிடில் நமமுடைய குலம் வேரோடு அழிந்துபோகும்'' என்று உத்தரன் பயமும் வருத்தமும் மேலிட்டுத் தகப்பனைக் கேட்டுக் கொண்டான்.

விராடனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. மனக் குழப்பமுற்று ஒன்றும் செய்யத் தோன்றாதவனாய் நின்றான்.

உத்தரன் மறுபடியும் மிகவும் வருந்தி வேண்ட விராடன் யுதிஷ்டிரனை வணங்கிப் பொருத்தருள வேண்டும் என்று கேட்டுக் கொண்டான்.

பிறகு ''அப்பனே! நீயல்லவோ வீரன்! கௌரவ சேனையை எவ்வாறு வென்றாய்? பசுக்களை எவ்வாறு மீட்டாய்? எல்லாம் விவரமாய்ச் சொல்லக் கேட்டு நான் மகிழ்ச்சியடைய வேண்டும். நடந்ததையெல்லாம் சொல்'' என்று விராடன் மகனை ஆலிங்கனம் செய்து உட்கார்ச் செய்து நடந்ததையெல்லாம் சொல்லச் சொன்னான்.

உத்தரன் ''மகாராஜாவே! நான் எந்தச் சேனையையும ஜெயிக்கவில்லை. எந்தப் பசுக்களும் என்னால் மீட்கப் படவில்லை. எல்லாக் காரியத்தையும் ஒரு தேவ குமாரன் செயதான். அவனே கௌரவப் படையைச் சிதறடித்தது. அந்த வீரனே பசுக்களை மீட்டது. நான் ஒன்றும் செய்ய வில்லை'' என்றான்.

''அந்த வீரன் எங்கே? அவனைக் கூப்பிடு. என் மகனை யமன் வாயிலிருந்து காப்பாற்றித் தந்த அந்த வீரனை நான் என் கண்களால் பார்த்து மகிழவேண்டும்.

என்னுடைய மகள் உத்தரையை அவனுக்குத் தருவேன். நான் அவனைப் பூஜிக்கவேண்டும். அவனை அழைத்துவா'' என்றான் அரசன்.

''அந்த தேவகுமாரன் மறைந்து விட்டான்! ஆனால் அவன் இன்றோ நாளையோ வருவான் என்று எண்ணு கிறேன்'' என்று சொன்னான் ராஜகுமாரன்.

இந்திரனுடைய மகனான அருச்சுனன் தேவகுமாரன் அல்லவா? அவன் மறுபடி பிருகன்னளை உருவத்தில் மறைந்து விட்டதும் உண்மையே அல்லவா?

x x x

விராடனுடைய ராஜசபை கூடிற்று. அரசனும் அரச குமாரனும் அடைந்த வெற்றிகளைப் பாராட்ட நகரத்துப் பிரமுகர்கள் எல்லாரும் வந்து கூடி ஆசனங்களில் அமர்ந்தார்கள். விராடனுடைய ஜெயத்திற்குக் காரணமாகிய கங்கன் சமையற்கார வல்லன், பிருகன்னளை தந்திரீபாலன், தாமக்கிரந்தி இவர்களும் சபைக்கு வந்தார்கள். ராஜ குமாரர்களுக்கென்று அமைக்கப்பட்ட சிம்மாசனங்களில் அவர்கள் உட்கார்ந்தார்கள்.

அரமனைக் குற்றேவலில் அமைக்கப்பட்ட இவர்கள் அரசன் சொல்லித்தான் இவ்வாறு சிம்மாசனங்களில் உட்காரத் துணிந்தார்கள் என்று அனைவரும் எண்ணினார்கள். ஆபத்தான காலத்தில் அரசனுக்கு அவர்கள் செய்த பேருதவியும் வீரச் செயல்களும் இதற்குக் காரணமாயிருக்கும்; அந்த வீரர்களை அவ்வாறு கவுரவிப்பதும் சகஜம் என்று நினைத்தார்கள்.

விராடராஜன் சபையில் பிரவேசித்தான். சந்நியாசி கங்கரும் சமையல்காரனும் குதிரைக்காரனும் மாட்டுக் காரனும ராஜகுமாரர்கள் உட்கார வேண்டிய ஆசனங்களில் சுகமாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்து மறுபடியும் கோபாவேசமானான்.

கொஞ்ச நேரம வாக்குவாதம் நடந்தது. பிறகு வேடிக்கை போதும என்று பாண்டவர்கள் தாங்கள் யார்

என்பதைச் சபைக்கு வெளிப்படுத்தினார்கள். அனைவரும் வியப்பிலும் மகிழ்ச்சியிலும் பரவசமடைந்தார்கள்.

பாண்டவர்கள் ஐவரும் பாஞ்சாலியும் இவ்வளவு நாள் தான் அறியாமல் தனக்கு தொண்டு செய்துகொண்டு அரமனைச் சேவகர்களாக இருந்ததையும் தனக்கும் உத்தரனுக்கும் அவர்கள் செய்த பேருபகாரத்தையும் எண்ணி எண்ணி விராடன் மனம் பூரித்து "இதற்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்" என்று கங்கரைப் பன்முறை ஆலிங்கனம் செய்தான்.

தன் ராஜ்யம் முழுவதையும் யுதிஷ்டிரனுக்குக் கொடுத்து மறுபடி அவனிடமிருந்து பெற்றுக் கொண்டான். தன மகள் உத்தரையை அருச்சுனனுக்குக் கன்னிகாதானம் செய்தே தீரவேண்டு மென்றும் சொன்னான்.

அருச்சுனன், அது தகாது. "உத்தரை என்னிடத்தில் நாட்டியமும், கானமும் கற்றவள். அவளுக்கு நான் ஆசாரியனும், தகப்பனும்போல் ஆவேன்" என்று அவளைத் தன் மகன் அபிமன்யுவுக்கு விவாகம் செய்வித்துத் தனக்கு மருமகளாக்கிக்கொள்ள அங்கீகரித்தான்.

x x x

இதன்பின் துராத்மாவும் வஞ்சகனுமான துரியோதனனிடமிருந்து தூதர்கள் வந்தார்கள்.

"குந்தி புத்திரரே! துரியோதன ராஜா உம்மிடம் எங்களை அனுப்பி யிருக்கிறார். தனஞ்சயனுடைய அவசரச் செயலால் நீர் மறுபடி காட்டுக்குப் போக வேண்டியவர் ஆனீர். பதின் மூன்றும் வருஷம் முடிவதற்குள் அவன் தெரிந்து கொள்ளப்பட்டான. ஆகையால் பிரதிஜ்ஞைப்படி மறுபடி பன்னிரண்டு வருஷம் வனம் செல்ல வேண்டியது" என்று தூதர்கள் யுதிஷ்டிரனிடம் சொன்னார்கள்.

தருமபுத்திரர் சிரித்துவிட்டு, "தூதர்களே! சீக்கிரமாகத் திரும்பிப்போய் துரியோதனனிடத்தில் சொல்லுங்கள். பிரதிஜ்ஞைப்படி பதின்மூன்றுவது ஆண்டு தீர்ந்ததா, இல்லையா என்பதைக் கணிதம் படித்த பாட்டனார் பீஷ்மரையும் சோதிடம் அறிந்தவர்களையும் கேட்டுத் தெரிந்து கொள்ளச் சொல்லுங்கள். பதின்மூன்றுவது வருஷம் பூர்த்தியான பின்னரே, தனஞ்சயனுடைய வில்லின் ஒலி சத்துருக்களை நடுங்கச் செய்தது!" என்றார்.

# மந்திராலோசனை

பதின்மூன்றாவது வருஷம் முடிந்தவுடன் பாண்டவர்கள் விராடனுடைய ராஜதானியை விட்டு அவனுக்குச் சேர்ந்த உபப்பிலாவியம் என்கிற நகரத்தில் பகிரங்கமாக வசித்து வந்தார்கள். அவ்விடமிருந்து தங்களுடைய பந்து மித்திரர்களுக்குக் கெல்லாம் தூது அனுப்பினார்கள்.

துவாரகையிலிருந்து அருச்சுனன் மனைவி சுபத்திரையையும் அவள் மகன் அபிமன்யுவையும் அழைத்துக் கொண்டுபலராமனும் கிருஷ்ணனும் அவர்களுடன் யாதவ குலத்தைச் சேர்ந்த அநேக வீரர்களும் உபப்பிலாவியம் வந்து சேர்ந்தார்கள். ஜனார்த்தனன் வருகிறான் என்று கேட்டு மத்ஸ்ய ராஜனும பாண்டவர்களும் சங்க முழக்கத்தோடு எதிர்கொண்டு வரவேற்றார்கள்.

பதின்மூன்றாம் ஆண்டு ஆரம்பத்தில் பாண்டவர்களை வனத்தில் விட்டுப்போன இந்திரசேனன் முதலானவர்கள ரதங்களோடு உபப்பிலாவியம் வந்து சேர்ந்தார்கள். காசி ராஜனும் சைப்பியனும் இரண்டு அக்குரோணி சேனையுடன் வந்து யுதிஷ்டிரனை அடைந்தார்கள்.

மூன்று அக்குரோணிகளுடன் பாஞ்சால ராஜனான துருபதன் வந்து சேர்ந்தான். துருபதனுடன் சிகண்டியும் திரௌபதியின் சகோதரன் திருஷ்டத்யும்னனும் திரௌபதியின் புத்திரர்களும் வந்து சேர்ந்தார்கள். இன்னும் பல ராஜாக்கள் தத்தம் பெருஞ் சேனைகளுடன் பாண்டவர்களுக்குத் துணை செய்வோம் என்று வந்து சேர்ந்தார்கள்.

முதலில் அபிமன்யுவுக்கும் உத்தரைக்கும் சாத்திர முறைப்படி விவாகம் நிறைவேறிற்று. அதன்பின் எல்லா அரசர்களும வீரர்களும் விராடனுடைய சபா மண்டபத்தில் மந்திராலோசனைக்கு உட்கார்ந்தார்கள்.

விராடன் பக்கத்தில் கிருஷ்ணனும் யுதிஷ்டிரனும் துருபதன் பக்கத்தில் பலராமனும் சாத்யகியும் ஆசனங்

கள் பெற்று உட்கார்ந்தார்கள், இன்னும் பல அரசர்களும் மகாரதர்களும் சபையை அலங்கரித்தார்கள். கலகலப்பு அடங்கியதும் எல்லாரும் கண்ணனைப் பார்த்தார்கள். கண்ணனும் எழுந்து பேசலானான்.

"யுதிஷ்டிரர் சூதாட்டத்தில் வஞ்சனையாக ஜெயிக்கப்பட்டதும், ராஜ்யம் அபகரிக்கப்பட்டதும், வனவாசப் பிரதிஜ்ஞை செய்யப்பட்டதும், பாண்டு புத்திரர்கள் பதின்மூன்று வருஷங்கள் கடுமையான விரதத்தைச் சொன்னபடி அனுஷ்டித்துச் சகிக்க முடியாத பலவித துன்பங்களைச் சகித்ததும் இவையெல்லாம் உங்களுக்குத் தெரிந்த விஷயங்களே. தரும புத்திரனுக்கும் அரசன் துரியோதனனுக்கும் எது நன்மையோ, கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் எது புகழைத் தருவதும் தருமத்துக்கு இசைந்ததுமானதோ அதனை ஆலோசியுங்கள். தருமபுத்திரர் அதர்மத்துடன் கலந்ததை எதுவாயினும் விரும்பமாட்டார். தம்மை வஞ்சித்து பலவிதக் கஷ்டங்களுக்கு ஆளாக்கிய திருதராஷ்டிர புத்திரர்களுக்கும் யுதிஷ்டிரர் க்ஷேமத்தையே விரும்புகிறார். கௌரவர்களுடைய லோப குணத்தையும் யுதிஷ்டிரருடைய தரும புத்தியையும் நன்றாக ஆலோசித்துச் சொல்லுங்கள். துரியோதனனுடைய எண்ணம் என்னவென்று உள்ளபடி தெரியவில்லை. சமர்த்தனும் சீலனுமான ஒருவனைத் தூதனாக அனுப்பித் திருதராஷ்டிர புத்திரனுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லிச் சமாதானம் செய்து யுதிஷ்டிரனுக்குப் பாதி ராஜ்யத்தைக் கொடுக்கச் செய்ய வேண்டும்" என்று இவ்வாறு சொல்லி, தமயன் பலராமனைப் பார்த்தான்.

பலதேவன் சொன்னான்; "தருமமும் ராஜநீதியும் கூடிய யோசனையைக் கிருஷ்ணன் சொன்னான். அதைக் கேட்டீர்கள். துரியோதனன் தரும புத்திரர் இருவருக்கும் ஹிதமான யோசனை கிருஷ்ணனால் சொல்லப்பட்டது. அதை நான் மிகவும் பாராட்டுகிறேன். குந்தி புத்திரர்கள் தங்களுக்குக் கிடைத்த பாதி ராஜ்யத்தை இழந்துவிட்டு அதை மறுபடி அடைய முயல்கிறார்கள். சமாதானத்தின் மூலம் அடைந்தார்களானால் பாண்டவர்களும துரி

யோதனுதியர்களும் பிரஜைகளும் எல்லாருமே சுகமும் அமைதியும் அடைவார்கள் அதில் சந்தேகமில்லை. அதற்கு ஒருவன் துரியோதனனிடம் போய் யுதிஷ்டிரருடைய வேண்டுகோளை அவனுக்குச் சொல்லி அவனுடைய கருத்தையும் தெரிந்துகொண்டு வரவேண்டும். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் சமாதானம் உண்டாக்கும் திறமையைப் படைத்தவன் போகவேண்டும். அப்படிப் போகும் தூதன் பீஷ்மரையும் திருதராஷ்டிரனையும் துரோணரையும் விதுரரையும் கிருபரையும் அசுவத்தாமரையும் கர்ணனையும் சகுனியையும் கலந்து ஆலோசித்துக் குந்தி புத்திரருக்காக வணங்கிக் கேட்டுக்கொள்ள வேண்டும். என்ன நேர்ந்தாலும் கோபிக்கக் கூடாது. தருமபுத்திரன் தெரிந்தே சூதாட்டம் ஆடித் தேசத்தை இழந்தான். பல நண்பர்கள் தடுத்தும் ஆடுவேன் என்று பிடிவாதம் செய்து ஆடினான். சகுனி தாயக்கட்டை வீசுவதில் தேர்ச்சி பெற்றவன என்று தெரிந்திருந்தும் தான் அதில் சகுனிக்குச் சமானமானவன் அல்ல என்பதை நன்றாக அறிந்திருந்தே யுதிஷ்டிரன் ஆட்டத்துக்கு ஒப்புக்கொண்டு ஆடினான். ஆகையால் இப்போது திருதராஷ்டிரனை வணங்கியே கேட்டுக்கொள்ள வேண்டும். தூதனாகப் போகிறவன் யுத்தப் பிரியனாக இருக்கக் கூடாது. எப்படியாவது சமாதானம் செய்து முடிக்க வேண்டும் என்று எண்ணங் கொண்டவனே தூதனாகப் போகவேண்டும். துரியோதனனை நல்ல வார்த்தைகளினால் சமாதானப் படுத்துங்கள். அரசர்களே! யுத்தத்தை விரும்பாதீர்கள். சமாதானத்தில் சம்பாதிக்கப்பட்ட செல்வமே பயன் அளிக்கும். எந்த யுத்தத்திலுமே அநீதி ஏற்படும்."

பலராமனுடைய கட்சி என்னவென்றால், தெரிந்தே யுதிஷ்டிரன் சூதாடிச் சொத்தைத் தோற்றான். பிரதிஜ்ஞைப்படி வனவாசம் முடித்ததனால் மறுபடி வனவாசம் போகாமல் சுதந்திரமாக இருக்கும் உரிமை உண்டு. ஆனால் ஆட்டத்தில் இழந்த ராஜ்யத்தைக் கேட்கும் உரிமை உண்டாகாது. பிரதிஜ்ஞையில் அவ்வாறான நிபந்தனை இல்லை. ராஜ்யத்தை இழந்தது இழந்ததுதான்.

வணங்கிக் கேட்டு ஏதேனும் பெறலாமேயொழிய உரிமை கிடையாது. சூதாட்டத்தில் சொத்தை வைத்து இழப்பது மடமையானாலும் கண் திறந்து சூதாடி இழந்தது இழந்த படியேயாகும். அதை மறுபடி எனது என்று ஒருவன் உரிமை பாராட்ட இடமில்லை என்பது. ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள் விரோதப் பட்டுக்கொண்டு கொடிய யுத்தம் செய்வது பலராமனுக்குப் பிடிக்கவில்லை. யுத்தத்தினால் எப்போதும் அனர்த்தமதான் விளையும் என்பது அவனுடைய அபிப்பிராயம்.

எக்காலத்துக்கும் பொருத்தமான ஒரு உண்மையை பலராமன் மூலம் சொல்லுகிறார் வியாசர்.

x x x

இவ்வாறு பலதேவன் கூறியதை யாதவ வீரனான சாத்யகியினால் பொறுக்க முடியவில்லை. கோபம் மேலிட்டு எழுந்த சாத்யகி பேச ஆரம்பித்தான்:

"பலதேவர் பேசினது எனக்குக் கொஞ்சமேனும் நியாயமாகத் தோன்றவில்லை. ஒருவன் தன்னுடைய அந்தரங்க எண்ணம் எதுவோ அதற்கு அனுசரணையாகச் சாமர்த்தியத்தைக் கொண்டு பேசிவிடுவான். எதையும் அழகாக வாதித்து விடமுடியும். ஆனால் அதருமம் தருமம் ஆகாது. அநீதி நீதியுமாகாது. பலதேவர் சொன்னதை நான் ஆக்ஷேபிக்கிறேன். மிகவும் வெறுக்கிறேன். ஒரே வயிற்றில் சூரனும் கயவனும் அண்ணன் தம்பிகளாகப் பிறக்கிறார்கள். ஒரே மரத்தில் பழம் தரும் கிளையும் பயனற்ற கிளையும் உண்டாவதைப் பார்க்கிறோமல்லவா? கிருஷ்ணன் பேசினது தருமம். பலதேவர் பேசியது அநீதி. தரும புத்திரரைப்பற்றிச் சபையில் குறை சொல்லுகிறவன் துரியோதனனைக்கண்டு பயப்படுவனாகத்தான் இருக்கவேண்டும். நான் கடுமையாகப் பேசுவதைச் சபையோர் மன்னிக்க வேண்டும். ஆட்டம் தெரியாதவரும் ஆட்டத்தில் இஷ்டமில்லாதவருமா யிருந்த யுதிஷ்டிரரை வருந்தி அழைத்து ஆடச் செய்து அவரைத் தோற்கடித்தார்கள். பிரதிஜ்ஞையைப் பூரணமாக முடித்துத் திரும்

பிய இவர் ஏன் துரியோதனனை வணங்கிப் பிச்சை கேட்க வேண்டும்? யுதிஷ்டிரர் யாசிப்பவர் அல்ல; அவர் வணங்கவேண்டிய அவசியமில்லை. பாண்டவர்கள் வனவாசத்தைச் சரியாக பூர்த்தி செய்து அஞ்ஞாத வாசமும் சரியாக முடிந்திருக்கும்போது பன்னிரண்டு மாதம் பூர்த்தியாவதற்குள் 'நாம் கண்டுகொண்டு விட்டோம்' என்று அதர்மமாகச் சொல்லிவரும் இந்த துரியோதனாதியரை நான் யுத்தத்தில் வீழ்த்தி, தர்மபுத்திரருடைய காலில் அவர்கள் விழுந்து வணங்கச் செய்வேன். இல்லையேல் கௌரவர்கள் யமபுரிக்குச் செல்லுவார்கள். தரும யுத்தத்தில் அநீதி ஏன் விளையும்? ஆயுதம் எடுத்து யுத்தம் செய்யும் எதிரிகளைக் கொல்லுவதில் ஒரு பாபமுமில்லை. சத்துருக்களை யாசிப்பது இகழ்ச்சிக்குக் காரணமாகும். துரியோதனன் யுத்தத்தை விரும்புவானாகில் யுத்தத்துக்குத் தயாராவோம். காலதாமதம் செய்யாமல் நாம் செய்ய வேண்டியதைச் செய்வோம். யுத்தமில்லாமல் அவன் ராஜ்யத்தைத் தரப்போவதில்லை. காலதாமதம் செய்வது அறியாமையாகும்.''

சாத்யகி இவ்வாறு உறுதியாகச் சொன்னதைக் கேட்டு துருபத ராஜன் மகிழ்ச்சி யடைந்து எழுந்தான்.

''சாத்யகி சொல்வது சரி. அதைத்தான் நான் ஆதரிக்கிறேன். நல்ல வார்த்தைகளால் துரியோதனன் வழிக்கு வரமாட்டான். நம்முடைய யுத்த முயற்சியை நிறுத்தாமல் நாம் செய்து கொண்டே போகவேண்டும். நம்முடைய நண்பர்களுக்குத் தூதர்களை அனுப்பிக் காலதாமதமின்றிப் படைகள் சேர்க்கச் சொல்லவேண்டும். சல்யன், திருஷ்டகேது, ஜயத்ஸேனன், கேகயன் முதலியவர்களிடம் உடனே நம்முடைய தூதர்கள் போகவேண்டும். திருதராஷ்டிரனிடம் தகுந்த தூதனை அனுப்ப வேண்டியது அவசியம். என்னுடைய அரண்மனை வித்துவானும் புரோகிதருமான வேதியரை ஹஸ்தினாபுரம் அனுப்பலாம். சொல்ல வேண்டியதை அவரிடம் சொல்லி யனுப்பலாம். துரியோதனனிடம் என்ன சொல்ல வேண்டும், பீஷ்மரிடமும் திருதராஷ்டிரனிடமும் துரோணரிடமும் எவ்விதம்

சொல்லவேண்டுமென்பதை எல்லாம் அவரிடம் சொல்லி யனுப்பலாம்'' என்றான்.

துருபதன் இவ்வாறு யோசனை சொன்னதும் வாசுதேவன் எழுந்து துருபதராஜனைப் பார்த்துச் சொன்னான்: "நீர் சொன்னது மிகவும் சரியான யோசனை. இதுவே செய்யத்தக்கது. அதுவே ராஜதருமம். நானும் பலதேவரும் கௌரவ பாண்டவர்கள் இருவருக்கும் சம உரிமைப் பட்டவர்கள். உத்தரையின் விவாகத்திற்காக வந்த நாம் நம்முடைய நகரத்துக்குத் திரும்புவோம். அறிவிலும் வயதிலும் நீர் அரசர்களுக்குள் பெரியவர். நமக்கு நீர் குருவைப் போன்றவர். திருதராஷ்டிரன் உம்மைப் பெரிதும் மதிக்கிறவன். துரோணரும் கிருபரும் உமக்குப் பால்யசிநேகிதர்கள் ஆவார்கள். நீர் தூதனுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்லி அனுப்ப வேண்டும். துரியோதனன் நியாயமான வழிக்கு வராவிட்டால் எல்லா முயற்சிகளும் செய்து எங்களுக்கும் சொல்லி யனுப்புங்கள்'' என்றான்.

மந்திராலோசனையில் இவ்வாறு முடிவானபின் கிருஷ்ணனும் அவனைச் சேர்ந்தவர்கள் அனைவரும் துவாரகைக்குத் திரும்பிப் போனார்கள். விராடனும், துருபதனும் யுதிஷ்டிரன முதலானவர்களும் யுத்தத்திற்கு வேண்டிய ஆயத்தம் எல்லாம் செய்தார்கள். தூதர்களை ஆங்காங்கு அனுப்பி எல்லா அரசர்களுக்கும் தெரியப்படுத்தினார்கள். பாண்டவர்களிடத்தில் நட்புக் கொண்ட அரசர்கள் எல்லாரும் தத்தம் சேனைகளைத் தயார் செய்தார்கள்.

துரியோதனாதியரும் சும்மா இருக்கவில்லை. அவர்களும் யுத்தத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்ய ஆரம்பித்தார்கள். தங்களுடைய நண்பர்களுக்கெல்லாம் உடனே படைகளைத் திரட்டச் சொல்லி அனுப்பினார்கள். இவ்வாறு பரதகண்டம் முழுவதும் யுத்த முயற்சியின் ஆரவாரம் பரவிற்று. "அப்போது அரசர்களுடைய அவசரப் பிரயாணங்களினால் எங்கும் பெரும் கிளர்ச்சி ஏற்பட்டது. சேனைகள் வருவதும் போவதுமாகிப் பூமி அதிர்ந்தது'' என்கிறார் பௌராணிகர். தற்போது

நடைபெறும் யுத்த முயற்சிகளைப் போலவே அந்த நாளிலும் நடைபெற்றதாகத் தெரிகிறது.*

துருபதன் தன் புரோகிதரைக் கூப்பிட்டு, "வித்துவான்களுள் சிறந்தவரே! துரியோதனனிடம் பாண்டவர்களுக்காகப் போகக் கடவீர். அந்தத் துரியோதனனுடைய குணங்களும் பாண்டவர்களுடைய குணங்களும் உமக்கு நன்றாகத் தெரியும். திருதராஷ்டிரனுக்குத் தெரிந்தே பாண்டவர்கள் வஞ்சிக்கப்பட்டார்கள். விதுரர் நியாயத்தைச் சொல்லியும் திருதராஷ்டிரன் கேட்கவில்லை. அந்தக் கிழ அரசன் தன் மகன் சொன்ன வழியே செல்லுகிறான். நீர் திருதராஷ்டிரனிடம் தருமத்தையும் நீதியையும் எடுத்துச் சொல்லவேண்டும். விதுரர் நமக்கு உதவியாகத்தான் பேசுவார். இதனால் பீஷ்மர் துரோணர் கிருபர் முதலிய மந்திரிகளுக்குள்ளும் யுத்த வீரர்களுக்குள்ளும் பேதம் உண்டாகலாம். மந்திரிகளும் வீரர்களும மாறுபட்ட அபிப்பிராயம் கொண்டால் அவர்களை எல்லாம் மறுபடி ஒன்று சேர்ப்பதற்குப் பெரிய முயற்சி வேண்டியதாகும். காலதாமதமும் ஆகும். இதற்குள்ளாகப் பாண்டவர்களுடைய யுத்த முயற்சிகள் சரியாக நடைபெறும். நீர் துரியோதனுடைய நகரத்தில் இருந்துகொண்டு சமாதானம் பேசும் வரையில் அவர்களுடைய யுத்த முயற்சிகள் தளர்ச்சி அடையும். சமாதானம் பேசுவதால் நமக்கு இந்த நல்ல பயனுண்டாகும். சமாதானம் ஏற்பட்டாலும் நன்மையே. துரியோதனன் சமாதானத்திற்கு இசைவான் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆயினும் சமாதானப் பேச்சுப் பேசுவதற்காகத் தூதர் போவது நமக்குப் பயனைத் தரும்" என்றான்.

சமாதானம் பேசுவது, உண்மையாகவே சமாதானத்திற்கு வேண்டியதைச் செய்வது ஆனால் போருக்கும் தயாராக இருந்து, அதற்கு வேண்டிய ஆயுதங்களைத் தளரவிடாமல் செய்துகொண்டே இருப்பது, சமாதானப்

---

* இந்த அத்தியாயம் 'கல்கி'யில் வெளியாகும் சமயம் ஜர்மானியப் போர் நடந்து கொண்டிருந்தது

பேச்சினால் விரோதிகளுடைய கூட்டத்தில் பேதம் உண்டாக்கப் பார்ப்பது, இவையெல்லாம் பழைய காலத்திலும் கையாண்ட முறையே! அமெரிக்கருடன் ஜப்பானியத் தூதர்கள் 1941 வருஷத்து டிசம்பர் மாதத்தில் சமாதானப் பேச்சுப் பேசி, அது முறிந்த மறு கணமே முத்துத்துறைமுகத்தைத் தாக்கி அமெரிக்கருடைய கடற்படையைத் தகர்த்தது புதிய முறையல்ல; பழைய க்ஷத்திரிய முறை போலவே காணப்படுகிறது!

# பார்த்தசாரதி

பாண்டவர்கள் சமாதானப் பேச்சுப் பேசி முடிப்பதற்காக ஹஸ்தினாபுரத்துக்குத் தூதரைப் போகச் சொல்லிவிட்டுத் தங்கள் பக்ஷத்தில் இருக்கக்கூடிய அரசர்களுக்கெல்லாம் படைகளைத் திரட்டித் தயாராக்கும்படி சொல்லி யனுப்பினார்கள். துவாரகைக்கு அருச்சுனனே நேரில் சென்றான்.

தன்னுடைய ஒற்றர்களால் விஷயங்களை யறிந்து கொண்ட துரியோதனனும் சும்மா இருக்கவில்லை. வாசுதேவன் ஊருக்குத் திரும்பினான் என்பதை அறிந்து வேகமான குதிரைகளைப் பூட்டிய ரதத்தில் துவாரகை சென்றான். இருவரும் ஒரே தினத்தில் துவாரகை வந்து சேர்ந்தார்கள்.

கிருஷ்ணன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். நெருங்கின உறவினர்களானபடியால் இருவரும் கிருஷ்ணன் படுத்திருந்த அறைக்குள் சென்று அவன் எழுந்திருப்பதற்காகக் காத்திருந்தார்கள். முதலில் உள்ளே பிரவேசித்த துரியோதனன் கிருஷ்ணனுடைய சமீபத்தில் தலைப்பக்கத்தில் ஒரு சிறந்த ஆசனத்தில் உட்கார்ந்தான் பின்னால் வந்த அருச்சுனன் காலண்டை கைகூப்பிக் கொண்டு நின்றான்.

மாதவன் நித்திரை தெளிந்ததும் எதிர் நின்ற அருச்சுனனை முதலில் பார்த்து அவனுக்கு நல்வரவு சொன்னான். பிறகு திரும்பிப்பார்த்து ஆசனத்தில் வீற்றிருந்த துரியோதனனை வரவேற்று, அவனையும் க்ஷேமசமாசாரம் விசாரித்தான். "என்ன காரியம்? இருவரும் ஏன் வந்தீர்கள்?" என்று கேட்டான். துரியோதனன் முதலில் பேசினான்.

"இப்போது எங்களுக்குள் யுத்தம் வரும்போலிருக்கிறது. வந்தால் நீர் எனக்கு உதவி செய்யவேண்டும். நானும் அருச்சுனனும் இருவரும் உம்மிடத்தில் சமமான

பிரியம் பெற்றிருக்கிறோம். நம்முடைய உறவு முறையும் சமானமாகத்தான் இருக்கிறது; ஒருவன் அதிகம் ஒருவன் குறைவு இல்லை. இப்போது உம்மிடத்தில் நான் முந்தி வந்தவனாக இருக்கிறேன். பெரியோர்களுடைய பழைய ஆசாரம் முன்னால் வந்தவனை ஆதரிக்கவேண்டும். பெரியோர்களுக்குள் நீர் சிறந்து விளங்குகிறீர், ஜனார்த்தனரே! எல்லாருக்கும் மார்க்கம் காட்டுபவராக இருக்கிறீர். பெரியோர்கள் நடத்தி வந்த தரும நெறியை ஊர்ஜிதப்படுத்து வீராக. நான் முந்தி வந்தவன்'' என்று சொன்னான்.

திருதராஷ்டிர புத்திரன் சொன்னதைக் கேட்ட புருஷோத்தமன், ''நீ முதலில் வந்தாய் என்பது உண்மையாகவே இருக்கலாம். ஆனால் அரசனே! குந்தி மகனை முதலில் நான் பார்த்தேன், நீ முந்தி வந்தவனாக இருக்கிறாய். இவன் முந்திப் பார்த்தவனாக இருக்கிறான். இருவரும் இந்த விஷயத்திலும் சமானமாகவே இருக்கிறீர்கள். ஆகையால் நான் இருவருக்கும் சகாயம் செய்யவேண்டியவன. பரிசுகள் கொடுப்பதில் சிறியவர்களுக்கு முதலில் கொடுக்கவேண்டும் என்பது பூர்வீக வழக்கம். ஆதலால் பார்த்தனுக்கு முதலில் தருகிறேன். போர் செய்வதில் எனக்குச் சமானமானவர்களும் மகா வீரர்களுமான என் குலத்தவர்கள் நாராயணர்கள் இருக்கிறார்கள், அவர்கள் திரண்டால் பெரிய படையாகும். யுத்தத்தில் யாருமே அவர்களை நெருங்க முடியாது. அவர்கள் ஒருபுற மிருப்பார்கள். இன்னொரு பக்கம் ஆயுதம் எடுக்காதவனாகவும் யுத்தத்தில் போர்புரியாதவனாகவும் நான் ஒருவன் மட்டும் இருப்பேன். பார்த்தனே! நன்றாக அநேக தடவை ஆலோசித்து உனக்கு எது பிரியமோ அதை நீ வரிக்கலாம். தனி மனிதனாகவும் ஆயுதமற்றவனாகவும் இருக்கும் என்னுடைய சகாயம் வேண்டுகிறாயா? அல்லது வீரர்களான நாராயணர்களின் சேனாபலத்தை யுத்தத்தில் விரும்புகிறாயா? சொல். பழைய நெறியை அனுசரித்து இளையவனாகிய நீ முதலில் கோரலாம்'' என்றான்.

கிருஷ்ணனால் இவ்வாறு சொல்லப்பட்ட தனஞ்சயன் தாமதமும் சந்தேகமுமின்றி உடனே '' ஆயுத மெடுக்கா

மல் நீர் என் பக்ஷத்தில் இருந்தால் போதும்'' என்று பக்தியுடன் பதில் சொல்லிவிட்டான்.

X X X

அருச்சுனன் ஏமாந்தான் என்று துரியோதனனுக்கு அடங்காத மகிழ்ச்சி. வாசுதேவனுடைய சேனை தன் பங்காக இருக்கட்டும் என்று அவன் கேட்டுப் பெற்றுக்கொண்டான். "லக்ஷக்கணக்கான பெருஞ் சேனையைப் பெற்றுவிட்டேன்'' என்று சந்தோஷத்தை அடைந்தவனாக, பலதேவரிடம் போய் நடந்ததையெல்லாம் சொன்னான். பீமனுக்குச் சமானமான மகா பலசாலியான பலராமன துரியோதனன் சொன்னதையெல்லாம் கேட்டுவிட்டுக் கூறினான்:—

"துரியோதனா! விராடன் மகளுடைய விவாக காலத்தில் நான் சொன்னதை யெல்லாம் உனக்கு சொல்லியிருப்பார்கள். உனக்காக நான் வேண்டிய அளவு பேசியிருக்கிறேன். பல முறை கிருஷ்ணனிடம் நான் சொல்லி வந்திருக்கிறேன் — நாம் கௌரவ பாண்டவர்களுக்குச் சம சம்பந்தம் என்று. ஆனால் என் பேச்சைக் கிருஷ்ணன் ஏற்றுக்கொள்ள மாட்டேன் என்கிறான். நான் என்ன செய்ய முடியும்? கிருஷ்ணன் சேராத இடத்தில் நான் ஒரு கணங்கூட இருக்கமுடியாது, நான் பார்த்தனுக்கு உதவி செய்யமாட்டேன். உனக்கும் உதவிசெய்ய முடியாது. கிருஷ்ணனுக்காக இவ்வாறு தீர்மானித்து விட்டேன். துரியோதனா! நீ மேன்மை பெற்ற குலத்தில் பிறந்திருக்கிறாய். அரசர்களெல்லாம் உன் வமிசத்தைப் பூஜிக்கிறார்கள க்ஷத்திரிய தருமத்திற்கு இசைந்த முறையில் யுத்தம் செய், போ!'' என்றான்.

துரியோதனன் "அருச்சுனன் நன்றாக ஏமாற்றப்பட்டான். துவாரகையின் பெருஞ் சேனையை நான் அடைந்துவிட்டேன். பலராமனுடைய பிரியமும் என்பால் இருக்கிறது. வாசுதேவனும் சேனையற்றவனாகச் செய்யப்பட்டான்'' என்று எல்லா விதத்திலும் தான் வெற்றி யடைந்ததை எண்ணி மகிழ்ந்து ஹஸ்தினாபுரம் திரும்பினான்.

X X X

"அப்பனே! தனஞ்சயா! சேனாபலத்தை விட்டு விட்டு ஏன் இவ்விதம் தீர்மானித்தாய்?" என்று கண்ணன் கேட்க, அருச்சுனன் சொன்னான்.

"நீர் அடைந்ததைப் போன்ற புகழை நானும் அடைய விரும்புகிறேன். நீர் தனியாகவே இருந்து எல்லா அசுரக் கூட்டத்தையும் ஒடுக்கும்சக்தி படைத்திருக்கிறீர். நானும் ஒருவனாகவே நின்று, இவர்கள் எல்லாரையும் வெல்லும் சாமர்த்தியம் படைத்திருக்கிறேன். நீர் ஆயுதம் எடுக்காமல் எனக்குத் தேர் மட்டும் ஓட்டி நான் வெற்றி பெறவேண்டும். இதை வெகு காலமாக நான் ஆசைப் பட்டு வருகிறேன். இந்த விருப்பத்தை நீர் இன்று பூர்த்தி செய்தீர்."

இவ்வாறு பார்த்தன் சொன்னதைக் கேட்ட வாசுதேவன் சிரித்துக்கொண்டு "என்னுடன் போட்டி போடுகிறாயா? இது உனக்குத் தகுந்ததே யாகும்" என்று ஆசீர்வதித்து, அவன் செய்த தீர்மானத்தைப் பாராட்டினான்.

கண்ணன் பார்த்தனுக்குச் சாரதியான புண்ணிய கதை இதுவே.

## மாமன் எதிர்க்கட்சி

நகுல சகாதேவர்களின் தாயார் மாத்திரிக்கு மத்திர தேசாதிபதி சல்லியன் உடன் பிறந்த சகோதரன். பாண்டவர்கள் உபப்பிலாவிய நகரத்தில் யுத்தத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள் என்று வதந்தி கேட்டுச் சல்லியன் உடனே பெரியதொரு சேனையைத் திரட்டிக்கொண்டு பாண்டவர்களுக்குத் துணை போகத் தீர்மானித்தான்.

உபப்பிலாவியம் நோக்கிச் செல்லுகையில் இளைப்பாறுவதற்காகச் சேனையை அங்கங்கே நிறுத்தினான். அவ்வாறு முகாம் போட்ட இடங்களில் ஒன்றரை யோஜனை நீளத்துக்கு அவன் சேனை பரவி நின்றதாம். ஒரு யோஜனை என்றால் சுமார் ஒன்பது மைல் நீளம்.

x x x

மத்திர தேசாதிபதி பெரிய சேனையைத் திரட்டிக் கொண்டு பாண்டவர்களைச் சேரும் எண்ணத்தோடு போய்க்கொண்டிருக்கிறான் என்ற செய்தி துரியோதனனுக்கு எட்டியதும் அவன் இதை எப்படியாவது தடுத்துச் சல்லியனைத் தன் பக்கம் சேரும்படி செய்ய வேண்டுமென்று ஆலோசித்துத் தன் உத்தியோகஸ்தர்களை அழைத்து உடனே சல்லியனுக்கும் அவன் பெரும்படைக்கும் எல்லாவித உபசாரமும் சௌகரியங்களும் செய்ய உத்தரவிட்டான். அரசன் கட்டளைப்படி அழகாய் அலங்கரிக்கப்பட்ட பல மண்டபங்கள் வழியில் அங்கங்கே கட்டப்பட்டு, சல்லியனுக்கும் அவன் சேனைக்கும் அற்புதமான உபசாரம் செய்யப்பட்டது. தின்பண்டங்களும் பலவித பானங்களும் ஏராளமாகப் பரிமாறப்பட்டன. வழி முழுதும் இவ்வாறு உபசாரங்கள் செய்யப்பட்டதில் மத்திர தேசாதிபதி சல்லியனுக்கு மிகுந்த சந்தோஷமுண்டாயிற்று.

சல்லியன் இதுவெல்லாம் தன் மருமகன் யுதிஷ்டிரன் செய்த ஏற்பாடு என்று எண்ணி உபசாரங்களைப் பெற்றுக்கொண்டு ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பெருஞ் சேனையுடன் பூமி அதிரச் சென்று கொண்டிருந்தான். தன்னை யுதிஷ்டிரன் இவ்வளவு கௌரவிக்கிறானே என்று களிப்புற்ற சல்லியன் ஒருநாள் உபசரித்த வேலைக்காரர்களை அழைத்து, "இவ்வளவு அன்புடனும் கவனத்துடனும் என்னையும் என் சேனையையும் உபசரித்த வேலைக்காரர்களுக்கு நான் தக்க பரிசு கொடுக்க வேண்டும். என் சார்பில் அவருக்குச் சொல்லி அனுமதிபெற்று வாருங்கள்" என்று சொன்னான். இதை வேலைக்காரர்கள் தங்கள் எஜமானான துரியோதனனிடம் போய்ச் சொன்னார்கள். உபகாரம் செய்த கூட்டத்துடன் கூடவே மறைவாகச் சென்று கொண்டிருந்த துரியோதனன் அப்போது சல்லியன் முன் வந்து நின்று வணங்கினான்.

சல்லியன் ஆச்சரியப்பட்டு "இவ்வளவு உபசாரமும் நீயா செய்தாய்?" என்று சொல்லி, "உனக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்?" என்று கேட்டான். தான் பாண்டவர்களுக்குச் சகாயமாகப் போவது தெரிந்தும் துரியோதனன் பெருந் தன்மையுடன் க்ஷத்திரிய முறைப்படி உபசரித்தான் என்பது சல்லியனுடைய எண்ணம்.

"நீரும் உமது சேனையும் யுத்தத்தில் என்பட்சமிருக்கவேண்டும். இந்தக் கைம்மாறைத்தான் நான் வேண்டுகிறேன்" என்றான் துரியோதனன்.

சல்லியன் திகைத்தான்.

புராணங்களில் தருமோபதேசமும் உலகத்தின் போக்கும் கலந்து கலந்து வரும். இதைக் கண்டு சிலர் தயக்கம் அடைகிறார்கள், இதுவென்ன புராணம் அதர்மத்தை உபதேசம் செய்கிறதே? இவ்வாறு அநியாயத்தையெல்லாம் பிரசாரம் செய்யலாமா? என்று சிலர் கேள்விகள் கிளப்புவது உண்டு.

தருமோபதேசமே நோக்கமாயினும் உலகத்தில் நடைபெறும் குற்றங் குறைகளை எடுத்துக்காட்டி, நல்லவர்

களும் படித்தவர்களும் பெரியோர்களுமே சிலசமயங்களில் குழியில் விழுவார்கள் என்பதை மனத்தில் பதியவைக்க வேண்டுமல்லவா? ஆகையினாலே, புராணங்களில் அநேக இடங்களில் இவ்வாறான கட்டங்கள் இருக்கும். பெரியோர்களும் மகான்களும் அவதார புருஷர்களும் சில சமயம் பிழைகளும் அதரும காரியங்களும் செய்த நிகழ்ச்சிகளைச் சித்தரித்து மக்களைச் சிந்திக்கச் செய்கின்றன. எத்தகைய கல்வி கற்றவர்களுக்கும் அடக்கமும் இடைவிடாத கண் விழிப்பும் வேண்டும் என்பதை நன்றாகப் பதியும்படி உணர்த்துகின்றன. பக்தியும் அபாரக் கவித்திறமையும் செலுத்தி ஆக்கப்பட்ட இந்த நூல்களின் பெருமை வியப்புக்குரியது.

அதர்ம காரியங்களைச் சில சமயம் ராமனும் யுதிஷ்டிரனும் செய்ததாகப் பௌராணிகர்கள் எழுத வேண்டிய அவசியம் என்ன? யாருடைய நிர்ப்பந்தமுமில்லை. எழுதி அதற்குப் பரிகாரம் சொல்லிக் குழப்புவதற்கு ஒரு அவசியமுமில்லை. வால்மீகியே அதைக் கற்பனை செய்து எழுதியிருக்கிறார். வியாசரே எழுதியிருக்கிறார். வேறு யாரோ எழுதி விட்டிருப்பதற்கு இவர்கள் சமாதானம் சொல்ல முன் வரவில்லை. வியாசரும் வால்மீகியுமே தரும சங்கடங்களை உண்டாக்கி, கதையின் போக்கை நிருமாணித்துக்கொண்டு அநீதியும் அதருமமும் செய்ய நேரிட்டதாக எழுதியிருக்கிறார்கள். புராண ஆசிரியர்கள் கையாண்டிருக்கும் முறையின் பயனாகப் புராணத்தைப் படிக்கும் மக்களுடைய உள்ளத்தில் மொத்தத்தில் தருமோபதேசமே பதிகிறது. அநீதிகள் நடந்த கட்டங்கள் மனத்தில் துயரத்தை உண்டாக்கி நிற்கின்றனவே யொழிய அநீதியையாவது அதர்மத்தையாவது நாமும் செய்யலாம் என்று தோன்றும் முறையில் எழுதப்படவில்லை. இடையறாக் கண்விழிப்பும் பாபச் செயல்களில் பயமும் அடக்கமும் தரும சிந்தனையுமே உண்டாகின்றன.

தற்காலத்து சினிமாக்களிலும் செய்யப்படாத காரியங்கள் காட்டப்படுகின்றன. இதைப்பற்றிச் சினிமாக்காரர்கள் சொல்லும் சமாதானங்கள் எப்படியிருந்தாலும்

மனத்தைக் கவரும்படியான முறையில் தீய காரியங்கள் காட்டப்பட்டு மக்களை இவ்வழியில் செல்லும்படிச் செய்கின்றன. புராணங்கள் அவ்வாறு செய்வதில்லை. அவற்றில் பெரியோர்களே சிற்சில சமயம் பாபத்திலும் பிழைகளிலும் இறங்கினதாக வரைந்திருந்த போதிலும், அவ்வழியில் நாம தூண்டப்படுகிறதில்லை. புராண நூல்களுக்கும் பேசும் படங்களுக்கும் இதுவே பெரிய வித்தியாசம். புராணங்களை ஆக்கியவர்களுக்கும் பேசும படங்களை ஆக்குபவர்களுக்குமுள்ள யோக்கியதை வித்தியாசமே இதற்குக் காரணம்.

x x x

“உமக்குப் பாண்டவர்கள் எப்படியோ அப்படியே நானும். எனக்கு நீர் துணையாக இருக்க ஒப்புக்கொள்ள வேண்டும்” என்றான் துரியோதனன்.

சல்லியன் “அப்படியே ஆகட்டும்” என்றான்.

துரியோதனன் செய்வித்த மகத்தான உபசாரத்தினால் மதிமயங்கிச் சல்லியன் தன் நெருங்கிய பந்துக்களும் தன்னுடைய அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரர்களுமான பாண்டவர்களை விட்டுவிட்டுத் துரியோதனனுக்குத் துணையாக அவன் பக்கம் சேர்ந்து யுத்தம் புரிவதாக வாக்குக் கொடுத்து விட்டான்!

அரசர்கள் செய்யும் உபசாரத்தைப் பெற்றுக்கொண்டால் இத்தகைய ஆபத்து நேரிடும்.

பிறகு சல்லியன் யுதிஷ்டிரனைப் பாராமலே திரும்புவது சரியல்லவென்று நினைத்து, “துரியோதனா! நீ என்னை நம்பு. நான் உனக்கு வாக்குத் தந்துவிட்டேன். ஆயினும் யுதிஷ்டிரனைப் பார்த்துவிட்டுத் திரும்புகிறேன். அவனுக்கு நான் சொல்லிவிட வேண்டியது அவசியம்” என்றான்.

“பார்த்துவிட்டுச் சீக்கிரம் திரும்பிவாரும். எனக்குக் கொடுத்த வாக்கை மறக்கவேண்டாம்” என்றான் துரியோதனன்.

"மங்களம். நீ உன் நகரத்துக்குத் திரும்பிப்போ. நான் மோசம் செய்ய மாட்டேன்" என்று சல்லியன் சொல்லிவிட்டு யுதிஷ்டிரன் இருந்த உபப்பிலாவிய நகரத்துக்குப் போனான்.

உபப்பிலாவியத்தில் மந்திர தேசாதிபதியை மிகுந்த மகிழ்ச்சியுடன் எதிர் கொண்டு வரவேற்றார்கள். நகுல சகாதேவர்கள் தங்கள் மாமனை வந்ததைக் கண்டு அளவு கடந்த சந்தோஷம் அடைந்தார்கள். பாண்டவர்கள் தாங்கள் பட்ட கஷ்டங்களை யெல்லாம் சொன்னார்கள். வரப்போகும் யுத்தத்தில் சல்லியனுடைய துணையைப் பெறுவதைப் பற்றிப் பேச ஆரம்பித்தார்கள். அப்போது சல்லியன் தான் துரியோதனனுக்கு வாக்குத் தந்துவிட்டதைப் பற்றிச் சொன்னான்.

மாமனுயிற்றே என்று அஜாக்கிரதையாக இருந்ததனால் உண்டான பயன இது என்று யுதிஷ்டிரன் அறிந்தான். தன் வருத்தத்தை அதிகமாகக் காட்டிக் கொள்ளாமல், "வீரரே! நீர் துரியோதனன் செய்த உபசாரத்தினால் மகிழ்ச்சி யடைந்து அவனுக்குச் செய்த வாக்குத் தத்தத்தை நிறைவேற்ற வேண்டியதே. நீர் யுத்தத்தில் வாசுதேவருக்கு நிகரானவர். அருச்சுனனைக் கொல்வதற்காகக் கர்ணன் உம்மைத் தன்னுடைய சாரதியாக வைத்துக் கொள்வான். அருச்சுனனுடைய மரணத்துக்கு நீர் காரணமாகப் போகிறீரா? அல்லது அருச்சுனனை அப்போது காப்பாற்றுவீரா? இதை நான் கேட்கத் தகாது. ஆயினும் வேண்டிக் கொள்ளுகிறேன்" என்றான் யுதிஷ்டிரன்.

"அப்பனே! நான் வஞ்சிக்கப்பட்டுத் துரியோதனனுக்கு வாக்குத் தத்தம் செய்துவிட்டேன். அவன் பக்கத்தில் நின்று உங்களுக்கு விரோதமாகவே யுத்தம் செய்வேன். ஆயினும் கர்ணன் அருச்சுனனை எதிர்க்கச் செல்லும்போது என்னைச் சாரதியாக அழைத்தால், என்னால் கர்ணனுடைய தேஜசு பங்கப்பட்டு அருச்சுனன் காப்பாற்

றப்படுவான். அஞ்ச வேண்டாம். சூதாட்டத்தில் சிககு விக்கப்படடு திரௌபதியும் நீங்களும் அடைந்த துயரங் கள் முடிந்தன, இனி உங்களுக்கு மங்களம் உண்டாகும். விதியின போக்கை யாரும் தடுக்க முடியாது. நான் செய்த பிழையைப் பொறுத்துக்கொள்” என்ருன்.

# விருத்திரன்

மூன்று உலகங்களுக்கும் அதிபதியாக இருந்த இந்திரன் ஒரு காலத்தில் தேவர்களுக்குரிய மரியாதையை மறந்து மதமத்தனாகிப் போனான். சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் அரசன் யாருக்காகவும் எழுந்து நிற்கவேண்டிய இல்லை என்று சாஸ்திரம் இருப்பதாகக் கேள்விப்பட்டு, தேவ புரோகிதரான பிருகஸ்பதி சபைக்கு வந்தபோது எழுந்து ஆசனம் அளித்தல் முதலிய உபசாரங்களை செய்யாமல் சும்மா இருந்தான். எல்லா வித்தைகளிலும் முதல் ஸ்தானம் பெற்ற மகானும் தேவாசுரர்களுடைய பூஜைக்கு யோக்கியருமான பிருகஸ்பதி இதைக் கண்டு வருத்தப்பட்டார். இது செல்வத்தால் உண்டான தோஷம் என்று எண்ணி ஒன்றும் பேசாமல் சபையைவிட்டுத் தம் இல்லத்துக்குப் போய்விட்டார். தேவகுரு இல்லாமல் சபை சோபிக்கவில்லை.

தான் செய்த அபராதத்தை இந்திரன் உணர்ந்து கொண்டு இதனால் என்ன நேரிடுமோ என்று பயத்தை அடைந்தான். "ஆசாரியருடைய காலில் விழுந்து சமாதானப்படுத்திக்கொள்ள வேண்டும்" என்று தீர்மானித்தான்.

பிருகஸ்பதியோ இந்திரனால் காணமுடியாத மாய நிலையை அடைந்து மறைந்துபோனார். இந்திரன் பெருமுயற்சி செய்தும் குருவானவர் கிடைக்காமல் போனபடியால் கவலைக்கு இரையானான்.

ஆசாரியனை இழந்த உடனே இந்திரனுடைய பலம் குறைய ஆரம்பித்தது. அசுரர்களுடைய பலம் அதிகரித்தது. அவர்கள் தேவர்களைத் தாக்க ஆரம்பித்தார்கள். தேவர்கள் பீடிக்கப்பட்டதைக் கண்டு பிரம்மா இரக்கம் கொண்டு "தேவர்களே! பிருகஸ்பதியை இழந்தீர்கள். இது இந்திரனுடைய மதியீனத்தினால் உண்டாயிற்று. இப்போது நீங்கள் துவஷ்டாவின் குமாரனும் தபஸ்வியு

மாரை விசுவரூபனை வணங்கி அவனை ஆசாரியனாகக் கொள்ளுங்கள். உங்கள் காரியங்கள் சரிவர நடைபெறும்" என்றான்.

பிரம்மாவினால் இவ்வாறு சொல்லப்பட்ட தேவர்கள் சந்தோஷமடைந்து அவ்வாறே செய்தார்கள். துவஷ்டாவின் குமாரன் வயதில் மிகக் குறைந்தவன். ஆயினும் மகா தபஸ்வி. தேவர்கள் அவனிடம் சென்று "சிறியவனாக இருந்தாலும் எல்லா வேதங்களையும் அறிந்தவன். எங்களுக்கு நீ புரோகிதனாக இருக்கவேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள். விசுவரூபன் ஒப்புக் கொண்டான்.

தபஸ்வியும் சுத்தனுமான அவனுடைய சிக்ஷையின் பயனாகத் தேவர்களும் இந்திரனும் அசுரர்களுடைய தொந்தரவுகளிலிருந்து காப்பாற்றப்பட்டார்கள்.

விசுவரூபன துவஷடாவின் குமாரனானாலும் அவனுடைய தாயார் தைத்ய குலத்தைச் சேர்ந்தவள். அந்தக் காரணத்தினால் விசுவரூபனைப பற்றி இந்திரன் சந்தேகம் கொண்டான. "இவனுடைய தாய் நமமுடைய விரோதிகளின குலத்தைச சேர்ந்தவள. ஆகையால் இவன அசுரர்களிடம் பட்சபாதம் கொண்டவனாகவே இருப்பான்" என்று எண்ணினான். இந்தச் சந்தேகம் வர வர அதிகரித்தது.

விசுவரூபன் இருந்தால் தனக்கு அபாயம் வரும் என்று இந்திரன் தீர்மானித்து விசுவரூபனை ஏமாற்றி அவன தவத்தைக் கெடுபபதற்காக அப்ஸரசு ஸ்திரீகளை ஏவினான். அவர்கள இந்திரன் உத்தரவுப்படி பலவித சிருங்கார சேஷ்டைகளைச் செய்தும் நர்த்தனம் செய்தும் ஏமாற்றப் பார்த்தார்கள். விசுவரூபன் இதற்கெல்லாம் இணங்காமல் தன் பிரமசரியத்தில் உறுதியாக இருந்தான். அதனமேல் இந்திரன் இந்த வழியில் வெற்றிபெற முடியாது என்று தீர்மானித்துக்கொண்டு பெரும் பாப எண்ணத்தில் இறங்கினான். வச்சிராயுதத்தைப் பிரயோகித்து விசுவரூபனைக் கொன்றேவிட்டான்.

இவ்வாறு தீராத பாபத்தை அடைந்த இந்திரன் அதற்காகப் பிராயச்சித்தம் செய்து தன் பாபத்தை உலகத்துக்குப் பங்கு செய்து கொடுத்தான் என்று சொல்லப்படுகிறது. இதனாலேயே பூமியில் சில பாகம் உவர் நிலமாயிற்று என்றும், ஸ்திரீகளுக்கு ஆடவர்களுக்கில்லாத சில இயற்கைக் கஷ்டங்கள் வந்து சேர்ந்தன வென்றும், ஜலத்திற்கு நுரையும் கொப்பளமும் தோஷமாக ஏற்பட்டன வென்றும் கதை.

x x x

தன் மகன் அக்கிரமாகக் கொல்லப்பட்டதினால் துவஷ்டாவுக்கு இந்திரன்மேல் பெருங்கோபம் உண்டாகிப் பழியைத் தீர்த்துக் கொள்வதற்காக வேள்வித் தீ வளர்த்து ஹோமம் செய்தான். அதிலிருந்து இந்திரனுக்குச் சத்துருவாக விருத்திராசுரன் கிளம்பினான். அக்கினியிலிருந்து உற்பவமான அசுரனைப் பார்த்துத் துவஷ்டா "ஓ! இந்திர சத்துருவே! விருத்தி அடைவாயாக! இந்திரனைக் கொல்வாயாக" என்று சொல்லித் தேவராஜனை எதிர்க்க ஏவி விட்டான்.

விருத்திரனுக்கும் இந்திரனுக்கும் பலத்த யுத்தம் நடந்தது. விருத்திரனுடைய சக்தியே மேலோங்கிற்று. இந்திரன் தோல்வி யடைவான் என்று பயந்து ரிஷிகளும் புலவர்களும் மகா விஷ்ணுவினிடம் போய்த் தஞ்சம் அடைந்தார்கள். அப்போது திருமால் அவர்களுக்கு அபயம் சொன்னார். "பயப்படாதீர்கள். இந்திரனுடைய வச்சிராயுதத்தில் நான் பிரவேசிப்பேன். தேவராஜன் முடிவில் வெற்றி அடைவான்" என்றார்.

தேவர்களும் ரிஷிகளும் தைரியம் அடைந்து திரும்பினார்கள். பிறகு ரிஷிகள் விருத்திரனிடம் சென்று "நீ இந்திரனிடம் சிநேகமாக இருக்கவேண்டும். இருவரும சமமாக இருக்கிறீர்கள். இந்த யுத்தம் உலகத்தை மிகவும் பீடிக்கிறது" என்றார்கள். விருத்திரன் ரிஷிகளை வணங்கி, "குற்றமற்றவர்களே! மன்னிக்க வேண்டும்! இந்திரனும்

நானும் எவ்வாறு ஒன்றாக முடியும்? இரண்டு சமதேஜசுகளுக்குள் எவ்வாறு நட்பு ஏற்பட முடியும்?'' என்றான்.

''அப்படிச் சந்தேகப்பட வேண்டாம். நல்லோர்களுடைய சேர்க்கை உறுதியாகவே இருக்கும்'' என்று ரிஷிகள் சொன்னார்கள்.

விருத்திரன் இணங்கினான். ''சரி! யுத்தத்தை நிறுத்துகிறேன். ஆனால் எனக்கு இந்திரனிடம் நம்பிக்கை இல்லை. நீங்கள் எனக்கு வரம் தர வேண்டும். உலர்ந்த ஆயுதத்தாலாவது ஈரமான ஆயுதத்தினாலாவது கல்லினாலாவது மரத்தினாலாவது, உலோகத்தினாலாவது, அஸ்திரத்தினாலாவது, நான் இந்திரனால் கொல்ல முடியாதவனாக இருக்க வேண்டும். பகலிலாவது இரவிலாவது எனக்கு இந்திரனால் மரணம் உண்டாகாமல் நீங்கள் ஆசீர்வதிக்க வேண்டும்'' என்றான்.

''அப்படியே!'' என்றார்கள் தேவ ரிஷிகள்.

விருத்திரன் பயந்தது சரியே. இந்திரன் விருத்திரனிடம் உண்மையாக நட்புக் கொள்ளவில்லை. அவனைக் கொல்லச் சமயம் பார்த்த வண்ணமாகவே இருந்தான். ஒரு நாள் சாயங்காலம் கடற்கரையில் விருத்திரனைச் சந்தித்தான். இது அசுரனை வஞ்சித்துக் கொல்லும் சமயம்: இது பகலுமில்லை இரவுமில்லை என்று யுத்தம் துவங்கினான். வெகு நேரம் போர் நடந்தது.

விருத்திரன் ''ஹே! அதமனே! வீண் போகாத வச்சிராயுதத்தை ஏன் பிரயோகிக்காமலிருக்கிறாய்? ஹரியின் தேஜஸினால் பிரவேசிக்கப்பட்டிருக்கும் உன்னுடைய ஆயுதத்தை என்மேல் செலுத்து; நான் நற்கதியை அடைவேன்'' என்று திருமாலை ஸ்தோத்திரம் செய்து பஜித்தான்.

இந்திரன் விருத்திரனுடைய வலது கையை வெட்டினான். விருத்திரன் அதற்குச் சலியாமல் தன் இடது கையால் இரும்பு உலக்கையை வீசி இந்திரனைத் தாக்கினான். இடது கையையும் இந்திரன் வெட்டினான். இரண்டு

கைகளும் இழந்த விருத்திரன் வாயைத் திறந்து இந்திரனை விழுங்கிவிட்டான். "ஐயோ!" என்றார்கள் தேவர்கள்.

ஆனால் இந்திரன் சாகவில்லை. விருத்திரனுடைய வயிற்றைக் கிழித்துக் கொண்டு வெளியே வந்து பக்கத்திலிருந்த கடற்கரை நுரையில் வச்சிராயுதத்தைப் பிரவேசிக்கச் செய்து அந்த நுரையை விருத்திரன்மேல் பிரயோகித்தான். அப்போது மகாவிஷ்ணு அந்த நுரையில் புகுந்தார். விருத்திரன் மாண்டான்.

இடைவிடாத யுத்தத்தால் மிகவும் பீடிக்கப்பட்ட உலகம் உடனே சந்தோஷம் அடைந்தது. ஆனால் இந்திரன் பிரம்மஹத்தி தோஷத்தினாலும் சத்தியம் தவறியதாலும் அவமானம் அடைந்து ஒளியிழந்து வெட்கத்தில் மூழ்கி ஒருவருடைய கண்ணுக்கும் காணப்படாமல் மறைந்துகொண்டான்!

அரசன் இல்லாமல் மக்கள் வாழமுடியாது. அரசன் என்றால் அரசு செலுத்தும் தனி மனிதனோ குலமோ சபையோ ஏதேனுமொன்று. இந்த நியதிப்படி இந்திரன மறைந்ததும் தேவர்களும் ரிஷிகளும் மிக்க வருத்தப்பட்டார்கள்.

பிறகு பராக்கிரமமும் புகழும் சீலமும் பொருந்திய நஹுஷ ராஜனிடம் ரிஷிகளும தேவர்களும் சென்று "தேவ ராஜ்ய பட்டாபிஷேகம பெற்று நீ எங்களுக்கு இந்திரனாக இருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

"நான் அசக்தன். உங்களை என்னால் எவ்வாறு காப்பாற்ற முடியும்? இந்திரன் எங்கே, நான் எங்கே?" என்று நஹுஷன் அவனுக்கு இயற்கையான அடக்கத்துடன் மறுத்தான்.

"எங்களுடைய தவத்தின் பயனை எல்லாம் நீ அடைவாய். தயங்காமல் அபிஷேகம் செய்துகொள். உன்னுடைய கண்களுக்குட்பட்ட எவனுடைய தேஜஸும் உன்னை அடையும். இதனால் நீ பலவானாவாய். சுவர்க்

கத்தில் தேவராஜனுக இருக்கக்கடவாய்'' என்று வற்புறுத்திச் சம்மதிக்கச் செய்தார்கள்.

* * *

புரட்சி என்பது புதியதல்ல. தேவலோகத்திலும் புரட்சி நடந்ததாக இந்தக் கதை புராணத்தில் எழுதப் பட்டிருக்கிறது. தேவர்கள் இந்திரனை நீக்கிவிட்டு நஹுஷனை தேவராஜாவாகச் செய்தார்கள். பிறகு நஹுஷன் எவ்வாறு நாசமடைந்தான் என்கிற கதையும் படிக்க வேண்டிய கதை.

# நஹுஷன்

பிரம்மஹத்தி தோஷத்தால் பீடிக்கப்பட்டுப் பதவியை விட்டு நீங்கின இந்திரன் எங்கேயோ போய் ஒளிந்து கொண்டான். தேவராஜ பதவியில் நஹுஷன் அமர்ந்தான.

முதலில் நஹுஷன் நன்கு மதிக்கப்பட்டு வந்தான். பூலோகத்தில் அரசனாக இருந்தபோது அவன் சம்பாதித்த புகழும் புண்ணியமும் சில நாட்கள் வரையில் அவனைக் காப்பாற்றி வந்தன. பிறகு கெட்ட காலம் ஆரம்பித்தது. தேவராஜ பதவியை அடைந்துவிட்ட கர்வம் அவன் அடக்கத்தையும் சீலத்தையும் கெடுத்துவிட்டது.

சுவர்க்க லோகமும் சுகானுபவ உலகமானபடியால் நஹுஷன் தன் மனத்தை அந்த அனுபவங்களில்செலுத்தினான். காமசித்தனாகி விட்டான். ஒரு நாள் இந்திரனுடைய மனைவியாகிய சசீதேவியைப் பார்த்து மோகங் கொண்டான். துஷ்டபுத்தி யடைந்த நஹுஷன் சபையில் கூடினவர்களைக் கேட்கலானான்:

"தேவராஜனுடைய மஹிஷியான சசீதேவி என்னை ஏன் அடையவில்லை? நானல்லவோ இப்போது இந்திரன்? சீக்கிரம் இந்திராணியை என் கிரகத்திற்கு அனுப்புவீர்களாக" என்று உத்தரவிட்டான்.

இந்த விஷயம் இந்திராணிக்குத் தெரிந்து துக்கமும் கோபமும் அடைந்தாள. உடனே தேவ புரோகிதரிடம் சென்று, "குருவே! என்னை இந்தக் கொடியவனிடமிருந்து காப்பாற்ற வேண்டும!" என்று புலம்பினாள்.

பிருகஸ்பதி அபயதானம் செய்தார். "பயப்பட வேண்டாம, இந்திரன சீக்கிரம் வந்து விடுவான் நீ இங்கேயே இரு. உன புருஷனை நீ மறுபடி அடைவாய்" என்றார்.

சசீதேவி தன்னுடைய விருப்பத்துக்கு இணங்கவில்லை என்பதும பிருகஸ்பதியிடம் சரணம் புகுந்து அவ

ருடைய கிரகத்தில் இருக்கிறாள் என்பதும் அறிந்து நஹுஷன் மிகுந்த கோபம் கொண்டான்.

நஹுஷனுடைய சினத்தைக் கண்டு தேவர்கள் அஞ்சினார்கள். "தேவராஜனே! கோபித்துக் கொள்ளாதீர். நீர் கோபம் கொண்டால் உலகமே வருந்தும். சசீதேவி பிறனுடைய மனைவி. அவளை நீர் விரும்பலாகாது. தருமத்தைக் காப்பாற்றும்" என்றார்கள்.

காமமயக்கம் கொண்ட நஹுஷன் தேவர்களுடைய சொல்லைக் கேட்கவில்லை. அவர்களுடைய பேச்சைத் தடுத்து, "முன்னால் இந்த இந்திரன் அகலிகையைத் தீண்டிய காலத்தில் உங்களுடைய தருமம் எங்கே மறைந்திருந்தது? அப்போது ஏன் நீங்கள் அவனைத் தடுக்கவில்லை? என்னை மாத்திரம் ஏன் இப்போது தடுக்கிறீர்கள்? தவத்திலிருந்த விசுவரூபனை அவன் கொன்றபோது நீங்கள் என்ன செய்தீர்கள்? விருத்திரனை வஞ்சித்துக் கொன்றவனை நீங்கள் ஏன் பொறுத்தீர்கள்? சசீதேவி என்னை வந்து அடைவதே அவளுக்கு நலம். அவளைச் சமாதானப்படுத்தி என்னிடம் ஒப்புவிப்பதே உங்களுக்குக் க்ஷேமம்" என்று கட்டளையிட்டான்.

தேவர்கள் நஹுஷனுடைய கோபத்துக்குப் பயந்து பிருகஸ்பதியிடம் சமாதானம் சொல்லி இந்திராணியை எப்படியாவது நஹுஷனிடம் சேர்த்து விடுவது என்று நிச்சயித்தார்கள். எல்லாரும் சேர்ந்து அவளிடம் போனார்கள். போய் நஹுஷனுடைய பிரதாபத்தைச் சொல்லி இந்திராணியை தேவராஜனுடைய விருப்பத்துக்கு இசைய வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். பதிவிரதையான சசீதேவி நடுங்கினாள்.

"ஐயோ! என்னால் முடியாது! உம்மைச் சரணம் அடைந்தேன். பிராம்மணரே! என்னைக் காப்பாற்றும்" என்று பிருகஸ்பதியிடம் அலறினாள்.

பிருகஸ்பதி அவளைத் தேற்றி, "சரணமடைந்தவனைச் சத்துருவினிடம் காட்டிக் கொடுக்கிறவன் நசித்துப் போவான். பூமியில் அவன் நட்ட விதையுங்கூட முளைக்

காமல் நசித்துப் போகும். உன்னை நான் கைவிட மாட்டேன். நஹுஷனுக்கு விநாசகாலம் நெருங்கி விட்டது. நீ பயப்படாதே. கால விசேஷத்தால் உண்டான சங்கடமானது கால விளம்பத்தால் தீர்த்துக் கொள்ளப்படும்" என்று பொருள் செறிந்த சொல்லைச் சொல்லிக் கஷ்டத்தினின்று தப்புவதற்கு வழியைக் குறித்தார். மகா புத்திசாலியான சசீதேவியும் அதைத் தெரிந்துகொண்டு தைரியமடைந்து நஹுஷனிடம் போனாள்.

சசீதேவியைக் கண்டதும் கர்வத்தினாலும் காமத்தினாலும் மதியிழந்து விட்ட நஹுஷன், இந்திராணி தன்னிடம் வந்து விட்டாள் என்று தாங்காத களிப்பு அடைந்து "ஹே! அழகியே! மூன்று உலகங்களுக்கும் நான் அதிபதி, நீ பாபத்துக்குப் பயப்படவேண்டாம், என்னைப் பதியாக அடைவாயாக" என்றான்.

துஷ்டனுடைய சொல்லைக் கேட்டுப் பதிவிரதையான இந்திராணி மறுபடியும் நடுங்கினாள். பிறகு மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டு "தேவராஜனே! நான் உம்மை அடையவேண்டியவளே. ஆயினும் ஒரு விண்ணப்பம்! இந்திரன் இருக்கிறானா? இல்லை, மாண்டானா? இருந்தால் அவன் இருப்பிடமெங்கே? இதை நான் விசாரித்துத் தேடிப் பார்த்தும் அவன் அகப்படாமல் போனால் பிறகு என் மேல் தோஷம் இருக்காது, உம்மைச் சேருவேன்" என்றாள்.

நஹுஷன் மகிழ்ச்சியடைந்தான். "நீ சொல்லுவது சரியே. தேடி விட்டு அவசியம் வந்துவிடு. வாக்குத்தத்தத்தைத் தவறாதே!" என்றான்.

இவ்வாறு ஒப்புக்கொண்டு சசீதேவியைப் பிருகஸ்பதியின் வீட்டுக்குத் திருப்பினான்.

x x x

தேவர்கள் மகா விஷ்ணுவிடம் சென்று நஹுஷனைப் பற்றிச் சொல்லி "நாதனே! விருத்திராசுரனைச் சம்ஹரித்த வீரியம் உம்முடையது. ஆனால் இந்திரன் பிரும்ம

ஹத்தி தோஷமடைந்து பீடிக்கப்பட்டு உலகத்தாரின் அபவாதத்துக்குப் பயந்து மறைந்து கிடக்கிறான். அவனுக்கு விமோசனம் சொல்லும்'' என்று பகவானை வேண்டினார்கள்,

''என்னை ஆராதிக்கட்டும். அவன் பரிசுத்தனாவான். துஷ்ட புத்தி யடைந்த நஹுஷன் நாசமடைவான்'' என்றான் நாராயணன்.

x x x

இந்திராணி கற்புக் கடவுளை வேண்டிக் கொண்டு அந்த தேவதையின் அருளால் இந்திரனுடைய இருப்பிடத்தை அடைந்தாள். மானஸ சரோவரத்தில் ஒரு தாமரைக் கொடியின் தண்டினுக்குள் ஒரு நூலில் தன் தேகத்தை அணு மாத்திரமாகச் செய்துகொண்டு வாசம் செய்து கொண்டிருந்தான். எப்போது பாவம் தீர்ந்து நல்ல நாள் வரும் என்று தவம் செய்து கொண்டு காத்திருந்த தன் பதியின் நிலைமையைப் பார்த்த சசீதேவி துக்கம் பொறுக்க முடியாமல் அழுதாள். தனக்கு உண்டான கஷ்டங்களை இந்திரனிடம் தெரியப்படுத்தினாள்.

இந்திரன் அவளுக்குத் தைரியம் சொல்லி ''பாபம் செய்யத் துணிந்த நஹுஷனுடைய காலம் வெகுவாக நெருங்கிவிட்டது. நீ ஏகாந்தமாக நஹுஷனிடம் சென்று அவனுடைய விருப்பத்துக்கு இணங்கியதாகவே அவனிடம் சொல்லு. ரிஷிகள் தூக்கிய பல்லக்கில் அவனை உன்னுடைய இருப்பிடத்துக்கு வரச்சொல்லு. நஹுஷன் அழிவான்'' என்று சொல்லி அனுப்பினான்.

அவளும் இந்திரன் சொன்னவாறு நஹுஷனிடம் சென்றாள்.

சொன்னபடி தவறாமல் வந்துவிட்டாள் என்று நஹுஷன் மிக்க மகிழ்ந்து ''ஹே! கல்யாணி! நீ என்ன விரும்புகின்றாயோ அதைச் செய்ய நான் காத்திருக்கிறேன். சத்திய பிரதிஜ்ஞை தவறாமல் நீ வந்திருக்கிறாய்'' என்றான் மூடன்.

"ஆம், வந்துவிட்டேன். நீரே எனக்குப் பதியாகப் போகிறீர். ஜகத்துக்கு நீர் அதிபதியல்லவா? எனக்குப் பிரியமான ஒரு காரியம் செய்ய வேண்டும். மகாவிஷ்ணுவுக்கும், ருத்திரனுக்கும், தேவாசுரர்களுக்கு மில்லாத ஒரு வாகனத்தை அமைத்துக்கொண்டு நீர் கம்பீரமாக என் இருப்பிடம் வரவேண்டும். பிரபுவே! சப்தரிஷிகள் உம்மை பல்லக்கில் தூக்கி வரவேண்டும்; நான் எதிர்கொண்டு அழைத்துக்கொள்ள வேண்டும்" என்றாள்.

"கற்பனை சக்தியில் சிறந்த அழகியே! நல்ல யோசனை சொன்னாய். நீ விரும்பும் வாகனம் மிகவும் அபூர்வமான வாகனமாகும். எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது. யாரைப் பார்க்கிறேனோ அவனுடைய தேஜசு என்னை வந்து சேரும் என்கிற வரத்தை அடைந்திருக்கும் என்னை மகரிஷிகள் தூக்கிச் செல்லுவது நன்றாகப் பொருந்தும். நீ சொன்னவாறே செய்கிறேன்" என்று சொல்லி அவளை அனுப்பிவிட்டு, மதோன்மத்தனான நஹுஷன் மகரிஷிகளை அழைத்துத் தன் பல்லக்கைச் சுமக்கச் சொன்னான். இந்தப் பாபச் செயல்களைக் கண்டு மூன்று உலகங்களும் பயந்து நடுங்கின.

பல்லக்கில் ஏறிச்செல்லச் செல்லப்பாபத்தின் வேகம் அதிகரித்தது. சசிதேவியின் அழகிய தோற்றத்தை மனதில் சிந்தனை செய்துகொண்டு அவளைச்சீக்கிரம் அடைய வேண்டும் என்று நஹுஷன் ஆத்திரப்பட்டான். பல்லக்கைத் தூக்கிய முனிவர்களை வேகமாக நடக்கும்படி அடிக்கடி சொன்னான். தூக்கிச் சென்ற ரிஷிகளில் ஒருவரான அகஸ்தியரைக் காலால் உதைத்து "ஸர்ப்ப! ஸர்ப்ப!" என்று அதட்டினான்.

"ஸர்ப்ப! ஸர்ப்ப!" என்றால் "நட! நட!" என்று பொருள்படும்படியான வேகக் குறிப்பு; ரிக்ஷா ஓட்டுபவர்களை, "போ, போ" என்று சிலர் சொல்லுவதுபோல். அகஸ்தியரை உதைத்ததும் நஹுஷனுடைய பாப பாரம் பூரணம ஆயிற்று.

"அதமனே! நீ சுவர்க்கத்திலிருந்து வீழ்வாய்! 'சர்ப்ப, சர்ப்ப' என்று முனிவர்களை அதட்டிய நீ ஒரு

மலைச் சர்ப்பமாகி பூமியில் வாழக்கடவாய்!'' என்று சபித்தார் அகஸ்தியர்.

அந்தக் கணமே நஹுஷன் தலை கீழாக வீழ்ந்தான். மலைப்பாம்பாகப் பிறப்பெடுத்துச் சாப விமோசனத்துக்காகப் பல்லாண்டு காத்துக்கொண்டு கிடந்தான்.

X X X

இந்திரன் மறுபடி தேவராஜ பதவியில் அமர்ந்தான். சசிதேவியும் ஆறுதல் அடைந்தாள். இவ்வாறு இந்திரனும் இந்திராணியும் பட்ட கஷ்டங்களை யுதிஷ்டிரனுக்கும் திரௌபதிக்கும் மாமனான சல்லியன் உபப்லாவிய நகரத்தில் சொல்லி அவர்களுடைய துயரத்தை ஆற்றினான்.

"பொறுத்தாருக்கு வெற்றி உண்டு, செல்வப் பெருக்கினால் மதம் கொண்டவர்கள் நாசமடைவார்கள். இந்திரனும் அவனுடைய பத்தினியும் துக்கம் அடைந்ததுபோல் நீயும் திரௌபதியும் உன் சகோதரர்களும் சொல்லொணாத கஷ்டங்கள் அடைந்தீர்கள். அவையெல்லாம் தீர்ந்து ராஜ்யத்தைச் சீக்கிரத்தில் அடைவாய். துஷ்ட புத்தியுள்ள கர்ணனும் துரியோதனனும் நஹுஷனைப் போல் நாசமடைவார்கள்'' என்றான் சல்லியன்.

# சஞ்சயன் தூது

விராடனுடைய ராஜ்யத்தில் உபப்பிலாவிய நகரத்திலிருந்துகொண்டு பாண்டவர்கள் தங்களுடைய நண்பர்களாகிய அரசர்களுக்கெல்லாம் தூதர்களை அனுப்பிப் பெருஞ்சேனை திரட்டினார்கள். ஏழு அக்குரோணிகள் சேர்ந்தன. எதிர்க் கட்சியில் கௌரவர்கள் இவ்வாறே தங்கள் சேனையைத் திரட்டினார்கள். அவர்களுடைய படை பதினொரு அக்குரோணிகளாயிற்று.

ஒரு அக்குரோணி என்பது தற்காலத்தில் ஒரு 'டிவிஷன்' என்பதைப்போல் எல்லாவிதப் படைகளும் தகுந்த விகிதாசாரப்படி சேர்ந்து கூடிய ஒரு கணக்கு. ஒரு தேர், ஒரு யானை, மூன்று குதிரை, ஐந்து காலாட்கள் இந்த விகிதப்படி சேனை திரட்டுவது அந்தக் காலத்து ராணுவ முறை ஒரு அக்குரோணியில் 21,870 தேர்கள் இருக்கும். இதை யனுசரித்து மற்ற அங்கங்களின கணக்கு. இவைகளுடன் எல்லாவித ஆயுதங்களும் மற்ற யுத்த சாமக்கிரியைகளும் இருக்கும். இந்தக் காலத்து 'ஆர்மர் கார்'கள் செய்யும் வேலையை அந்தக் காலத்தில் தேர்கள் செய்தன. இக்காலத்திய யுத்தங்களில் டாங்கிகள் செய்யும் வேலையை அந்தக் காலத்தில் யானைகள் செய்து வந்தன.

x x x

துருபதன் அனுப்பிய புரோகிதர் திருதராஷ்டிரனிடம் போய் வழக்கப்படி முதலில் கேட்க வேண்டிய குசலப் பிரச்சினைகள் தீர்ந்ததும் சபையில் பாண்டவர்களின் சார்பில் பேசலானார்:—

"தருமம் அனாதியானது. உங்களுக்குத் தெரியாததல்ல. திருதராஷ்டிர ராஜனும் பாண்டு ராஜனும் விசித்திர வீரியனுடைய குமாரர்கள். பிதாவின் சொத்து இருவருக்கும் பொதுவானது. அப்படி யிருக்கத் திருதராஷ்டிரருடைய புத்திரர்கள் ராஜ்ய பதவியை அடைந்து

பாண்டு புத்திரர்கள் அதை அடையாமலிருக்கிறார்கள். இதற்கு என்ன நியாயம்? குருவம்சத்தில் பிறந்த பாண்டுவின் குமாரர்கள் தாங்கள் பட்ட துன்பங்களையெல்லாம் மறந்துவிட்டுச் சமாதானத்தை விரும்புகிறார்கள். யுத்தம் உலகத்துக்கு நாசம் உண்டாக்கும் என்று அவர்கள் அந்த வழியை வெறுக்கிறார்கள். தர்மத்துக்கும் முன் செய்து கொண்ட ஒப்பந்தத்துக்கும் இசைய அவர்களுக்குக் கொடுக்க வேண்டியதைக் கொடுத்து விடுங்கள். தாமதம் வேண்டாம்'' என்றார்.

அறிவும் வீரமும் பொருந்திய பீஷ்மர் பேசினார்.

''தெய்வானுகூலத்தால் பாண்டவர்கள் க்ஷேமமாக இருக்கிறார்கள். பல அரசர்களுடைய சகாயத்தை அவர்கள் பெற்றுப் பலவான்களாயிருந்த போதிலும் போர் புரிவதில் அவர்கள் மனம் செலுத்தவில்லை. சமாதானத்தையே கோருகிறார்கள். அவர்களுடைய சொத்தை அவர்களுக்குக் கொடுத்து விடுவதே தருமம்'' என்றார்.

இவ்வாறு பீஷ்மர் பேச ஆரம்பித்ததும் கர்ணன் கோபம் கொண்டவனாய் அவர் பேசிக் கொண்டிருக்கும் போதே, தூதரைப் பார்த்து, ''பிராமணரே! நீர் சொன்னதில் என்ன புது விஷயம் இருக்கிறது? பழையகதையைச் சொல்லுவதில் என்ன பயன்? ஆட்டத்தில் யுதிஷ்டிரன் இழந்த சொத்தை இப்போது அவன் எவ்வாறு கேட்கலாம்? யுதிஷ்டிரன் தன்னுடைய பிரதிஜ்ஞையை சரியாக நிறைவேற்றிவிட்டு எதையேனும் யாசகமாகக் கேட்கட்டும். மத்ஸ்ய தேசத்து அரசனுடைய சேனையையும் பாஞ்சால ராஜனுடைய பலத்தையும் நம்பியல்லவோ இப்போது ராஜ்யம் கேட்கிறான்? பயமுறுத்தித் துரியோதனனிடமிருந்து எதையும் பெற முடியாது என்பதை அறிந்து கொள்ளும். பதின்மூன்றும் ஆண்டு முடிவதற்குள் பிரதிஜ்ஞை தவறிவிட்டபடியால் அவர்கள் மறுபடி பன்னிரண்டு வருஷங்கள் காட்டிலிருந்து விட்டுத் திரும்ப வேண்டியது'' என்றான்.

பீஷ்மர்: ''ராதையின் மகனே! பயனற்ற பேச்சு பேசுகிறாய். இந்தத் தூதர் சொன்னபடி நாம் செய்யாமற்

போனால் யுத்தத்தில் தோல்வியடைந்து துரியோதன னும் எல்லாரும் வீழ்த்தப்பட்டு மடிந்து போவது நிச்சயம்'' என்றார்.

சபையில் ஏற்பட்ட கலவரத்தைக் கவனித்து, திருதராஷ்டிரன் குறுக்கிட்டான.

"உலக நன்மையைக் கருதியும் பாண்டவர்களுடைய நலனைக் கருதியும் பாண்டவர்களிடம் சஞ்சயனை அனுப்புவதென்று நான் தீர்மானித்திருக்கிறேன. தூதரே! நீர் உடனே திரும்பிப் போய் இதை யுதிஷ்டிரனிடம் சொல்ல வேண்டும்'' என்று திருதராஷ்டிரன் சொன்னான்.

பிறகு திருதராஷ்டிரன் சஞ்சயனை அழைத்து அவனுக்குக் கட்டளை யிட்டான்:

"சஞ்சயனே! நீ பாண்டு புத்திரர்களிடம் போய், கிருஷ்ணன், சாத்யகி, விராடன் முதலியவர்களை நான் அன்புடன் விசாரித்ததாக நல்ல வார்த்தைகளைச் சொல். அவ்விடம் கூடியிருக்கும் அரசர்களுக் கெல்லாம் என்னுடைய வினயத்தைச் சொல். யாருக்கும் கோபம் உண்டாகாதவாறு யுத்தத்தைத் தவிர்க்கும் முறையில் எனக்காக நீ போய்ப் பேசுவாய்'' என்றான்.

சஞ்சயன் யுதிஷ்டிரனிடம் சென்றான். உபப்பிலாவியத்தில் அனைவரையும் முறைப்படி வணங்கி விட்டுச் சபையில் நின்று சஞ்சயன் சொன்னான்.

"தருமபுத்திரரே! மறுபடி உம்மை நான் என் கண்ணால் பார்த்தது என் பாக்கியம். அரசர்கள் சூழ இந்திரனைப் போல் காட்சி தருகிறீர். இந்தக் காட்சி என் உள்ளத்துக்கு ஆனந்தமாக இருக்கிறது. திருதராஷ்டிர மகாராஜா உம்முடைய க்ஷேமத்தை விசாரிக்கிறான். அம்பிகா புத்திரன் *யுத்தம் என்கிற பேச்சை வெறுக்கிறான். சிநேகத்தை விரும்புகிறான். சமாதானத்துக்காகவே ஆசைப்படுகிறான்'' என்றான்.

---

* அம்பிகா புத்திரன் = திருதராஷ்டிரன்.

இவ்வாறு சஞ்சயன் சொன்னதைக் கேட்டுத் தரும புத்திரன் மகிழ்ச்சியடைந்து, "அப்படியாயின், திருதராஷ்டிரருடைய மக்கள் பிழைத்தார்கள். நாம் அனைவரும் பெரும் துக்கத்தினின்று தப்பினோம். நானும் சமாதானமே விரும்புகிறேன். யுத்தம் என்பதை நினைத்தால் என் உள்ளம் வெறுப்பு அடைகிறது. எங்களுடைய ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுத்து விட்டால் நாம்பட்ட துன்பங்களையெல்லாம் மறப்போம்" என்றான்.

சஞ்சயன் "திருதராஷ்டிர புத்திரர்கள் மூடர்கள். பிதாவின் பேச்சையும் பிதாமகர் பீஷ்மர் பேச்சையும் அவர்கள் தள்ளிவிட்டு மூர்க்கர்களாகவே நடந்துகொண்டு வருகிறார்கள். ஆனாலும் நீர் பொறுமை இழக்கலாகாது. யுதிஷ்டிரரே! நீர் எப்போதும் உயர்ந்ததருமத்தில் நிற்கிறவர். யுத்தம் வேண்டாம். யுத்தத்தினால் அடைந்த செல்வத்தைக் கொண்டு என்ன சுகம் பெற முடியும்? பந்துக்களைக் கொன்று அடையக்கூடிய ராஜ்யத்தினால் என்ன நன்மையைப் பெற முடியும்? ஆகையால் போரைத் துவக்க வேண்டாம். சமுத்திரத்தை எல்லையாகக்கொண்ட ராஜ்யத்தை அடைந்தாலும் முதுமையும் மரணமும் யாராலும் விலக்க முடியாது. துரியோதனாதிகள் மூடர்கள். அதற்காகநீர்உம்முடைய தருமத்தையும்பொறுமையையும் இழக்கலாகாது. அவர்கள் உங்களுக்கு ராஜ்யத்தைத்தரா விட்டாலும் மேலான தரும நெறியை நீர் விட்டு விலகலாகாது" என்றான்.

இவ்வாறு சஞ்சயன் சொல்ல யுதிஷ்டிரன் "சஞ்சயனே! நீ சொல்லுவது உண்மையாக இருக்கலாம். தருமமே சிறந்த பொருள். ஆனால் நாம் அதருமத்திலா இறங்குகிறோம்? கிருஷ்ணனுக்குத் தருமத்தின் ரகசியம் தெரியும். இரு பக்கத்தாரின் நலனையும் விரும்பும் வாசுதேவன் எவ்வாறு சொல்லுகிறானோ அவ்வாறு நான் செய்வேன்" என்றான்.

கிருஷ்ணன் "நான் பாண்டவர்களுடைய க்ஷேமத்தை விரும்புகிறேன். திருதராஷ்டிரனும் அவனுடைய புத்திரர்களும் சுகமாக இருக்க வேண்டும் என்பதும் என் எண்

ணம். இது சிக்கலான விஷயம். நானே ஹஸ்தினாபுரம் சென்று இதைத் தீர்க்கலாம் என்று எண்ணுகிறேன். பாண்டவர்களுடைய நன்மைக்கு யாதொரு குந்தகமும் இல்லாமல் கௌரவர்களிடம் சமாதானம் பெற முடியுமானால் அதையே செய்ய விரும்புகிறேன். அவ்வாறு செய்து தீர்த்தேனானால் கௌரவர்கள் யமனிடமிருந்து தப்புவார்கள். நானும் மிகப் பெரிய புண்ய காரியம் செய்தவனாவேன். சமாதானம் ஏற்பட்டு அவர்களுக்குச் சேர வேண்டிய ராஜ்யத்தை அவர்கள் அடைந்தாலும் பாண்டவர்கள் திருதராஷ்டிரனுக்கு பணியாட்களைப் போல் சேவை செய்வார்கள். அதையே அவர்களும் விரும்புகிறார்கள். ஆனால் அவர்கள் யுத்தத்துக்கும் தயாராகவே இருக்கிறார்கள். இந்த இரண்டு முடிவுகளில் திருதராஷ்டிர ராஜன் எதை விரும்புகிறானோ அதை அவன் அடையலாம்'' என்றான்.

யுதிஷ்டிரன் சஞ்சயனைப் பார்த்து, "சஞ்சயனே! கௌரவர்களுடைய சபைக்குச் சென்று மகாராஜனான அம்பிகா புத்திரனிடம் இவ்வாறு எனக்காகச் சொல்வீர்: "உம்முடைய பெருந்தன்மையால் அல்லவோ சிறுவர்களாகிய நாங்கள் ஆதியில் ராஜ்ய பதவியை அடைந்தோம்? ஒரு சமயத்தில் என்னை அரசனாகச் செய்வித்த நீர் இப்போது எங்களை நாடின்றி ஊரின்றி மற்றவர்களை அண்டிப் பிழைக்கும்படி செய்ய வேண்டாம். எங்கள் அன்புக்குரிய அப்பனே! இரு பக்கத்தவர்களும் பிழைக்க விசாலமான பூமி இருக்க, விரோதம் செய்து கொள்ள வேண்டாம்.'' இவ்வாறு எனக்காக திருதராஷ்டிரனை வேண்டிக்கொள்ள வேண்டும். பிதாமகரை எனக்காக நமஸ்கரித்து, "உம்முடைய பேரக் குழந்தைகள் எல்லாரும் அன்போடு வாழ்ந்து பிழைப்பதற்கு வழி தேடுவீராக'' என்று அவரையும் கேட்டுக் கொள்ளும். அவ்வாறே விதுரருக்கும் சொல்வீர். அவரே நம்முடைய குலத்தின் முழு ஹிதத்தையும் அறிந்து சொல்லக் கூடியவர். துரியோதனனைச் சமாதானப்படுத்தி அவனுக்கும் என சார்பில் சொல்லும்: 'அன்புக்குரிய தம்பியே! ராஜ குமாரர்களாகிய எங்களைத் தோல் ஆடை உடுத்தி வனத்

தில் வசிக்கச் செய்தாய். அலற எங்கள் மனைவியை ராஜ சபையில் துன்புறுத்தினாய். இதை யெல்லாம் பொறுத் தோம். இப்போதாவது எங்களுடைய நியாய மான உரிமையை எங்களுக்குக் கொடுத்து விடு. பிறருடைய சொத்துக்கு ஆசைப்படாதே. நாங்கள் ஐவர். ஐவர்க ளுக்கு ஐந்து கிராமங்களையாவது கொடுத்து சமாதானம் செய்துகொள். பாரதகுலச் சிங்கமே. அனைவரும் திருப்தி யாக வாழ்வோம்!' இவ்வாறு துரியோதனனுக்குச் சொல். சஞ்சயனே! சமாதானத்துக்கும் யுத்தத்துக்கும் இரண் டுக்கும் நான் தயாராய் இருக்கிறேன்.''

இவ்வாறு யுதிஷ்டிரன் சொல்லிய பிறகு, சஞ்சயன் பாண்டவர்களிடமும் கேசவனிடமும் விடை பெற்றுக் கொண்டு ஹஸ்தினாபுரம் சென்றான்.

# ஊசி முனை நிலமுமில்லை

சஞ்சயனைப் பாண்டவர்களிடம் அனுப்பிய திருத ராஷ்டிரனுக்குக் கவலையால் அன்றிரவு நித்திரையே வர வில்லை. விதுரனை அழைத்து வரச் சொல்லி அவனோடு பேசிக்கொண்டு இரவு முழுதும் கழித்தான்.

"பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து விடு வதே உபாயம். அதுவே இரு பக்கத்தாருக்கும் நன்மை பயக்கும். பாண்டவர்களையும் உம் மக்களைப்போலவே நீர் நடத்த வேண்டும். நேர்மையே உபாயமும் தர்மமும் இரண்டுமாகும்" என்று விதுரன் திருதராஷ்டிரனுக்குப் பலவாறாக உபதேசித்தான்.

மறுநாட் காலை சஞ்சயன் ஹஸ்தினாபுரம் திரும்பி வந்து சேர்ந்தான். யுதிஷ்டிரனுடைய சபையில் நடந் ததை எல்லாம விவரமாகச் சொன்னான். "முக்கியமாக அருச்சுனன் சொன்னதைத் துரியோதனன் கேட்கவேண் டும். 'கிருஷ்ணனும் நானும் சேர்ந்து துரியோதனனையும் அவனைப் பின்பற்றுகிறவர்களையும் நிர்மூலம் செய்யப் போகிறோம். சந்தேகமில்லை. காண்டீபம யுத்தத்துக் காகத் துடிக்கிறது. அந்த வில்லின் நாண் நான் இழுக் காமல் தானாகவே அதிர்கிறது. தூணியிலிருந்து அம்பு கள் தலை நீட்டி எப்போ ? எப்போ ? என்று கேட்கின்றன. சஞ்சயனே ! இந்த மூடன் துரியோதனன் இந்திராதி தேவர்களையும் போரில் வீழ்த்தக்கூடிய எங்களை விநாச காலத்தால் தூண்டப்பட்டுச் சண்டைக்கு இழுக்கிறான்' இப்படிச் சொன்னான் தனஞ்சயன்" என்றான்.

சஞ்சயன் இதைச் சொன்ன பின் பீஷ்மர் துரியோ தனனுக்கு மறுபடியும் சொல்லிப் பார்த்தார்.

"அருச்சுனனும் கேசவனும் நரனும் நாராயணனும் என்று அறிவாயாக. அவர்கள் இருவரும் ஒன்று கூடி யுத்தத்தில் உன்னை எதிர்க்கும்போது இந்த உண்மையை அறிந்துகொள்ளப்போகிறாய்." துரியோதனனுக்கு இவ்

வாறு சொல்லிவிட்டு, திருதராஷ்டிரனை நோக்கி, "திரும்பத் திரும்ப 'நான் பாண்டவர்களைக் கொல்லுவேன்' என்று வீரம் பேசும் கர்ணன் பாண்டவர்களுக்குப் பதினாறில் ஒரு அம்சம் ஆகமாட்டான். இவன் பேச்சைக்கேட்டு உன் புத்திரர்கள் தங்களுடைய நாசத்தைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். விராடனுடைய நகரத்தைத் தாக்கியபோது அருச்சுனன் நம்முடைய கர்வத்தை அடக்கினானே, அந்த காலத்தில் அங்கே இருந்த கர்ணனால் என்ன செய்ய முடிந்தது? கந்தர்வர்கள் உன் மகனைச் சிறைப்படுத்திக் கொண்டு போனகாலத்தில், கர்ணன் இப்போது கர்ஜிக்கிறானே, அவன் அப்போது எங்கே மறைந்திருந்தான்? அருச்சுனன் அல்லவோ கந்தர்வர்களை விரட்டியது?" இவ்வாறு பீஷ்மர் குத்திக்காட்டினார்.

"குலத்துக்குத் தலைவரான பீஷ்மர் சொல்லுவதே செய்யத் தக்கது. யுத்தம் வேண்டாம். சாமாதானமே உசிதம், ஆனால் நான் என்ன செய்வேன்? இந்த மூர்க்கர்கள் நான் எவ்வளவு கத்தினாலும் தாங்கள் போகும் வழியே செல்கிறார்கள். அறிவும் அனுபவமும் பெற்றவர்கள் அனைவரும் சமாதானமே செய்துமுடிக்கத் தக்கது என்கிறார்கள். அப்படிச் செய்வதே என்னுடைய அபிப்பிராயமும்" என்று புலம்பினான் திருதராஷ்டிரன்.

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த துரியோதனன் எழுந்தான்.

"அரசனே! எங்களுக்காக நீர் பயந்து சாகவேண்டாம். நமக்கு வேண்டிய பலத்தைத் திரட்டியாகி விட்டது. வெற்றி அடைவோம் என்பதில் சந்தேகமில்லை. யுதிஷ்டிரன் இந்திரப் பிரஸ்தத்தைப் பற்றிய பேச்சை விட்டு விட்டு இப்போது ஐந்து கிராமங்கள் கொடுங்களென்று கேட்கிறான். நம்முடைய பதினோரு அக்குரோணிச் சேனையைப் பார்த்து பயந்துவிட்டான் என்பது உங்களுக்கு இதனால் தெரியவில்லையா? பதினோரு அக்குரோணிகளைப் பாண்டவர்கள் எவ்வாறு எதிர்ப்பார்கள்? நம்முடைய வெற்றியைப்பற்றி உமக்கு ஏன் சந்தேகம்?" என்று தகப்பனுக்குத் தைரியம் சொன்னான்.

திருதராஷ்டிரன் "மகனே! யுத்தம் வேண்டாம். பாதிராஜ்யத்தை வைத்துக்கொண்டு திருப்தி யடைவாய், அதை நன்கு அரசாண்டால் போதும்" என்றான்.

துரியோதனனுக்குப் பொறுக்க முடியவில்லை "ஒரு ஊசி முனை யளவு பூமியும் பாண்டவர்களுக்குக் கொடுக்கப்படமாட்டாது" என்று உறுதியாகச் சொல்லி விட்டுச் சபையைவிட்டு வெளியேறினான். சபையும் குழப்பத்தில் கலந்துவிட்டது.

பாண்டவர்கள் பேசிக்கொண்டதைச் சொல்லுவோம். சஞ்சயன் உபப்பிலாவியத்தை விட்டு ஹஸ்தினுபுரத்துக்குப் புறப்பட்டதும் யுதிஷ்டிரன் கிருஷ்ணனைப் பார்த்து, "வாசுதேவனே! சஞ்சயன் திருதராஷ்டிரனுக்கு இரண்டாவது உயிர் போன்றவன். அவன் பேசியதிலிருந்து திருதராஷ்டிரனுடைய உள்ளத்தில் இருப்பதை நன்றாக அறிந்தேன், எங்களுக்கு ராஜ்யம் ஏதும் தராமல் சமாதானம் அடையத்தான் திருதராஷ்டிரன் பார்க்கிறான். முதலில் சஞ்சயன் மிகவும் நயமாகப் பேசினான். அதைக்கேட்டு நான் அடைந்த சந்தோஷம் வீண் என்று பிறகு அவன் பேசியதிலிருந்து தெரிந்தது. இடையில் நடுத்தரமாகச் சமாதான விருப்பத்தோடு பேசினான். முடிவில் அவன் சொன்னது எனக்கு மிகவும் அநியாயமாகத் தோன்றிற்று. எங்கள் விஷயத்தில் திருதராஷ்டிரன் சத்தியமாக நடந்துகொள்ளவில்லை. சோதனைக் காலம் வந்து விட்டது. உன்னைத் தவிர எங்களைக் காப்பாற்றுபவர் யாரும் இல்லை. ஐந்து கிராமங்களை போதும் என்று சொல்லியனுப்பி யிருக்கிறேன் துஷ்டர்கள் அதுவும் முடியாது என்கிறார்கள். இதை எப்படிப் பொறுப்பது? நீ தான் யோசனை சொல்லத் தக்கவன். உன்னைத் தவிர தருமமும் நீதியும் உபாயமும் கண்டவர் யாரும் இல்லை."

இவ்வாறு யுதிஷ்டிரன் சொன்னதைக் கேட்ட கிருஷ்ணன் "இரு பக்கத்தாருடைய நலத்தையும் உத்தேசித்து நானே ஹஸ்தினுபுரம் போவதாகத் தீர்மானித்து விட்டேன். திருதராஷ்டிரனுடைய சபைக்குச் சென்று யுத்த

மில்லாமல் உங்களுடைய உரிமைகளைக் காப்பாற்ற முயற்சி செய்வேன். இது நிறைவேறினால் உலகத்துக்கு க்ஷேமமுண்டாகும்'' என்றான்.

யுதிஷ்டிரன், ''அப்பனே! நீ போக வேண்டாம். இந்தச் சந்தர்ப்பத்தில் பகைவர்களின் கூட்டத்துக்கு நீ போவதில் என்ன பயன்? மூடனான துரியோதனன் தன் பிடிவாதத்தை விடப்போவதில்லை. அந்தத் துஷ்டர்களின் மத்தியில் நீ போவது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் நமக்கு எந்த நன்மை வருவதாக இருந்தாலும் உனக்கு அபாயம் நேரக்கூடிய காரியம் இப்போது வேண்டாம். அவர்கள் அதருமத்துக்கு அஞ்சுபவர்கள் அல்ல'' என்றான்.

கிருஷ்ணன், ''தரும புத்திரனே! துரியோதன னுடைய குணம் எனக்குத் தெரியும். ஆயினும் உங்கள் பேரிலும் என் பேரிலும் உலகத்தார் யாதொரு தோஷ மும் சொல்ல இடமில்லாமல் நாம் செய்ய வேண்டிய முயற்சியைச் செய்ய வேண்டும். சமாதானத்திற்காகச் சகல முயற்சிகளும் செய்யப்படவில்லை என்று உலகத்தார் என்மேல் குற்றம் சொல்லலாம் அல்லவா? அதற்கு இடம் கொடுக்கக்கூடாது. சமாதானம் செய்வதற்காகத் தூத னாகச் செல்லும் எனக்கு அவர்கள் ஏதேனும் தீங்கு செய்யப் பார்த்தார்களாகில் அவர்களை அப்படியே தகித்து விடுவேன். நான் போய்ப் பேசிச் சமாதானம் உண்டாகாமற் போனாலும் நம் பேரில் குற்ற மில்லாத படியாவது ஆகும். போவதே நலம். இதைத் தடுக்க வேண்டாம்'' என்றான்.

யுதிஷ்டிரன், ''நீ சகலமும் தெரிந்தவன். எங்களையும் அறிவாய். மற்றவர்களையும் அறிவாய். விஷயங்களை எடுத்துச் சொல்லுவதிலும் உன்னை விடச் சமர்த்தன் வேறு யார்?'' என்றான்.

கிருஷ்ணன்: ''அஜாதசத்ருவே! உன் உள்ளத்தை நான் அறிவேன். உன் சித்தம் எப்போதும் தருமத்தைப் பற்றி நிற்கிறது. அவர்களுடைய உள்ளமோ துவேஷத் தில் மூழ்கி யிருக்கிறது. சொல்ல வேண்டியதை எல்லாம்

சொல்லிப் பார்ப்பேன். யுத்தமின்றிச் சமாதானத்தின் பேரில் பெறக்கூடியது சிறிதாயினும் நீ அதைப் பெரிதாக மதிப்பாய் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அதை நினைவில் வைத்துக்கொண்டு அவர்களிடம் நான் பேசிப் பார்க்கிறேன். உற்பாதங்களைப் பார்த்தால் போர் நடக்கும் என்றே காண்கிறது. ஆயினும் சமாதானத்திற்காக முயற்சி செய்வது கடமை".

இவ்வாறு சொல்லி விடை பெற்றுக்கொண்டு கண்ணன் ஹஸ்தினாபுரம் போகத் தேர் ஏறினான்.

# கண்ணன் தூது

சமாதானம் பேசக் கோவிந்தன் தேர் ஏறி ஹஸ்தினபுரம் புறப்பட்டான். கூட சாத்யகியும் போனான்.

புறப்படுவதற்கு முன் கிருஷ்ணன் வெகுநேரம் பாண்டவர்களுடன் பேசிக் கொண்டிருந்தான். வீரனான பீமன் கூட, "குல நாசம் வேண்டாம், சமாதானமாகப் போவதே மேலானது" என்றான். ஆற்றல் படைத்த வீரன் சமாதானத்தையே விரும்புவான். சமாதானத்தை விரும்புவது கோழைத்தனமாகாது என்பதைக் காட்டவே வியாசர் இவ்வாறு பீமனைப் பேச வைக்கிறார்.

ஆனால், திரௌபதிக்குத் தான் பட்ட அவமானத்தை மறக்க முடியவில்லை. தலை மயிரைக் கையால் பிடித்துக் கொண்டு கிருஷ்ணன் முன் நின்றாள்.

"மதுசூதனனே! இந்தக் கூந்தல் கற்றையைப் பார்த்துச் செய்ய வேண்டியதைச் செய்வாய். அர்ஜுனனும் பீமசேனனும் யுத்தம் வேண்டாம் என்றாலும், என்னுடைய தகப்பனார் கிழவராயினும் என் ஐந்து மக்களைத் துணையாகக் கூட்டிக்கொண்டு யுத்தம் நடத்துவார். என் தகப்பனாரும் வேண்டியதில்லை. சுபத்திரையின் குமாரன் அபிமன்யுவை முன்னிட்டுக்கொண்டு என் புத்திரர்களே கௌரவர்களை எதிர்ப்பார்கள். மூள்கின்ற கோபத்தீயை தருமபுத்திரருக்காக பதின்மூன்று வருஷம் என் மனத்தினுள் அடக்கி வைத்தேன். இனித் தாங்காது" என்றாள்.

கண்ணீரால் தடைப்பட்ட குரலில் திரௌபதி சொன்னதைக் கேட்ட வாசுதேவன் "அழவேண்டாம்! திருதராஷ்டிர புத்திரர்கள் என் சமாதானப் பேச்சைக் கேட்கப் போவதில்லை. நாய் நரிகளுக்கு இரையாக அவர்கள் அனைவரும் பூமியில் வீழப் போகின்றனர். பழி தீர்ந்து வெற்றியைப் பார்க்கப் போகிறாய். வெகு சில நாட்களே தாமதம்!" என்றான்.

திரௌபதியின் உள்ளம் திருப்தி அடைந்தது.

x x x

குசஸ்தலம் என்கிற நகரத்தண்டை மாதவன் குதிரைகளை அவிழ்த்துவிட்டு ஒரு இரவு அங்கே தங்கினான். கோவிந்தன் வருகிறான் என்று செய்தி வந்ததும் ஹஸ்தினாபுரம் பரபரப்பு அடைந்தது. திருதராஷ்டிரன் நகரத்தை அலங்காரம் செய்ய உத்தரவிட்டான். ஜனங்கள் ஜனார்த்தனனை எதிர் கொண்டு வரவேற்பதற்கு அநேக ஏற்பாடுகள் செய்தார்கள்.

துரியோதனனுடைய மாளிகையைக்காட்டிலும் துச்சாதனனுடைய வீடு பெரியதாகவும் அழகாகவும் இருந்தபடியால் கிருஷ்ணனும் பரிவாரமும் தங்குவதற்கு அதைத் தயாரித்து வைக்கத் திருதராஷ்டிரன் உத்தரவிட்டான். பல உபசார மண்டபங்கள் ஊருக்கு வெளியில் கிருஷ்ணனுடைய தேர் வரும் வழியில் கட்டப்பட்டன.

விதுரனோடு திருதராஷ்டிரன் மந்திராலோசனை செய்தான. "கோவிந்தனுக்குத் தேர்களும் யானைகளும் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள். இன்னும் பலவிதமான சன்மானங்களும் செய்ய வேண்டும்" என்று திருதராஷ்டிரன் சொன்னான்.

விதுரன் "கோவிந்தன் இதற்கெல்லாம் வசப்படமாட்டான். எதற்காகக் குருதேசத்திற்குக் கேசவன் வருகிறானோ அதை உதவக் கடவீர். சமாதானத்தை விரும்பி யல்லவா வருகிறான்? அதைச் செய்து கொடுப்பீராக. மாதவனுக்கு வேறுவித சன்மானங்கள செய்து திருப்தி செய்ய முடியாது" என்றான்.

x x x

கோவிந்தன் ஹஸ்தினாபுரம போய்ச் சேர்ந்தான். நகரத்து ஜனங்கள் அலங்கரிக்கப்பட்ட வீதிகளில் கூட்டமாகத் திரண்டிருந்த படியால் தேர் வெகு மெள்ளச் சென்றது. முதலில் திருதராஷ்டிரனுடைய அரண்மனைக்குச் சென்றான். அவ்விடம் அளிக்கப்பட்ட பூஜையைப் பெற்

றுக்கொண்டு விதுரனுடைய மாளிகைக்குப் போனுன். குந்திதேவி கிருஷ்ணனைக் கண்டதும் மக்களை நினைத்துத் துக்கம் மேலிட்டு அழுதாள்.

கிருஷ்ணன் அவளைத் தேற்றி விடை பெற்றுக் கொண்டு துரியோதனனுடைய அரண்மனைக்குச் சென்ருன். துரியோதனன் கோவிந்தனை உபசரித்துத் தன் கிருகத்தில் சாப்பிட அழைத்தான். கண்ணன் சிரித்து "தூதர்கள் காரியம் நிறைவேறிய பிறகே புசிப்பர். நான் வந்த காரியம் நிறைவேறின பிறகு நீ எனக்கு விருந்து அளிப்பாய்" என்று சொல்லி விதுரனுடைய மாளிகைக் குத் திரும்பிப்போய் அங்கே புசித்து இளைப்பாறினுன்.

x x x

பிறகு விதுரனும் கண்ணனும் விஷயாலோசனை செய்தார்கள். பீஷ்மரும் துரோணர் முதலியோரும் தன்னை விட்டு விலக மாட்டாதவர்களாய் இருந்து வருவ தால் துரியோதனன் அவர்களுடைய துணையுடன் நிற்கும் தன்னை யாரும் ஜெயிக்க முடியாது என்று கர்வம் கொண் டிருப்பதாயும், அவனிடம் சமாதானப் பேச்சுப் பேசுவதில் பயனில்லை என்றும், துஷ்டருடைய சபையில் கோவிந்தன பிரவேசிப்பதே தவறு என்றும் விதுரன் சொன்னுன். கண்ணனுடைய உயிருக்குத் துரியோதனுதியர்கள் ஏதே னும் வஞ்சனை செய்து அபாயம் தேடுவார்கள் என்று அவர்களுடைய குணத்தை அறிந்த எல்லாரும் சந்தேகப் பட்டார்கள்.

"நீர் சொல்லுவதெல்லாம் உண்மை. சமாதானம் செய்துவிட முடியும் என்று எண்ணி நான் வரவில்லை. உலகம் பழி சொல்லாமலிருக்கவே வந்தேன். என் உயி ரைப்பற்றிக் கவலை வேண்டாம்" என்ருன் கண்ணன்.

மறுநாட் காலையில் துரியோதனனும் சகுனியும் "மன் னர் உங்களை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிருர்" என்று வந்து அழைத்ததும் கோவிந்தன் விதுரனுடன் சபைக் குச் சென்ருன்.

x x x

வாசுதேவன் சபையில் பிரவேசித்ததும் அனைவரும் எழுந்து நின்றார்கள். பெரியோர்களனைவரையும் கண்ணன் நமஸ்கரித்து ஆசனத்தில் அமர்ந்தான். உபசாரங்கள் முடிந்ததும் கோவிந்தன் எழுந்து திருதராஷ்டிரனை நோக்கித் தான் வந்த காரியத்தை எடுத்துச் சொன்னான். பாண்டவர்களின் கோரிக்கையை விவரித்துத் தெரியப்படுத்தினான். "அரசனே! பிரஜைகளை நாசம் பண்ணாதீர். உமக்கு எது நன்மையோ அதைத் தீமையாகவும், எது தீமையோ அதை நன்மையாகவும் நினைக்கிறீர். புத்திரர்களை அடக்கி ஆள வேண்டியது உம்முடைய கடமை. பாண்டவர்கள் யுத்தத்திற்குத் தயாராகவே இருக்கிறார்கள். ஆனால் சமாதானத்தை விரும்புகிறார்கள். உமக்குக் கீழ்ப்பட்டுச் சந்தோஷமாக இருக்க விரும்புகிறார்கள். அவர்களையும் புத்திரர்களாகப் பாவித்து நீர் பாக்கியவானாவதற்கு வழி தேடவும்" என்றான்.

திருதராஷ்டிரன் "சபையோர்களே! என்பேரில் குற்றமில்லை. மாதவன் சொல்வதையே நானும் விரும்புகிறேன். ஆனால் நான் சக்தி இல்லாதவனாக இருக்கிறேன். துஷ்ட புத்திரர்கள் என் சொல்லைக் கேட்கவில்லை. கிருஷ்ணனே! நீயே இந்தத் துரியோதனனுக்குச் சொல்ல வேண்டும்" என்றான்.

கிருஷ்ணன்: "துரியோதனா! மகான்களுடைய குலத்தில் பிறந்திருக்கிறாய். தருமத்தைப் பின்பற்றி நடப்பாயாக. நீ எண்ணுவதெல்லாம் இழிகுலத்தாருக்கே தகும். உன் நிமித்தம் புகழ்பெற்ற இந்தக் குலம் அழியப் போகிறது. பாண்டவர்களே உன்னை இளவரச பதவியிலும் திருதராஷ்டிரனை மகாராஜா பதவியிலும் ஸ்தாபனம் செய்வார்கள். பாண்டவர்களுக்குப் பாதி ராஜ்யத்தைக் கொடுத்துச் சமாதானம் செய்துகொள்' என்றான்.

பீஷ்மரும் துரோணரும் கோவிந்தன் சொல்லைக் கேட்கும்படி துரியோதனனை மிகவும் வற்புறுத்தினார்கள். துரியோதனன் மனம் கரைந்ததாகக் காணப்படவில்லை.

"துரியோதனனுடைய செயல்களினால் துக்கமடைந்து வரும் காந்தாரியைப் பற்றியும் திருதராஷ்டிரனைப் பற்றியுமே நான் வருந்துகிறேன்" என்றான் விதுரன்.

திருதராஷ்டிரன் மறுபடியும் மகனைக் கண்டித்து "கோவிந்தன் சொல்லைக் கேளாமற் போனால் குலத்துக்கு நாசமே உண்டாகும்" என்று சொன்னான்.

பீஷ்மரும் துரோணரும் மீண்டும் மீண்டும் துரியோதனனுக்கு நல்லுபதேசம் செய்தார்கள். "சமாதானம் செய்து கொள்வதே உபாயம். யுத்தம் வேண்டாம்" என்று பலவாறு அவனுக்குச் சொல்லிப் பார்த்தார்கள்.

இவ்வாறு அனைவராலும் மீண்டும் மீண்டும் வற்புறுத்தப்பட்ட துரியோதனன் எழுந்து பேச ஆரம்பித்தான். "மதுசூதனரே, பாண்டவர்களிடம் உமக்குள்ள அன்பினால் என்னைப் பலவாறாகத் தூஷிக்கிறீர். சபையிலுள்ள அனைவரும் என்னையே குற்றம் சொல்லுகிறார்கள். என்னிடம் இந்த விஷயத்தில் சிறிதும் குற்றமிருப்பதாக நான் காணவில்லை. பாண்டவர்கள் பிரியத்துடன் ஆட்டத்தை ஏற்றுக்கொண்டு தோல்வியடைந்து ராஜ்யத்தை இழந்தார்கள். அதில் என்னுடைய குற்றம் என்ன? ஆட்டத்தில் தோல்வியடைந்து வனம் சென்றார்கள். எந்தக் குற்றத்தை நான் செய்ததற்காக இப்போது யுத்தம் துவக்கி எங்களைக் கொல்ல விரும்புகிறார்கள்? படைகளைச் சேர்த்துக்கொண்டு எங்களைப் பயமுறுத்த முடியாது. நான் சிறுவனாக இருந்த காலத்தில் பாண்டவர்களுக்கு உரிமையில்லாத ராஜ்யத்தை அவர்களுக்குக் கொடுத்தீர்கள். அறியாமையினாலோ பயத்தினாலேயோ குலத்தின் யோக க்ஷேமங்களைப் பார்த்து வந்த பெரியோர்களால் இவ்வாறு செய்யப்பட்டது. அப்போது அதற்கு இசைந்தேன். அதை இழந்தார்கள். திரும்பிக் கொடுக்க நான் இசையமாட்டேன். என்மேல் யாதொரு குற்றமுமில்லை. பாண்டவர்களுக்கு ஊசி குத்தும் இடமும் நாங்கள் தரமாட்டோம்" என்றான்.

யாதொரு குற்றமும் தான் செய்யவில்லை என்று துரியோதனன் சொன்னதைக்கேட்ட கோவிந்தன் சிரித்து

விட்டு "மூடனே! சகுனியுடன் சேர்ந்து வஞ்சனையாகச் சூதாட்டத்தை ஏற்படுத்தினாய். திரௌபதியைச் சபைக்கு வரவழைத்து அவமானப்படுத்தினாய். யாதொரு குற்றமும் செய்யவில்லை என்றும் வாதாடுகிறாய்" என்று சொல்லி இன்னும் துரியோதனன் பாண்டவர்களுக்குச் செய்த அநீதிகளை யெல்லாம் விவரமாக நினைவூட்டினான்.

பீஷ்மர் முதலியோர் எல்லாரும் கிருஷ்ணனுடைய குற்றச்சாட்டை ஒப்புக்கொள்வதைப் பார்த்த துச்சாதனன் எழுந்து 'அண்ணா! இவர்கள் உன்னைக் கட்டிப் பாண்டவர்களிடம் இப்போதே கொடுத்து விடுவார்கள் போல் தோன்றுகிறது. எழுந்துவா. வெளியே போவோம். நாம் இங்கே இருக்க தகுதியில்லை" என்றான்.

துச்சாதனன் இதைச் சொன்னதும் தம்பிகளுடன் துரியோதனன் சபையைவிட்டு வெளியே போய்விட்டான்.

கோவிந்தன் சபையோரைப பார்த்து மறுபடி "மகான்களே! கம்ஸனும் சிசுபாலனும் மாண்டதனால் யாதவர்களும் விருஷ்ணிகளும் சுகமாக வாழ்கின்றனர். ஒரு குலத்தைக் காப்பாற்றுவதற்காகச் சில சமயம் அதைச் சேர்ந்த ஒருவனைத் தியாகம் செய்யவேண்டிய தாகவும் நேரிடும். ஒரு தேசத்தைக் காப்பாற்ற ஒரு கிராமத்தைச் சில சமயம் விடவேண்டியதாகும் அல்லவா? இந்தத் துரியோதனனை நீங்கள் தியாகம் செய்ய வேண்டியது அவசியம். அதுவே குலத்தைக் காப்பாற்றும் வழி" என்றான்.

திருதராஷ்டிரன் விதுரனிடம் "அப்பனே, காந்தாரியை அழைத்து வா! அவள் தீர்க்கதரிசி. அவள் சொல்லையாவது ஒரு வேளை துரியோதனன் கேட்பானோ பார்க்கலாம்" என்றான். காந்தாரியை அழைத்து வரச் சேவகர்கள் சென்றார்கள்.

காந்தாரியும் வந்தாள். வந்து அவளும் திருதராஷ்டிரனும் இருவருமாகத் துரியோதனனைச் சபைக்கு திரும்பி வரச்சொல்லி அனுப்பினார்கள். கண்கள் சிவந்த வனாக சபையில் மறுபடியும் துரியோதனன் பிரவேசித்

ரதன். காந்தாரி அநேக விதமாக உபதேசித்தாள். துரியோதனன் "முடியாது!" என்று சொல்லிச் சபையை விட்டு மறுபடியும் வெளியே போய்விட்டான்.

சபையைவிட்டு வெளியே போன துரியோதனன் தன் நண்பர்களுடன் சதியாலோசனை செய்து தூதனாக வந்த கோவிந்தனைக் கட்டி அவமானப்படுத்த ஏற்பாடு செய்தான். இந்தச் செய்தி சபைக்கு வந்தது. இதையெல்லாம் முந்தியே எதிர்பார்த்திருந்த கோவிந்தன் சிரித்துத் தன் விசுவரூபத்தைக் காட்டினான். அச்சமயம் குருடனான திருதராஷ்டிரனும் கண்கள் பெற்று விசுவரூபத்தைக் கண்டான என்கிறார் வியாசர்.

"ஓ! புண்டரீகாக்ஷா! உம்முடைய விசுவரூபத்தைப் பார்த்த இந்தக் கண்கள் மற்ற எதையும் இனி பார்க்க விரும்பவில்லை. என்னுடைய நேத்திரங்கள் மறுபடியும் மறைந்து போகப் பிரார்த்திக்கிறேன்" என்று திருதராஷ்டிரன் வேண்டிக்கொள்ள, அப்படியே மறுபடியும் அந்தகனானான்.

"நம்முடைய முயற்சிகள் எல்லாம் வீண், துரியோதனன் கேட்கமாட்டான" என்று திருதராஷ்டிரன் கோவிந்தனிடம் சொல்லியபின் கிருஷ்ணன் எழுந்து, சாத்யகியும் விதுரனும் இருபக்கமும் கூடச் செல்ல, சபையை விட்டுப் போனான்.

அங்கிருந்த கண்ணன் குந்திதேவியிடம் சென்று நடந்ததையெல்லாம் அவளிடம் தெரிவித்தான். அவளும் புத்திரர்களுக்குத் தன் ஆசியைச் சொல்லச் சொன்னாள்.

"க்ஷத்திரிய ஸ்திரீயானவள் எதற்காகப் பிள்ளைகளைப் பெறுகிறாளோ அதற்குரிய காலம் வந்துவிட்டது. என் புத்திரர்களைக் காக்கக் கடவாய்" என்றாள்.

க்ஷத்திரியத் தாய் பிள்ளைகளைப் பெறுவது யுத்தத்தில் பலி கொடுக்கவே! புருஷோத்தமன் தன்னுடைய ரதத்தில் ஏறி உபப்பிலாவிய நகரத்தை நோக்கி விரைவாகச் சென்றான். யுத்தம் நிச்சயமாகிவிட்டது.

# பாசமும் தருமமும்

கிருஷ்ணன் ஹஸ்தினாபுரத்திலிருந்து திரும்பியதும் சமாதானத்தைப் பற்றியிருந்த கொஞ்ச நஞ்ச ஆசையும் இல்லை என்று தீர்ந்தது. குலநாசத்திற்குக் காரணமாகிய யுத்தம் நிச்சயம் என்று ஏற்பட்டதும் குந்தி துக்கத்தில் ஆழ்ந்தாள்.

"அவமானத்தைச் சகித்துக் கொள்ளுங்கள், ராஜ்யமும் வேண்டாம் யுத்தமும் வேண்டாம் என்று சொல்ல எனக்கு நா எழவில்லை. க்ஷத்திரிய குலத்தில் பிறந்த என் மக்கள் எவ்வாறு அதைச் சகிக்க முடியும்? ஆயினும் யுத்தம் நடத்தி ஒருவரை ஒருவர் கொன்று குலம் நசித்துப் போய் அதற்குப்பின் யார் என்ன லாபம் பெற முடியும்? என்ன சுகம் அனுபவிக்க முடியும்? இந்த சங்கடத்திற்கு என்ன செய்வேன்?" என்று இவ்வாறு குலநாச பயம் ஒரு பக்கமும் க்ஷத்திரியப் பண்பாடு ஒரு பக்கமும் குந்தியின் உள்ளத்தை இழுத்து வேதனை உண்டாக்கிக் கொண்டிருந்தன. தனக்குள் ஆலோசித்தாள்:

"பீஷ்மர், துரோணர், கர்ணன் இந்த மூன்று மகா சூரர்களை என் மக்கள் எவ்வாறு தோற்கடிப்பார்கள்? இவர்கள் யாராலும் எதிர்க்க முடியாத வீரர்களாயிற்றே? இம்மூவர்களை நினைத்தால் என் உள்ளம் நடுங்குகிறது. மற்றவர்களைப்பற்றி எனக்குச் சிந்தையில்லை. கௌரவச் சேனையில் இம்மூவரே என் மக்களின் உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் சக்தி வாய்ந்தவர்கள். இவர்களில் ஆசாரியரான துரோணர் சிஷ்யர்கள் பேரில் உள்ள பிரியத்தினாலேயோ அல்லது சிஷ்யர்களுடன் யுத்தம் செய்ய மனம் ஒவ்வாமலோ, என் மக்களைக் கொல்லாமலிருக்கலாம். பிதாமகர் என் குமாரர்களின் உயிரைத் தீண்டமாட்டார். கர்ணனே பாண்டவர்களின் முக்கிய சத்துரு. என் புத்திரர்களைக் கொன்று துரியோதனனைத் திருப்தி செய்ய வேண்டுமென்று மிகுந்த ஆவல் கொண்டவனாக இருக்கிறான். கர்ணன் மகா சூரனாகவுமிருக்-

கிறான். கர்ணனை நினைத்தால் என் உள்ளம் தீபற்றி யதுபோல் எரிகிறது. அவனை நான் நேரில் கண்டு பேசி அவன் பிறப்பின் உண்மையைச் சொல்லிவிட இதுவே சமயம். தன் பிறப்பைப்பற்றி அறிந்தபின் அவன்உள்ளம் மாறுதல் அடையாமலிராது.''

மக்களைப் பற்றிக் கவலையால் பீடிக்கப்பட்டுக் குந்தி தேவி இவ்வாறு தனக்குள் பல சிந்தைகள் செய்து கொண்டு கங்கையோரம் கர்ணன் தினமும் ஜபம் செய்யும் இடத்தை நோக்கிச் சென்றாள்.

எதிர்பார்த்தபடி கர்ணன் ஜபத்தில் இருந்தான். கிழக்கு முகமாக நின்றுகொண்டு கைகளை உயரத் தூக் கிச் சூரிய உபாசனையில் ஆழ்ந்திருந்தான். அவன் ஜபம் செய்து முடிக்கும் வரையில் அவனுக்குப் பின்புறமாக நின்று கொண்டிருந்தாள். சூரியன் தன் முதுகைச் சுடும் வரையில் கர்ணன் எதையும் கவனியாமல் ஏகாக்ரமாகத் தியானத்திலேயே இருந்தான்.

ஜபம் முடிந்ததும் திரும்பிப் பார்த்துக் குந்தி நிற்ப தைக் கண்டான். வெய்யிலின் தாபத்தால் அவள் கர் ணன் உடலின் மேல் இருந்த உத்தரியத்தைத் தன் தலை மேல் பிடித்துக்கொண்டு நிற்பதைப் பார்த்து இதென்ன வென்று வியப்படைந்தான்.

பாண்டு ராஜாவின் மனைவியும் ராஜகுமாரர்களின் தாயுமாகிய குந்தி தேரோட்டி மகனுடைய வஸ்திரத்தைத் தலைமேல் பிடித்துக்கொண்டு நிற்பது அவனுக்கு அதி சயமாக இருந்தது.

“ராதைக்கும் தேரோட்டி அதிரதனுக்கும் மகனான கர்ணன் நான் உங்களை வணங்குகிறேன். சேவைக்குக் காத்திருப்பவனாகிய என்னால் தங்களுக்கு என்ன ஆக வேண்டியது?'' என்று பெரியோர்களை வணங்கும் முறைப் படி பெயரையும் குலத்தையும் சொல்லி நமஸ்கரித்துக் கேட்டான்.

''கர்ணனே! நீ ராதையின் புத்திரனல்ல. தேரோட் டியும் உன் தகப்பனல்ல. நீ சூத குலத்தில் பிறந்தவன்

என்று எண்ணாதே. அரச குலத்தைச் சேர்ந்த பிருதை என்கிற குந்தியின் வயிற்றில் பிறந்த சூரிய குமாரனாவாய் நீ. உனக்கு மங்களம்!'' என்று சொல்லி அவனுக்கு அவன் ஜன்ம கதையை விளக்கிச் சொன்னாள்.

''கவச குண்டலங்களோடு தேவ குமாரனாகப் பிறந்த நீ உன் சகோதரர்களை அறிந்து கொள்ளாமல் துரியோதனனுடன் சேர்ந்து அவர்களைப் பகைக்கிறாய். திருதராஷ்டிர புத்திரர்களை அண்டிப் பிழைப்பது உனக்கு அவமானமாகும். நீ அருச்சுனனுடன் சேர்ந்து வீரனாக ராஜ்யத்தை அடைவாயாக! நீயும் அருச்சுனனும் ஒன்று சேர்ந்து துஷ்டர்களை அடக்குவீர்களாக. உலகமே உங்களை வணங்கும். பலராமனும் கிருஷ்ணனும் போல நீங்கள் இருவரும் பிரசித்தி அடைவீர்கள். தம்பிமார் ஐவர்களுக்கும் மூத்த சகோதரனான நீ அவர்களால் சூழப்பட்டுத் தேவர்களால் சூழப்பட்ட பிரமதேவனைப் போல் ஜொலிப்பாய். தருமசங்கடமான விஷயங்களில் அன்புள்ள தாய்க்கும் தகப்பனுக்கும் சந்தோஷம் தருவதே உயர்ந்த தருமம் என்பது சாத்திரம்'' என்றாள்.

சூரிய பகவானை உபாசித்து முடித்த சமயத்தில், இவ்வாறு தன்னைப் பெற்ற தாயால் கேட்டுக்கொள்ளப்படும்போது சூரிய பகவானும் குந்தியின் வேண்டுகோளை ஆதரிப்பதாகக் கர்ணன் உள்ளத்தில் தோன்றிற்று. ஆனால் அவன் தன் மனதை ஸ்திரப்படுத்திக் கொண்டு சூரியன் தன்னுடைய தைரியத்தையும் சத்தியத்தையும் சோதிக்கிறான். அந்தச் சோதனையில் தோல்வியடையலாகாது என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

''க்ஷத்திரியத் தாயே! உன்னால் சொல்லப்பட்ட இந்த வார்த்தை தர்ம விரோதமான பேச்சு. நான் உனக்காக க்ஷத்திரியக் கடமையைத் தள்ளி விட்டு அதருமத்தில் இறங்கினேனானால் அதைவிடப் பெரும் தீங்கு யுத்தத்தில் எந்தப் பகைவன் எனக்குச் செய்ய முடியும்? குழந்தைப் பருவத்தில் என்னை நீ தண்ணீரில் எறிந்துவிட்டு இப்போது ஜாதிக்குரிய சம்ஸ்காரங்களுக்குக் காலம் மீறி

விட்ட பிறகு என்னைப் பார்த்து 'நீ க்ஷத்திரியன்' என்கிறாய். தாயின் கடமைகளைச் செய்யவேண்டிய காலத்தில் செய்யாமல் இப்போது உன்னுடைய மக்களின் நன்மையைக் கருதி எனக்கு இந்தக் கதையைச் சொல்லுகிறாய். இப்போது பாண்டவர்களுடன் நான் சேர்ந்தேனானால் எதிரிகளைக் கண்டு பயந்து அவர்களோடு சேர்ந்தேன் என்றுதான் க்ஷத்திரிய உலகம் சொல்லும். திருதராஷ்டிர புத்திரர்களால் எல்லா சுகமும் சொத்தும் மதிப்பும் மரியாதையும் இதுவரையில் அனுபவித்துவிட்டு இப்போது யுத்தம் வந்த சமயத்தில் அவற்றையெல்லாம் பொய்யாக்கிப் பாண்டவர்களுடன் சேரச் சொல்லுகிறாய். திருதராஷ்டிர புத்திரர்கள் யுத்தம் என்கிற வெள்ளத்தைத் தாண்ட என்னையே ஓடமாக நம்பி வருகிறார்கள். நானோ அவர்களை யுத்தத்திற்கு அதிகமாகத் தூண்டியிருக்கிறேன். அவர்களை நான் இப்போது எப்படி நடு ஆற்றில் விட்டுவிட முடியும்? உதவி செய்ய வேண்டிய காலம் வந்து எதிரில் நிற்கும்போது துரோகம் செய்துவிட்டுப் பிறகு மானமாகப் பிழைக்க முடியுமா? தாயே! நான் கடனைத் தீர்க்கவேண்டும். உயிரையும் கொடுத்துத் தீர்க்கத்தான் வேண்டும். இல்லாவிட்டால் சோறுதைத் திருடின அற்பனாவேன். நான் என் சக்தியையெல்லாம் செலுத்தி உன் புத்திரர்களுடன் போர் செய்யத்தான் வேண்டும். உன்னிடம் பொய் சொல்ல மாட்டேன். நீ என்னை மன்னிக்க வேண்டும். ஆயினும் நீ செய்த முயற்சி முழுதும் வீண் ஆகாது. உன் புத்திரர்களில் அருச்சுனனை மட்டும் எனக்குத் தந்துவிடு. அவனாவது நானாவது இந்த யுத்தத்தில் இறக்க வேண்டியது நிச்சயம். உனனுடைய மற்றப் புத்திரர்கள் என்னை என்ன செய்தாலும் அவர்களை நான் கொல்ல மாட்டேன். வீர மக்களைப் பெற்றவளே! உனக்கு ஐந்து புத்திரர்கள் எப்படியும் இருப்பார்கள். நானாவது அருச்சுனனாவது இருவரில் ஒருவன் உனக்கு மிஞ்சுவான். மற்ற நால்வரோடு உனக்கு ஐந்து மக்கள் நிச்சயமாக இருப்பார்கள், போ!" என்றான்.

க்ஷத்திரிய தருமத்துக்குப் பொருந்திய இந்த மொழிகளைத் தன் மூத்தமகன் சொன்னதைக் கேட்ட குந்தி அவனைக் கட்டித் தழுவிக் கொண்டு பேசமுடியாமல் கண்ணீர் விட்டாள்.

"விதியை யார் தடுக்க முடியும்! நீ நான்கு தம்பிகளுக்கு அபயம் கொடுத்தாய். அதுவேபோதும், உனக்கு மங்களம்!" என்று ஆசீர்வதித்து விட்டு வந்த வழி சென்றாள் வீரத்தாய்.

# பாண்டவ சேனாதிபதி

கோவிந்தன் உபப்பிலாவியம் வந்து சேர்ந்தான். ஹஸ்தினாபுரத்தில் நடந்த விஷயங்களைப் பாண்டவர்களுக்குச் சொன்னான்: "உண்மையையும் ஹிதத்தையும் சொன்னேன்; ஒரு பயனுமில்லை. இனி நான்காவதும் கடைசியானதுமான தண்டப் பிரயோகம் தவிர வேறு வழியில்லை. சபையிலுள்ள பெரியோர்கள் அனைவரும் சொல்லியும் மூர்க்கனான துரியோதனன் புறக்கணித்து விட்டான். இனி யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் தாமதமின்றி நடைபெறவேண்டும். குருக்ஷேத்திரம் பெரும் பலிக்குக் காத்திருக்கிறது" என்றான்.

"புருஷ சிரேஷ்டர்களே! இனி சமாதான ஆசை இல்லை. நம்முடைய சேனையை அணி வகுப்பீர்களாக!" என்று யுதிஷ்டிரர் தம்பிகளுக்குக் கட்டளையிட்டார்.

சேனையை ஏழு பாகமாகப் பிரித்து அவற்றிற்கு முறையே துருபதன், விராடன், திருஷ்டத்யும்னன், சிகண்டி, சாத்தியகி, சேகிதானன், பீமசேனன் ஆகிய ஏழு நாயகர்களை அமைத்தார்கள். பாண்டவ சேனாதிபதியாக யாரை அபிஷேகம் செய்வது என்று ஆலோசித்தார்கள்.

"சகதேவ! இந்த ஏழு பேர்களுள் ஒருவனைப் பொறுக்கியெடுத்துச் சேனாதிபதியாக அமைக்கவேண்டும். நெருப்பைப்போல் பகைவர்களை எரிக்கும் பீஷ்மரைத் தாங்கக் கூடியவனும் எல்லாச் சேனைகளையும் சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி நடத்த வல்லவனுமான ஒருவன் நமக்குச் சேனாதிபதியாக இருக்கவேண்டும். உன்னுடைய அபிப்பிராயத்தில் இதற்கு யார் தகுந்தவர்?" என்று யுதிஷ்டிரர் முதலில் சகதேவனைக் கேட்டார்.

அபிப்பிராயங்களை அறிவதற்கு இளையவர்களை முதலில் கேட்டு அதன் பிறகே பெரியோர்களையும் முதிர்ந்தவர்களையும் கேட்பது பழைய வழக்கம். சிறுவர்களுக்கு

உற்சாகமும் தன்னம்பிக்கையும் வளருவதற்கு இதுவே சரியான கிரமம். முதலில் பெரியோர்களைக் கேட்டுவிட்டால் அதன்பின் மற்றவர்களுக்குச் சுதந்தரமாக எதையும் சொல்ல இடமிருக்காது. ஏதேனும் சொன்னால் அது வினயத்துக்குப் பாதகமாகும்.

"அஜ்ஞாத வாசத்தில் எந்த ராஜாவை அடுத்திருந்தோமோ, எவருடைய நிழலில் நின்று நாம் மறுபடியும் நம்முடைய பாகத்தைக் கேட்கிறோமோ அந்த விராட ராஜாவையே சேனாதிபதியாக அபிஷேகம் செய்யலாம்" என்றான் சகாதேவன்.

நகுலனைக் கேட்க, அவன் சொன்னதாவது: "வயதிலும் அறிவிலும், தைரியத்திலும், குலத்திலும், பலத்திலும் சிறந்தவரான துருபதராஜாவைச் சேனாதிபதியாக்குவது உசிதம் என்று எனக்குத் தோன்றுகிறது. பரத்வாஜரிடமிருந்து அஸ்திரங்கள் கற்றவரும், துரோணரை எதிர்க்க வேண்டும் என்றே அநேக காலமாக காத்திருப்பவரும், அரசர்களால் மிக மதிக்கப்பட்டவரும், திரௌபதியின் பிதாவும் நமக்குப் பெற்ற பிதாவைப்போல் ஆதாரமாய் இருப்பவருமான துருபதரே நம்முடைய சேனையின் முன்னணியில் நின்று துரோணரையும் பீஷ்மரையும் எதிர்க்கக் கூடியவர்" என்றான். பிறகு தருமபுத்திரர் தனஞ்சயனைக் கேட்டார்.

"இந்திரியங்களை வென்றவனும் துரோணருடைய முடிவுக்கென்றே தோன்றிய வீரனுமாக திருஷ்டத்யுமனன் நம்முடைய சேனாதிபதியாக இருக்க வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். பரசுராமரைத் தயங்கச் செய்த பீஷ்மருடைய பாணங்களைத் தாங்கக் கூடியவன் திருஷ்டத்யுமனனே. துருபத புத்திரனைத் தவிர பிதாமகரை எதிர்க்கத் தகுந்தவன் வேறு யாரும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அவனே இந்தப் பதவிக்கு தகுதியுடையவன்" என்று அருச்சுனன் சொன்னான்.

பீமன், "அரசரே! அருச்சுனன் சொன்னது சரியே ஆயினும் பீஷ்மருடைய வதத்திற்காகவே உண்டானான்

என்று சிகண்டியைப்பற்றி ரிஷிகளும் பெரியோர்களும் சொல்லுகிறார்கள். பரசுராமரைப் போன்ற தேஜசு பொருந்திய தோற்றத்தைப் படைத்த அந்த வீரனைத் தலைவனாக அமைப்பதே என்னுடைய யோசனை. சிகண்டியைத் தவிர வேறு எவனும் பீஷ்மரை தோல்வியடையச் செய்ய முடியாது'' என்றான்.

"கேசவனுடைய யோசனை என்ன?'' என்று முடிவாகக் கேட்டான் யுதிஷ்டிரன்.

"இவர்கள் சொல்லிய யாவருமே தலைமைப் பதவிக்குத் தகுந்தவர்கள். எல்லோருமே துரியோதனாதியருக்குப் பயத்தை உண்டாக்கக் கூடியவர்கள். ஆயினும் மொத்தத்தில் அருச்சுனன் சொன்னதை நான் அங்கீகரிக்கிறேன். திருஷ்டத்யும்னனை முழுசேனைக்கும் தலைவனாக அபிஷேகம் செய்யலாம்'' என்றான் கிருஷ்ணன்.

## கௌரவ சேனாதிபதி

சுயம்வரத்தில் திரௌபதியை அருச்சுனனுக்குக் கையைப் பிடித்துத் தந்தவனும் பாஞ்சாலிக்கு அரசர் சபையில் செய்யப்பட்ட கொடுமையை எண்ணி எண்ணி அதற்குப் பழி தீர்க்கும் காலம் எப்போது வரப்போகிறது என்று பதின்மூன்று வருடங்கள் காத்திருந்தவனுமான துருபத ராஜனுடைய வீர குமாரன் திருஷ்டத்யும்னனை பாண்டவ சேனைக்குத் தலைவனாக அமைத்து அபிஷேகஞ் செய்தார்கள். வீரர்கள் செய்த சிம்மநாதங்களும், சங்கத் வனிகளும், துந்துபி முழக்கமும் ஆகாயத்தைப் பிளந்து பெரும் ஆரவாரத்துடன் பாண்டவசேனை குருக்ஷேத்திரம் புகுந்தது.

கௌரவ சேனைக்குப் பீஷ்மர் சேனாதிபத்யம் வகித்தார். துரியோதனன் அஞ்சலி செய்து வணங்கி, "தேவர்களைக் கார்த்திகேயன் தலைமை வகித்து நடத்திய வாறு பிதாமகர் எங்களுக்கு நாயகராயிருந்து வெற்றியும் புகழும் பெறுவாராக. ரிஷபத்தின் பின் கன்றுகள் செல்லுவதுபோல நாங்கள் பிதாமகரின் பின் செல் வோம்" என்றான்.

"அப்படியே ஆகுக" என்றார் பீஷ்மர். "ஆனால் என்னுடைய ஒரு நிச்சயத்தை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். திருதராஷ்டிரனுக்குக் குமாரர்களான நீங்கள் எப்படியோ அப்படியே எனக்குப் பாண்டுவின் புத்திரர் களும். உங்களுக்கு நான் செய்து கொடுத்த பிரதிஜ் ஞைப்படி யுத்தத்தை நடத்தி என் கடனைத் தீர்ப்பேன். நாள் தோறும் யுத்தகாலத்தில் பதினாயிரக் கணக்கான போர் வீரர்கள் என் பாணங்களுக்கு இரையாவார்கள். ஆயினும் பாண்டு புத்திரர்களை நான் கொல்ல முடியாது. இந்த யுத்தம் என் சம்மதத்தைப் பெற்றதன்று. பாண்ட வர்களை நானாகக் கொல்லாமல் என் கடமைகளை யெல் லாம் செய்வேன். மற்றொரு விஷயம். உங்களுக்கு மிக வும் பிரியனான சூதபுத்திரன் என் யோசனைகளை எப்

போதும் எதிர்ப்பவனாக இருக்கிறான். அவனை முதலில் கேளுங்கள். அவன் தலைமை வகித்து யுத்தத்தைமுதலில் நடத்தலாம். எனக்கு ஆட்சேபனை இல்லை'' என்றார் பிதாமகர். பீஷ்மருக்குக் கர்ணனுடைய நடவடிக்கை எப்போதும் பிடிக்காது.

''பீஷ்மர் உயிருடன் இருக்கும்வரையில் நான் விலகி நிற்பேன். அவருடைய வீழ்ச்சிக்குப் பிறகே நான் வருவேன். அப்போது அருச்சுனனை எதிர்த்து அவனை வீழ்த்துவேன்'' இது அகம்பாவத்தால் பீடிக்கப்பட்ட கர்ணனுடைய பிடிவாதம்.

சிறந்த பல நற்குணங்களைப் படைத்தவர்களுங் கூடச் சமானஸ்தர்களிடம் பொறாமைப் படுவதும் மேம் பட்டவர்களிடம் அசூயை கொள்வதும் அந்தக் காலத் திலும் இருந்தது.

துரியோதனன் பீஷ்மர் சொன்ன நிபந்தனைக்கு ஒப்புக்கொண்டு அவரைச் சேனாதிபதியாக அபிஷேகம் செய்தான். பிதாமகர் தலைமை வகித்த கௌரவ சேனையும் சமுத்திரத்தைப்போல் குருக்ஷேத்திரத்தில் பிரவேசித்தது.

# பலராமன்

புகழ்பெற்ற வீரனான பலராமன் பாண்டவர்களுடைய பாசறைக்கு வந்தான். பருத்த தோள்களும் நீலப் பட்டும் சிங்க நடையுமாக ஹலாயுதன்* வந்ததும் யுதிஷ்டிரனும் கிருஷ்ணனும் மற்றவர்களும் பெரு மகிழ்ச்சி அடைந்து எழுந்து வணங்கினார்கள். விருத்தர்களும் பெரியோர்களுமான துருபதனையும் விராடனையும் வணங்கிவிட்டுப் பலராமன் தருமபுத்திரருக்குப் பக்கத்தில் உட்கார்ந்தான்.

"பரதவம்சத்தில் ஆசையும் கோபமும் துவேஷமும் வலுத்துவிட்டன. சமாதானப் பேச்சு எல்லாம் முறிந்து போயிற்று. போர் துவங்கிவிட்டீர்கள் என்பதை அறிந்து குருக்ஷேத்திரத்துக்கு வந்தேன்" என்றான் பலராமன்.

வருத்தம் தாங்காமல் பேச்சை ஒரு கணம் நிறுத்திக் கொண்டு, மறுபடியும் "தருமபுத்திரனே! பயங்கரமான விநாசம் உண்டாகப் போகிறது. வெட்டப்பட்ட அங்கங்களாலும் இரத்தச் சேற்றினாலும் பூமி முழுதும் கோரமாக அலங்கரிக்கப்படப் போகிறது. உலகத்திலுள்ள அரசர்களும் க்ஷத்திரிய சாதியும் விதியினால் ஏவப்பட்டு யமாலயத்தைத் தேடிப் பைத்தியக்காரர்களைப் போல இங்கே கூடியிருக்கிறார்கள். நான் கிருஷ்ணனுக்குப் பலதடவை சொன்னேன். நமக்குப் பாண்டவர்களைப் போலவே துரியோதனனும். இருவருக்குள் உண்டாயிருக்கும் மூடச் செய்கைகளில் எந்தப் பக்கமும் நாம் சேர முடியாது" என்று நான் எவ்வளவு சொல்லியும் கிருஷ்ணன் என் சொல்லுக்கு இசையவில்லை. தனஞ்சயனிடத்தில் அவனுக்குள்ள பிரீதியினால் பாண்டவர்களாகிய உங்கள் பட்சத்திலேயே இருந்துகொண்டு யுத்தத்திற்கும் அனுமதி கொடுத்துவிட்டான். கிருஷ்ணன் ஒரு பக்கத்தி

* ஹலாயுதன் = கலப்பையை ஆயுதமாகக் கொண்டவன் = பலராமன். ஹலம் = கலப்பை.

விருந்து நான் மற்றொரு பக்கத்தில் இருக்க எவ்வாறு முடியும்? வீரர்களான பீமன் துரியோதனன் இருவரும் என்னிடம் கதாயுதப் பயிற்சி பெற்ற சிஷ்யர்கள். இருவரிடமும் நான் சமமான அன்பை உடையவன். கௌரவர்கள் நசிப்பதைப் பார்த்து என்னால் பொறுக்க முடியவில்லை. நீங்கள யுத்தம் செய்யுங்கள். இந்த விபரீதம் பொங்கி வழியட்டும். நான் தீர்த்த யாத்திரை போகிறேன். எனக்கு உலகமே பிடிக்கவில்லை'' என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டுக் கிருஷ்ணனுடைய சகோதரனான பலராமன் துக்கத்தைப் பொறுக்காதவனாகப் பரம்பொருளைத் தியானித்துக்கொண்டு யாத்திரை சென்றான் என்கிறார் வியாசர்.

'தரும சங்கடம்' என்றால் ஒன்றுக்கொன்று முரண்பட்ட கடமைகளில் எதனைச் செய்வது என்பது நிச்சயமாக விளங்காமல் திகைக்கும் நிலைமை. இந்த நிலைமை யோக்கியர்களுக்கு அடிக்கடி நேருகிறது. அயோக்கியர்களுக்கு இந்தக் கஷ்டம இல்லை. தங்கள் தங்கள் பற்றுகளும் ஆசைகளுமே அவர்களை நடத்தும். ஆசைகளைக் கழற்றிவிட்ட மகான்களுக்குத் தரும சங்கடங்கள் வந்து சேரும். பாரதக் கதையில் பீஷ்மர், விதுரன், யுதிஷ்டிரன், கர்ணன் இவர்களுக்குப் பெருஞ் சோதனைகள் ஏற்பட்டன. புராணத்தில் இவர்கள் அவ்வப்போது எவ்வெவ்வாறு சங்கடத்தைத் தீர்த்துக்கொண்டார்கள் என்பதைப் படிக்கிறோம். அவரவர்களுடைய இயற்கை குணங்களுக்கும் புத்தி நுட்பத்திற்கும் படித்த பண்பாட்டுக்கும் தக்கவாறு சங்கடங்களைத் தீர்த்துக் கொண்டதாகக் கதை மாறுபட்டுச் செல்லும். இப்போது விமரிசனை செய்பவர்கள் சில சமயம் இதை மறந்து எல்லாவற்றையும் ஒரே தராசில் நிறுக்கப் பார்க்கிறார்கள். அது தவறு. இராமாயணத்தில் தசரதன் கும்பகர்ணன், மாரீசன், பரதன், லக்ஷ்மணன் இவர்களுக்குத் தருமசங்கடங்கள் நேர்ந்து அவரவர்கள் ஒவ்வொரு முறையில் தீர்த்திருப்பதைப் பார்த்து நாமும் பயன் பெறலாம். இவ்வாறே பாரதத்திலும், பலராமன் யுத்தத்தி

னின்று ஒதுங்கி நின்ற கதை இது. மகா பாரதப் போரில் சேராதவர்கள் பரதநாட்டு அரசர்களில் இருவரே. ஒருவன் பலராமன். மற்றவன் ருக்மன் என்னும் போஜகடநாட்டு அதிபதி. ருக்மன் கதையை ஒரு தனி அத்தியாயமாக முதலிலிருந்து சொல்ல வேண்டும். ருக்மன் தங்கையே ருக்மிணி, கண்ணன் மனைவி.

# ருக்மிணி

**வி**தர்ப்ப தேசாதிபதி பீஷ்மகனுக்கு ஐந்து குமாரர்களுடன் ஒரே ஒரு பெண் இருந்தாள். அழகிலும் குணத்திலும் ஒப்பற்ற இந்தப் பெண்ணின் பெயர் ருக்மிணி. கிருஷ்ணனைப்பற்றி உலகமெல்லாம் புகழ்ந்ததைக் கேட்டு ருக்மிணிக்கு அந்த வீரனை மணந்து இல்லறம் நடத்த வேண்டும் என்ற ஆவல் வளர்ந்தது. பந்துக்கள் அனைவரும் இந்த எண்ணத்தையே ஆமோதித்தார்கள். ஆனால் பீஷ்மகனுடைய மூத்த குமாரனும் இளவரசனுமான ருக்மன் என்பவன் கண்ணனைத் துவேஷித்தான். அவன் ருக்மிணியைத் துவாரகாதிபதிக்குக் கொடுக்கக் கூடாது. அவளைச் சேதி தேசத்து ராஜனான சிசுபாலனுக்கு விவாகம் செய்து முடிக்க வேண்டும் என்று தகப்பனாரை வற்புறுத்தி வந்தான். தகப்பனார் வயதானவரான படியால் இளவரசன் பேச்சே வலுத்தது. சிசுபாலனுக்கே ருக்மிணியைக் கொடுத்து விவாகம் முடியும்போல் இருந்தது.

கண்ணனை விரும்பினவளும் தேவியின் அவதாரமுமான ருக்மிணி அசுரகுணம் படைத்த சிசுபாலனை எவ்வாறு ஒப்புக் கொள்ளுவாள்? தகப்பனார் தன்னைக் காப்பாற்ற மாட்டார், பிடிவாதக்காரனான ருக்மனின் உத்தேசமே வெற்றியடையும் என்று அவள் பயந்து மிக்கத் துயரப்பட்டாள்.

பிறகு ஒருநாள் ருக்மிணி தைரியம் செய்து கொண்டு தன் துயரத்தினின்று மீள்வதற்கு ஒரு வழி எப்படியாவது தேட வேண்டுமென்று தீர்மானித்தாள். அதைப் பற்றி ஒரு பிராமணனுடன் ஆலோசனை செய்தாள். இயற்கைக் கூச்சத்தை விட்டுவிட்டு கிருஷ்ணனிடம் அந்த பிராமணனைத் தூது அனுப்பினாள். போய்த் தன் நிலைமையைச் சொல்லி எப்படியாவது தன்னைக் காப்பாற்றும்படியாக அவனை வேண்டிக்கொள்ளச் சொல்லி அனுப்பினாள்.

பிராமணன் துவாரகைக்குப் போய்க் கண்ணபிரானைக் கண்டு ருக்மிணியின் பரிதாபத்தையும் வேண்டுகோளையும் அவனுக்குத் தெரிவித்து ருக்மிணி அனுப்பிய கடிதத்தையும் பகவானிடம் தந்தான்.

"உன்னை நான் வரித்தேன். என் உள்ளம் உன்னுடைய சொத்தாகிவிட்டது. உனக்குச் சொந்தமாகச் சேர்ந்துவிட்ட பொருளைச் சிசுபாலன் வந்து கவர்ந்து கொள்வதற்கு முன்னமே நீ இவ்விடம் வந்து என்னைக் காப்பாற்றவேண்டும். நாளைய தினமே இவ்விடம் வர வேண்டும். சிசுபாலனுடைய படைகளையும் ஜராசந்தனுடைய படைகளையும் எதிர்த்துச் சிதற அடித்து என்னை நீ பெறவேண்டியதாயிருக்கிறது. வீரனாக என்னை அடைவாய். சிசுபாலனுக்கு என்னை விவாகம் செய்துவிடுவதாக அண்ணன் தீர்மானித்திருக்கிறான். விவாகச் சடங்குக்குச் செய்யவேண்டிய தேவி பூஜைக்காக அம்மன் கோயிலுக்கு என் பரிவாரத்துடன் போவேன். நீ அப்போது வந்து என்னை மீட்டலாம். இல்லையேல் நான் உயிரை மாய்த்துக்கொள்வேன். மறுபிறப்பிலாவது உன்னை அடைவேன் அல்லவா?"—இந்தக் கடிதத்தைப் படித்த உடனே கண்ணன் தேரில் ஏறினான்.

x x x

விதர்ப்ப தேசத்தின் ராஜதானியான குண்டினபுரம் அலங்கரிக்கப்பட்டு ருக்மிணியின் விவாகத்திற்கு வேண்டியதெல்லாம் பீஷ்மக ராஜனுடைய கட்டளைப்படி தயார் செய்யப்பட்டது. சிசுபாலனும் அவனைச் சேர்ந்தவர்களும் வந்து சேர்ந்து விட்டார்கள். அனைவரும் கிருஷ்ணனுடைய பரம விரோதிகள்.

கண்ணன் தனியாகத் தேர் ஏறிச் சென்ற செய்தி பலராமனுக்குத் தெரிந்தது. இது விதர்ப்ப ராஜனுடைய மகளைப்பற்றியதாகவே இருக்கலாம்; தம்பி கண்ணன் அவ்விடம் போய் ஜன்ம விரோதிகளால் சூழப்பட்டு அபாயத்தில் சிக்கிக் கொள்வான் என்று பலதேவன் கவலைப்பட்டு உடனே பெருஞ் சேனையை அவசரமாகத்

திரட்டிக்கொண்டு குண்டினபுரத்துக்கு விரைவாகச் சென்றான்.

ருக்மிணி அந்தப்புரத்தை விட்டுப் புறப்பட்டாள். பரிவாரமும் படையுமாகப் பெருங்கூட்டம் அவளுடன் சென்றது. கோவிலுக்குப் போய் விவாகத்துக்காகத் தேவி பூஜை நடத்தினார்கள். "தேவீ! உன்னை வணங்குகிறேன். நான் இவ்வளவு நாளாக உன்னைப் பணிந்து வந்திருக்கிறேன். கண்ணன் என்னை அடையவேண்டும். எனக்கு இந்த வரம் நீ தரவேண்டும்" என்று உள்ளம் கரைந்து தேவியின் சந்நிதியில் முறையிட்டாள்.

x x x

ஆலயத்திலிருந்து ருக்மிணி வெளியே வந்ததும் கண்ணனுடைய தேரைக் கண்டாள். கண்டதும் காந்தத்தினால் இழுக்கப்பட்ட ஊசியைப்போல் ஒன்றும் பேசாமல் நேராகப் போய் அந்தத் தேரில் ஏறினாள். பகைவர்கள் பார்த்துக்கொண்டிருக்க கண்ணன் அவளை ஏற்றிக்கொண்டு தேரை ஓட்டினான்.

இளவரசனான ருக்மனிடம் சேவகர்கள் ஓடிச்சென்று நடந்ததைச் சொன்னார்கள்.

"ஜனார்த்தனனைக் கொல்லாமல் திரும்பமாட்டேன்" என்று அவன் சபதம் செய்து பெருஞ் சேனையுடன் கிருஷ்ணனைத் துரத்திக்கொண்டு சென்றான். இதற்குள் பலராமனும் சேனையுடன் வந்து சேர்ந்தான். இரு கட்சியினருக்கும் பெரும் யுத்தம் நடந்தது. பலராமனும் கண்ணனும் பகைவர்களைச் சிதற அடித்து வெற்றியுடன் துவாரகைக்குச் சென்றார்கள். அங்கே ருக்மிணியின் விவாகம் முறைப்படி நடந்தது.

x x x

தோல்வியை அடைந்த ருக்மன் வெட்கத்தால் பீடிக்கப்பட்டுக் குண்டினபுரத்துக்குத் திரும்பிப் போகா

மல் கிருஷ்ணனுக்கும் தனக்கும் யுத்தம் நடந்த இடத்திலேயே தன் சேனையை நிறுத்தி அவ்விடத்தில் போஜகடம் எனகிற புதிய நகரத்தை நிர்மாணம் செய்து அங்கேயே ராஜ்யத்தை நடத்தி வந்தான்.

x x x

குருக்ஷேத்திரத்தில் யுத்தம் நடைபெறப் போகிறது என்று அறிந்து ருக்மராஜன் ஒரு அக்குரோணி சேனையுடன் அவ்விடம் வந்தான். வாசுதேவனுடைய நட்பை இப்போது அடையலாம் என்று எண்ணிப் பாண்டவர்களிடம் சென்றான். தனஞ்சயனைப் பார்த்து, "பாண்டவனே! உன்னுடைய எதிரிகளின் சேனை பெரிதாக இருக்கிறது. உனக்குச் சகாயம் செய்ய வந்திருக்கிறேன். எதிரிகளுடைய படையில் எந்தப் பாகத்தைத் தாக்க வேண்டுமென்று விரும்புகிறாயோ அதை நான் தாக்குவேன். துரோணர், கிருபர், அல்லது பீஷ்மரையும் தாக்க நான் சக்தியுள்ளவனாக இருக்கிறேன். உனக்கு வெற்றியைச் சம்பாதித்துத் தருவேன். உன் விருப்பம் என்ன?" என்று கேட்டான்.

ருக்மனுடைய பேச்சைக் கேட்ட தனஞ்சயன் வாசுதேவனைப் பார்த்துச் சிரித்துப் பதில் சொன்னான்.

"போஜகடாதிபதியே! நாம் எதிரிகளின் பெரிய சேனையைக் கண்டு பயப்படவில்லை, உன்னுடைய சகாயத்தை நாம் விரும்பவில்லை. நீ போகலாம். அல்லது இருக்கலாம்" என்றான்.

கோபமும் வெட்கமும் அடைந்த ருக்மன் தன் சேனையைத் திருப்பிக்கொண்டு உடனே துரியோதனனிடம் போனான்.

"பாண்டவர்கள் என்னை மறுத்தார்கள்: உனக்குச் சகாயம் செய்வேன்" என்று துரியோதனனிடம் சொன்னான்.

"பாண்டவர்கள் வேண்டாம் என்று சொன்னபின் அல்லவோ என்னிடம் வந்தாய்? அவர்கள் நீக்கிவிட்ட

பண்டத்தை எடுத்துக் கொள்ளும்படியான அவசியம் எனக்கு நேரவில்லை'' என்று துரியோதனனும் சொல்லி விட்டான்! இருதரப்பிலும் அவமானப்பட்ட ருக்மன் யுத் தத்தில் சேராமல் தன் நாட்டுக்குத் திரும்பினான்.

x x x

யுத்தத்தில் சேராமலிருப்பதிலும் பலவிதமுண்டு. ஸாத்வீக காரணங்களாகவு மிருக்கலாம். ரஜோ குணங் கள்—அதாவது அகம்பாவம், சுயநலம் முதலிய கார ணங்களாகவு மிருக்கலாம். சோம்பல், பயம், முதலிய தாமஸ காரணங்களாகவு மிருக்கலாம். பலராமன் பாரத யுத்தத்தில் சேராத காரணம் ஸாத்வீகம். ருக்மன் சேரா ததற்குக் காரணமோ அவனுடைய ரஜோ குணம். தருமத்தை ஆராய்ந்து எது செய்ய வேண்டும் என்று தோன்றுகிறதோ அதைச் செய்யாமல் தன் பெருமை யையே லட்சியமாகக் கொண்டு ருக்மன் அவமானப்பட் டான்.

# ஒத்துழையாமை

யுத்தம் ஆரம்பிப்பதற்கு முதல் நாள் பீஷ்மர் துரியோதனனுக்குத் தைரியம் சொல்லிக்கொண்டிருந்தார். அவனுக்காகப் போர் செய்யப்போகும் வீரர்களுடைய திறமையையும் குணங்களையும் எடுத்துக் காட்டித் துரியோதனனுக்கு உற்சாகம் ஊட்டி வந்தார். கர்ணனைப் பற்றிய பேச்சு வந்தது.

"உன்னுடைய பிரியத்தைச் சம்பாதித்தவனும் உனக்குப் பாண்டவர்கள் பேரில் பகையை வளர்த்து வருபவனும், தன்னைப் புகழ்ந்துகொண்டிருப்பதிலேயே சந்தோஷப்படுகிறவனும் அகங்காரத்திற்கு வரம்பு தெரியாதவனுமான கர்ணனை நான் அதிகமாக மதிக்கவில்லை. இவனை நான் அதிரதர்கள் கணக்கில் சேர்க்கமாட்டேன். இவன் பிறரை நிந்திக்கும் சுபாவம் கொண்டவன். தவிர இவன் தன்னுடைய பிறவிச் சம்பத்தான கவச குண்டலங்களை இழந்துவிட்டிருக்கிறபடியால் நம்முடைய யுத்தத்தில் அதிகமாக உதவச் சக்தியற்றவன். பரசுராமருடைய சாபத்தினால் ஆபத்துக் காலத்தில் இவன் நினைவை இழப்பான். அருச்சுனனோடு செய்யப்போகும் யுத்தத்தில் இவன் உயிருடன் மீளமாட்டான"—இவ்வாறு பீஷ்மர் உள்ளதை உள்ளதுபோல் துரியோதனனுக்கும் கர்ணனுக்கும் மிகவும் அப்பிரியமான வார்த்தைகளைச் சொன்னார்.

துரோணரும் அதையே ஆமோதித்து "இவன் கர்வம் கொண்டவன். விஷயங்களைக் கவனிக்கமாட்டான். அஜாக்கிரதையால் தோல்வி அடைவான்" என்றார்.

கடுமையான இந்தச் சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்த கர்ணன் கோபம் கொண்டு, கண்கள் சிவந்து பீஷ்மரைப் பார்த்துப் பேசலானான் :

"பிதாமகரே! ஒரு குற்றமும் செய்யாத என்னை நீர் எப்போதும் அவமதித்து வருகிறீர். துவேஷத்தினாலும

பொறுமையினாலும் 'சொல்—அம்புகளினால் அடிக்கடி இவ்விதம் என்னைக் குத்துகிறீர். துரியோதனனுக்காக அவற்றையெல்லாம் நான் பொறுத்து வந்தேன். யுத்தத்தில் நான் அதிகமாக உதவமாட்டேன் என்று சொன்னீர். என்னுடைய நிச்சயமான அபிப்பிராயத்தைக் கேளும். நீர்தான் உதவமாட்டீர். பொய் சொல்ல வேண்டாம். உமக்குக் கௌரவர்கள் மேல் அன்பு கிடையாது. அரசனுக்கு இது தெரியாது. உம்முடைய துவேஷத்தினால் துரியோதனனுக்கு என்மேல் உண்டாயிருக்கும் பிரியத்தைக் கெடுக்கப் பார்க்கிறீர். நண்பர்களுக்குள் பேதத்தை உண்டாக்குவதற்காக என்னுடைய உண்மையான பராக்கிரமத்தைக் குறைத்துச் சொல்லியும் நிந்தித்தும் வருகிறீர். உம்மைப்போல் எவனும் இவ்வித அக்கிரமத்தைச் செய்யமாட்டான். க்ஷத்திரியர்களுக்குள் முதுமையால் மட்டும் கௌரவம் இல்லை. பலத்தினால்தான் மதிப்பு உண்டாகும். துரியோதனனுக்கும் எனக்குமுள்ள சிநேகத்தைக் கெடுக்க முயற்சி செய்ய வேண்டாம்''— இவ்வாறு பீஷ்மரை நிந்தித்துத் தாக்கினான்.

பிறகு துரியோதனனைப் பார்த்து 'வீரனே : நன்றாய் ஆலோசித்து உன் நன்மையைத் தேடிக் கொள். இந்த பீஷ்மரை நீ நம்பாதே! நம்முடைய போர் வீரர்களுக்குள் பேதம் விளைவிக்க இவர் பார்க்கிறார். என்னைப் பற்றி இவர் சொன்னது உன்னுடைய காரியத்திற்கு இடையூறு விளைவிக்கும். தேஜோ பங்கம் செய்து என்னுடைய உற்சாகத்தை அழித்துவிடப் பார்க்கிறார். இவருடைய மூளை வயதினால் தளர்ந்து விட்டிருக்கிறது. இவர் இறக்கும் தருணம் வந்துவிட்டது. இவருக்கு அகம்பாவம் அதிகம். உலகத்தில் வேறு ஒருவரையும் இவர் மதிக்கிறதில்லை. முதியோர்களுடைய ஆலோசனையை அவசியம் கேட்க வேண்டியதுதான். ஆனால் சாஸ்திரத்தின்படி முதுமைக்கும் ஒரு வரம்பு உண்டு. மறுபடியும் இரண்டாம் பாலபருவம் அடைந்துவிட்ட இத்தகைய முதுமை ஒன்றுக்கும் உதவமாட்டாது. நீ இவரைச்சேனாதிபதியாகச் செய்தாய். மற்றவர்கள் செய்யும் வீரச் செயல்களைக் கொண்டு இவர் புகழ் சம்பாதிப்பார். நான் இவருடைய

தலைமையில் நடக்கும் யுத்தத்தில் ஆயுதப் பிரயோகம் செய்யமாட்டேன். பீஷ்மர் வீழ்ந்த பின்னரே நான் ஆயுத மெடுப்பேன்'' என்றான்.

x x x

அகம்பாவம் கொண்ட மனிதனுக்குத் தன் அகம்பாவம் தனக்குத் தெரியாது. அதை எடுத்துச் சொல்லும் மனிதனை அகம்பாவம் கொண்டவனாகக் கருதுவான். குற்றத்தை எடுத்துக் காட்டுவதே பெருங் குற்றமாக அவனுக்குத் தோன்றும். இந்தக் கர்ண—பீஷ்ம சம்பாஷணையில் இது நன்றாக எடுத்துக் காட்டப்படுகிறது.

x x x

பீஷ்மர் ''சூத புத்திரனே! மிக்க நெருக்கடியான காலமாக இருக்கிறபடியால் உன் தகாத வார்த்தையையும் நான் பொறுத்துக் கொள்கிறேன். அதனால் நீ உயிருடன் இருக்கிறாய். துவேஷ புத்தி கொண்ட உன்னைக் கௌரவர்கள் அடைந்தபடியால் அவர்களுக்கு இந்தப் பெரிய கஷ்டம் நேரிட்டது.''—இவ்வாறு சொல்லிவிட்டு பீஷ்மர் தன கோபத்தை அடக்கிக் கொண்டார்.

துரியோதனன்: ''காங்கேயரே! உங்கள் இருவரிடமும் நான் உதவி பெற வேண்டியவனாக இருக்கிறேன். இருவரும் பெரிய வீரச் செயல்களைச் செய்யப் போகிறீர்கள். விடிந்த உடன் யுத்தம் நடக்கப் போகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் கலகம் வேண்டாம்'' என்றான்.

பீஷ்மர் சேனாதிபதியாக இருக்கும் வரையில் ஆயுதம் எடுக்கமாட்டேன் என்று கர்ணன் பிடிவாதமாகச் சொல்லிவிட்டான். துரியோதனனும் அதை ஒப்புக் கொண்டு அவ்வாறே கர்ணனுடைய சபதம் நடைபெற்றது. இந்தக் காரணத்தினால் பாரத யுத்தத்தில் முதல் பத்து நாட்கள் நடந்த போரில் கர்ணன் சேர்ந்து கொள்ளவில்லை. தன்னுடைய சேனையை மட்டும் யுத்தத்தில் ஏவினான். பத்து நாட்கள் தீர்ந்து பீஷ்மர் உடம்பெல்லாம் அம்புகள் பாய்ந்து யுத்தகளத்தில் வீழ்ந்த பின் அவரிடம்

கர்ணன் வந்து பணிந்து தன் பிழைகளைப் பொறுத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு பீஷ்மருடைய ஆசீர்வாதத்தையும் பெற்றான். பிறகு கர்ணனே பிரேரேபித்துச் சொல்லி துரோணரைச் சேனுபதியாக அபிஷேகம் செய்தார்கள். அப்போது கர்ணன் யுத்தத்தில் சேர்ந்து கொண்டான். துரோணரும் இறந்த பின் கர்ணன் கௌரவர்களின் சேனுபதியாகவே அமர்ந்து யுத்தம் நடத்தினன்.

# கீதையின் தோற்றம்

**யு**த்தம் துவங்குவதற்கு முன் இரு பட்சத்து வீரர்களும் கூடி அந்தக் காலத்துப் பண்பாட்டிற்குப் பொருந்திய பிரதிஜ்ஞைகளைச் செய்தார்கள். யுத்த முறைகள் காலத்துக்குக் காலம் மாறிக்கொண்டே வருகின்றன. அந்த காலத்து யுத்த முறைகளை நினைவில் வைத்துக் கொண்டு படித்தால்தான் பாரதம் விளங்கும். இல்லாவிட்டால் சிற்சில இடங்களில் நிகழ்ச்சிகள் அசம்பாவிதமாகத் தோன்றும்.

பாரத யுத்த விதிகள் : ஒவ்வொரு நாளும் போர் முடிந்த பிறகு இருதரப்பினரும் பிரீதியுடன கலக்க வேண்டும். யுத்தத்தில் யாருமே தத்தம் சமானஸ்தர்களையே தாக்கவேண்டும். அதர்ம முறையில் யார்பேரிலும் யுத்தம் நடத்தக்கூடாது. சேனையின் மத்தியிலிருந்து விலகிப் போகிறவர்களை ஒரு பொழுதும் கொல்லக் கூடாது. தேர் ஏறினவன் தேர் ஏறினவனையும் யானை வீரன் யானை வீரனையும் குதிரை ஏறியிருப்பவன் குதிரை ஏறி யிருப்பவனையும் காலாள் காலாளோடுமே எதிர்த்துச் சண்டை செய்யவேண்டும். எதிரியை நம்பிப் போரை நிறுத்தினவன் மீதும், பயந்து வணங்கினவன் மீதும் ஆயுதம் பிரயோகிக்கக்கூடாது. வேறு ஒருவனோடு போர் செய்து கொண்டிருக்கும் ஒருவனைப் போரில் கலந்து கொள்ளாமல் மற்றொருவன் ஆயுதப் பிரயோகம் செய்து கொல்லக்கூடாது. ஆயுதம் இழந்தவனையாவது கவனம் செலுத்தாமல் இருப்பவனையாவது புறங்காட்டி ஓடுபவனையாவது கவசம் இழந்தவனையாவது கொல்லக் கூடாது. ஆயுதங்களை எடுத்துக்கொடுக்கும் பணியாட்கள், பேரிகை அடிப்பவர்கள், சங்கம் ஊதுகிறவர்கள் இவர்கள் மேல் ஆயுதங்கள் பிரயோகம் செய்யலாகாது. இவ்வாறான யுத்த முறையைக் கௌரவ பாண்டவர்கள் இருவரும் பிரதிஜ்ஞை செய்து கொண்டார்கள்,

காலப் போக்கில் நியாய அநியாயக் கோட்பாடுகள் மாறுதல் அடையும். இக்காலத்தில் போர் என்றால்

போரில் உபயோகிக்கப்படும் எல்லாச் சாதனங்களும குதிரைகள் முதலிய ஊமைப் பிராணிகளும் சிகித்சைக்கு வேண்டிய மருந்தும் கூட அழிக்கப்படலாம். எவ்வித வரம்பும் கிடையாது. முற்காலத்தில் இவ்வாறல்ல.

அக்காலத்தில் பின்பற்றிவந்த நியமங்களும் அக் காலத்திலேயே சில சமயங்களில் பல காரணங்களினால் புறக்கணிக்கபபட்டதாகப் பாரதக் கதையில் நிச்சய மாகக் காணப்படுகிறது. விசேஷ சந்தர்ப்பங்களும் காரணங்களும் கூடி நியதிகள் சில சமயம் புறக்கணிக்கப் பட்டு, வரவர நியதியே அழிந்து போய்ப் புது நியதி உண்டாகும். பாரத யுத்தத்தில் வரம்பு கடந்த செயல் களும் சிற்சில சமயங்களில் நடைபெற்றன. ஆயபோதி லும் பொதுவாக மேற்கூறிய நியதிகளை எல்லாரும ஒப்புக் கொண்டு அதன்படியே நடந்தார்கள். விதிகள் புறக் கணிக்கப்பட்டபோது, அதை எல்லாரும நிந்தித்தார்கள். புறக்கணிக்கப்பட்டவர்கள் வெட்கமடைந்தார்கள்.

x x x

"வீரர்களே! இதோ உங்களுக்கு எதிரில் சுவர்க்க வாயில் திறந்து நிற்கிறது. இந்திரனுடனும் பிரம்மனுட னும் சேர்ந்து வாழும் பாக்கியம உங்களுக்குக் கிட்டி யிருக்கிறது. உங்கள் பெற்றோரும் மூதாதையரும் அவர் களைப் பெற்ற முன்னோர்களும சென்ற வழியில் நீங்களும் செல்லுங்கள். வெற்றி அல்லது சுவர்க்கம் உங்கள முன் நிற்கிறது. இதுவே உங்களுடைய குலங்களின் சனாதன தருமம். மனக்கவலையின்றி மகிழ்ச்சியுடன் போர் புரிந்து புகழும் மேன்மையும் அடையுங்கள். வீட்டில் வியாதியி னால் மரணம் அடைதல் க்ஷத்திரியனுக்குத் தகாது. ஆயு தத்துக்கு இரையாவதே க்ஷத்திரியனுடைய தருமம்."

இவ்வாறு சேனாதிபதி பீஷ்மரால் தூண்டப்பட்ட அரசர்கள் பேரிகை முழக்கம் செய்துகொண்டு கௌரவர் களுக்கு வெற்றியும் புகழும் உண்டாக்கித் தருவோம் என்று யுத்தம் துவக்கினார்கள்.

பீஷ்மருடைய கொடியில் பனைமரமும் ஐந்து நட்சத்திரங்களும் பிரகாசித்தன. சிம்மத்தின்வால் எழுதிய அசுவத்தாமன் கொடிகாற்றில் ஆடிற்று. துரோணருடைய பொன் நிறத்துவஜத்தில் கமண்டலுவும் வில்லும் பிரகாசித்தன. துரியோதனனுடைய புகழ்பெற்ற கொடியில் பாம்புப் படம் ஆடிற்று. கிருபருடைய கொடியில் காளை மாடும், ஜயத்ரதனுடைய கொடியில் பன்றியும் இவ்வாறு இன்னும் பல வீரர்கள் தேரில் பலவிதக்கொடிகள் பறந்தன.

x x x

அணிவகுக்கப்பட்ட கௌரவ சேனையைப் பார்த்து யுதிஷ்டிரன் அருச்சுனனுக்கு கட்டளையிட்டான்:

“பகைவர்களுடைய படை மிகப் பெரிதாக இருக்கிறது. குறைவாக இருக்கிற நம்முடைய படையை விஸ்தாரப்படுத்தாமல் குவித்துப்போர் புரிய வேண்டும். அகலமாக விரிந்தால் நம்முடைய சேனைக்கு பலக்குறைவு ஏற்படும். ஊசிமுக வியூகமாக நம்முடைய படையை அணிவகுப்பாயாக” என்று தனஞ்சயனுக்கு உத்தரவிட்டான்.

இவ்வாறு இரு பக்கத்திலும் சேனைகள் அணிவகுக்கப்பட்டு நின்றதும் அருச்சுனனுக்கு உண்டான மனக்கலக்கமும் அதைத் தீர்க்கக் கிருஷ்ணன் உபதேசித்த கருமயோகமும் உலகப் பிரசித்தம். அப்போது கண்ணனுடைய வாக்கில் தோன்றிய பகவத் கீதை என்கிற உபதேச மொழிகள் உலகத்தில் எந்தத் தொழிலில் ஈடுபட்டு எந்த நிலைமையிலிருப்பவர்களுக்கும், எந்த குண விசேஷங்களுடன் பிறந்தவர்களுக்கும் உய்யும் வழி காட்டி உதவும்படியான சாஸ்திரமாகப் பெரியோர்களால் கருதப்பட்டு வருகிறது.

# ஆசி பெறுதல்

**யு**த்தம் ஆரம்பித்துவிட்டது என்று எல்லாரும் எண்ணியிருந்த தருணத்தில் வீரனும் தீரனுமான யுதிஷ்டிரன் திடீரென்று தன் கவசத்தைக் கழற்றிவிட்டு எல்லா ஆயுதங்களையும் தேரில் வைத்துவிட்டுக் கீழே இறங்கிக் கைகுவித்துக் கொண்டு பாதசாரியாக கௌரவ சேனாதிபதி இருக்குமிடம் நோக்கிச் சென்றான். அவ்வாறு ஒன்றும் சொல்லாமல் யுதிஷ்டிரன் சென்றதைப் பார்த்து எல்லாரும் திகைத்தார்கள்.

தனஞ்சயன் விரைவாகத் தேரினின்று கீழே குதித்து யுதிஷ்டிரனைப் பின் தொடர்ந்து வேகமாகச் சென்றான். அவன் கூட மற்ற சகோதரர்களும் கிருஷ்ணனும் சென்றார்கள். யுதிஷ்டிரன் ஒருவேளை தன் இயற்கை தருமத்தை அனுசரித்துக் கருணையால் தூண்டப்பட்டுத் திடீரென்று யுத்தம் வேண்டாம் என்பதாகத் தீர்மானித்து விட்டாரோ என்று சந்தேகமும் கவலையும் பட்டார்கள்.

"ராஜாவே! எங்களை விட்டு விட்டு ஒன்றும் பேசாமல் நிராயுதபாணியாகப் பகைவர்களை நோக்கிச் செல்லுவது என்ன காரணம்? சத்துருக்கள் கவசம் பூண்டு ஆயுதங்களை எடுத்து நிற்க, கவசத்தையும் ஆயுதங்களையும் வைத்து விட்டு நீர் யுத்த ஆரம்ப சமயத்தில் தனியாக எங்கே போகிறீர்?" என்று அருச்சுனன் கேட்டான்.

ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து சென்று கொண்டிருந்த யுதிஷ்டிரன் ஒன்றும் பேசாமல் நடந்தான். அச்சமயம் வாசுதேவன் "இவருடைய கருத்து எனக்கு விளங்கிற்று. யுத்தம் துவக்குவதற்கு முன் பெரியோர்களிடம் அனுமதி பெறச் செல்கிறார். பெரியோர்களிடம் அனுமதி பெறாமல் யுத்தம் செய்தால் அது நிந்தனைக்கு இடமாகும். பீஷ்ம துரோணர்களிடம் அனுமதி கேட்க தருமபுத்திரர் நிராயுதபாணியாகச் செல்கிறார். அது தருமத்திற்கு

இயைந்ததும் ஐயம் உண்டாக்கத் தக்கதுமான முறை"
என்றான்.

*　　*　　*

துரியோதனனுடைய சேனையிலிருந்தவர்கள் யுதிஷ்டிரன் கைகூப்பிக் கொண்டு பீஷ்மரிடம் வருவதைக் கண்டு, "அதோ பார், நம்முடைய சேனையைக் கண்டு பயந்துபோய்ச் சமாதானம் பெற யுதிஷ்டிரன் வணங்கி வருகிறான். இந்தக் கோழை மனிதன் க்ஷத்திரிய ஜாதிக்கு அவமானம் தருவதற்காகப் பிறந்தவன்" என்று ஒருவரோடு ஒருவர் சந்தோஷமாகப் பேசிக்கொண்டு தருமபுத்திரனை நிந்தித்தார்கள்.

பகைவர் படையில் ஆயுதபாணிகளாக நின்ற வீரர்களிடையில் யுதிஷ்டிரன் நுழைந்து நேராக பீஷ்மர் இருந்த இடம் சென்று அவருடைய இரண்டு பாதங்களையும் இரண்டு கைகளால் பிடித்து வணங்கி,

"எவராலும் ஜயிக்க முடியாத வீரரே! உம்முடன் போர் புரியத் துணிந்த எங்களுக்கு யுத்தம் துவக்க அனுமதி தர வேண்டுகிறேன். எங்களை ஆசீர்வதிக்கவும் கோருகிறேன்" என்றான்.

பிதாமகரான பீஷ்மர் "குழந்தாய்! பரதகுலத்தில் பிறந்த நீ குலத்தினுடைய தருமத்தின்படி நடந்தாய்! நான் மகிழ்ச்சியடைந்தேன். யுத்தம் செய், ஜயம் பெறுவாய்! எனக்குச் சுதந்திரம் இல்லை. பராதீனமாக இருக்கிறேன். நான் கௌரவர்கள் பக்கம் யுத்தம் புரியக் கட்டுப்பட்டவனாக இருக்கிறேன். ஆனாலும் உனக்குத் தோல்வியில்லை" என்றார்.

இவ்வாறு அனுமதியும் ஆசியும் பெற்ற யுதிஷ்டிரன் ஆசாரியரான துரோணரிடம் சென்று அவரையும் வலம் செய்து பணிந்தான். துரோணரும் தருமபுத்திரனை ஆசீர்வதித்தார்கள்.

"பொருளானது எவனுக்கும் அடிமைப்படாது. மனிதனே பொருளுக்கு அடிமைப்பட்டவன் ஆகிறான். நான்

கௌரவர்களுக்குக் கட்டுப்பட்டுப் போனேன். அவர்கள் பக்கம் யுத்தம் செய்வேன். ஆயினும் உனக்கு ஜயம் நிச்சயம்'' என்றார். அவ்வாறே கிருபரிடமும் மாமன் சல்லியனிடமும் போய்த் தரும புத்திரன் ஆசி பெற்றுத் திரும்பினான்.

x x x

போர் துவங்கிற்று. முதலில் வீரர்களுக்குள் துவந்த யுத்தங்கள் நடந்தன. அதாவது சமமான ஆயுதங்களுடன் ஒருவரை ஒருவர் எதிர்த்து சண்டை செய்தார்கள். பார்த்தனை பீஷ்மர் எதிர்த்தார். சாத்யகி கிருதவர்மாவை எதிர்த்தான். அபிமன்யு பிருகத்பலனை எதிர்த்துப் போர் புரிந்தான். துரியோதனனை பீமன் எதிர்த்தான். யுதிஷ்டிரன் சல்லியனை எதிர்த்தான். திருஷ்டத்யும்னன் துரோணரை எதிர்த்து இருவருக்கும் பெரும் போர் நடந்தது. இவ்வாறே அநேக வீரர்கள் யுத்த தருமப்படி துவந்த யுத்தம் நடத்தினார்கள்.

இவ்வாறு சம வீரர்களுக்குள் நடந்த ஆயிரக் கணக்கான துவந்த யுத்தங்களைத் தவிர சங்குல யுத்தமும் நடைபெற்றது. யார் யாருடன் என்பதில்லாமல் ஒரே குழப்பமாகப் போர் நடப்பதற்கு 'சங்குல யுத்தம்' என்று பெயர். மிகவும் கோரமாக நடக்கும் அந்தச் சங்குல யுத்தங்களில் இருதரப்பிலும் எண்ணற்ற பேர்கள் பைத்தியம் பிடித்தவர்களைப்போல் போர் புரிந்து இறந்தார்கள். ரத்தமும் மாமிசமும் மண்ணும் கலந்த சேற்றில் படையாட்களும் சாரதிகளும் யானைகளும் குதிரைகளும் கொன்று வீழ்த்தப்பட்டுத் தேர்களைச் செலுத்த இட நெருக்கடி உண்டாயிற்று. தற்கால யுத்தங்களில் துவந்த யுத்தம் என்பது நின்று போயிற்று. எல்லாம் சங்குலமாகவே நடைபெறுகிறது.

x x x

பீஷ்மர் தலைமையில் கௌரவ வீரர்கள் பத்து நாட்கள் யுத்தம் நடத்தினார்கள். பீஷ்மர் வீழ்ந்த பின் துரோ

ணர் தலைமை வகித்தார். துரோணரும் இறந்தபின் கர்ணன் கௌரவ சேனைக்குத் தலைவனானன். பதினேழாம் நாள் யுத்தத்தில் கர்ணன் இறந்தான். அதன்பின் சல்லியன் தலைமை வகித்து கௌரவ சேனையை நடத்தினன்.

பாரதயுத்தம் பதினெட்டு நாள் நடந்தது. யுத்தத்தின் பிற்பகுதியில் அநேக கோரமான அதரும முறைகள் கையாளப்பட்டன. தருமம் ஒரே நாளில் திடீர் என்று கெடுவதில்லை. அவ்வப்போது சங்கடமான நிலைமைகள் நேரிட்டுத் தருமத்துக்குச் சோதனை உண்டாகிறது. பெரியோர்களும் தவறுகள் இழைத்து விடுகிறார்கள். பிறகு அதைப் பார்த்து மற்றவர்களும் அதருமத்தில் இறங்கி விடுகிறார்கள். இவ்வாறே அறம் அழிந்து மறம் ஓங்கும் காலம் உலகத்தை ஆட்கொள்ளுகிறது.

# முதல் நாள் யுத்தம்

கௌரவர்களுடைய பட்சத்தில் துச்சாதனன் சேனை முன்னணியில் சென்றான். அவ்வாறே பாண்டவர்கள் பட்சத்தில் பீமன் முன்னால் சென்றான். சிம்மநாதங்களும் சங்க கோஷங்களும் கொம்பு வாத்தியங்களும் பேரிகைகளின் கொட்டு முழக்கும் குதிரைகளின் கனைப்பும் யானைகளின் பிளிறலும் சேர்ந்து வானளாவிய முழக்கம் உண்டாயிற்று. அம்புகள் விசையுடன் செல்லும்போது கொள்ளி நட்சத்திரங்கள் போல் ஜொலித்தன. தகப்பன் பிள்ளையைக் கொன்றான். மகன் தகப்பனைக் கொன்றான். மருமகன் மாமனைக் கொன்றான். மாமன் மருமகனைக் கொன்றான்.

முதல் நாள் முற்பகலில் பாண்டவ சேனை பீஷ்மருடைய தாக்குதலினால் நடுக்கமுற்றது. அவருடைய ரதம் சென்ற வழி எல்லாம் காலனுடைய தாண்டவமாக இருந்தது. அருச்சுனன் மகன் அபிமன்யு இதைக் கண்டு பொறுக்காமல் பிதாமகரை எதிர்த்தான். இரு பக்கத்துப் படை வீரர்களுக்குள் வயதில் சிறியவனாகிய அபிமன்யு அனைவரிலும் மூத்தவரான பிதாமகரை எதிர்த்துத் தடுத்ததைத் தேவர்களும் நின்று பார்த்தார்கள். அபிமன்யுவின தேர்க் கொடியில் கர்ணிகார மரம பொன்னால் சித்திரிக்கப்பட்டு விளங்கிற்று. கிருதவர்மனை ஒரு பாணத்தாலும் சல்லியனை ஐந்து பாணங்களாலும் பீஷ்மரை ஒன்பது பாணங்களாலும் அடித்தான. ஒரு அம்பினால் துர்முகனுடைய சாரதியின் தலை அறுபட்டுக் கீழே விழுந்தது. மற்றொரு பாணம் கிருபருடைய வில்லை ஒடித்தது. அபிமன்யுவின் யுத்த லாகவத்தைக் கண்டு தேவர்கள் புஷ்பமாரி பெய்தார்கள். பீஷ்மரும் அவரைப் பின்பற்றிய வீரர்களும் தனஞ்சயனுக்குத் தகுந்த மகன் இவன் என்று பாராட்டினார்கள்.

பிறகு பல கௌரவ வீரர்கள் அவனைச் சுற்றிக் கொண்டு தாக்கினார்கள். அபிமன்யு அசையவில்லை.

ஷ்மர் வில்லினின்று விடுபட்ட அம்புகளை யெல்லாம். ுவன தனனுடைய அம்புகளால் துண்டித்தான. லட்சி ம் தவருமல் அவன் எய்த பாணங்களில் ஒன்று பீஷ்ம டைய பனைமரக் கொடியை அறுத்து பூமியில் வீழ்த் ற்று. பீஷ்மருடைய கொடி கீழே அறுபட்டு விழுந்த தக கண்டு பீமன் பெரு மகிழ்ச்சி அடைந்து உரத்த மநாதம் செய்தான். பெரியபபனுடைய சிம்மநாதத் தக் கேட்டு அபிமனயு மேலும் உற்சாக மடைந்தான:

பாலனுடைய அற்புதப் போரைக்கண்டு பீஷ்மர் மம பூரித்தார். தன் முழு பலத்தையும் அவன் மேல் ரயோகிகக வேண்டியதாயிற்றென்று வருத்தப்பட்டார். பிமனயுவின மேல் பிதாமகருடைய வில் சரமாரி பாழிந்தது. விராடனும், அவன மகன் உத்தரனும, ருபத குமாரனை திருஷ்டத்யும்னனும, பீமனும் ல்லாரும அபிமனயுவைக் காபபாற்ற ஓடிவந்து பிதாமக ரத் தாக்கினார்கள. பீஷ்மர் அபிமனயுவை விட்டுவிட்டு வர்களை எதிர்கக ஆரமபித்தார்.

x x x

**வி**ராடன் மகன் உததரன் அச்சமயம யானையின் மல் ஏறிச் சென்று சல்லியனை எதிர்த்தான். தேர்க் திரைகள நான்கும யானையால் மிதிபட்டு இறந்தன. வ்வாறு தாக்கப்பட்ட சல்லியன் சக்தியாயுதத்தை த்தரனமேல் வீசி எறிந்தான். அது உத்தரனுடைய வசத்தைப் பிளந்து உட்சென்றது. அவன் கையிலிருந்த ஙகுசமும தோமரமும் நழுவி விழுந்தன. யானைப் டரியிலிருந்து உத்தரன் பிரேதமாகக கீழே விழுந்தான்.

யானை சல்லியனைத் தாக்குவதை நிறுத்தவில்லை. ல்லியனும் கத்தியை எடுத்து யானையைத் தாக்கினன். திக்கை அறுபட்டு மர்மஸ்தானஙகளில் பாணஙகளால் டிபட்டு யானையானது பயங்கரமான சப்தம் போட்டுக் காண்டு கீழே விழுந்து மரித்தது. பிறகு சல்லியன் ருதவர்மனுடைய தேரில் ஏறினன். அப்போது விராட டைய புத்திரன் சுவேதன தன் தம்பி உத்தரன் கொல் ப்பட்டதைக் கண்டு நெய்விட்ட அக்கினியைப போல்

ரௌத்ராகாரமாகத் தன் ரதத்தைச் சல்லியனை நோக்கி ஓட்டிவந்தான். சல்லியன் மிருத்யுவின் வசமாய்விடுவான் என்று ஏழு ரதிகர்கள் அவனைக் காப்பாற்றுவதற்காக மிகவும் விரைவாக வந்து அவனை நாற்புறமும் சூழ்ந்து கொண்டு போர் செய்தார்கள். மேகங்கள் மின்னுவதைப் போல் ஜொலிக்கும் வில்கள் சுவேதன் பேரில் அம்புமழை பொழிந்தன. கௌரவ வீரர்களின் விற்களை சுவேதன் தன் பாணங்களினால் அறுத்தான். அவர்கள் ஏழு பேரும் ஏழு சக்திகளைச் சுவேதன்பேரில் வீசினார்கள். அவன் அவற்றை உடனே ஏழு பல்லங்களாலே துண்டித்தான். சுவேதன் செய்த யுத்தத்தைக் கண்டு இரு பட்சத்து சேனை வீரர்களும் வியந்தார்கள். சல்லியனுடைய ஆபத்தான நிலைமையைக் கண்டு துரியோதனன் ஒரு பெரும் படையை அந்த இடத்திற்குச் செலுத்தினான். அதன் மேல் பயங்கரப் போர் நடந்து ஆயிரக்கணக்கில் வீரர்கள் மாண்டார்கள். தேர்கள் உடைந்து வீழ்த்தப்பட்டன. யானைகளும் குதிரைகளும் ஆயிரக் கணக்கில் செத்தன. சுவேதன் துரியோதனனுடைய படையைத் துரத்தியடித்து பீஷ்மரைத் தாக்கினான். இருவருக்கும் கோரமான யுத்தம் நடந்தது.

பீஷ்மருடைய தேர் கொடியைச் சுவேதன் அறுத்துத் தள்ளினான். பீஷ்மர் சுவேதனுடைய தேர்க் குதிரைகளையும் கொடியையும் சாரதியையும் வீழ்த்தினார். அப்போது சுவேதன் ஒரு சக்தி ஆயுதத்தை எடுத்துப் பீஷ்மர்மேல் எறிந்தான். அதை பீஷ்மர் தன் பாணத்தால் தடுத்துவிட்டார்.

அதன்பின் சுவேதன் கதாயுதத்தை எடுத்துச் சுழற்றி பீஷ்மருடைய தேரின்மேல் எறிந்தான். தேர் ஒடிந்து பொடியாகும் என்று தெரிந்த பீஷ்மர் தேரினின்று கீழே குதித்தார். அந்தக் கணம் கொடிமரத்துடன் தேர் சுக்கு நூறாயிற்று. பிதாமகர் கோபம் மேலிட்டு வேறு தேரின் மீதேறி வில்லை நன்றாக வளைத்து ஒரு அம்பைச் சுவேதன் மேல் செலுத்தினார். விராடன் மகன் சுவேதனும் யமாலயம் சென்றான். துச்சாதனன் வாத்திய கோஷங்களோடு வெற்றிக் கூத்து ஆடினான்.

அதன் பிறகு பிதாமகர் பாண்டவ சேனையைத் தாக்கினார்.

x x x

முதல் நாள் யுத்தத்தில் பாண்டவ சேனை மிகவும் துன்புறுத்தப்பட்டது. தருமபுத்திரன் பயந்தான். துரியோதனனுடைய மகிழ்ச்சியோ கரைபுரண்டு ஓடிற்று. பாண்டவர்கள் கிருஷ்ணனிடம் வந்து "என்ன செய்வோம்?" என்று ஏங்கி ஆலோசனை செய்யலானார்கள்.

கிருஷ்ணன் யுதிஷ்டிரனைப் பார்த்து, "பரத சிரேஷ்டரே! கவலைப்படாதீர். சூரர்களான தம்பிகளைப் பெற்றிருக்கிறீர். நீர் ஏன் பயப்படுகிறீர்? சாத்யகியும் விராடனும் துருபதனும் திருஷ்டத்யும்னனும் நானும் இருக்க உமக்கு ஏன் விசாரம்? பீஷ்மருடைய மரணத்துக்காகவே சிகண்டி காத்திருப்பதை மறந்தீரா?" என்று தேற்றினார்.

# இரண்டாம் நாள்

முதல் நாளில் பாண்டவ சேனை பயத்தால் பீடிக்கப்பட்டதைக்கண்டு, சேனாதிபதியான திருஷ்டத்யும்னன் கவலைப்பட்டு அடுத்த தினம் தன் சேனையை மிகக் கவனத்தோடு வியூகப்படுத்தித் தைரியமும் உற்சாகமும் ஊட்டினான்.

துரியோதனன் கர்வமடைந்து தன் சேனையின் நடுவில் நின்றுகொண்டு யுத்த வீரர்களைப் பார்த்து "கவசம் பூண்ட வீரர்களே. நம்முடைய வெற்றி நிச்சயம். உயிரைப் பொருட்படுத்தாமல் போர்புரியுங்கள்" என்று கர்ஜனை செய்தான்.

பீஷ்மரின் தலைமையில் கௌரவப் படை மறுபடியும் பாண்டவசேனையைப் பலமாகத் தாக்கிற்று. வியூகம் உடைந்து போய்ப் பாண்டவ சேனையில் மறுபடியும் பெரும நாசம் ஏற்பட்டது.

அருச்சுனன் தன் சாரதியாயிருந்த கிருஷ்ணனைப் பார்த்து "நாம் இப்படியே அஜாக்கிரதையாக இருந்தோமானால் பீஷ்மர் நம்முடைய சேனை முழுமையையும் சீக்கிரமே நாசம் செய்துவிடுவார். பீஷ்மரை வதம் செய்தாலொழிய நம்முடைய சைன்யம் தப்பாது" என்றான்.

கிருஷ்ணன் "தனஞ்சய! இதோ பிதாமகருடைய ரதத்தை அடைவாய். தேரைச் செலுத்துகிறேன். அவரைத் தாக்க ஆயத்தம் செய்துகொள்" என்று சொல்லி அருச்சுனனுடைய தேரைப் பீஷ்மர் இருந்த இடத்தை நோக்கிச் செலுத்தினான்.

வேகத்தோடு தன்னை நோக்கிவரும் அருச்சுனனைக் கண்டு பிதாமகரும் அவனைப் பாணங்களால் வரவேற்றார். வீரர்களுக்குள் முதன்மையானவர் என்று உலகம் எங்கும் புகழைப் பெற்றிருந்த பீஷ்மர் நன்றாகக் குறி பார்த்துப் பார்த்தன்மேல் பாணங்களை விட்டார். பிதாமகரை எந்தக்

காலத்திலும் ஜாக்கிரதையாகப் பாதுகாக்கும்படி சேனைக்குத் துரியோதனன் கட்டளை இட்டிருந்தான். பீஷ்மரைச் சுற்றியிருந்த வீரர்கள் அனைவரும் அருச்சுனனைத் தாக்கினார்கள்.

தனஞ்சயன் அதையெல்லாம் கொஞ்சமும் லட்சியம் செய்யவில்லை. தனஞ்சயனை எதிர்த்துப் போர் செய்யக் கூடியவர்கள் கௌரவ சேனையில் பிதாமகரான பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகிய மூன்று பேர்களே; வேறு யாராலும் முடியாது என்பது பிரசித்தி. தன்னைத் தடுத்த வீரர்களின் கூட்டத்தில் அருச்சுனன் பிரவேசித்து மகாரதர்கள் அனைவரையும் பிரமிக்கச் செய்யும்படியான லாகவத்தோடு காண்டீபத்தை உபயோகித்தான். பகைவர்களின் தேர்களினிடையில் அவனுடைய தேர் அற்புத முறையில் இங்குமங்கும் கண்ணுக்குத் தெரியாமல் சஞ்சாரம் செய்தது. துரியோதனனுடைய இதயம் அப்போது கலங்கிற்று. பீஷ்மரிடம் வைத்திருந்த நம்பிக்கை குறைய ஆரம்பித்தது.

"கங்கா புத்திரரே! நீரும் துரோணரும் உயிரோடிருக்கும்போதே இந்த அருச்சுனனும் கிருஷ்ணனும் நம்முடைய சேனை முழுவதையும் நாசம் செய்துவிடுவார்கள் போலிருக்கிறது. என்மேல் உண்மையான அன்பு வைத்திருக்கும் கர்ணன் உமக்காக ஆயுதம் எடுக்காமல் இருக்கிறான். நான் ஏமாற்றம் அடைவேன் போலிருக்கிறது. பல்குனனைக்* கொல்லும்படியான வழியை நீர் உடனே தேடவேண்டும்" என்றான்.

பீஷ்மார்ஜுன யுத்தத்தைப் பார்க்க தேவர்களும் கந்தர்வர்களும் வந்துவிட்டார்கள். இருவர் ரதங்களிலும் வெள்ளைக் குதிரைகள் பூட்டியிருந்தன. இருவரும் சம வீரர்களாகவும் போர்த் திறமை காட்டுவதில் மகிழ்ச்சி கொண்டவர்களாகவும் வெகு நேரம் யுத்தம் செய்தார்கள். இரு பட்சத்திலும் பாணங்கள் எண்ணற்ற கணக்கில் விடப்பட்டன. அம்புகள் அம்புகளை வெட்டித் தடுத்தன.

---

*பல்குனன் = அருச்சுனன்.

சில சமயம் பீஷ்மருடைய பாணங்கள் கிருஷ்ணன் மார்பிலும் பாய்ந்தன. காயங்களிலிருந்து ரத்தம் ஒழுகிப் பச்சை வண்ண மாதவன மலர் பூத்த பலாசமரம் போல் முன்னைவிட அழகாக ஜொலித்தான். மாதவன் காயம் பட்டத்தைக் கண்டு பார்த்தனுக்கு ஆத்திரம் பொங்கிப் பிதாமகரைப் பலமாகத் தாக்கினான்.

ஆயினும் இருவரில் யாரும் ஜயிக்க முடியாமல் அருச்சுனனும் பீஷ்மரும் வெகு நேரம் அற்புதப் போரை நடத்தினார்கள். இரு ரதங்களும் ஒன்றை ஒன்று தாக்கி இங்குமங்கும் செல்லும் போது இரு தரப்புச் சேனைகளுக்கும் கொடிகளின் அடையாளம் ஒன்றே வித்தியாசம் தெரிந்தது. மற்றபடி எங்கே பீஷ்மர் எங்கே அருச்சுனன் என்று சொல்ல முடியவில்லை. பிதாமகரும் தனஞ்சயனும் யுத்தம் செய்து குருக்ஷேத்திரத்திலிருந்த வீரர்களையும் வானத்திலிருந்த தேவர்களையும் வியக்கச் செய்து கொண்டிருக்கையில் மற்றொருபுறம் யுத்தகளத்தில் துரோணரோடு அவருக்குப் பிறவிப் பகையும் பாஞ்சால ராஜன் மகனும் திரௌபதியின் சகோதரனுமான திருஷ்டத்யும்னன் பெரும் போர் நடத்திக் கொண்டிருந்தான்.

துரோணர் திருஷ்டத்யும்னனைப் பலமாகத் தாக்கிக் காயங்கள் உண்டாக்கினார். ஆனால் திருஷ்டத்யும்னன் கலங்காமல் துவேஷ சிரிப்புச் சிரித்துக்கொண்டு பாணங்களைப் பொழிந்தான். துரோணரும் அவன் எய்த பாணங்களையும் வீசிய கத்தியையும் கதாயுதத்தையும் வெகு சாமர்த்தியமாகத் தம் அம்புகளால் வெட்டித் துண்டாக்கினார். திருஷ்டத்யும்னனுடைய வில்லைப் பல தடவை துரோணர் அறுத்து வீழ்த்தினார். திருஷ்டத்யும்னனுடைய சாரதியும் வீழ்த்தப்பட்டான். அதன்மேல் கோபங்கொண்டு கதாயுதம் ஒன்று எடுத்துத் தேரினின்று கீழே குதித்துத் துரோணர்மேல் பாய வந்தான். துரோணர் கதாயுதத்தையும் பாணங்களால் கீழேவிழச் செய்தார். பாஞ்சாலன் ஆத்திரம் தாங்காமல் கத்தியை வீசிக்கொண்டு யானைமேல் சிங்கம் பாய்வதுபோல் துரோணரை நோக்கிச் சென்றான். துரோணர் சரங்களைப் பொழிந்து அவனை தடுத்து நடக்கவும் முடியாத நிலை

மையை அவன் எய்தும்படி செய்தார். அந்தச் சமயத்தில் பீமசேனன் திருஷ்டத்யும்னனுடைய நிலைமையைத் தெரிந்து விரைவாக வந்து துரோணர் பேரில் பல பாணங்களை விட்டான். அவ்வாறு அவகாசம் செய்துகொண்டு பாஞ்சாலனைத் தன தேரின்மேல் ஏற்றிக்கொண்டு சென்றான்.

இதைப் பார்த்த துரியோதனன் பீமனைத் தாக்கும்படி கலிங்கர் சேனைக்குக் கட்டளையிட்டான்.

பீமசேனன் தன்னை எதிர்த்த கலிங்கர் படையைச் சின்னபின்னமாக செய்து வெட்டி நாசமாக்கினான். காலனே பீமனைப்போல் உருவம் எடுத்து வந்து, கலிங்கரை வதம் செய்கிறான் 'என்று சேனை முழுவதும் அலறிற்று. கௌரவச் சேனை உற்சாகம் அழிந்து பயப்படுவதை பார்த்த பீஷ்மர் கலிங்கருடைய உதவிக்கு அந்த இடம் வந்து சேர்ந்தார். பீஷ்மர் பீமனைத் தாக்கச் சென்றதை யறிந்து சாத்யகியும் அபிமன்யுவும் மற்றவர்களும் பீஷ்மரைத் தாக்கினார்கள். சாத்யகி விடுத்த ஒரு அம்பு பிதாமகருடைய சாரதியை வீழ்த்திற்று. சாரதி வீழ்ந்ததும் குதிரைகள் பயந்துக்கொண்டு எதிர்பாராத வேகத்துடன் யுத்தகளத்தை விட்டு ஓடின. இதைப் பார்த்துப் பாண்டவ சைன்யம் குதூகலம் அடைந்தது. கூட்டோடு கூடாகக் கௌரவச் சேனையைப் பலமாகத் தாக்கிற்று. அருச்சுனன் அன்று காட்டிய பராக்கிரமத்தினால் கௌரவச் சேனை மிகவும் சேதமடைந்தது. கௌரவ பட்சத்து வீரர்கள் உற்சாகம் இழந்து சூரியன் எப்போது மறைவான் என்று எதிர்நோக்கிக்கொண்டிருந்தார்கள்.

சூரியன் அஸ்தகிரி அடைந்ததும் பீஷ்மர் துரோணரைப் பார்த்து "யுத்தத்தை இப்போது நிறுத்துவதே உசிதம். நமமுடைய சேனையானது களைப்பும் பயமும் அடைந்திருக்கிறது" என்றார். பாண்டவர் பக்கத்தில் தனஞ்சயன முதலானோர் நானாவித வாத்திய கோஷங்களுடன் வெகுசந்தோஷமாகத் தங்கள் பாசறைகளுக்குத் திரும்பினார்கள். முதல் நாள் யுத்தத்தில் பாண்டவர்கள் பயந்ததுபோல் இரண்டாவது நாள் முடிவில் கௌரவர்கள் மனக் கலக்கத்தை அடைந்தார்கள்.

# மூன்றாவது நாள் யுத்தம்

மூன்றாவது நாள் உதயமானதும் பீஷ்மர் தம் சேனையைக் கருடவியூகமாக அமைத்துத் தாமே அதன் முன்னணியில் நின்றார். துரியோதனன் வியூகத்தின் பின் பாகத்தில் தன் பரிவாரத்துடன் நின்று காத்தான். மிக்க ஜாக்கிரதையாக எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தபடியால் வியூகம் அன்று உடையவே உடையாது என்று கௌரவர்கள் நிச்சயமாக இருந்தார்கள்.

பாண்டவர்கள் தம் சேனையை நன்றாகவே அணிவகுத்தார்கள். தனஞ்சயனும் திருஷ்டத்யும்னனும் கௌரவர்களுடைய கருட வியூகத்தை வளைத்துத் தாக்கப் பாண்டவ சேனையை அர்த்த சந்திர வடிவமாக வகுத்தார்கள். பிறையின் வலப்பக்கத்துக் கொம்பில் பீமனும் இடக் கொம்பில் அருச்சுனனுமாகச் சேனையை இரு பக்கத்திலும் காத்து நடத்தினார்கள்.

இவ்வாறு அணிவகுக்கப்பட்ட இரு சேனைகளும் ஒன்றையொன்று தாக்கின. எல்லா பகுதிப் படைகளும் போரில் கைகலந்து இரத்தம் ஆறாக ஓடிற்று. தேரும் குதிரையும் யானையும் கிளப்பிய புழுதி சூரியனை மறைத்தது. தனஞ்சயன் மிகக் கடுமையாகத் தாக்கினான். ஆயினும் பகைவரின் வியூகத்தை உடைக்க முடியவில்லை.

பிறகு, கௌரவர்களும் பாண்டவர் வியூகத்தை உடைக்கப்பார்த்தார்கள். கௌரவரின் முழு பலமும் அருச்சுனன் மேல் செலுத்தப்பட்டது. பளபள வென்று மின்னும் கூரிய சக்தியாயுதங்களையும் பரிசங்களையும் ஈட்டிகளையும் முத்காங்களையும் பரசுகளையும் தனஞ்சயனுடைய தேரின் மேல் வீசினார்கள். விட்டிற் பூச்சிக் கூட்டத்தைப்போல் தன் ரதத்தை நோக்கி வரும் சஸ்திரங்களை அருச்சுனன் அற்புத சாமர்த்தியமாகத் தன் ரதத்தைச் சுற்றி அம்புகளை இடைவிடாமல் செலுத்தி அரண் உண்டாக்கிக்கொண்டு தடுத்தான்.

மற்ருெரு புறம் பெரும் படையோடு வந்த சகுனியை சாத்யகியும் அபிமன்யுவும் எதிர்த்தார்கள். சாத்யகியின் தேர் உடைந்து தூள் தூளாகப் போயிற்று. உடனே அவன் அபிமன்யுவின் தேரில் ஏறிக்கொண்டு ஒரே ரதத்தில் இருவருமாகச் சகுனியின் சேனையைத் தாக்கித் துவம்சம் செய்தார்கள். துரோணரும் பீஷ்மரும் இருவரும் சேர்ந்து தருமபுத்திரன் இருந்த படை வகுப்பைத் தாக்கினார்கள். நகுல சகதேவர்கள் தரும புத்திரனுக்குச் சகாயமாகச்சென்று துரோணருடைய படையை எதிர்த்தார்கள். பீமனும் கடோற்கசனும் சேர்ந்து துரியோதனனை எதிர்த்தார்கள். அந்தப் போரில் கடோத்கசன் தன பிதாவையும் மிஞ்சும்படியான பராக்கிரமத்தைக் காட்டினான்.

பீமனுடைய பாணம் துரியோதனனை அடித்ததினால் அவன் மூர்ச்சையடைந்து ரதத்தில் பிரஞ்ஞையில்லாமல் சாய்ந்தான். இதைக் கண்டு அவனுடைய சாரதி தேரை வேகமாக போர்க்களத்திநின்று அப்புறப்படுத்தினன். துரியோதனன் மூர்ச்சையடைந்ததைக் கண்டு சேனை பீதி யடைந்து அணிவகுப்புக் கலைந்து போகும் என்று அவன இவவாறு செய்தான். ஆனால் அதுவே குழப்பத்துக்குக் காரணமாயிற்று. துரியோதனன் யுத்தகளத்தை விட்டுப போயவிட்டான் என்று கௌரவ சேனை கலக்கமடைந்து இங்கு மங்கும் ஒழுங்கின்றி ஓடியதால் அணிவகுப்பு அடியோடு கலைந்துவிட்டது. ஓட்டம் பிடித்த படைகளைப் பீமசேனன் துரத்திச் சென்று பாணங்களால் துன்புறுத்தினன்.

இவவாறு கௌரவ சேனையானது சிதறி யோடுவதைத் துரோணரும் பீஷ்மரும் மிகவும கஷ்டப்பட்டுத் தடுத்து நிறுத்தினார்கள். துரியோதனனும் திரும்ப வந்து நாலா பக்கமும சென்று சிதறிக்கிடந்த சேனையை மறுபடி ஒன்று கூட்டி அணிவகுத்தான். அதன்மேல் அவன் பீஷ்மரிடம் சென்று "நீரும் துரோணரும் நின்று தலைமை வகித்த சேனை இவ்வாறு சிதறியடிக்கப்பட்டு ஓடும்போது அந்த அவமானத்தை எவ்வாறு பொறுத்துக்கொண்டு சும்மா நிற்கிறீர்கள்? பாண்டவர்களிடம் உமக்குள்ள அன்பே இதற்குக் காரணம. 'பாண்டவர்

களையும் திருஷ்டத்யும்னனையும் சாத்யகியையும் என்னால் எதிர்க்க முடியாது. அவர்கள் எனக்குப் பிரியமானவர்கள் என்று எனக்கு ஏன் முந்தியே வியக்தமாகச் சொல்லியிருக்கக் கூடாது? இவர்களை எதிர்ப்பது உண்மையில் உங்களுக்கு ஒரு கஷ்டமல்ல. நீரும் துரோணரும் என்னைக் கைவிடுவதாயிருந்தால் இப்போதாவது பளிச் சென்று சொல்லி விடலாம்'' என்று பிதாமகரைத் தாக்கிப் பேசினான்.

தோல்வியினால் ஏற்பட்ட மனக் கலக்கத்தினாலும், தான் செய்த தவறுதல்கள் பீஷ்மருக்கு வெறுப்பாக இருப்பதை முதலிலிருந்து அறிந்திருந்தபடியாலும் துரியோதனன் இவ்வாறு பேசினான்.

மூர்க்கனுடைய பேச்சைக் கேட்டு பீஷ்மர் சிரித்தார். ''அரசனே! உனக்கு நான் சந்தேகமறச் சொன்ன புத்திமதியை நீ கேட்கவில்லை. பாண்டவர்களை நீ ஜயிக்க முடியாது என்கிற உண்மையை உனக்கு நான் சொல்லியும் கேளாமல் நீ யுத்தத்தை ஆரம்பித்தாய். அது என் குற்றமல்ல. ஆயினும் உனக்காக நான் என் கடமையைச் செய்கிறேன். நான் கிழவன். என் சக்தியின் அளவில் நான் செய்யக் கூடியதைச் செய்வேன். என் முழு பலத்தையும் வஞ்சனையின்றி உன் கண் முன்னில் செலுத்துவேன்'' என்று துரியோதனனுக்குச் சொல்லி விட்டு மறுபடியும் போர் துவக்கினார்.

முற் பகலில் நடத்திய நிகழ்ச்சிகளின் பயனாக பாண்டவர்கள் மிகக் களிப்புற்றிருந்தார்கள். ஓடிய சேனையை ஒன்று சேர்த்து மறுபடியும் பீஷ்மர் தாக்குவார் என்று எதிர்ப்பார்க்கவில்லை. துரியோதனன் இடித்துச் சொன்ன வார்த்தைகள் அவருடைய கோபத்தைத் தூண்டவே, சுழலும் கொள்ளிக்கட்டையின் வட்டத்தைப்போல் யுத்தகளத்தில் நாலாபக்கமும் சுற்றினார். அது வரையில் நடைபெறாத கொடூரமான யுத்தம் நிகழ்ந்தது. மாயையினால் தன்னைப் பல பீஷ்மர்களாகச் செய்து கொண்டாரோ என்று எல்லாரும் எண்ணும்படியாக பீஷ்மர் ரணகளத்தில் எங்கு பார்த்தாலும் காணப்பட்டார். நெருப்பில்

பூச்சிகள் வந்து விழுவதுபோல் அவரைத் தாக்கிய வீரர்கள் மாண்டார்கள். பாண்டவ சேனை தைரியம் இழந்து சிதறிப் போக ஆரம்பித்தது. வாசுதேவனும் பார்த்தனும் சிகண்டியும் எவ்வளவு முயற்சித்தும் தடுக்க முடியவில்லை. அப்போது கிருஷ்ணன் "தனஞ்சயனே! உன்னுடைய சோதனைக் காலம் வந்து விட்டது. பீஷ்மர் துரோணர் பந்துமித்திரர்கள் அனைவரையும் கொல்லப்போகிறேன் என்று நீ செய்த பிரதிஜ்ஞையை நிறைவேற்றவேண்டிய காலம் இப்போது வந்துவிட்டது. நம்முடைய சேனை பயத்தினால் நிலைதவறி யிருக்கிறது. இப்போது நீ பீஷ்மரைத் தாக்கவேண்டும்" என்றான்.

x x x

"ரதத்தைச் செலுத்து" என்றான் அருச்சுனன்.

பீஷ்மரை நோக்கி மிக வேகமாகத் தனஞ்சயனுடைய தேர் சென்றது. பிதாமகர் அதைப் பார்த்துச் சரமாரி பொழிந்தார். அருச்சுனன் காண்டீபத்தை வளைத்து மூன்று பாணங்களைச் செலுத்தி பீஷ்மருடைய வில்லை உடைத்தான். உடனே அவர் வேறொருவில்லை எடுத்தார். அதுவும் முறிந்தது. அருச்சுனனுடைய லாகவத்தைப் பார்த்து ஆசாரியர் மகிழ்ந்து "வீரனே! வா!" என்று சொல்லி வேறொரு வில்லை எடுத்துப் பிழையாத பாணங்களைப் பொழிந்தார். அந்தத் தாக்குதலை அருச்சுனன் தடுத்த முறையானது கிருஷ்ணனுக்குத் திருப்தி தரவில்லை. பிதாமகருடைய தாக்குதல் பலமாக இருந்தது. அவர் பேரில் இவன் வைத்திருக்கும் கௌரவத்தால் இவனுடைய கைகள் சரியாக வேலை செய்யவில்லை. தங்களுடைய படை பயந்து ஓடிக்கொண்டிருக்கும் இந்தச் சமயத்தில் இவ்வாறு தயங்கினால் காரியம்கெட்டுப்போகும் என்று கிருஷ்ணன் தனக்குள் எண்ணினான். தேரைமிகத் திறமையாக வளைத்து வளைத்து ஓட்டினான். ஆயினும் உடலில் பல இடங்களில் அருச்சுனனும் கிருஷ்ணனும் அம்புகளால் அடிபட்டார்கள். ஜனார்த்தனனுடைய கோபம் பொங்கிற்று.

"இதை இனிப் பொறுக்க முடியாது. பீஷ்மரை நானே கொல்லுவேன்!" என்றுகிருஷ்ணன் குதிரைகளின்

கடிவாளத்தை விட்டுவிட்டுச் சக்கராயுதத்தைக் கையில் பிடித்துத் தேரினின்று கீழே குதித்தான். குதித்துப் பீஷ்மர் இருந்த இடம் நோக்கி மிக வேகமாகச் சென்றான்.

பீஷ்மரோ இதைக் கண்டு கலக்கமடையவில்லை. சந்தோஷ முகத்தோடு "வா! வா! தாமரைக் கண்ணா! மாதவா! லோகநாதா! உன்னை வணங்குகிறேன். எனக்காகத் தேரினின்று இறங்கினாயா? நீயே என் உயிரைக் கொள்வாயாக! மூவுலகத்திலும் எனக்குப் புகழ் அளிக்க வருவாய்! உன் கையினால் நான் கொல்லப்பட்டால் மீளாப் பதவியை அடைவேன்" என்று கூறினார்.

காரியம் கெட்டுவிட்டது என்று அருச்சுனன் ரதத்தை விட்டுக் கீழே அதி வேகமாகச் சென்றுகொண்டிருந்த கிருஷ்ணனைத் துரத்திக்கொண்டு ஓடினான். வெகு சிரமப்பட்டுக் கிருஷ்ணனைப் பிடித்துக் கொண்டான். "கோபம் வேண்டாம்! திரும்புவாயாக. இந்தக் காரியத்தை நானே செய்கிறேன்" என்று அருச்சுனன் சொன்ன பின் கிருஷ்ணன் மறுபடியும் தேர் ஏறிக் குதிரைகளை நடத்தலானான்.

இதன்பின் அருச்சுனன் கௌரவப் படையைப் பலமாகத் தாக்கி ஆயிரக்கணக்கானவர்களை வதம் செய்தான். அன்று மாலை யுத்தம் முடிந்ததும் கௌரவ சேனை பெருந் தோல்வியுற்றுத் தீவட்டிகளின் வெளிச்சத்தில் பாசறை திரும்பிற்று.

"அருச்சுனன் வெற்றி பெறுவது தகுந்ததே. அவனுடைய சாமர்த்தியத்தை வேறு யார் படைத்திருக்கிறார்கள்?" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொண்டு போனார்கள்.

# நான்காவது நாள்

யுத்த நிகழ்ச்சிகள் தினமும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். அடிப்பதும் கொல்லுவதும் தவிர வேறே ஒன்றுமில்லை. கதையில் சுவாரஸ்யம் இருக்காது. ஆயினும் பாரதக் கதையில் யுத்தமே பெரும் நிகழ்ச்சி. அதை விட்டு விட்டால் கதா பாத்திரங்களின் உணர்ச்சி வேகங்களை நாம் சரியாக உணர முடியாது.

பொழுது விடிந்தவுடன் பீஷ்மர் கௌரவ சேனையை மறுபடி அணி வகுத்தார். துரோணர் துரியோதனன் முதலியோரால் சூழப்பட்டு நின்ற பிதாமகர் தேவர்களால் சூழப்பட்ட வஜ்ராயுதபாணியான இந்திரனைப்போல் விளங்கினார்! அணி வகுக்கப்பட்ட சேனையானது மகா ரதர்களும் யானைகளும் குதிரைகளும் நிறைந்து மேகமும் மின்னலும் இடி முழக்கமும் நிறைந்த மாரிகாலத்து ஆகாயம் போல் விளங்கிற்று. பிதாமகர் சேனையை முன் செல்லக் கட்டளையிட்டார். வானரக் கொடி பறந்த தேரின் மேல் நின்ற அருச்சுனன் பிதாமகருடைய காரியங்களைத் தூரத்தினின்று பார்த்தான். அவனும் ஆயத்தமானான். யுத்தம் தொடங்கிற்று.

அசுவத்தாமனும் பூரிசிரவசும் சல்லியனும் சித்திரசேனனும் சலனுடைய மகனும் ஆகிய ஐவர் அபிமன்யுவைச் சூழ்ந்துகொண்டு தாக்கினார்கள். ஐந்து யானைகளை ஒரு சிங்கம் எதிர்ப்பதுபோல் அவன் இந்த ஐவரையும் எதிர்த்துப் போர் புரிந்தான். பலர் சூழ்ந்துகொண்டு தன் குமாரனைத் தாக்குவதைப் பார்த்த அருச்சுனன் கோபங்கொண்டு சிம்மநாதம் செய்து மகனுக்கு உதவியாக வந்து சேர்ந்தான். அதன்மேல் போரின் வேகம் இன்னும் அதிகரித்தது. திருஷ்டத்யும்னனும் பெரியதொரு படையுடன் வந்து சேர்ந்தான்.

சலனுடைய மகன் சொல்லப்பட்டபடியால் சலனும் சல்லியனும் திருஷ்டத்யும்னனைப் பலமாகத் தாக்கினார்கள். திருஷ்டத்யும்னனுடைய வில்லைச் சல்லியன் ஒரு கூரிய

பாணத்தை வீசி அறுத்தான். இதைக் கண்ட அபிமன்யு சல்லியன்மேல் அம்புகளைப் பொழிந்தான். அபிமன்யுவின் கோபத்தைப் பார்த்துச் சல்லியனுக்கு அபாயம் வந்தது என்று துரியோதனனும் அவனுடைய தம்பிகளும் வந்து சல்லியனைச் சூழ்ந்து காத்தார்கள். அச்சமயம் பீமசேனனும் வந்து சேர்ந்துவிட்டான்.

**பீ**மன் கதாயுதத்தைக் கையில் எடுத்தான். அப்போது தன் தம்பிகள் நடுங்கியதைக் கண்ட துரியோதனனுக்குக் கோபம் உண்டாயிற்று. பெரியதொரு யானைப் படையை பீமன் மேல் செலுத்தினான். யானைகளைக் கண்டதும் பீமன் ரதத்தினின்று இறங்கிக் கையில் ஒரு இரும்பு கதையை எடுத்துக்கொண்டு அந்த மிருகங்களைத் தாக்கினான். அவை வெகுண்டு ஒன்றை ஒன்று தாக்க ஆரம்பித்தன. எப்போதுமே யானைப் படைகளின் கதி இதுவென்று நம்முடைய பழைய கதைகளிலும் தெரிகிறது. பாண்டவச் சேனை வீரர்கள் அந்தச் சமயத்தை உபயோகித்து யானைகள் மீது சரங்களைப் பொழிந்து அவற்றை இன்னும் வெறி கொள்ளச் செய்தார்கள்.

பீமன் யானைக்கூட்டத்தில் பிரவேசித்து அவற்றை வெட்டிக் கொன்றது, பூர்வத்தில் இந்திரன் மலைகளைப் பிளந்து வீழ்த்திய காட்சியைக் காட்டிற்று. அந்த மிருகங்கள் பெருங்கணக்கில் மாண்டு வீழ்ந்து யுத்த களத்தில் பர்வதங்கள் போலக் கிடந்தன. எஞ்சித் தப்பின யானைகள் இங்குமங்கும் ஓடி கௌரவப் படையையே நாசம் செய்தன. பிறகு துரியோதனனுடைய கட்டளைப்படி எல்லாப்படைகளும் பீமனை எதிர்த்தன. அவனோ மேருவைப் போல் அசைவற்று நின்றான்.

அச்சமயம் பாண்டவ சைன்யத்தில் முக்கியமான வீரர்கள் அவனுக்குச் சகாயமாக வந்து சேர்ந்தார்கள்.

துரியோதனன் எய்த பல பாணங்கள் பீமசேனனுடைய மார்பில் பட்டுத் துன்பப்படுத்தின. பீமசேனன் மறுபடியும் தேரின்மேல் ஏறித் தன் சாரதியான விசோகனைப் பார்த்து, "விசோகனே! இந்த யுத்த களத்தில் இப்போது என் முன்பாக திருதராஷ்டிர புத்தி

ரர்கள் இவ்வளவு பேரும் வந்து நிற்பது எனக்கு மகிழ்ச்சி தருகிறது. என்னுடைய ஆசையானை மரத்தில் பழங்கள் தோன்றியவாறு இவர்கள் இன்று என் கையில் சிக்கி னார்கள். குதிரைகளைச் சரியாக இழுத்துப் பிடித்து நடத்து. இவர்களை நான் யமாலயம் அனுப்பப் போகி றேன்'' என்றான்.

இவ்வாறு சொல்லிவிட்டு வில்லை வளைத்துத் துரியோதனனை மேல் பல அம்புகளை செலுத்தினான். துரியோதனனுக்குக் கவசம் இல்லையேல் மாண்டிருப்பான. அன்று பீமன் துரியோதனனுடைய தம்பிகள் எண்மரை வதம் செய்தான். துரியோதனனும் பல பாணங்களைப் பீமன் மேரில் செலுத்தினான. பீமனபிடித்திருந்த வில்லைத் துரியோதனன் ஒரு அம்பைச் செலுத்தி ஒடித்தான. உடனே பீமன வேறொரு வில்லை எடுத்து அதில் கத்தி யைப்போன்ற அம்பைத்தொடுத்துத்துரியோதனனுடைய வில் அறுபட்டுக் கீழே விழுமாறு செய்தான். துரியோத னனும் வேறொரு வில்லை எடுத்துக் கோரமான ஒரு பாணத்தைத் தொடுத்து நன்றாகக் குறி பார்த்துப்பீமனை நடுமார்பில் அடித்தான். அதன் வேகத்தால் பீமன் மூர்ச்சை யடைந்து உட்கார்ந்தான்.

இதைப் பார்த்த பாண்டவ வீராகளான அபிமன்யு முதலானவர்கள் துரியோதனன்மேல் சரமாரி பொழிந் தார்கள். தகப்பனாின் நிலையைக் கண்டு கடோத்கச னுக்குக் கோபம் மேலிட்டுப் பெரும் போர் துவக்கினான். அந்தப் போரைக் கௌரவப் படையினால் தாங்க முடிய வில்லை.

அதைப் பார்த்துப் பீஷ்மர், "இந்த அரக்கனோடு இன்று நாம் யுத்தம செய்ய முடியாது. நம்முடைய சேனை களைத்துப் போயிருக்கிறது. அஸ்தமன காலமும் ஆயிற்று, அரக்கனுக்கோ இருட்டே பலம் தரும். நாளைய தினம பார்ப்போம்'' என்று துரோணருக்குச் சொல்லி விட்டுச் சேனையைத் திருப்பினார். துரியோதனன் தன் சகோதரர்கள் பலரை இழந்த துக்கத்தால் பீடிக்கப்

பட்டுக் கண்களில் நீர் ததும்பப் பாசறையில் உட்கார்ந்து ஆழ்ந்து சிந்திக்கலானான்,

x x x

போரில் நடந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் சஞ்சயன் சொல்லக் கேட்டுக்கொண்டிருந்த திருதராஷ்டிரன், "அப்பா, சஞ்சயா! என்னைச் சேர்ந்தவர்கள் கொல்லப்பட்டார்கள், துன்பப்பட்டார்கள் என்றே எப்போதும் சொல்லி வருகிறாயே? எனக்கு மிகவும் துக்கம் உண்டாகிறது. எந்த உபாயம்செய்து நம்மவர்கள் ஜயிக்கப் போகிறார்கள்? எனக்குத் தாங்கமுடியாத பயமாக இருக்கிறதே! முயற்சியைக் காட்டிலும் விதியே பெரிது போலிருக்கிறது" என்றான்.

அதைக் கேட்ட சஞ்சயன் "அரசனே! இந்த அநியாயம் உம்முடைய காரியமே அல்லவா? மனக்கலக்க மடையாமல் உறுதியான மனத்துடன் நிகழ்ச்சிகளைக் கேட்க வேண்டும்" என்றான்.

"விதுரனுடைய வாக்கியங்கள் நிச்சயமாகி வருகின்றன" என்று திருதராஷ்டிர மகாராஜன் சொல்லிக் கொண்டு பெருந்துயரத்தில் மூழ்கினான்.

# ஐந்தாம் நாள்

"கைகளால் நீந்தி ஒருவன் கடலைத் தாண்டி அக்கரையை அடைய முடியாததைப்போல் இந்தப் பெருந் துக்கத்தின் அக்கரையை நான் காணப்போவதில்லை" என்றான் திருதராஷ்டிரன்.

யுத்தகளத்தில் அவ்வப்போது நடை பெற்றதையெல்லாம் சஞ்சயன் கண்ணில்லாத கிழ அரசனுக்குச் சொல்லி வரும்போது துக்கத்தைத் தாங்க முடியாமல் அவன் பிரலாபிப்பான்.

"என் புத்திரர்கள் அனைவரையும் பீமன் கொல்லப் போகிறான். அவர்களைக் காப்பாற்றக்கூடிய வீரனை நம்முடைய சேனையில் யாரும் இருப்பதாக நான் எண்ணவில்லை. யுத்தத்தில் நம்முடைய சேனை பயந்து ஓடியதை பீஷ்மரும் துரோணரும் கிருபரும் அசுவத்தாமனும் சும்மா பார்த்துக் கொண்டிருந்தார்களா? அவர்கள் என் மக்களுக்கு என்ன உதவி எப்போது செய்யப் போவதாக எண்ணி இருக்கிறார்கள்? என் புத்திரர்கள் எவ்வாறு மிஞ்சப் போகிறார்களோ?" என்று சொல்லிக் கிழவன் அழுதான்.

"அரசனே! சாவதானமாக இருக்க வேண்டும். பாண்டவர்கள் தருமத்தில் நிற்கிறார்கள். ஆனபடியால் யுத்தத்தில் வெற்றி பெறுகிறார்கள். நம்முடைய புத்திரர்கள் வீரர்களாயினும் கெட்ட எண்ண முடையவர்கள். ஆனபடியால் க்ஷீணதசை யடைகிறார்கள். அவர்கள் பாண்டவர்களுக்கு அனேக அபகாரங்கள் செய்திருக்கிறார்கள். அந்தச் செயல்களின் பயனை இப்போது அனுபவிக்கிறார்கள். பாண்டவர்கள் மந்திரமாவது மாயமாவது ஒன்றும் செய்யவில்லை. க்ஷத்திரியர்கள் யுத்தம் செய்கிற முறையில்தான் செய்து வருகிறார்கள். நியாய வழியில் நின்றபடியால் பலம் பெற்றிருக்கிறார்கள். மித்திரர்கள் சொன்னதை நீர் கேட்கவில்லை. விதுரரும் பீஷ்மரும் துரோணரும் நானும் தடுத்தபோது

உம்முடைய வழியிலேயே சென்றீர். நோயாளி மருந்தைச் சாப்பிடமாட்டேன் என்று மூர்க்கமாக நடந்து கொள்வதைப் போல் நீர் மகனுடைய அபிப்பிராயத்துக்கு இணங்கிக் குலத்துக்குப் பத்தியமான சொல்லை ஏற்றுக்கொள்ளவில்லை. இப்போது தவிக்கிறீர். துரியோதனனும் நான்காம் நாள் இரவில் உம்மைப் போலவே பீஷ்மரைக் கேட்டான். அவர் சொன்னதைக் கேளும்" என்று சொல்லிக் கதையைச் சொல்ல ஆரம்பித்தான் சஞ்சயன்.

x x x

நான்காம் நாள் யுத்தம் முடிந்தபின் இரவில் பிதாமகரிடம் தனியாகச் சென்று துரியோதனன், "நீரும் துரோணரும் கிருபரும் அசுவத்தாமாவும் கிருதவர்மாவும் சுதக்ஷிணனும், பூரிசிரவசும் விகர்ணனும் பகதத்தனும் யமனுக்கும் பயந்தவர்கள் அல்லவென்பது உலகத்துக்கெல்லாம் தெரியும். உங்களுடைய வல்லமைக்கு வரம்பே இல்லை என்பதில் சந்தேகமில்லை. பாண்டவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தாலும் உங்களில் ஒருவரை வெல்ல முடியாது. இப்படி இருந்தும் குந்தி புத்திரர்கள் நம்மைத் தினமும் தோற்கடித்து வருவதின் ரகசியம் என்ன?" என்று வணக்கமாகக் கேட்டான்.

பீஷ்மர், "ராஜனே! நான் சொல்லுவதைக் கேள். பலவிதத்தில் உனக்கு நான் ஹிதத்தைச் சொன்னேன். நீ பெரியோர் சொன்னதைச் செய்யவில்லை. பாண்டவர்களிடம் நீ சமாதானமாகப் போவதே நலம். அவ்வாறு செய்வது உனக்கும் உலகத்துக்கும் நல்லது. ஒரே குலத்தைச் சேர்ந்த நீங்கள் இந்த ராஜ்யத்தைச் சுகமாக அனுபவிக்கலாம்; இவ்வாறு நான் உனக்கு முன்னமே சொன்னதை நீ கேட்கவில்லை. பாண்டவர்களை அவமதித்தாய். அதன் பயனை அடைகிறாய். ஸ்ரீ கிருஷ்ணனாலே காக்கப்பட்டிருக்கும் பாண்டவர்கள் வெற்றியடைவதில் சந்தேகமில்லை. இப்போதும் சமாதானமாகப் போகலாம். பலசாலிகளான சகோதரர்களைச் சிநேகம் செய்து கொண்டு பூமியை அனுபவிக்கலாம். நரநாராயணர்களாகிய கிருஷ்ணனையும் தனஞ்சயனையும் அவமதித்தாயானால் நீ நாசமடைவாய்" என்று சொன்னார்.

துரியோதனன் விடைபெற்றுக்கொண்டு தன் இருப்பிடம் சென்று படுக்கையில் படுத்தான். ஆனால் தூக்கம் வரவில்லை.

x x x

மறு நாள் பொழுது விடிந்தவுடன் பழையபடி இரண்டு படைகளும், யுத்தத்துக்கு நின்றன. பீஷ்மர் கௌரவ சேனையைப் பலமாக வியூகப்படுத்தினார். பாண்டவ சேனையும் யுதிஷ்டிரரால் நன்றாக வியூகப்படுத்தப் பட்டிருந்தது. பீமசேனன் வழக்கம்போல் முன்னணியில் நின்றான். சிகண்டியும் திருஷ்டத்யும்னனும் சாத்யகியும் அடுத்தாற்போல சேனையைக் காத்து நின்றார்கள். மற்ற வீரர்கள் அதற்கும் பின் புறமாக நின்றார்கள். அனைவருக்கும் பின் தருமபுத்திரனும் நகுல சகதேவர்களும் இருந்தார்கள்.

பீஷ்மர் வில்லை வளைத்து அஸ்திரங்களை விட ஆரம்பித்தார். வெகு சீக்கிரம் பாண்டவ சேனையைக் கவலை அடையச் செய்தார். சேனை சிதறுவதைப் பார்த்த தனஞ்சயன் பீஷ்மரைப் பல அம்புகளால் துன்புறுத்தினான்.

துரியோதனன் தன் வழக்கம்போல் துரோணரிடம் சென்று தாக்கிப் பேசிக் கோபம் மூட்டினான். அவர் "மூர்க்கனே! பாண்டவர்களுடைய பராக்கிரமத்தை அறியாமல் நீ பேசுகிறாய். ஆயினும் என்னால் வஞ்சனையில்லை" என்று சொல்லிப் பாண்டவ சேனையைப் பலமாகத் தாக்கினார். சாத்யகிக்கும் துரோணருக்கும் பயங்கரமான யுத்தம் நடந்தது. சாத்யகி துரோணருடைய தாக்குதலைத் தாங்க முடியாம லிருந்ததைக் கண்டு பீமசேனன் துரோணரைத் தாக்கினான்.

அதன் மேல் யுத்தம் இன்னும் அதிக வேகம் கொண்டது. துரோணரும் பீஷ்மரும் சல்லியனும் சேர்ந்து பீமனை எதிர்த்தார்கள். அச்சமயம் சிகண்டி பீஷ்மர் பேரிலும் துரோணர் பேரிலும் அம்புமாரி பொழிந்தான். சிகண்டி நுழைந்ததும் பீஷ்மர் விலகிச் சென்றார். சிகண்டி ஆண் பிறப்பல்ல என்றும், பெண்ணாகப் பிறந்து வளர்ந்

தவன் என்றும், க்ஷத்திரியனுக்குப் பெண்ணோடு போர் புரிவது அதருமம் என்றும் பீஷ்மருடைய கொள்கை. இதுவே கடைசியில் பிதாமகருடைய மரணத்துக்கும் காரணமாகும் என்று விதிக்கப்பட்டிருந்தது.

பீஷ்மர் விலகியதைப் பார்த்து துரோணர் சிகண்டியை எதிர்த்தார். மகாரதனான சிகண்டியினால் துரோணருடைய எதிர்ப்பைத் தாங்க முடியவில்லை. எனவே பின் திரும்பினான்.

முற்பகல் முழுதும் கோரமான சங்குல யுத்தம் நடந்தது. சேனை முழுதும் கை கலந்து இரு பக்கத்திலும வரம்பற்ற கொலை நடந்தது. பிற்பகலில் துரியோதனன சாத்யகியை எதிர்க்கப் பெரும் படையை அனுப்பினான். சாத்யகி அந்தப் படையை முற்றிலும் நாசம் செய்து விட்டுப் பூரிசிரவசைத் தேடி எதிர்த்தான். அவனோ மகா பராக்கிரமசாலி. சாத்யகியின் படையைத் தாக்கி அவர்கள் அனைவரும் புறங்காட்டி ஓட்டம் பிடிக்கச் செய்தான். சாத்யகி ஒருவனே நின்றான். சாத்யகியின் நிலைமையைப் பார்த்து அவனுடைய பத்து குமாரர்களும் வந்து பூரிசிரவசைத் தாக்கினார்கள்.

ஒன்று கூடி வந்த அந்தப் பத்து வீரர்களையும் பூரிசிரவசு ஒருவனே எதிர்த்துப் போர் புரிந்தான். பத்துப் பேரும் அவனைச் சூழ்ந்துகொண்டு சரமாரி பொழிந்தார்களாயினும அவன் அவர்களுடைய விற்களைத் தன அம்புகளால் சேதித்து அவர்கள் பதின்மரையும் யமாலயம் அனுப்பினான். சாத்யகியின் பத்து குமாரர்களும் இடி விழுந்த மரங்களைப்போல யுத்தகளத்தில் வீழ்ந்தார்கள். தன புத்திரர்கள கொன்று வீழ்த்தப்பட்டதைக் கண்ட சாத்யகி சோகமும் கோபமும் மேலிட்டு பூரிசிரவசின் மேல் பாய்ந்தான். இருவருடைய ரதங்களும் உடைந்து நாசமாயின. கத்தியும் கேடயமுமாகத் தரையில் நின்று இருவரும் ஒருவரை யொருவர் எதிர்த்தார்கள். அந்தச் சமயம் பீமசேனன் அவ்விடம் வந்து சாத்யகியின் முன நின்று யுத்தத்தைத் தடுத்து அவனைத் தன் தேரில் ஏற்றிக்கொண்டு போய்விட்டான். கத்திச் சண்டையில்

யாரும் பூரிசிரவசை ஜெயிக்க முடியாது என்று பீமனுக்குத் தெரியும். ஆகையால் இவ்வாறு சாத்யகியைத் தடுத்தான்.

அன்று மாலை ஆயிரக்கணக்கில் வீரர்கள் அருச்சுனனால் வதம் செய்யப்பட்டார்கள். பார்த்தனை எதிர்த்துக் கொல்லுவதற்காகத் துரியோதனன் அனுப்பிய படை வீரர்கள் அவ்வளவு பேரும் நெருப்பில் பூச்சிகள் விழுந்து சாவதுபோல் மாண்டார்கள். பாண்டவர்கள் சேனையிலிருந்த அரசர்கள் தனஞ்சயனைச் சூழ்ந்துகொண்டு ஜெய கோஷம் செய்தார்கள். அச்சமயம் சூரியன் மறைந்தான். பீஷ்மரின் கட்டளைப்படி களைப்புற்ற குதிரைகளும் யானைகளுமாக எல்லாரும் யுத்த பூமியை விட்டுச் சென்றார்கள்.

# ஆரும் நாள் யுத்தம்

**யு**திஷ்டிரன் கட்டளைப்படி அடுத்த நாள் திருஷ்டத்யும்னன் பாண்டவ சேனையை மகர வியூகமாக அணிவகுத்தான். கௌரவப் படை கிரௌஞ்ச வியூகத்தில் அமைக்கப்பட்டு நின்றது. சேனை வியூகங்களுக்குப் பட்சிப் பிராணிகளின் பெயர்களைக் கொடுத்து வந்தார்கள். தேகப்பயிற்சி முறையில் செய்துவரும் ஆசனங்களுக்கு இவ்வாறு பிராணிகளின் பெயர்களை வைத்துச் சொல்லுவது அனைவருக்கும் தெரிந்த விஷயம். படையின் அணிவகுப்புகளுக்கும் அவ்வாறே பெயர்கள் கொடுத்து வந்தார்கள். படைகளின் பாபபமைப்பு எவ்வாறிருக்க வேண்டும், எந்த எந்தப் படைப்பகுதிகள் எந்த எந்த இடத்தில் நின்று, யார் யார் எந்த ஸ்தானங்களில் தலைமை வகிக்க வேண்டும் என்றெல்லாம் நிச்சயித்துக் காப்புக்கும் தாக்குதலுக்கும் ஒழுங்காக ஏற்பாடுகள் செய்து வருவதே வியூகம். வியூகத்தின் வெளித்தோற்றம் மீன், பருந்து முதலிய பிராணிகளின் தேகத்துக்கு ஒப்புவமை கண்டு பெயரிட்டார்கள். அக்காலத்து யுத்த சாஸ்திரத்தில் பல வியூகங்கள் கண்டிருந்தன.

ஒவ்வொரு நாளும் பாரதப் போரில் அன்று எந்த நோக்கத்துடன் விசேஷமாகக் காரியங்கள் நிறைவேற்ற வேண்டும், எந்தப் போக்கில் நிகழ்ச்சிகள் நடைபெறும் என்பதையெல்லாம் உத்தேசித்து அதற்குத் தகுந்தவாறு வியூக வேறுபாடுகளைச் சேனாதிபதிகள் நிச்சயித்து வந்தார்கள்.

ஆருவது நாள் யுத்தத்தில் காலையிலேயே ஆள்சேதம் பெரிய அளவில் நடக்க ஆரம்பித்தது.

துரோணருடைய சாரதி கொல்லப்பட்டான். சாரதியற்ற தேரைத் துரோணர் தாமே கடிவாளம் பிடித்து நடத்தி பஞ்சுக் குவியலை நெருப்பு எரிப்பதுபோல் பாண்டவ சேனையை நாசம் செய்தார்.

சீக்கிரத்திலேயே இரண்டு வியூகங்களும் உடைந்து போயின. அதன் மேல் இரண்டு பக்கத்துச் சேனைகளும் வரம்பின்றிக் கைகலந்து கோரமாகப் போர் புரிந்தன. ரத்தம் ஆறாகப் பெருகிற்று. களம் முழுதும் உயிர்நீத்த படை வீரர்களும் யானைகளும் குதிரைகளும் உடைந்த தேர்களுமாகக் குவிந்தன.

பீமசேனன் பகைவர்களின் சேனைக்குள் புகுந்து துரியோதனனுடைய சகோதரர்களைக் கண்டு பிடித்து வீழ்த்த வேண்டுமென்று தேடிச் சென்றான். அவர்களும் வெகு சீக்கிரம் அவனைச் சூழ்ந்துகொண்டார்கள். துச்சாதனன், துர்விஷஹன், துர்மதன், ஜயன், ஜயத்சேனன், விகர்ணன், சித்திரசேனன், சுதர்சனன், சாருசித்திரன், சுவர்மன், துஷ்கர்ணன் முதலிய பலர் பீமசேனனைச் சுற்றி ஒரே சமயத்தில் தாக்கினார்கள். பயம் என்பது என்னவென்பதையே அறியாத வாயுபுத்திரன் அவ்வளவு பகைவர்களையும் ஒரே சமயத்தில் நின்று எதிர்த்தான். உயிரோடு அவனைப் பிடிக்க வேண்டும் என்பது அவர்களுடைய ஆசை. அவர்களனைவரையும் கொல்லவேண்டும் என்பது பீமனுடைய ஆசை. போர் உக்கிரமாக நடந்தது. தேவாசுர யுத்தத்தைப் போலவே இருந்தது. திடீரென்று பாண்டுபுத்திரன் பொறுமை இழந்து தன் ரதத்தை விட்டு இறங்கிக் கதாயுதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு "சாரதியே. நீ இங்கே நில். நான் முன் சென்று இந்த திருதராஷ்டிர குமாரர்கள் அனைவரையும் கொன்று முடித்துவிட்டு வருகிறேன். அதுவரையில் நீ இவ்விடத்திலேயே இரு" என்று விசோகனுக்குச் சொல்லிவிட்டு, பகைவர்களின் கூட்டத்திற்குள் நுழைந்தான். குதிரைகளையும் குதிரைக்காரர்களையும் தேர்களையும் நாசமாக்கிக் கொண்டு காலதண்டத்தை எடுத்துவந்த அந்தகனைப் போல் பீமன் கௌரவ சேனைக்குள் புகுந்து திருதராஷ்டிர மக்கள் நின்ற இடம் சென்றான்,

தேர் ஏறிய பீமன் பகைவர்கள் படைக்குள் மறைந்ததைப் பார்த்த திருஷ்டத்யும்னன் விரைவாக அவனைப் பின் தொடர்ந்து சென்றான். அவனுடைய தேரைக்

கண்டுபிடித்துப் பார்க்கையில் சாரதி மட்டும் இருந்து கொண்டு பீமன் இல்லாததைக் கண்டான். திகைத்துப் போய்க் கண்ணில் நீர் ததும்பச் சாரதியைப் பார்த்து,

"விசோக! எனக்கு உயிரைக் காட்டிலும் பிரியனான பீமன் எங்கே?" என்று கேட்டான்.

துருபத குமாரனை வணங்கி விசோகன், "பாண்டு புத்திரன் என்னை இங்கே இருக்கச் சொல்லிவிட்டு, திருதராஷ்டிர புத்திரர்கள் தேர்களில் ஒன்றுகூடி நின்ற சேனா சமுத்திரத்துக்குள் கதை எடுத்துக்கொண்டு பாதசாரியாக நுழைந்து மறைந்தான்!" என்றான். இதைக்கேட்டு பீமசேனனை அனைவரும் சேர்ந்து கொன்றே விடுவார்கள் என்று எண்ணி மிகவும் கவலைப்பட்ட திருஷ்டத்யும்னனும் பகைவர் சேனைக்குள் புகுந்தான். பீமனுடைய கதாயுதத்திற்கு இரையாகி அடிபட்டுக் கிடந்த யானைகளைக் கொண்டே யுத்தகளத்தில் வழி பார்த்துக் கொண்டு சென்றான்.

பகைவர்களுக் கிடையில் பீமனைக் கண்டான். நான்கு பக்கங்களிலும் ரதம் ஏறி எதிர்க்கும் பகைவர்களால் சூழப்பட்டு உடம்பெல்லாம் காயங்கள் பட்டு கோபாக்கினி கக்கிக்கொண்டு கையில் கதாயுதம் பிடித்தவனாக பீமன் நின்றான். திருஷ்டத்யும்னன் அவனைத் தழுவித் தன் தேரில் ஏற்றிக்கொண்டு அவன் உடலில் பதிந்திருந்த அம்புகளையெல்லாம் எடுத்தான்.

அப்போது துரியோதனன் கட்டளையின் பேரில் பல வீரர்கள் ஒன்று சேர்ந்து துருபதன் மகனையும் பீமனையும் தாக்கினார்கள். "இவர்களைக் கொல்லுங்கள். அவர்கள் யுத்தம் கோராமலிருக்கவே அவர்களைத் தாக்குங்கள்" என்று துரியோதனன் கட்டளை யிட்டான். அவ்வாறே யுத்தத்துக்கு அழைக்காத பீமனையும் திருஷ்டத்யும்னனையும் அவர்கள் தாக்கினார்கள்.

அப்போது திருஷ்டத்யும்னன் துரோணரிடம் கற்ற ஒரு ரகசிய அஸ்திரத்தை விட்டு எதிரிகளைப் பிரஜ்ஞை இழக்கச் செய்தான். அச்சமயம் துரியோதனன் வந்து மோகனாஸ்திரத்துக்கு மாற்றான வேறொரு அஸ்திரம்

பிரயோகம் செய்து கௌரவ வீரர்களைப் பிரஜ்ஞை பெறச் செய்து உற்சாகப்படுத்தித் திருஷ்டத்யும்னனைத் தாக்கினன்.

இதற்குள் யுதிஷ்டிரர் அபிமன்யுவின் தலைமையில் பன்னிரண்டு ரத வீரர்களுடன் படையை அமைத்துப் பீமனும் திருஷ்டத்யும்னனும் இருந்த இடத்துக்கு அனுப்பினர். சுபத்திரையின் வீர குமாரன் படையுடன் வந்ததைப் பார்த்துத் திருஷ்டத்யும்னன் மிகுந்த சந்தோஷமடைந்து போரை நடத்தினன். பீமனும் அதற்குள் தண்ணீர் குடித்து இளைப்பாறிக் கேகய ராஜனுடைய தேரில் ஏறி யுத்தத்தில் கலந்து கொண்டான். ஆனல் துரோணருடைய பராக்கிரமம் அன்று வெகு உக்கிரமாக இருந்தது. திருஷ்டத்யும்னனுடைய சாரதியையும் குதிரைகளையும் கொன்று அவன் தேரையும் உடைத்துவிட்டார். தேரிழந்த துருபதகுமாரன் உடனே அபிமன்யுவின் தேரில் ஏறி யுத்தத்தை நடத்தினன். பாண்டவர்களுடைய சேனை நிலையிழந்து நடுக்கமுற்றது. துரோணரைக் கௌரவ வீரர்கள் மிகவும் பாராட்டினர்கள்.

அதன்மேல் கோரமான சங்குல யுத்தம் நடந்து ஆயிரக் கணக்கான வீரர்களும் படையாட்களும் மாண்டார்கள். துரியோதனன் பீமனை நேரே சந்தித்தான். இருவருக்கு முள்ள பகைமையை முதலில்பேச்சில்வெளிப்படுத்திய பிறகு போர் தொடங்கிற்று. தேர்களில் நின்று இருவரும் ஒருவரை ஒருவர் பலமாகத் தாக்கினர்கள். துரியோதனன் பலமாக அடிபட்டு மூர்ச்சை அடைந்துவிட்டான். அதன்மேல் கிருபர் அவனைச் சாமார்த்தியமாகத் தம் தேரில் ஏற்றிக்கொண்டு காப்பாற்றினர். பீஷ்மரும் அச்சமயம் வந்துவிட்டார்: அவ்விடத்தில் நடந்த யுத்தத்தைத் தாமே நடத்திப் பாண்டவ படைகளைத் துரத்தியடித்தார். சூரியன் சிவந்து அஸ்தமிக்கும் சமயமிருந்தும் ஒரு முகூர்த்தம் மகா பயங்கரமான போர் நடந்து ஆயிரக்கணக்கானவீரர்கள் மாண்டார்கள். அதன் பிறகு போர் நிறுத்தப்பட்டது. திருஷ்டத்யும்னனும் பீமனும் உயிருடன் திரும்பியது தருமபுத்திரனுக்கு அளவற்ற சந்தோஷம் தந்தது.

# ஏழாவது நாள் யுத்தம்

உடல்முழுவதும் அம்புகள் தைத்துத் துன்பப்பட்ட வண்ணம் துரியோதனன் பீஷ்மரிடம் சென்று, "ஒவ்வொரு தினமும் பாண்டவர்கள் வெற்றி பெற்று நம்முடைய சேனையின் வியூகத்தைப் பிளந்தும் சூறையாடிக் கொன்றும் வருகிறார்களே, நீர் சும்மா இருக்கிறீரே!" என்றான்.

பீஷ்மர் துரியோதனனுக்கு ஆறுதல் மொழிகள் சொன்னார்.

"நானும் துரோணரும், சல்லியனும், கிருதவர்மாவும், அசுவத்தாமாவும், விகர்ணனும், பகதத்தனும், சகுனியும், அவந்தி தேசத்து இரு சகோதரர்களும், திரிகர்த்தராஜனும், மகத தேசாதிபதியும், கிருபாசாரியரும் உனக்காக உயிரையும் விடத் தயாராக இருக்கும்போது நீ ஏன் மனத் தாழ்ச்சி அடைகிறாய்? வேண்டாம்" என்று சொல்லிச் சேனையை அன்றைய யுத்தத்திற்கு அணி வகுத்தார்.

"இதோ பார், ஆயிரக் கணக்கான ரதங்களும், குதிரைகளும் குதிரை வீரர்களும், சிறந்த யானைகளும், அநேக தேசங்களிலிருந்து வந்து ஆயுதம் எடுத்து நிற்கும் காலாட்படைகளும் கொண்ட இந்தச் சேனையை வைத்துக் கொண்டு தேவர்களையும் ஜயிக்க முடியும். பயப்பட வேண்டாம்!" என்று சொல்லி, துரியோதனனுக்குக் காயங்களை நீக்கும் சிறந்த ஒரு ஔஷதத்தையும் தந்தார்.

அவன் அதைத் தன் தேகத்தில் பூசிக்கொண்டு அம்பு பொத்தின காயங்களையெல்லாம் நீக்கிக் கொண்டு தைரியமாகவும் உற்சாகமாகவும் யுத்தத்துக்குச் சென்றான். அன்று கௌரவப்படை மண்டல வியூகமாக அணிவகுக்கப்பட்டது. ஒவ்வொரு யானைக்குப் பக்கத்தில் ஏழு தேர்களும் ஒவ்வொரு தேருக்குத் துணையாக ஏழு குதிரை வீரர்களும், ஒவ்வொரு குதிரை வீரனுக்குத் துணையாகப் பத்து வில்லாளிகளும், வில்லாளி ஒவ்வொரு

வனுக்கும் பத்து கேடயக்காரர்கள் காப்பாகவும் நின்றார்கள். எல்லா வீரர்களும் நல்ல கவசம் பூண்டிருந்தார்கள். இந்தப் பெருஞ் சேனையின் மத்தியில் தேரின்மேல் நின்ற துரியோதனன் இந்திரன் போல் விளங்கினான்.

x x x

யுதிஷ்டிரர் பாண்டவ சேனையை 'வச்சிர' வியூகமாக அணிவகுத்தார். அன்று நடந்த யுத்தத்தில் அநேக முனைகளில் பெரும் போர் நடைபெற்றது. அருச்சுனனுடைய தாக்குதலைப் பீஷ்மரே எதிர்த்தார். துரோணரும் விராடனும் மற்றொரு முனையில் ஒருவரை யொருவர் எதிர்த்துப் போர் நடந்தது. வேறொரு முனையில் சிகண்டிக்கும் அசுவத்தாமனுக்கும் பெரும் யுத்தம் நிகழ்ந்தது. மற்றொரு இடத்தில் துரியோதனனும் திருஷ்டத்யும்னனும் கை கலந்தார்கள். நகுல சகதேவர்களும் தங்கள் மாமனான சல்லியனைத் தாக்கினார்கள். அவந்தி தேச ராஜாக்கள் யுதாமன்யுவை எதிர்த்தார்கள். பீமசேனன் கிருதவர்மா, சித்திரசேனன், விகர்ணன், துர்மர்ஷன் இவர்களனைவரையும் எதிர்த்தான். கடோத்கசனுக்கும் பகதத்தனுக்கும் பெரும் போர் மற்றொரு முனையில் நிகழ்ந்தது. வேறொரு இடத்தில் அலம்பசன் சாத்யகியை எதிர்த்தான். பூரிசிரவசு திருஷ்டகேதுவை எதிர்த்தான். யுதிஷ்டிரன் சுருதாயுவை எதிர்த்தான். சேகிதானன் கிருபரை மற்றொரு முனையில் எதிர்த்தான்.

x x x

துரோணருக்கும் விராடனுக்கும் நடந்த யுத்தத்தில் விராடன் தோற்று, தன் தேரையும் சாரதியையும் குதிரைகளையும் இழந்து தன் புத்திரன் சங்கனுடைய ரதத்தில் ஏறினான். விராடனுடைய புத்திரர்கள் உத்தரனும் சுவேதனும் முதல் நாள் யுத்தத்திலேயே மாண்டவர்கள். ஏழாவது நாளில் சங்கனும் தகப்பனார் அருகில் உயிர் நீத்தான்.

துருபதன் மகனான சிகண்டி அசுவத்தாமனால் தாக்கப்பட்டுத் தேரை யிழந்தான். அதன்மேல் அவன்

கீழே குதித்து வாளும் கேடயமும் கையில் எடுத்துக் கொண்டு போர் புரியப் பார்த்தான். அசுவத்தாமன் சிகண்டியினுடைய கத்தியைப் பாணத்தினால் உடைத்தான். உடனே சிகண்டி துண்டிக்கப்பட்ட கத்தியைச் சுழற்றி அசுவத்தாமன் பேரில் வீசினான். உக்கிரவேகமாக வந்த அந்தக் கத்தியை அசுவத்தாமன் ஒரு பாணத்தை விட்டு வெகு சாமர்த்தியமாகத் தடுத்தான். மிகவும் அடி பட்ட சிகண்டி, சாத்யகியின் தேரில் ஏறி விலகினான்.

சாத்யகிக்கும் ராக்ஷதனான அலம்பசனுக்கும் நடந்த யுத்தத்தில் முதலில் சாத்யகி பலமாக அடிக்கப்பட்டான். ஆனால் முடிவில் அலம்பசன் தோற்றுப் புறங்காட்டி ஓடினான்.

திருஷ்டத்யும்னனால் தாக்கப்பட்ட துரியோதனன் தேர்க் குதிரைகளை இழந்தான். கத்தி எடுத்துக்கொண்டு கீழே குதித்து, துரியோதனன் திருஷ்டத்யும்னனை எதிர்த்துச் சென்றான். அச்சமயம் சகுனி வந்து அரசனைத் தன் ரதத்தில் ஏற்றிக்கொண்டு போய்விட்டான். கிருதவர்மன் பீமனை பலமாகத் தாக்கினான். ஆனால் தோல்வியுற்றான். உடல் நிறைய அம்புகள் பாய்ந்து கிருதவர்மன் முள்ளம் பன்றிபோல் விளங்கியவனாய்க் குதிரைகளையும் தேரையும் இழந்து தோல்வியை ஒப்புக்கொண்டு சகுனியின் தேரை நோக்கி ஓடினான்.

ஆவந்தி தேசத்துச் சகோதரர்களாகிய விந்தனும் அனுவிந்தனும் யுதாமன்யுவை எதிர்த்துத் தோல்வி அடைந்தார்கள். அவர்களுடைய படையும் நாசம் செய்யப் பட்டது. பகதத்தன் யானையேறிக் கடோத்கசனை எதிர்த்துப் பெரிய வெற்றி அடைந்தான். கூட இருந்த வீரர்களும் படையாட்களும் புறங்காட்டி ஓடிவிட்டார்கள். கடோத்கசன் ஒருவன் மட்டும் நின்று பகதத்தனை எதிர்த்தான். கடும்போர் நடந்தது. முடிவில் கடோத்கசன் பெருந் தோல்வியுற்றுக் களத்தினின்று தப்பியோடினான். கௌரவ சேனை மகிழ்ச்சி அடைந்தது.

x x x

சல்லியன் மற்ெருரு பக்கத்தில் தன் சகோதரியின் மக்கள் நகுல சகதேவர்களை எதிர்த்தான். நகுலனுடைய தேர்க் குதிரைகள் கொல்லப்பட்டன. உடனே அவன் சகதேவனுடைய ரதத்தில் ஏறி இருவரும் ஒரு தேரி லிருந்து யுத்தம் புரிந்தார்கள். சகதேவன் விடுத்த அம்பு சல்லியனைத் தாக்கி மூர்ச்சையடையச் செய்தது. அதன் மேல் சாரதியானவன் சல்லியனுடைய ரதத்தை மெள்ள வேறிடம் கொண்டு போய் விட்டான். இவ்வாறு மந்திர தேசத்து ராஜன் புறங்காட்டி விலகியதைப் பார்த்து, துரியோதனனுடைய சேனை தைரியம் இழந்தது. மாத்திரீ புத்திரர்கள் சங்குகளை ஊதிக்கொண்டு சல்லியனுடைய சேனையை நாசம் செய்தார்கள்.

x x x

மத்தியானத்தில் யுதிஷ்டிரன் சுருதாயுவை நோக்கித் தேரைச் செலுத்தினான். தருமபுத்திரன் தொடுத்த அம்புகளைச் சுருதாயுவானவன் சேதித்து ஏழு கூரிய அம்புகளை எய்து தருமபுத்திரனுடைய கவசத்தை உடைத்து அவனைக் காயப படுத்தினான். தருமபுத்திரன் சுருதாயுவின் மார்பில் நன்ருகத்தைக்கும்படி ஒரு பாணத்தைச் செலுத்தினான்.

அன்று தருமபுத்திரன் தன் இயற்கை மனோ நிலைமை இழந்து கோபங்கொண்டு ஜொலித்தான் என்கிருர் வியாசர். முடிவில் தேரும் குதிரைகளும் சாரதியும் வீழ்த்தப்பட்டு சுருதாயு களத்தை விட்டு ஓடினான். இது நிகழ்ந்ததும் துரியோதனனுடைய சைனியம் முற்றிலும் தைரியம் இழந்து கலக்கமடைந்து விட்டது.

கிருபரை எதிர்த்துச் சேகிதானன் சாரதியையும் தேரையும் இழந்தான். அதன் பின் அவன் கதாயுதத்தை எடுத்துக் கொண்டு கீழே இறங்கி, கிருபருடைய குதிரைகளையும சாரதியையும் கொன்ருன். கிருபரும் தேரை விட்டு இறங்கித்தரையில் நின்று வில்லை வளைத்து அம்புகள் எய்தார். அவை சேகிதானனை மிகவும் துன்புறுத்தின. அதன்மேல் அவன் கதாயுதத்தை வீசிக் கிருபர் மேல் எறிந்தான். அதையும் அவர் தன் பாணத்தால் தடுத்து விட்டார். பிறகு சேகிதானன் கத்தி வீசிக்

கொண்டு அவர்மேல் பாய்ந்தான். அவரும் தன் வில்லை எறிந்து விட்டுக் கத்தியைக்கொண்டு நின்றார். இருவரும் கத்திச்சண்டையில் காயப்பட்டுப் பூமியில் வீழ்ந்தார்கள். பீமசேனன் வந்து சேகிதானனைத் தன் தேரில் ஏற்றிச் சென்றான். அவ்வாறே சகுனியும் கிருபரைத் தன் தேரில் ஏற்றிச் சென்றான்.

திருஷ்டகேது பூரிசிரவசின் மேல் தொண்ணூற்றாறு பாணங்களை விட்டு அவன் மார்பில் பாயச் செய்தான். கிரணங்களோடு ஜொலிக்கும் ஆதித்தனைப்போல் பூரிசிரவசு தன் மார்பில் தைத்த பாணங்களுடன் பிரகாசித்தான். அப்போதும் போரை நடத்தித் திருஷ்டகேதுவைப் புறங்காட்டி ஓடச்செய்தான். துரியோதனனுடைய தம்பிகள் மூவர் அபிமன்யுவைத் தாக்கிப் பெருந் தோல்வி அடைந்தார்கள். அபிமன்யு, "இவர்களைக் கொல்ல பீமன் சபதம் செய்திருக்கிறானாகையால் இவர்களை நான் விட்டுவிட வேண்டும்" என்று எண்ணி விலகினான். அதன் மேல் பீஷ்மர் அபிமன்யுவைத் தாக்க வந்தார். அதைக் கண்ட அர்ஜுனன், "கிருஷ்ணா! பீஷ்மரைத் தாக்க வேண்டும். ரதத்தைச் செலுத்து!" என்றான். அச்சமயம் மற்ற பாண்டவர்களும் அர்ஜுனனை வந்து அடைந்தார்கள். ஐவரையும் பிதாமகர் தடுத்தார். யுத்தம் நடந்து கொண்டிருக்கையில் சூரியன் மறைந்தான். போர் நிறுத்தப்பட்டது. எல்லோரும் மிகக் களைப்படைந்தவர்களாகவும், காயங்கள் பட்டுத் துன்பப்பட்டவர்களாகவும் பாசறைகள் போய்ச் சேர்ந்தார்கள்.

இருதிறத்து வீரர்களும் உடலில் தைத்திருந்த அம்புகளைப் பிடுங்கி வைத்தியக் கிரமப்படி காயங்களைக் கழுவி இளைப்பாறினார்கள். ஒரு முகூர்த்த காலம் எல்லாரும் சங்கீத வாத்தியங்களைக் கேட்டுக் கொண்டு உல்லாசமாகப் பொழுது போக்கினார்கள். அந்த ஒரு முகூர்த்த காலம் சுவர்க்கத்திலிருப்பது போல் யுத்த விஷயமான வார்த்தை ஒன்றும் பேசாமல் கழிக்கப்பட்டது. அந்தக் காட்சி பார்ப்பதற்கு ரமணீயமாக இருந்தது என்கிறார் வியாச பகவான். மகாபாரதத்தின் உபதேச தத்துவத்தை இதினின்று உணரலாம்.

# எட்டாம் நாள் யுத்தம்

எட்டாவது நாள் உதயமாயிற்று. பீஷ்மர் கௌரவ சேனையை கூர்ம வியூகமாக வகுத்தார். யுதிஷ்டிரன் திருஷ்டத்யும்னனைப் பார்த்து, "கௌரவர்களுடைய கூர்ம வியூகத்தைப் பார். அதை அழிக்கக்கூடிய எதிரணி வகுப்பில் சீக்கிரமாக நம்முடைய சேனையை ஒழுங்குபடுத்து" என்றான்.

திருஷ்டத்யும்னன் பாண்டவ சேனையை மூன்று சிகரங்கள் கொண்ட வியூகத்தில் அமைத்தான். பீமசேனன் ஒரு கொடு முடியிலும் சாத்யகி மற்றொரு கொடு முடியிலும் தத்தம் படைகளுடன் நின்றார்கள். நடுவில் யுதிஷ்டிரன் நின்றான். யுத்தக் கலையை நம்முடைய முன்னோர்கள் நன்றாகவே கற்றிருந்தார்கள். அநேகமாக அது க்ஷத்திரியர்களுக்குள் கர்ண பரம்பரையாகவே இருந்து வந்தது. புஸ்தகங்களில் எழுதப்படவில்லை. எதிரிகள் உபயோகிக்கக் கூடிய ஆயுத பலத்திற்கும் அந்தக் காலத்தில் அனுசரித்து வந்த போர் முறைகளுக்கும் தகுந்தவாறு அரசர்கள் தங்களுடைய ஆயுதங்களையும் முறைகளையும் ஒழுங்குபடுத்தி வந்தார்கள்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன் நடந்த நிகழ்ச்சி குருக்ஷேத்திர யுத்தம். பாரதத்தில் காணப்படும் யுத்த வர்ணனையை இந்தக் காலத்து யுத்த முயற்சிகளோடு ஒப்பிட்டு இது வெறும் கற்பனைக் கதை, சாரமில்லை என்று தள்ளிவிடக் கூடாது. நூற்றைம்பது வருஷங்கள் தான் ஆயிற்று; ஆங்கில வீரன் நெல்ஸன் நடத்திய கப்பற்சண்டை நடந்தது. அவனுடைய கப்பல்களையும் அவன் கையாண்ட ஆயுதங்களையும் இப்போது கையாளப்படும் யுத்தக் கப்பற் படைகளையும் ஆயுதங்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அவன் காலத்தில் நடந்தவையெல்லாம் மிகவும் விநோதமாகத்தான் தோன்றும். நூற்றைம்பது வருஷத்திய நிலைமையைவிட பன்மடங்கு புராதனமானது பாரதப் போர்.

மற்றொரு விஷயத்தையும் நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும், யுத்த விஷயங்களைப் பற்றிக் கவிஞர்களும் ஆசிரியர்களும் எழுதிய நூல்களில் ஆயுதங்களைப் பற்றியும் யுத்த நடவடிக்கைகளைப் பற்றியும் சரியான விவரங்களும் விளக்கமும எதிர்பார்க்க முடியாது. பழையகாலத்தில் வழங்கி வந்த போர் முறைகள் க்ஷத்திரியப பண்பாட்டில் சேர்ந்த விஷயங்கள். அவற்றின் ரகசியங்களும் தத்துவங்களும் அந்தத் தொழிலைச் சேர்ந்தவர்களுக்குள் கர்ண பரம்பரையாகக் கிடந்தன. கவிகளும் ரிஷிகளும் எழுதிய நூல்களில் அவற்றின் விளக்கங்களைக் காணமுடியாது. இப்போதுங்கூட சிறு கதையிலும் பெருங் கதையிலும் ஒருவனுக்கு நோய்ச் சிகிச்சை நடத்தப்பட்டதாகச் சொல்லும்போது கொடுக்கப்பட்ட மருந்துகளை யெல்லாம் விவரித்து ஆசிரியர் கதையில் எழுதுவதில்லையல்லவா? எழுதினால் பொருத்தமில்லாமலிருக்கும். ஆகையால் மகர வியூகம் என்றால் என்ன, கூர்ம வியூகம் என்றால் என்ன, சிருங்காடகம் என்றால் என்ன; அம்புகளைச் சரமாரியாகப் பொழிந்து அரண் உண்டாக்கிக் கொள்ளுவது எப்படி, பாணத்தால் பாணத்தை வெட்டுவது எப்படி, உடம்பெல்லாம் அம்புகள் தைத்தும பிழைப்பதெப்படி, கவசங்கள் எந்தமட்டில் வீரர்களைக் காத்தன முதலிய விவரங்கள் அனைத்தும் நமக்குப் புரியும்படி வியாசர் தம்முடைய புராணத்தில் எழுதவில்லை. அவர் எழுதியிருக்கிற அளவு எழுதி யிருப்பதே விசேஷம்.

எட்டாவது நாள் போரின் முதல் பாகத்திலேயே திருதராஷ்டிர புத்திரர்களில் எண்மரைப் பீமன் கொன்றான். துரியோதனனுடைய உள்ளத்தை இது பிளந்தது. சபையில் தான் செய்த பிரதிஜ்ஞையை பீமன் இன்றே தீர்த்துவிடுவான் போலிருக்கிறது என்று எல்லாரும் பயந்தார்கள்.

அருச்சுனனுக்கு அன்று பெரிய துக்கம் நேரிட்டது. அவனுடைய அருமை மைந்தன் இராவான் கொல்லப்பட்டான். நாக கன்னிகை வயிற்றில் அருச்சுனனுக்குப்

பிறந்த இந்த வீரன் பாண்டவர்களுக்குத் துணையாக வந்து போர் புரிந்து கௌரவப் படையில் மிக்க நாசம் உண்டாக்கினான். துரியோதனன் இராவானை எதிர்க்க ராக்ஷசனான அலம்புசனை அனுப்பினான். இருவருக்கும் கோரமான யுத்தம் நடந்து முடிவில் இராவான கொல்லப் பட்டான.

இந்தச் செய்தி அருச்சுனனை எட்டியதும் அவனுக்குத் தாங்க முடியாத துக்கம் உண்டாகி வாசுதேவரைப் பார்த்து "விதுரர் முன்னமேயே சொன்னார் இருபக்கத்திலும் பெருந் துக்கம் அடைவோம என்று. பொருளுக்காக இத்தகைய இழிவான காரியம் செய்து வருகிறோம! இவ்வளவு கொலைகளைச் செய்து நாமாவது அவர்களாவது என்ன சுகம் அடையப் போகிறோம்? மதுசூதனா! யுதிஷ்டிரர் துரியோதனனை ஐந்து கிராமங்களையேனும கொடு, யுத்தம் வேண்டாம் என்று கேட்டதின் தீர்க்கதரிசனம் இப்போதுதான் எனக்குத் தெரிகிறது. மூர்க்கனான அந்தத் துரியோதனன் ஐந்து கிராமங்களைக் கொடுக்க மறுத்து இருபக்கமும் நடைபெறும் இந்த மகா பாபச் செயல்களுககெல்லாம் காரணமானான். இவன் பயந்தவன், கோழை என்று ஜனங்கள் இகழ்வார்களே என்றல்லவோ நான் யுத்தம் செய்கிறேன? யுத்தகளத்தில் வீழ்ந்து கிடக்கிற க்ஷத்திரியர்களைப் பார்த்து என் மனம் கொதிக்கிறது. நம்முடைய பிழைப்பு பாதகப் பிழைப்பு" என்று சொல்லி பரிதபித்தான்.

x x x

இராவான் கொல்லப்பட்டதைக் கண்ட பீமசேனனுடைய குமாரன் கடோத்கசன் சேனை முழுதும் நடுங்கும்படி கர்ச்சித்துக் கௌரவ சேனையை அழிகக ஆரமபித்தான். அனேக பகுதிகளில் கௌரவச் சேனை பயந்து கலைய ஆரம்பித்தது. அதைக் கண்ட துரியோதனன் தானே கடோத்கசனை எதிர்க்க முன் வந்தான்.

துரியோதனனுக்குத் துணையாக வங்க தேசத்து அரசன் யானைப் படையுடன் சென்றான். எட்டாவது

நாள யுத்தத்தில் துரியோதனன் மிகவும் தைரியமாகப் போர் புரிந்தான். கடோத்கசனுடைய படையிலிருந்த அநேக வீரர்களை வதம் செய்தான். இதைக் கண்டு மிக்க கோபங் கொண்ட கடோத்கசன் துரியோதனன்மேல் சக்தியை வீசினான். வங்க சேனாதிபதி திடீரென்று தன் யானையை மத்தியில் செலுத்தி துரியோதனனைக் காத்தான். யானையானது கடோத்கசனுடைய சக்தியாயுதத்துக்கு இரையாயிற்று.

பீஷ்மர் துரியோதனன் அபாயத்திலிருக்கிறான் என்று ஊகித்துப் பெரும் படை ஒன்றைத் துரோணர் தலைமையில் அரசனுக்கு உதவியாக அனுப்பினார். கௌரவச் சேனையிலுள்ள புகழ் பெற்ற வீரர்கள் பலர் ஒன்று கூடிக் கடோத்கசனை எதிர்த்தார்கள்.

அப்போது கிளம்பிய கர்ச்சனைகளிலிருந்து கடோத்கசனுக்கு அபாயம் நேரிட்டதாக அறிந்து யுதிஷ்டிரன் பீமசேனனை உதவியாக அனுப்பினான். பீமன் வந்ததும் முன்னைவிடக் கோரமான போர் நடந்தது.

எட்டாவது நாள யுத்தத்தில் மொத்தம் துரியோதனனுடைய தம்பிமார்களில் பதினாறுபேர் மாண்டார்கள்.

# ஒன்பதாம் நாள் யுத்தம்

ஒன்பதாவது நாள் போர் ஆரம்பமாவதற்கு முன் துரியோதனன் பீஷ்மரிடம் சென்று தனக்கு நேர்ந்த தோல்விகளைப்பற்றிப் பிரலாபித்து ஈட்டிகளினால் குத்துவதுபோல் கொடிய மொழிகளைப் பேசி அந்தத் தர்மாத்மாவைப் பிடித்தான். ஆயினும் பிதாமகர் பொறுமை இழக்கவில்லை.

"சக்திக்குத் தக்கபடி முயற்சி செய்கின்றவனும் உனக்காக யுத்தத்தில் பிராணனை ஹோமம் செய்கின்றவனுமான என்னை ஏன் இவ்வாறு துன்புறுத்துகிறாய்? சொல்லத் தக்கது எது சொல்லத் தகாதது எது என்பதை அறியாமல் பேசுகிறாய். மரணம் சமீபிக்கும்போது மரங்கள் எல்லாம் பொன் மயமாகத் தோன்றும் என்பார்கள். அவ்வாறு இப்போது நீ விஷயங்களை விபரீதமாக உணர்கிறாய். வேண்டுமென்று நீ செய்துகொண்ட விரோதத்தின் பயனை இப்போது அனுபவிக்கிறாய். ஆண்மையை இழக்காமல் தைரியமாகப் போர் செய்வதே இப்போது நீ செய்யக்கூடியது. அதுவே தருமமுமாகும். சிகண்டியை நான் எதிர்த்துப் போர் செய்வது முடியாது. ஸ்திரீயை வதம் செய்வது என்னால் முடியாத காரியம். பாண்டவர்களை என் கையால் கொல்ல என் மனம் ஒவ்வாது. இந்த இரண்டு விஷயங்களைத் தவிர்த்து மற்றப்படி எல்லா வீரர்களையும் எதிர்த்துப் போர் செய்வேன். க்ஷத்திரிய குலத்திற்குப் பொருந்திய முறையில் நீயும் மனத்தளர்ச்சி யில்லாமல் யுத்தம் செய்" என்று பிதாமகர் துரியோதனனுக்கு இதம் சொல்லிவிட்டு அன்று சேனையை அணிவகுக்க வேண்டிய முறையைப் பற்றியும் சொல்லியனுப்பினார்.

துரியோதனன் ஆறுதல் அடைந்து துச்சாதனனை யழைத்து "தம்பி! நம்முடைய முழு பலத்தையும் இன்று யுத்தகளத்தில் செலுத்து. பீஷ்மர் பரிசுத்தமான எண்ணத்தோடேயே நமக்காகப் போர் புரிகிறார். சிகண்டி

ஒருவனை மட்டும் தான் எதிர்க்க முடியாது என்கிறார். வேறு யாரைப் பற்றியும் நாம் கவலைப்பட வேண்டிய தில்லை. சிகண்டி அவரைத் தாக்காமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். அஜாக்கிரதையாக இருந்தால் சிம்மத்தைக்கூடச் செந்நாய் கொன்று விடுமல்லவா?" என்றான்.

x x x

ஒன்பதாவது நாள் யுத்தத்தில் அபிமன்யுவுக்கும் அலம்பசனுக்கும் பெரும் போர் நடந்தது. புகழ்பெற்ற தனஞ்சயனைப் போலவே குமாரனும் யுத்தம் செய்து அலம்பசனை ரதமிழந்து யுத்தகளத்தை விட்டு ஓடச் செய்தான்.

சாத்யகிக்கும் அசுவத்தாமனுக்கும் பெரும் யுத்தம் நடந்தது. துரோணர் அருச்சுனனை எதிர்த்தார். பிறகு எல்லாப் பாண்டவ வீரர்களும் பீஷ்மரை எதிர்த்தார்கள். துரியோதனன் பீஷ்மரைக் காக்கத் துச்சாதனனை ஏவினான். பீஷ்மர் கடும்போர் புரிந்து பாண்டவ வீரர்களுடைய முயற்சிகளை விணாக்கினார். பாண்டவச் சேனை அன்று மிகவும் துன்புறுத்தப்பட்டுக்காட்டில் வழிதப்பிச் சுற்றிச் சுற்றித் தடுமாறும் பசுக் கூட்டத்தைப்போல் தீனமான நிலையை அடைந்தது.

அப்போது கிருஷ்ணன் தேரை நிறுத்தி "பார்த்தனே! நீயும் உன் சகோதரர்களும் பதின்மூன்று ஆண்டுகள் எதிர்பார்த்துக்கொண்டிருந்த காலம் இப்போது வந்திருக்கிறது. க்ஷத்திரிய தருமத்தை நினைவுக்குத் தந்துகொள். பீஷ்மரைக் கொல்லத் தயங்கவேண்டாம்" என்றான்.

அருச்சுனன் தலை குனிந்து "கொல்லத் தகாத ஆசாரியர்களையும் பிதாமகரையும் கொல்லுவதைவிட வனவாசமே சுகமாக இருந்தது. ஆயினும் நீ சொல்வதைச் செய்கிறேன். ரதத்தைச் செலுத்து!" என்றான். அருச்சுனன் மிகவும் வருத்தப்பட்டுக் காரியத்தில் விருப்பமில்லாதவனாகச் சென்றான். பீஷ்மரோ மத்தியான காலத்துச் சூரியன் போல் பிரகாசித்தார்.

பார்த்தனுடைய தேர் பீஷ்மரை நோக்கிச் சென்றதும் பாண்டவசேனை மறுபடியும் தைரியம் அடைந்தது. பீஷ்மர் அருச்சுனனுடைய தேரின் பேரில் பொழிந்த அம்பு மழையால் அதை முற்றிலும் மூடிவிட்டுப் பாகனாவது குதிரையாவது தேராவது அருச்சுனனாவது ஏதுமே தெரியாமல் போயிற்று. கிருஷ்ணன் பரபரப்பில்லாமல் ஜாக்கிரதையாகத் தேரை நடத்தினான். அருச்சுனன் செலுத்திய அம்புகளினால் பீஷ்மர் கையில் பிடித்த வில் பலமுறை அறுபட்டுக் கீழே விழுந்தது. பீஷ்மர் அருச்சுனனைப் புகழ்ந்து வேறு வில்லை எடுத்துப் பார்த்தனையும் கிருஷ்ணனையும் அடித்துக் காயப்படுத்தினார்.

அப்போது "நீ சரியாகப் போர் புரியவில்லை" என்று கிருஷ்ணன் அருச்சுனனுக்குச் சொல்லிக் கோபத்துடன் தேரைவிட்டுக் கீழே குதித்துச் சக்கராயுதத்தை எடுத்துப் பீஷ்மரை நோக்கிச் சென்றான்.

கோபத்துடன் வரும் வாசுதேவனைப் பார்த்து பீஷ்மர் "புண்டரீகாக்ஷனே! வருவாய்! உன்னால் கொல்லப்பட்டு நான் உயிர்விடுவேன்" என்று வரவேற்றார்.

அருச்சுனன் கேசவனைப் பின் தொடர்ந்து இரு கைகளாலும் கட்டிப் பிடித்துக்கொண்டு "ஆயுதமெடுத்துப் போர் புரியப் போவதில்லை என்று நீ சொன்ன வார்த்தையைப் பொய்யாக்காதே. இது என் பொறுப்பு. [illegible]குரிய பீஷ்மரை நான் அம்பு எய்து வீழ்த்துவேன். நீ தேர் ஏறிக் குதிரைகளை நடத்து" என்று சொல்லி வாசுதேவனைப் பின் திரும்பச் செய்தான்.

பீஷ்மர் போரை மறுபடியும் துவக்கினார். பாண்டவசேனை மிகவும் அடிபட்டுக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் சமயத்தில் சூரியன் அஸ்தமனமானான். யுத்தம் நிறுத்தப்பட்டது.

# பீஷ்மர் வீழ்ந்தார்

**ப**த்தாவது நாள் யுத்தம். சிகண்டியை முன்னால் வைத்துக்கொண்டு அருச்சுனன் பிதாமகரைத் தாக்கினான். கொழுந்து விட்டு எரியும் நெருப்பைப் போல் பீஷ்மர் ஜொலித்தார்.

சிகண்டியின் அம்புகள் கிழவருடைய மார்பைப் பிளந்தன. அப்போது பீஷ்மருடைய கண்களிலிருந்து தீப்பொறிகள் பறந்தன. அந்தத் திருஷ்டியானது அப்படியே சிகண்டியை எரித்து விடும்போலிருந்தது. அடுத்த நிமிஷம் அவர் கோபம் தணிந்து தம்காலம் வந்துவிட்டது என்று எண்ணி ஸ்திரீ ஜன்மமாகிய சிகண்டியை எதிர்க்காமலே நின்றார். பார்த்தவர்களுக்கெல்லாம் இது ஒரு அற்புதமாக இருந்தது. தேவர்களும் வியந்தார்கள்.

சிகண்டி பீஷ்மருடைய மனோநிலையைக் கவனிக்காமல் அம்புமேல் அம்பு எய்துகொண்டே போனான். பீஷ்மர் சும்மா இருந்த இச்சமயத்தில் அருச்சுனனும் மனத்தை உறுதிப்படுத்திக் கொண்டு பிதாமகருடைய மர்ம ஸ்தானங்களை நன்றாகக் குறி வைத்துப் பார்த்து அடித்தான்.

உடல் முழுதும் இவ்வாறு பிளக்கப்பட்ட பீஷ்மர் புன்சிரிப்புச் செய்து துச்சாதனனைப் பார்த்து "இவை அருச்சுனனுடைய அம்புகள். இவை சிகண்டியின் அம்புகள் அல்ல. தாய்நண்டின் உடலை அதன் சிசுக்கள் கிழிப்பதுபோல் இந்த அம்புகள் என் உயிரைத் துன்புறுத்துகின்றன" என்றார். தன்னுடைய அருமைச் சீடன் எய்த அம்புகளை அவ்வாறு பிதாமகர் கருதினார்.

இவ்வாறு சொல்லி ஒரு சக்தியாயுதத்தை எடுத்துப் பார்த்தன்மேல் வீசினார். அதை அவன் மூன்று பாணங்களால் வெட்டினான். அதன்மேல் இது கடைசிப் போர் என்று கத்தியும் கேடயமுமாக ரதத்தினின்று பிதாமகர் கீழே இறங்கப் பார்த்தார். அவர் அவ்வாறு இறங்குமுன் அருச்சுனன் அவருடைய கேடயத்தை அம்புகளால்

வெட்டித் துண்டு துண்டாக்கினான். பிதாமகரின் உடல் முழுதும் இரண்டு விரற்கடை இடம்கூட இல்லாமல் அர்ச்சுனனுடைய அம்புகள் பாய்ந்தன. ரதத்தினின்று பீஷ்மர் தலைகீழாகத் தரையில் வீழ்ந்தார். அவர் விழும்போது தேவர்கள் வானத்தில் கைகூப்பி நின்று நமஸ்கரித்தார்கள். நல்ல மணமும் குளிர்ந்த நீர்த்துளிகளும் கலந்த காற்று வீசிற்று.

x x x

ஆகாயத்திலிருந்து பூமியில் இறங்கி உடலுக்கு உணவும் ஆன்மாவுக்கு மங்களமும் தந்து மக்களுக்கெல்லாம் தாயாகி நிற்கும் கங்கையின் அருமைப் புத்திரன்; தகப்பனான சந்தனு ராஜாவுக்குச் சுகம் தருவதற்காகத் தனக்குச் சந்ததியும் வேண்டாம் விவாகமும் வேண்டாம் என்று அனைத்தும் துறந்து விரதம் காத்த வீரன்; பரசுராமனை வென்ற நிகரற்ற சூரன்; தன்னைச் சந்தேகித்த துரியோதனனுக்குத் தன் சத்தியத்தை நிரூபிக்க உடல் முழுதும் நெருப்பாக எரிக்கும் அம்புகள் பாய்ந்து உடல் கீழே விழும் வரையில் அவனுக்காகத் தன் கடமையைச் செய்துவிட்டுப் பாரதப் போரின் பத்தாவது நாளில் பிதாமகர் தேரினின்று கீழே விழுந்தார்.

பீஷ்மர் விழும்போது கௌரவர்களுடைய இதயங்களும் கூட விழுந்தன என்கிறார் வியாசர்.

x x x

பீஷ்மருடைய உடல் தரையைத் தீண்டவில்லை. தேகத்தின் எல்லா பாகங்களிலும் குத்திக்கோத்து நின்ற கொடிய அம்புகள் பிதாமகருடைய உடலை அப்படியே மேலாகத் தாங்கி நின்றன. அவ்வாறு நிலத்தைத் தீண்டாமல் அம்பு சயனத்தில் கிடந்த உடல் புது தேஜசுடன் முன்னைவிட அதிகமாக ஜொலித்தது. இருபுறத்துச் சேனைகளும் யுத்தத்தை நிறுத்திவிட்டுத் திரள்திரளாக யுத்தகளத்தில் விழுந்துகிடந்த பிதாமகரைப் பார்க்க ஓடி வந்தார்கள். பிரஜாபதியான பிரம்மனைத் தேவர்கள

நமஸ்கரிப்பது போல் பாரத தேசத்து அரசர்கள் அணை வரும் பீஷ்மரை வணங்கி நின்றார்கள்.

X X X

"என் தலையில் அம்பு குத்தவில்லை. அது தொங்குகிறது. உயரத் தூக்கித் தாங்கும்படியாக ஏதேனும் வைத்து உதவுங்கள்" என்றார் பீஷ்மர். அருகிலிருந்த அரசர்கள் உடனே ஓடிப்போய் தலையணைகளைக் கொண்டு வந்தார்கள். பட்டும் பஞ்சுமாக இருந்த அந்தத் தலையணைகளைப் பிதாமகர் வேண்டாம் என்று சொல்லிவிட்டு, அவ்விடமிருந்த அருச்சுனனை நோக்கி, "அப்பனே! பார்த்தா! என் தலைக்கு ஆதாரமில்லை; கீழே தொங்குகிறது. சரியான தலையணையைப் பார்த்துக் கொண்டு வந்து வைப்பாயாக" என்றார்.

தன் உயிரைக் குடிக்கும் அம்புகளை எய்த அருச்சுனனைப் பார்த்துப் புன்சிரிப்புடன் இந்த வார்த்தைகளைச் சொன்னார். அதைக் கேட்டதும் அருச்சுனன் தம் தூணியிலிருந்து மூன்று அம்புகளை எடுத்துப் பிதாமகர் தலையை அவற்றின் கூரிய முனைகளின் மேலே வைத்து அமைத்தான்.

"அரசர்களே! அருச்சுனன் அமைத்திருக்கும் தலையணையே எனக்கு மகிழ்ச்சியளித்தது. தேகத்தை விட்டுப் பிரிய இந்தக் காலம் தகுந்ததல்ல. உத்தராயணம் வரையில் நான் இந்த இடத்திலேயே இப்படியே கிடப்பேன். அதுவரையில் என் ஆத்மா தேகத்தில் நிற்கும்; உங்களில் அப்போது யார் உயிருடன் இருப்பீர்களோ அவர்கள் வந்து என்னைப் பார்க்கலாம்" என்றார்.

பிறகு பிதாமகர் அருச்சுனனைப் பார்த்து "அப்பனே! உடலெல்லாம் எரிகிறது. கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் தருவாய்" என்றார்.

உடனே அருச்சுனன் தன் வில்லை நன்றாக வளைத்துப் பீஷ்மருக்கு வலது பக்கத்தில் அம்பை நிலத்திற்குள் செல்லும்படியாக விட்டான். அது பாதாளத்தில் புகுந்து

மறைந்தது. உடனே அந்த இடத்தில் ஒரு ஊற்றுக் கிளம்பி உயரக் குதித்துப் பாய்ந்தது. தாயாகிய கங்கை தன் அருமை மகனுடைய தாகத்தைத் தீர்க்க வந்தது என்கிறார் கவி. அமிருதம் போன்ற அந்த ஜலத்தைக் குடித்துப் பீஷ்மர் தாகத்தைத் தீர்த்துக்கொண்டு மகிழ்ச்சி அடைந்தார்.

“துரியோதனா! நல்ல அறிவை அடைவாயாக. அருச்சுனன் என் தாகத்துக்கு தண்ணீர் எப்படி உண்டாக்கினான் பார்த்தாயா? இதை உலகத்தில் வேறு எவன் செய்வான்? இனித் தாமதிக்க வேண்டாம்! அவனிடம் சமாதானமாகப் போ. இந்த யுத்தம் என்னோடு முடிவு பெறலாம். அப்பனே, நான் சொல்லுவதைக் கேள், பாண்டவர்களுடன் சமாதானம் செய்துகொள்” என்றார். இறக்கும் தறுவாயிலும் நோயாளிக்கு மருந்து பிடிக்காது. கசக்கிறது என்பான். அவ்வாறே துரியோதனனுக்குப் பிதாமகருடைய மொழிகள் பிடிக்கவில்லை.

அரசர்கள் எல்லாரும் தம்தம் பாசறைகளுக்குச் சென்றார்கள்.

# பிதாமகரும் கர்ணனும்

பீஷ்மர் அடிபட்டுக் கிடப்பதை அறிந்ததும் கர்ணன் சென்று அவர் காலில் விழுந்து நமஸ்கரித்தான்.

"குலத் தலைவரே! ஒரு குற்றமும் செய்யாமலிருந்தாலும் உம்மால் மிகவும் வெறுக்கப்பட்டவனாகிய ராதையின் மகன் உம்மை வணங்குகிறான்" என்றான்.

வணங்கிவிட்டு நிற்கும்போது சூரிய குமாரன் முகத்தில் ஓரளவு பயக்குறி தோன்றியதைப் பிதாமகர் பார்த்தார். மிகக் கருணையுடன் அவன் மேல் கையை வைத்து, தந்தை மகனை ஆசீர்வதிப்பதைப் போல் ஆசீர்வதித்தார். கண்களின் திருஷ்டியைத் தடுத்து நின்ற அம்புகளின் வழியாக அவனை மெதுவாகப் பார்த்து, "நீ ராதையின் மகன் அல்ல. குந்திதேவியின் மகன் ஆவாய். உலக ரகசியமெல்லாம் அறிந்த நாரதர் இதை எனக்குச் சொல்லியிருக்கிறார். சூரிய குமாரா! உன்மேல் எனக்கு உண்மையில் துவேஷம் ஒன்றும் இல்லை. நீ, பாண்டவர்களைக் காரணமின்றித் துவேஷிக்கிறாய் என்பதே என் மன வருத்தத்துக்குக் காரணமாக இருந்தது. உன்னுடைய சௌரியத்தையும் கொடையையும் நான் அறிவேன். சூரத்தனத்தில் நீ பல்குனனுக்கும் கிருஷ்ணனுக்கும் ஒப்பிடக்கூடியவன் என்பதில் சந்தேகமில்லை. பாண்டவர்களுடைய சகோதரனாகிய நீ அவர்களைச் சிநேகிப்பதே தருமம். யுத்தத்தில் என் பங்கு முடிந்ததோடு அவர்கள் பேரில் உனக்குள்ள பகையும் முடிவடைய வேண்டும் என்பது என் விருப்பம்" என்றார்.

இதைக்கேட்ட கர்ணன் மிகவும் வணக்கத்தோடு "பிதாமகரே! நான் குந்தி புத்திரன் என்பதை அறிவேன். தேரோட்டியின் மகன் அல்ல என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் துரியோதனனுடைய பொருளைப் பெற்றுக்கொண்டு அவனுக்குக் கட்டுப்பட்டு விட்டேன். அவனை விட்டு விட்டு அவன் விரோதிகளின் பக்கம்.

ம்சேருவது என்னால் முடியாத காரியம். துரியோதனனுக்காக நான் போர் புரிந்தே தீரவேண்டும். அதற்கு நீர் அனுமதி தருவீராக. நான் சொன்னதிலும் செய்ததிலும் பல குற்றங்கள் உண்டு. அவற்றை க்ஷமித்து என்னைக் காப்பாற்றுவீராக'' என்று வேண்டிக் கொண்டான்.

தருமங்களனைத்தையும் அறிந்த பிதாமகர் கர்ணன் சொன்னதை ஆலோசித்து ''உன் இஷ்டப்படியே செய். தருமமே வெற்றி பெறும்'' என்றார்.

x x x

பீஷ்மர் வீழ்ந்த பின்னும் பாரத யுத்தம் முடிவடையவில்லை. பிதாமகருடைய பக்தியமான வார்த்தையை அலட்சியம் செய்து கௌரவ வீரர்கள் மறுபடியும் யுத்தத்தைத் துவக்கினார்கள். பீஷ்மருடைய தலைமையை இழந்த கௌரவச் சேனை இடையனை இழந்த ஆட்டுக் கூட்டத்தின் நிலைமையில் இருந்தது. சத்திய சந்தரான பிதாமகர் வீழ்ந்தபோதே கௌரவர்கள் அனைவரும் யுத்தகளத்தில் ''கர்ணா! கர்ணா! நீ தான் காப்பாற்ற வேண்டும்'' என்று கதறினார்கள்.

கர்ணன் போரில் கலந்து கொண்டால் வெற்றி நிச்சயம் என்று கௌரவ வீரர்கள் அனைவரும் எண்ணினார்கள். பீஷ்மர் தலைமை வகித்த பத்து நாட்களும் சூரிய குமாரன் இன்றியே யுத்தம் நடந்தது. பீஷ்மரால் கர்வ பங்கம் செய்யப்பட்ட கர்ணன் கோபங்கொண்டு ''நீர் ஜீவித்திருக்கும் வரையில் நான் போர் புரியமாட்டேன். நீர் பாண்டவர்களைக் கொன்று துரியோதனனுக்கு வெற்றி தந்தீராகில் நான் அரசனிடம் அனுமதி பெற்றுக் கானகம் செல்வேன். நீர் தோல்வியுற்று வீழ்த்தப்பட்டு மேலுலகம் சென்றீரானால் உம்மால் அதிரதன் என்று மதிக்கப்படாத நான் ஒரே ரதத்தின் மேல் ஏறி உம்மால் அதிரதர்களாக மதிக்கப்பட்ட அனைவரையும் வீழ்த்தித் துரியோதனனுக்கு வெற்றியை சம்பாதித்துத்தருவேன்'' என்று பிரதிஜ்ஞைசெய்து துரியோதனனுடைய சம்மதத்தின் பேரில் யுத்தத்தில் கலந்து கொள்ளாமல் விலகி

யிருந்த கர்ணன் பாதசாரியாக பீஷ்மரிடம் சென்று அவரை வணங்கி நின்றான்.

"பரசுராமனை வென்ற வீரரே! சிகண்டியினால் அடிக்கப்பட்டு யுத்தபூமியில் படுத்திருக்கிறீர்! தருமத்தின் சிகரமும் உத்தமருமான நீரே இந்தக் கதியை அடைந்து விட்டீர் என்றால் இந்த உலகத்தில் ஒருவனும் புண்ணியத்தின் பலனை அடையமாட்டான் என்பது நிச்சயம். கௌரவர்களுக்கு வெள்ளத்தைத் தாண்டும் தெப்பமாக இருந்தீர். இனிமேல் பாண்டவர்களால் தாக்கப்பட்டு அவர்கள் மிகவும் கஷ்டநிலை அடையப் போகிறார்கள். அருச்சுனனும் கிருஷ்ணனும் அவர்களை நெருப்பும் காற்றும் சேர்ந்து காட்டை அழிப்பதுபோல் நாசம் செய்வார்கள். சந்தேகமில்லை. உம்முடைய புண்ணியப் பார்வையை என்மேல் செலுத்தக் கோருகிறேன்" என்றான்.

பீஷ்மர் கர்ணனை ஆசீர்வதித்தார். "நதிகளுக்குச் சமுத்திரம் போலவும், விதைகளுக்கு மண்ணைப்போலவும் பிராணிகளுக்கு மேகம் போலவும் உன்னை நண்பனாகக் கொண்டவர்களுக்கு உறுதியான ஆதாரமாக இருக்கிறாய். துரியோதனனைக் காப்பாற்றுவாயாக. அவனுக்காக நீ காம்போஜர்களை ஜயித்தாய். இமயமலையின் துர்க்கங்களிலுள்ள கிராதர்களை எல்லாம் அவனுக்காக அடக்கினாய். கிரிவிரஜ ராஜாக்களுடன் துரியோதனனுக்காகப் போர் செய்து வெற்றி பெற்றாய். இன்னும் அநேக காரியங்களை அவனுக்காகச் செய்திருக்கிறாய். துரியோதனனுடைய சேனைக்கு நீ இனி ரக்ஷகனாக இருப்பாயாக. உனக்கு மங்களம். சத்துருக்களோடு யுத்தம் செய். போ! கௌரவப் படையை உன்னுடைய சொந்த சொத்தாகப் பாவித்துப் பாதுகாப்பாயாக" என்று கர்ணனைப் பிதாமகர் ஆசீர்வதித்தார்.

கர்ணன் பிதாமகருடைய ஆசிபெற்று மகிழ்ச்சியடைந்தவனாக ரதம் ஏறி யுத்தகளத்துக்கு வந்தான். அவனைப் பார்த்ததும் துரியோதனனுக்கு அடங்கா மகிழ்ச்சி பொங்கிற்று. பீஷ்மருடைய பிரிவையும் ஒருவாறு மறந்தான்.

# துரோணர் தலைமை

துரியோதனனும் கர்ணனும் யாரைச் சேனாதிபதியாக நியமிப்பது என்று ஆலோசித்தார்கள்.

“இவ்விடம் கூடியிருக்கும் க்ஷத்திரியர்கள் எல்லாருமே சேனாதிபதியாக இருக்கத் தகுதி படைத்தவர்கள். தேகபலம், பராக்கிரமம், முயற்சி, புத்தி, தைரியம், சௌர்யம், குலம், அறிவு எல்லா விஷயத்திலும் இந்த அரசர்கள் அனைவரும் சமமாகவே இருக்கிறார்கள். ஆயினும் ஒரே சமயத்தில் எல்லாரும் தலைவர்களாக இருக்க முடியாது. அவர்களில் ஒருவரைத் தலைவராக அமைத்தால் மற்றவர்களுக்கு மனக்குறை ஏற்பட்டு நாம் நஷ்டம் அடைவோம். இந்த சந்தர்ப்பத்தில் எல்லா யுத்த வீரர்களுக்கும் ஆசாரியரான துரோணரையே சேனாதிபதியாக்குவது நலம். ஆயுதம் தரித்தவர்களில் சிறந்தவர் அவரே. க்ஷத்திரியன் எவனுமே அவருக்குச் சமானமானவன் இல்லை. அவரையே தலைவராக அபிஷேகம் செய்வோம்” என்று கர்ணன் சொல்லியதைத் துரியோதனனும் ஒப்புக் கொண்டான்.

x x x

“குருவே! ஜாதியினாலும் குலத்தினாலும், சாஸ்திர ஞானத்தினாலும், வயது புத்தி, வீரியம், சாமர்த்தியம் இவைகளாலும் சிறந்தவராக இருக்கிறீர். சேனைத்தலைமை நீரே வகிக்க வேண்டும். நீர் சேனாதிபதியாயிருந்தால் யுதிஷ்டிரனை நிச்சயமாக ஜயிப்பேன்” என்று துரியோதனன், எல்லா க்ஷத்திரிய வீரர்கள் முன்னிலையில் துரோணரை வணங்கினான்.

இதைக் கேட்ட அரசர் கூட்டம் உரத்த சிம்மநாதங்கள் செய்து துரியோதனனைச் சந்தோஷப்படுத்தினார்கள். முறைப்படி துரோணருக்கு அபிஷேகம் நடந்தது. ஜய

கோஷம் ஆகாயத்தைப் பிளந்தது. வந்திகளுடைய ஸ்துதிகளையும் வெற்றி முழக்கங்களையும் கேட்டுக் கௌரவர்கள் பாண்டவர்களை ஜயித்தாய் விட்டது என்றே உற்சாக மயக்கத்தில் எண்ணினார்கள்.

x x x

துரோணர் சேனையைச் சகட வியூகமாக வகுத்தார். அதுவரையில் விலகி நின்ற கர்ணனுடைய தேர் யுத்தகளத்தில் முதல் தடவையாக இங்கு மங்கும் செல்வதைக் கண்டு கௌரவப படை வீரர்கள் புதிய மகிழ்ச்சியும் தைரியமும் அடைந்தார்கள்.

"பிதாமகர் பார்த்தர்களைக் கொல்ல மனமில்லாமல் யுத்தத்தை நடத்தினார். கர்ணன் அவ்வாறு செய்யமாட்டான். பாண்டவர்களுடைய நாசம் இனிமேல் நிச்சயம்" என்று கௌரவ சேனையில் பேசிக் கொண்டார்கள்.

துரோணர் கௌரவ சேனையில் தலைமை வகித்து ஐந்து நாள் யுத்தம நடத்தினார். முதியவராயிருந்தும் யுவனைப்போல் யுத்தகளத்தில் எங்கும பிரவேசித்து உனமத்தனைப் போல் போர் புரிந்தார். காற்றானது மேகங்களைச் சிதற அடிப்பதுபோல் பாண்டவ சேனையைத் துன்புறுத்திச் சிதற அடித்தார். சாத்யகியையும பீமனையும அருச்சுனனையும திருஷ்டத்யும்னனையும அபிமன்யுவையும துருபதனையும காசிராஜனையும் இன்னும அநேக வீரர்களையும தாமே எதிர்த்துத் தோல்வியுறச் செய்தார். பாண்டவ சேனையை ஐந்து நாட்கள் மிகவும் துன்புறுத்தினார்.

# உயிருடன் பிடிக்க

துரோணர் தலைமை வகித்ததும் துரியோதனனும் கர்ணனும் துச்சாதனனும் மந்திராலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதன்மேல் துரியோதனன் துரோணரிடம் சென்று "ஆசார்யரே. யுதிஷ்டிரனை நீர் எப்படியாவது உயிரோடு பிடித்து நம்மிடத்தில் ஒப்புவிக்க விரும்புகிறோம். இதற்குமேல் நாங்கள் எதையும் விரும்பவில்லை. இதை நீர் செய்வீராகில் நானும் என்னைச் சேர்ந்தவர்கள் எல்லாருமே மிகவும் திருப்தியடைவோம்''' என்றான்.

இதைக் கேட்டதும் துரோணர் அளவு கடந்த சந்தோஷமடைந்தார். பாண்டவர்களைக் கொல்லத் துரோணருக்கு மனமில்லை. கடமையைச் செலுத்த யுத்தத்தில் சேர்ந்தவராயினும் பாண்டு புத்திரர்களை, அதிலும் யுதிஷ்டிரனைக் கொல்லுவது தருமமன்று என்று சந்தேகித்துக் கொண்டிருந்த துரோணருக்கு துரியோதனன் சொன்னது மிகுந்த மகிழ்ச்சி தந்தது.

"துரியோதனனே! நீயுமா யுதிஷ்டிரனுடைய உயிரைக் காப்பாற்ற விரும்புகிறாய்? உனக்கு மங்களம் ஆகுக! தருமபுத்திரனுக்கு உயிர்ச்சேதம் ஆகவேண்டாம் என்று நீயும் சொன்னபின் அவன் அஜாதசத்துரு என்பதில் என்ன சந்தேகம்? பகையற்றவன் என்று குந்திநந்தனுக்கு மக்கள் தந்திருக்கும் பெயரை நீ உண்மையாக்கினாய். உயிரோடு பிடிக்கவேண்டும்; கொல்லலாகாது என்று நீயும் வேண்டுகிறாயானபடியால் யுதிஷ்டிரனுடைய புகழ் பதின்மடங்காயிற்று. அவனே பாக்கியசாலி'' என்றார் துரோணர்.

மறுபடியும் "அப்பனே! நீ சொன்னதிலிருந்து யுத்தத்தில் ஜயித்துவிட்டு அவர்களுக்குச் சேரவேண்டிய ராஜ்ய பாகத்தை முடிவில் அவர்களுக்குக் கொடுத்துச் சமாதானம் செய்துகொள்ளவே உத்தேசித்திருக்கிறாய் என்று

தெரிகிறது. இதனால் அல்லவோ நீ யுதிஷ்டிரனைக் கொல்லாமல் உயிரோடு பிடித்துத் தரச் சொல்கிறாய்" என்று சொல்லிச் சந்தோஷப்பட்டார்.

"புத்திமானான தருமபுத்திரனுடைய பிறப்பே நல்ல பிறப்பு. குந்தி புத்திரனல்லவோ பாக்கியசாலி? அவனுடைய குணமல்லவோ பகைவருடைய உள்ளத்தையும் வென்றது?" என்று திரும்பத் திரும்ப தரும வாழ்க்கையின் வெற்றியை எண்ணித் திருப்தியடைந்தார்.

சகோதர நேசத்தை துரியோதனன் விடவில்லை என்று ஆசார்யர் துரியோதனனைப் பற்றி மகிழ்ச்சியடைந்தார்.

x x x

துரியோதனனுடைய யோசனையோ வேறு. அவனுடைய உள்ளத்தில் பகைமையும் பாப எண்ணமும் முன்போலவே இருந்தன. "அப்படியே ஆகட்டும். உயிரோடு யுதிஷ்டிரனைப் பிடித்துத் தருவேன்" என்று துரோணர் சொன்னதும் தன் உண்மையான எண்ணத்தை அவருக்கு வெளியிட்டான்.

யுதிஷ்டிரனைக் கொன்றால் பாண்டவர்களுடைய கோபம் தணியாது. முன்னைவிட அதிகரித்து அனைவரும் நாசமாகும் வரையில் யுத்தம் நடக்கும். தன்னுடைய சேனை தோற்கடிக்கப் படும். பாண்டவர்கள் ஜெயம் பெறுவார்கள். அல்லது இரண்டு பக்கத்து வீரர்களில் யாரும் மிச்சம் இல்லாமல் இருந்தாலும் கிருஷ்ணன் உயிருடன் இருப்பான். அவன் திரௌபதியோ குந்தியோ இராஜ்யத்தை அடையச் செய்து விடுவான். ஆகையால் யுதிஷ்டிரனைக் கொல்லுவதில் லாபம் ஒன்றும் இல்லை. யுதிஷ்டிரனை உயிரோடு பிடித்துவிட்டால் யுத்தம் சீக்கிரமாகவும் வெற்றிகரமாகவும் முடிந்துவிடும். க்ஷத்திரிய தருமத்துக்கும் சத்தியத்துக்கும் பயந்த தரும புத்திரனை எப்படியாவது மறுபடி சூதாட்டத்தில் இழுத்து ஏமாற்றலாம். மறுபடி காட்டுக்கு அனுப்பிவிடலாம். யுத்தத்தினால் குல நாசம் உண்டாகுமே யொழிய காரிய சித்தி

பெற முடியாது என்பதை துரியோதனன் பத்து நாள் யுத்தத்தில் கண்டான்; இதனாலேதான் அவன் யுதிஷ்டிரனை உயிரோடு பிடித்துத் தரவேண்டும் என்று துரோணரை வேண்டினான்.

x x x

துரோணர் இதை அறிந்ததும் தான் முதலில் மகிழ்ந்தது பொய்யாயிற்று என்று வருத்தப்பட்டுத் துரியோதனனை மனதில் மிகவும் இகழ்ந்தார். ஆயினும் யுதிஷ்டிரனைக் கொல்லாமலிருக்க எப்படியோ ஒரு வழி ஏற்பட்டதே என்று சந்தோஷப் பட்டார்.

துரோணர் யுதிஷ்டிரனை உயிரோடு பிடிக்கப் பிரதிஜ்ஞை செய்திருக்கிறார் என்கிற செய்தி சாரணர்கள் மூலம் பாண்டவ சேனைக்கும் தெரிந்துவிட்டது. ஆசார்யர் ஒரு காரியத்தைச் செய்து முடிக்க வேண்டும் என்று நிச்சயம் செய்து பிரதிஜ்ஞையும் பண்ணினார் என்றால் அவருடைய ஒப்புயர்வற்ற ஆயுதப் பயிற்சியையும் சூரத் தனத்தையும் அறிந்த பாண்டவர்கள் பயப்பட வேண்டியதாயிற்று. யுதிஷ்டிரனருகில் போதிய காப்பு எப்போதும் இருக்க வேண்டும் என்று அனைவரும் கவலை கொண்டார்கள்.

அதற்கேற்றபடியே போரின் கிரமத்தை ஒழுங்கு படுத்திக் கொண்டார்கள். எந்தச் சமயத்திலும் யுதிஷ்டிரனுக்குக் காப்புக் குறையாமலிருக்குமாறு படைகளை வியூகப்படுத்தினார்கள்.

x x x

துரோணர் தலைமையில் நடந்த முதல் நாள் யுத்தத்தில் அவர் தனனுடைய பராக்கிரமத்தை நன்றாகக் காட்டினார். நெருப்பானது உலர்ந்த காட்டைக் கொளுத்துவது போல் பாண்டவ சேனையைக் கொளுத்திக்கொண்டு சஞ்சரித்தார். ஒரு துரோணர் அநேக துரோணர்களானதாகப் பாண்டவ சேனை எண்ணுமாறு இங்குமங்கும் தன்

தேரைச் செலுத்தி அம்புமழை பெய்து யுத்தகளம் முழுதும் யமன் தாண்டவமாடச் செய்தார்.

திருஷ்டத்யும்னன் இருந்த இடத்தில் பாண்டவ சேனையைப் பிளந்தார். மகாரதர்களுக்குள் துவந்த யுத்தங்கள் பல நடந்தன. மாயச் சண்டை செய்வதில் வல்லவனான சகுனிக்கும் சகதேவனுக்கும் யுத்தம் நடந்தது. தேர்கள் ஒடிந்தன. கீழே இறங்கி கதாயுதங்களைக் கொண்டு இரண்டு மலைகள் உயிர் பெற்றுப் போர் செய்வதுபோல் கைகலந்தார்கள்.

பீமனுக்கும் விவிம்சதிக்கும் பெரும் போர் நடந்தது. இருவருடைய தேர்களும் உடைந்தன. சல்லியன் தன் மருமகனான நகுலனை எதிர்த்துச் சிரித்துக் கொண்டே மிகவும் துன்புறுத்தினான். நகுலன் கோபங்கொண்டு மாமனுடைய தேரின் கொடியையும் குடையையும் உடைத்துக் கீழே தள்ளி வெற்றிச் சங்கு ஊதினான். கிருபாசாரியர் திருஷ்டகேதுவை எதித்து அவனை நன்றாக அடித்துத் துரத்தினார். சாத்யகிக்கும் கிருதவர்மாவுக்கும் பெரும் யுத்தம் நடந்தது.

விராடன் கர்ணனை எதிர்த்தான். அபிமன்யுவின் பராக்கிரமம் வழக்கம்போல் அற்புதமாக ஜொலித்தது. பௌரவன், கிருதவர்மன், ஜயத்ரதன், சல்லியன் ஆகிய நான்கு பெரிய வீரர்களையும் ஒருவனாகவே நின்று முறியடித்தான்.

அதன் பிறகு பீமனுக்கும் சல்லியனுக்கும் உக்கிரமான கதாயுதச் சண்டை நடந்தது. முடிவில் சல்லியன் பீமனால் தோற்கடிக்கப் பட்டு யுத்தத்தினின்று விலகினான். கௌரவசேனை தைரியம் இழந்தது. அதைத் தொடர்ந்து பாண்டவசேனை கௌரவ சேனையை மிகவும் துன்புறுத்தி ஒழுங்கிழந்து கலையச் செய்தது.

x x x

இதைக் கண்டு தம் சேனையை உற்சாகப்படுத்துவதற்காகத் துரோணர் சாரதியைப் பார்த்து யுதிஷ்டிரன் இருக்குமிடத்துக்குத் தேரை வேகமாக ஓட்டச் சொன்

ஞர். அழகும் பலமும் கொண்ட நான்கு சிந்து தேசத்து ஜாதிக் குதிரைகள் பூட்டியதும் பொன் மயமானதுமான தேர் மாய வேகமாக யுதிஷ்டிரனுடைய தேரை நோக்கிச் சென்றது. உடனே யுதிஷ்டிரன் கழுகு இறகுகள் பூண்ட கூர்மையான அம்புகளைத் துரோணர் மேல் விட்டான். ஆசார்யர் தயங்கவில்லை. தன பாணங்களால் தரும புத்திரனைத் தாக்கி அவனுடைய வில் அறுபட்டுக் கீழே விழச் செய்து வெகு விரைவாக அவன் அருகில் சென்றார். திருஷ்டத்யும்னன் துரோணரை எதிர்த்துத் தடுத்தும் துரோணரை நிறுத்தமுடியவில்லை. அவருடைய வேகத்தை யாருமே தடுக்க இயலாதவர்களாக நின்றார்கள்.

"யுதிஷ்டிரர் பிடிபட்டார்! யுதிஷ்டிரர் பிடிபட்டார்!" என்கிற ஆரவாரம் யுத்தகளம் முழுதும் பரவிற்று.

அப்போது அருச்சுனன் திடீர் என்று அவ்விடம் வந்து சேர்ந்தான். பூமி அதிர அவனுடைய தேரானது ரத்த நதியையும் எலும்புக் குவியல்களையும் கடந்து அவ்விடம் வந்ததும் துரோணர் தயங்கினார்.

அம்புகளைத் தொடுப்பதும் விடுவதுமான மத்திய காலம் யாருக்கும் காணாமல் காண்டீவம் இடைவிடாத சரமாரி பெய்தது. யுத்த களத்தில் பாணாந்தகாரம், அதாவது அம்புகள் வானத்தை மூடிய இருட்டு உண்டாயிற்று.

துரோணர் பின் வாங்கிச் சென்றார். யுதிஷ்டிரன் பிடிபடவில்லை. யுத்தமும் அன்று நிறுத்தப்பட்டது. கௌரவ சேனை பயத்துடன் திரும்பிற்று. பாண்டவ சேனையும் கம்பீரமாக யுத்தகளத்தை விட்டு இரவில் தங்குமிடம் சென்றது. படைகள் அனைத்துக்கும் பின்னைக் கேசவனும் அருச்சுனனும் பாசறைக்குச் சென்றார்கள். இவ்வாறு பதினோராவது நாள் யுத்தம் முடிந்தது.

# பன்னிரண்டாவது நாள்

யுதிஷ்டிரனை உயிருடன் பிடிக்கும் பிரயத்தனம் முதல் நாளில் செய்தது தோல்வியாக முடிந்தது. துரியோதனனைப் பார்த்து, துரோணர் சொன்னார்: “தனஞ்சயன் அருகில் இருக்கும் வரையில் யுதிஷ்டிரனைப் பிடிக்க முடியாது. என்னால் வஞ்சனை யில்லை. ஏதாவது உபாயம் செய்து தனஞ்சயனை வேறு இடத்திற்கு இழுத்துக் கொண்டு போய் யுதிஷ்டிரனைத் தனியாகப் பிரித்துவிட்டால், நான் சேனையை உடைத்துப் புகுந்து யுதிஷ்டிரனைப் பிடிப்பேன். யுத்தத்துக்குப் பயந்து அவன் ஓடிப்போகாமல் நின்று போர் செய்தானானால் அவனை நிச்சயமாகப் பிடித்துத் தருவேன். அப்படி அவன் நிற்காமல் யுத்த பூமியிலிருந்து ஓடினானால் அதுவே வெற்றியாகு மல்லவா?” என்றார்.

அவ்வாறு துரோணர் சொன்னதைக் கௌரவ சேனையிலிருந்த திரிகர்த்த தேசாதிபதியான சுசாமன் கேட்டுக் கொண்டிருந்தான். அவன் தன்னுடைய சகோதரர்களுடன் யோசனை செய்தான். அவர்கள் சம்சப்தக விரதம் பூண்டு அருச்சுனனைப்போருக்கு இழுத்துயுதிஷ்டிரனை விட்டுப் பிரிந்துபோகச் செய்ய நிச்சயித்தார்கள்.

ஒரு பெருஞ் சேனையைத் திரட்டி எல்லாரும் சேர்ந்து அக்கினியை அர்ச்சனை செய்து புல்லால் செய்யப்பட்ட ஆடைகளை அனைவரும் தரித்து, சரீரத்தை விட்டுவிட உறுதி செய்துகொண்டு “நாங்கள் யுத்தத்தில் தனஞ்சயனைக் கொல்லாமல் திரும்பமாட்டோம். பயந்து புறங்காட்டி ஓடினோமானால் மகா பாபங்களையெல்லாம் செய்த தோஷத்தை அடைவோமாக” என்று மரண காலத்தில் செய்யவேண்டிய தானங்களை யெல்லாம் செய்துவிட்டு யுத்தகளத்தில் யமனுடைய திக்கை நோக்கிப் பிரவேசித்தார்கள்.

“அருச்சுனா!” என்று தனஞ்சயனை அறைகூவி யுத்தத்துக்கு அழைத்தார்கள். ஒரு முக்கியமான நோக்கத்

துக்காக ஒரு படையோ தனிப்படையாட்களோ தங்கள் உயிரை மாய்த்துக்கொண்டு காரிய சாதகம் செய்விப்பது என்கிற தற்கொலை முறையை இந்தக்காலத்துயுத்தங்களிலும் காணலாம். அருச்சுனனைத் தூர இழுத்துக்கொண்டு போகவேண்டிய நோக்கத்துடன் ஏற்பட்ட தற்கொலைப் படையாக திரிகர்த்தர்கள் சம்சப்தகபிரதிஜ்ஞை எடுத்துக் கொண்டு அருச்சுனனை அழைத்தார்கள்.

அருச்சுனன் தருமராஜனைப் பார்த்து, "அரசனே! சம்சப்தக விரதம் பூண்டவர்கள் என்னைப் பெயரிட்டுக் கூவுகிறார்கள். யுத்தத்துக்கு யாரேனும் அழைத்தால் பின் வாங்குவதில்லை என்கிற பிரதிஜ்ஞையால் நான் கட்டுப்பட்டிருக்கிறேன் அல்லவா? சுசர்மனும் அவனைச் சேர்ந்தவர்களும் என்னை யுத்தத்திற்கு அழைக்கிறார்கள். இவர்களையும் இவர்களுடைய பரிவாரங்களையும் கொன்று திரும்புவேன். எனக்கு அனுமதி தரவேண்டும்" என்றான்.

"அப்பனே! துரோணருடைய எண்ணம் உனக்குத் தெரியும். அதை நினைவில் வைத்துக்கொண்டு எந்தக் காரியமாயினும் செய். என்னை உயிருடன் பிடிப்பதாக அவர் துரியோதனனுக்கு வாக்குக் கொடுத்திருக்கிறார். அவர் பலமுள்ளவர், சூரர், அஸ்திர வித்தையில் பண்டிதர். சிரமம் தாங்கக் கூடியவர், சோம்பாதவர்" என்றான் யுதிஷ்டிரன்.

"அரசனே! உமக்குக் காப்பாக சத்தியஜித்து இருக்கிறான். அவன் உயிருடன் உமது பக்கத்தில் இருக்கும் வரையில் உமக்கு அபாயமில்லை" என்று அருச்சுனன் தருமராஜனுக்குச் சொல்லிப் பாஞ்சால ராஜகுமாரனான சத்தியஜித்தை யுதிஷ்டிரனுக்குக் காப்பாக வைத்து விட்டுச் சம்சப்தகர்களுடைய அழைப்பை ஏற்றுக் கொண்டு பசிகொண்ட சிம்மத்தைப்போல் அவர்களை எதிர்த்துச்சென்றான்.

"கண்ணா! அதோ பார், திரிகர்த்தர்கள் நிற்கிறார்கள். அழவேண்டிய சமயத்தில் விரதம் பூண்ட மயக்கத்

தினால் சந்தோஷமாக நிற்கிறார்கள். சுவர்க்கத்தை எதிர் பார்க்கும் மகிழ்ச்சியில் பரவசமாக இருக்கிறார்கள்!" என்று சொல்லிக்கொண்டு பகைவர்களுடைய பெருஞ் சேனையை அழித்தான் அருச்சுனன்.

x x x

பாரதப்போரில் இது பன்னிரண்டாவது நாள். போர் கடுமையாக நடந்தது. அருச்சுனனுடைய தாக்குதலினால் சம்சப்த திரிகர்த்தர்களுடைய படை அழிய ஆரம்பித்தது. திரிகர்த்த ராஜன் மனம் கலங்கிய வீரர்களை எச்சரிக்கை செய்து உரத்த சிம்மநாதம் செய்தான்.

"சூரர்களே! பெரும் க்ஷத்திரியக் கூட்டத்தில் பிரதிக்ஞை செய்து விரதம் பூண்டிருக்கிறீர்கள். கோரமான யுத்தங்களைச் செய்தபின் பயத்தைப் பாராட்டுவது தகாது. பரிகாசத்திற்குப் பாத்திரமாவீர்கள்" என்று அந்த வீரர்களும் ஒருவரை ஒருவர் உற்சாகப் படுத்திக் கொண்டு சங்கங்களை முழக்கி யுத்தத்தை மறுபடியும் மும்முரமாக நடத்தினார்கள்.

x x x

"ரிஷிகேசனே! இவர்கள் உயிரோடிருக்கும் வரையில் யுத்தத்தைவிட்டு விலகமாட்டார்கள். தயங்குவதில்லை. தேரை நடத்து" என்றான் அருச்சுனன்.

மதுசூதனன் * தேரைச் செலுத்தினான். தேவாசுர யுத்தத்தில் இந்திரனுடைய ரதத்தைப்போல் கண்ணன் ஓட்டிய தேர் பலவித மண்டல கதிகளைச் செய்தது. அருச்சுனனுடைய காண்டீவம் தன்னுடைய முழுப் பணியைக் காட்ட ஆரம்பித்தது. திரிகர்த்தர்களுடைய கண்ணுக்கு நூறு அருச்சுனர்கள் தென்பட்டார்கள். காயமடைந்த வீரர்கள் ஆயிரக் கணக்கில் பூமலர்ந்த பலாச மரங்களைப்போல் காணப்பட்டார்கள்.

---

* மதுசூதனன் = ரிஷிகேஷன் = கிருஷ்ணன்.

கடுமையான போர் நிகழ்ந்தது. ஒரு சமயம் அம்பு மழையால் அருச்சுனனுடைய ரதம் கொடி மரத்துடன் அந்தகாரத்தில் மூடப்பட்டது.

"தனஞ்சயனே! பிழைத்திருக்கிறாயா?" என்றான் கண்ணன்.

"இருக்கிறேன்!" என்று இருட்டில் அருச்சுனன் காண்டீவத்தை இழுத்துத் தன் அம்புகளினால் பகைவர்களுடைய அம்பு மழையை விலக்கினான்.

பிரளயகாலத்தில் நடைபெறும் ருத்திர நடன அரங்கம்போல் ரணகளம் விளங்கிற்று. தலையில்லா முண்டங்களும் வெட்டுண்ட அங்கங்களும் எங்கும் பரவி பயங்கரமான காட்சியளித்தது.

X X X

சம்சப்தகர்களை எதிர்த்து அருச்சுனன் சென்றதும் துரோணர் அணிவகுக்கப்பட்ட பாண்டவ சேனையில் யுதிஷ்டிரர் இருந்த இடத்தைப் பலமாகத் தாக்கத் தம் சேனைக்கு உத்தரவிட்டார். பெருஞ் சேனை துரோணர் தலைமையில் தன்னை எதிர்க்க வந்ததை யுதிஷ்டிரன் கண்டான்.

"பிராமணர் என்னைப் பிடிக்க வருகிறார். ஜாக்கிரதையாகச் சேனையைப் பாதுகாப்பாயாக!" என்று திருஷ்டத்யும்னனை எச்சரித்தான்.

துருபத குமாரன் துரோணர் வரும்வரையில் காத்திராமல் தானே துரோணரை எதிர்த்துத் துரிதமாகத் தேரை முன் செலுத்தினான். தன்னைக் கொல்லவே பிறந்தவனாகிய திருஷ்டத்யும்னன் தன்னை நோக்கி வருவதைக் கண்ட ஆசாரியர் ஒரு கணம் காலனைக் கண்டது போல் மனம் கலங்கினார். இவனால் தமக்கு மரணம் என்பது நினைவுக்கு வந்தது. அந்தப் பக்கத்தில் செல்லுவதை விட்டுத் துருபதன் இருந்த இடத்தை நோக்கிச் சென்றார்.

X V X

துருபதனுடைய சேனையைத் துன்புறுத்தி ரத்த வெள்ளம் பெருகச் செய்தபின் துரோணர் மறுபடியும் மனதை உறுதி செய்து கொண்டு யுதிஷ்டிரன் இருக்குமிடம் சென்றார். யுதிஷ்டிரன் அசையாமல் அம்பு மழை வருஷித்தான். அதன்மேல் சத்தியஜித்து துரோணரை நோக்கிப் பாய்ந்தான். கோரமான போர் துவங்கிற்று. துரோணர் யமனைப்போல் விளங்கினார். ஒருவர் பின் ஒருவராக வீரர்களை வதம் செய்தார். பாஞ்சால ராஜகுமாரனான விருகன் அவர் பாணத்துக்கு இரையானான். அதன் பின் சத்தியஜித்தும் அடிபட்டு மாண்டான்.

இதைக்கண்டு விராடன் மகன் சதானீகன் துரோணர் மேல் பாய்ந்தான். சதானீகனுடைய தலை அறுபட்டுக் குண்டலங்களோடு நிலத்தில் உருண்டது. கேதுமன் என்கிற அரசன் எதிர்த்தான். அவனும் உயிரை இழந்தான். துரோணருடைய வேகத்தை எப்படியாவது நிறுத்த வேண்டும் என்று வந்து தடுத்த வசுதானன் ஒரு பாணத்தால் யமாலயத்துக்கு அனுப்பப்பட்டான். யுதாமன்யுவையும் சாத்யகியையும் சிகண்டியையும் உத்தமௌஜசையும் பாணங்களால் அடித்து விரட்டித் துரோணர் யுதிஷ்டிரனுக்குச் சமீபத்தில் வந்து விட்டார். அச்சமயம் மற்றொரு துருபத புத்திரனான பாஞ்சால்யன் தன் உயிரைத் திரணமாகக் கருதித் துரோணரை ஆவேசமாக எதிர்த்தான். அவனும் உயிரிழந்து ஆகாயத்தினின்று நட்சத்திரம் விழுவதுபோல் தேரினின்று கீழே விழுந்தான்.

"ராதேயா! துரோணருடைய பராக்கிரமத்தைப் பார்த்தாயா? இந்தப் பாண்டவர்கள் இனி யுத்தத்தை விரும்பமாட்டார்கள். அவர்களுடைய சேனை சிதறித் தடுமாறுவதைப் பார்" என்றான் துரியோதனன்.

கர்ணன் தலை அசைத்தான். "துரியோதனனே! பாண்டவர்கள் இவ்வளவு சுலபமாகத் தோல்வியடைய மாட்டார்கள். யுத்தத்தை விட்டு விலகமாட்டார்கள். விஷத்தினாலும், நெருப்பினாலும், சூதாட்டத்தினாலும் உண்டான துன்பங்களையும் வனவாசத்தையும் அவர்கள்

மறக்க மாட்டார்கள். அதோ பார்! பாண்டவர்கள் மறுபடி ஒன்றுகூடித் துரோணரைத் தாக்குகிறார்கள். பீமனும் சாத்யகியும் யுதாமன்யுவும் க்ஷத்ரதர்மனும் நகுலனும் உத்தமௌஜசும் துருபதனும் விராடனும் சிகண்டியும் திருஷ்டகேதுவும் இன்னும் பல வீரர்களும் யுதிஷ்டிரனைக் காக்கவந்து கூடிவிட்டார்கள். துரோணர் பலமாகத் தாக்கப்படுகிறார். இவ்வளவு பாரம் ஆசாரியர் பேரில் சுமத்திவிட்டு நாம நின்றுகொண்டிருக்கக்கூடாது. மகாசூரராயினும் அவர் தாங்கக்கூடிய சுமைக்கு வரம்பு உண்டு. ஓநாய்களும் ஒன்றுகூடிப் பெரிய யானையைக் கொல்லும். துரோணர் இருக்குமிடம் நாமும் செல்வோம். அவரைத் தனியாகவிட்டு விடக் கூடாது'' என்றான் கர்ணன்.

# சூரன் பகதத்தன்

யுதிஷ்டிரனை உயிருடன் பிடிப்பதற்காகத் துரோணர் அநேகந் தடவை பிரயத்தனம் செய்தார். முடியவில்லை.

துரியோதனன் ஒரு பெரிய யானைப் படையைத் திரட்டி பீமன் மேல் செலுத்தினான். தேரின் மேல் நின்று பீமன் அந்த யானைப் படையை அம்புகளால் தாக்கினான். அர்த்தசந்திர பாணங்களால் துரியோதனனுடைய தேர்க் கொடியையும் அவன் பிடித்திருந்த வில்லையும் அறுத்துத் தள்ளினான். இவ்வாறு துரியோதனன் பீடிக்கப்படுவதைக் கண்டு மிலேச்ச ராஜனான அங்கன் பெரிய யானையின் மீது ஏறி பீமசேனனை எதிர்த்தான். பீமன் நாராசங்களைச் செலுத்தி யானையை வீழ்த்தி மிலேச்ச ராஜனையும் கொன்றான். இதைக் கண்டு அந்தப் பகுதிக் கௌரவ சேனை பயந்துபோய்ச் சிதறி ஓடிற்று.

யானைகளும் ரதங்களுக்குப் பூட்டியிருந்த குதிரைகளும் பயந்துகொண்டு ஓடும்பொழுது ஆயிரக்கணக்கில் காலாட்கள் மிதிக்கப்பட்டு மாண்டார்கள். நான்கு பக்கத்திலும் சேனை சிதறியடிக்கப்பட்டு ஓடுவதைக் கண்டு பிராக்ஜோதிஷ தேசத்து ராஜனான பகதத்தனுக்குப் பொறுக்க முடியவில்லை. அவன் தன்னுடைய பிரசித்தி பெற்ற சுபரதீகம் என்ற யானையின் மீது ஏறி அதை பீமன மேல் ஏவினான். காதுகளை விரித்துக்கொண்டும் துதிக்கையைச் சுழற்றிக் கொண்டும் அந்த யானை பீமசேனன்மேல் பாய்ந்து அவனுடைய ரதத்தையும் குதிரைகளையும் நொறுக்கிப் பொடியாக்கி விட்டது. பீமன யானையின் மர்மஸ்தானங்களை நன்றாகப் பயின்று அறிந்தவன். தேரும் குதிரைகளும் நாசம் செய்யப்பட்டவுடனே அவன் கீழே குதித்துப் போர் யானையின் கால்களுக்கு இடையில்புகுந்து அதன் சரீரத்தை மிக நெருங்கி யானைக்குரிய பல மர்மஸ்தானங்களைக் கையினால் தாக்கிக்

குத்தித் துன்புறுத்தினான். யானை வீறிட்டுக் கொண்டு குயவனுடைய சக்கரம் போல் சுழன்று சுழன்று பீமனை உதறித்தள்ளப் பார்த்தது. துதிக்கையைக் கொண்டு அவனைப் பிடித்து முழங்கால்களைக் கொண்டு நொறுக்கிக் கொல்லப்போகும் தறுவாயில் விருகோதரன்* தும்பிக்கையினின்று எப்படியோ விடுவித்துக் கொண்டு மறுபடியும் அதனுடைய சரீரத்தை யொட்டியே அங்கங்களின் இடையில் புகுந்து அதை வேதனை செய்தான்.

பாண்டவப் படையிலிருந்து போர் யானை ஏதேனும் வந்த பகதத்தனுடைய யானையைத் தாக்கும். அப்போது தன்னை விட்டுக்கொள்ளலாம் என்று எதிர்பார்த்து இவ்வாறு அவகாசம் செய்துகொண்டிருந்தான். யானையின் சரீரத்தில் அவன் மறைந்துவிட்டதனால் "பீமசேனனைப் பகதத்தனுடைய யானை கொன்றுவிட்டது! பீமன் இறந்தான்" என்று யுத்தகளம் முழுதும் கூச்சல் கிளம்பிற்று.

பீமன் மாண்டுவிட்டான் என்றே யுதிஷ்டிரன் எண்ணி வீரர்களையெல்லாம் பகதத்தனைத் தாக்கச் சொல்லி ஏவினான். இதற்குள் தசார்ண தேசத்தரசன் ஒரு போர் யானையைக் கொண்டு பகதத்தனுடைய யானையை எதிர்த்தான். தசார்ணனுடைய யானை தீவிரமாகத் தாக்கி மிகக் கடுமையான போர் புரிந்தது. ஆயினும் அது முடிவில் சுபரதிகத்தினால் விரைவில் குத்தப்பட்டுக் கீழே விழுந்தது. பீமசேனன் அச்சமயம் யானையின் கீழிருந்து வெளிப்பட்டு ஓடித் தப்பினான்.

அநேக தேராளிகளால் சூழப்பட்டு மிகவும் தாக்கப்பட்ட பகதத்தன் தைரியத்தை இழக்கவில்லை. மலைமேல் காடுபற்றி எரியும் தீயைப்போல அந்த வீரன் ஜொலித்தான். சுற்றி வளைத்து நின்ற சத்துருக்களை அலட்சியம் செய்து சாத்யகியினுடைய தேரின்மேல் தன் யானையைச் செலுத்தினான். யானையானது சாத்யகியின் தேரைப் பிடித்து ஓரே தூக்காகத் தூக்கி எறிந்தது. சாத்யகி

* விருகோதரன்—ஓநாயைப் போல் முதுகோடு ஒட்டிய வயிறு கொண்டவன்—பீமன்.

தேரைவிட்டுக் கீழே குதித்து உயிர் தப்பினான். அவனுடைய சாரதி மிகவும் சாமர்த்தியமாக தூக்கி எறியப்பட்ட தேரையும் குதிரைகளையும் காப்பாற்றி உடனே மறுபடி ரதத்தைச் சரியாக நிறுத்திச் சாத்யகி நின்ற இடத்துக்குச் செலுத்தினான்.

பகதத்தனுடைய யானை பாண்டவ சேனையின் மத்தியில் ஏதேச்சையாகப் புகுந்து இவ்வாறு பல வீரர்களைத் தூக்கித் தூக்கி எறிந்து காலனைப்போல் பயத்தை உண்டாக்கிற்று. ஐராவதத்தின்மீது இந்திரன் நின்று அசுரர்களைத் துன்புறுத்திய வண்ணம் பகதத்தன் பல அரசர்களை வீழ்த்தியும் துன்புறுத்தியும் வந்தான்.

நீட்டிய துதிக்கையும் அசைவற்ற காதுகளுமாக அந்த யானை இங்குமங்கும் ஓடி எண்ணற்ற குதிரைகளையும் ரதங்களையும் ஆட்களையும் மிதித்துக் கொன்றது. பாணங்களை அதன்மேல் செலுத்தச் செலுத்த அந்த யானையின் உக்கிரம் மேலும் மேலும் அதிகமாயிற்று. காட்டில் இடையன் பசுக் கூட்டங்களை ஓட்டுவதுபோல் பகதத்தன் தன் போர் யானையைக் கொண்டு பாண்டவ சேனையை விரட்டி விரட்டி ஓடச்செய்தான். பீமசேனன் மறுபடி தேர் ஏறி சுப்ரதீகத்தைத் தாக்கினான். யானை தன் துதிக்கையை நீட்டி உமிழ் நீரை கக்கி எறிந்து தேர்க் குதிரைகளை விரட்டியபடியால் அவை பயந்துக் கொண்டு ஓடிவிட்டன.

அச்சமயம் தூரத்தில் சம்சப்தகர்களோடு யுத்தம் செய்து கொண்டிருந்த அருச்சுனன் பாண்டவ சேனையிருந்த இடத்தில் எழும்பிய புழுதியைக் கண்டும் யானையினுடைய சப்தத்தைக் கேட்டும் ஏதோ அனர்த்தம நேரிட்டது என்று ஊகித்தான். "மதுசூதனா! இது பகதத்தனுடைய போர்யானை சுப்ரதீகத்தின் தொனி. போர் யானையை நடத்தி யுத்தம் செய்யும் வீரர்களில் பகதத்தனைப்போல் உலகத்தில் யாரும் கிடையாது. அவன் நம்மவர்களை முறியடித்து விடுவான். விரைவில் அவ்விடம் நாம் போய்ச் சேரவேண்டும். இனி சம்சப்தகர்களை நசித்தது போதும். அவர்களை விட்டுத் துரோணர் யுதிஷ்டி

ரனை எதிர்த்துக் கொண்டிருக்கும் இடத்துக்குத் தேரை வேகமாகச் செலுத்த வேண்டும்'' என்றான்.

கிருஷ்ணனும் அவ்வாறே தேரைச் செலுத்தினான். சுசர்மாவும அவன் சகோதரர்களும் அருச்சுனனுடைய தேரைப் பின் தொடர்ந்து ''நில்! நில்!'' என்று சொல்லித் தாக்கினார்கள்.

அருச்சுனன் இரண்டு எண்ணங்களால் இழுக்கப் பட்டு ஒரு கணம் மனதில் வேதனைப் பட்டான். ''இங்கே சுசர்மா என்னைப் போருக்கு அழைக்கிறான். நான் புறங் காட்டி ஓடுபவனைப்போல் போவதா? வடபுறத்தில் நம்முடைய சேனை பிளக்கபபட்டு அபாய நிலையில் இருக் கிறது. அவ்விடம் உடனே நான் சென்று உதவாமற் போனால் காரியம கெட்டுப் போகும்'' என்று கவலைப்பட் டான்.

அச்சமயம் சுசர்மா ஒரு சக்தி ஆயுதத்தை அருச்சு னன் மேலும் ஒரு தோமரத்தை ஐனார்த்தனன் மேலும் வீசினான். கோபங்கொண்ட அருச்சுனன மூன்று பாணங் களை எய்து சுசர்மனைச திரும்பும்படி செய்துவிட்டு வேக மாக பகதத்தன இருந்த இடம் நோக்கித் தேரைச் செலுத்தச் சொன்னான.

அருச்சுனன் வந்து சேர்ந்ததுமே பாண்டவ சேனை தைரியம் கொண்டது. ஒழுங்காக நின்றார்கள். நாணற் காட்டை அழிக்கும் யானையைப் போல் அருச்சுனன் கௌரவ சேனையை அழித்துப பகதத்தனை நெருங்கினான். அருச்சுனன் வரக்கண்டதும் அவனை நோக்கி பகதத்தன் தன் யானையைச் செலுத்தினான். யானை அருச்சுனன் தேரின்மேல் காலனைப்போல் பாய்ந்தது. அப்போது வாசு தேவன் யானையின் பாதையினின்று மிகவும் சாமர்த்திய மாக ரதத்தை விலக்கிக் காப்பற்றினான.

பகதத்தன் யானையின் மேலிருந்து கொண்டு அருச்சு னன் கண்ணன் இருவர் பேரிலும் அம்புகள் பெய்தான். அருச்சுனன் யானையின் கவசத்தைப் பாணங்களால் முத லில் உடைத்து விட்டான். அதன்மேல் யானை பாணங்

களால் பீடிக்கப்பட ஆரம்பித்தது. இதைக் கண்டு பகதத்தன் சக்தியாயுதம் ஒன்றை வாசுதேவன்மீது பிரயோகித்தான். அருச்சுனன் அதைத் தன் பாணத்தால் இரண்டாக வெட்டினான். பிறகு பகதத்தன் ஒரு தோமரத்தை அருச்சுனன் மேல் செலுத்தினான். அது தனஞ்செயனுடைய கிரீடத்தைத் தாக்கிற்று.

அருச்சுனன் கிரீடத்தைச் சரியாக மறுபடி வைத்துக் கொண்டு, "பகதத்தனே! கடைசித் தடவையாக உலகத்தை நன்றாகப் பார்த்து விடு" என்று சொல்லிக் காண்டீபத்தை வளைத்தான்.

பகதத்தன் பழுத்த கிழவன். நரைத்த மயிரும் சதை மடிப்புகளும் கொண்ட அவன் முகம் சிம்மத்தின் முகம் போல் விளங்கிற்று. வயதினால் தொங்கிக் கண்களை மூடும் சதையை அவன் ஒரு பட்டு வஸ்திரத்தால் தூக்கிக் கட்டியிருப்பான். ஒப்புயர்வற்ற சூரன், அவன் சீலமும் குணமும் பிரதாபமும் க்ஷத்திரிய உலகத்தில் பிரசித்தமாக இருந்தது. இந்திரனுக்கு நண்பன் என்று அவனைப் பற்றிச் சொல்லுவார்கள். "கடைசித் தடவையாக உலகத்தைப் பார்" என்று சொல்லி அருச்சுனன் அவன் மேல் பாணங்களை விட்டு அவனுடைய வில்லையும் அம்புப் பெட்டியையும் உடைத்து மர்மஸ்தானங்களைப் பிளந்தான். அந்தக் காலத்தில் வீரர்கள் அனைவரும் கவசம் பூண்டிருப்பார்கள். கவசத்தில் எந்த இடத்தில் பட்டால் அம்பு உள்ளே நுழைந்து ஆளைத் தாக்கும் என்கிற ரகசியங்கள் யுத்தப்பயிற்சியில் அடங்கும்.

கிழவனான பகதத்தன் தன்னுடைய ஆயுதங்களை இழந்தபடியால் யானையைக் குத்தி ஓட்டும் அங்குசத்தை மந்திரத்தைப் பிரயோகித்து அருச்சுனன்மேல் வீசினான். அது அருச்சுனனை மாய்த்திருக்கும். கண்ணன் அதைத் தடுத்து தன் மார்பில் ஏற்றுக்கொண்டான். அது வைஷ்ணவாஸ்திர மந்திரத்துடன் செலுத்தப்பட்டிருந்தபடியால் மாதவன் கழுத்தில் வனமாலையாக மாறி ஆபரணமாகத் தொங்கிற்று.

"ஜனார்த்தனா! பகைவன் எறிந்த அஸ்திரத்தை நீ ஏன் ஏற்றுக் கொண்டாய்? ரதத்தை ஓட்டுவேன். யுத்தம் செய்யமாட்டேன் என்று சொல்லியவன் வில்லும் கையுமாக நான் இருக்கும்போது ஏன் இவ்விதம் செய்தாய்?" என்று அருச்சுனன் ஆட்சேபித்தான்.

"அப்பனே! உனக்குத் தெரியாது. இந்த அஸ்திரம் உன்னைக் கொன்றிருக்கும். அது என்னுடைய பொருள். என்னிடம் திரும்பியது" என்று சொல்லிச் சிரித்தான்.

பிறகு பார்த்தன் ஒரு பாணத்தைச் செலுத்தினான். அது சுப்ரதிகத்தின் கும்பஸ்தலங்களுக்கு இடையில் புற்றில் பாம்பு செல்வதுபோல் நுழைந்து மறைந்தது.

பகதத்தன் யானையைத் தூண்டிப் பார்த்தான். பொருளிழந்த புருஷனுடைய வார்த்தையை மனைவி கேட்காததைப் போல அந்த யானை அப்போது பகதத்தனுடைய கட்டளைச் சொற்களை அசட்டை செய்தது. மலைபோன்று நின்ற அந்த யானை அங்கங்களை ஸ்தம்பனம் செய்து கொண்டும் தந்தங்களை நிலத்தில் முட்டிக்கொண்டும் ஒரு தீனசுவரம் இட்டுவிட்டுப் பிராணனை விட்டது.

யானையைக் கொல்லாமல் பகதத்தனைமட்டும் வீழ்த்தப் பார்த்த தனஞ்சயன் அவ்வாறு செய்ய முடியாததைப் பற்றிக் கொஞ்சம் வருந்தினான். அருச்சுனனுடைய அம்புகளால் கண்களைத் தூக்கிக் கட்டியிருந்த பட்டு அறுந்து பகதத்த ராஜன் இருளில் மூழ்கினான். அதன்மேல் கூறிய பிறை வடிவமான பாணம் ஒன்று அவன் மார்பைப் பிளந்தது.

மலையுச்சியிலிருந்து காற்றடித்து நன்றாகப் பூத்தமரம் விழுவதைப்போல் பொன்மாலை அணிந்த பகதத்தன் போர் யானையின்மீதிருந்து கீழே வீழ்ந்தான். அந்தப் பகுதியிலிருந்த கௌரவப்படை கலைந்து ஓடிற்று.

சகுனியின் சகோதரர்களான விருஷனும் அசலனும் அப்போதும் தயங்காமல் அருச்சுனனை எதிர்த்தார்கள். முன்புறமும் பின்புறமுமாகத் தனஞ்சயனை மிகவும் துன்

புறத்தினார்கள். அருச்சுனன் அவர்களுடைய ரதங்களைப் பொடிப்பொடியாகச் செய்து அவர்களுடைய படையையும் அம்புகளால் தாக்கினான். ஒரே முகச் சாயலைக் கொண்ட இளம் சிம்மங்களுக் கொப்பான அவ்விரு சகோதரர்களும இறந்து கீழே வீழ்ந்தார்கள்.

"யுத்தத்தை விட்டு ஓடாதவர்களான அவ்விரு சகோதரர்களுடைய சரீரங்கள் பரிசுத்தமான கீர்த்தியொளியைப் பத்துத் திக்குகளிலும் வீசின' என்கிறார் வியாசர்.

தன்னுடைய ஒப்பற்ற வீர சகோதரர்கள் மாண்டதைக் கண்ட சகுனி மிகவும் கோபம் கொண்டு தனக்குத் தெரிந்த மாயப்போர் முறைகளைத் துவக்கினான். அருச்சுனன் அவற்றுக்கெல்லாம் பிரதியஸ்திரம் பிரயோகித்து மாயைகளை விலக்கினான். வேகமான குதிரைகள் பூட்டிய தேரில் நின்ற சகுனி அருச்சுனனுடைய பாணங்களால் அடிபட்டு யுத்தகளம் விட்டு விலகினான்.

அதன் பிறகு பாண்டவசேனை துரோணருடைய படையைப் பலமாகத் தாக்கிற்று. எண்ணற்ற வீரர்கள் மாண்டார்கள். ரத்த நதிகள் ஓடின. அச்சமயம் சூரியன் அஸ்தமித்தான். தம்முடைய சேனை பெருந் தோல்வியடைந்து கவசங்கள் உடைந்து காயங்கள் பட்டுத் தைரியம் இழந்து புத்திகூட ஸ்திரமில்லாத நிலைமையை அடைந்துவிட்டதைப் பார்த்துத் துரோணர் பன்னிரண்டாவது நாள் யுத்தத்தை நிறுத்தினார். இரண்டு சேனைகளும் ஒன்றை மற்றொன்று பார்த்துக்கொண்டே களத்தைவிட்டு விலகின.

# அபிமன்யு

பன்னிரண்டாவது நாள் இரவு பாண்டவசேனையில் எல்லா வீரர்களும் பல்குனனைப் புகழ்ந்து கொண்டு உற்சாகமாகத் தங்களுடைய தங்குமிடம் சென்றார்கள். கௌரவ வீரர்கள் கவலையும் வெட்கமும் கொண்டு மௌனமாகக் கலைந்தார்கள்.

மறு நாள் விடிந்ததும் துரியோதனன் மிகுந்த கோபத்துடன் துரோணரிடம் சென்று நமஸ்கரித்துப் பல வீரர்களுக்கிடையில் அடியில் கண்டவாறு பேச ஆரம்பித்தான்.

"பிராமணோத்தமரே! அருகில் நின்ற யுதிஷ்டிரனை நேற்று பிடிக்காமல் விட்டுவிட்டீர். எங்களைக் காப்பாற்றும் கவலை உமக்கு இருந்திருந்தால் நேற்று நடந்தநிகழ்ச்சிகள் நடைபெற இடமிருந் திருக்காது. உண்மையில் யுதிஷ்டிரனைப் பிடிக்கும் எண்ணம் உமக்கு உறுதியாக இருப்பின் உம்மை எவரால் தடுக்க முடியும்? நீர் எனக்குத் தந்த வரம் நடைபெறாமலிருப்பதற்குக் காரணம் எனக்குத் தெரியவில்லை. பெரியோர்களுடைய காரியங்கள் விசித்திரமாகவே இருக்கின்றன" என்று குற்றம சாட்டிப் பேசினான்.

இதைக் கேட்ட துரோணர் மிகவும் வருத்தப்பட்டார். "துரியோதனா! உனக்காக நான் என் முழு பலத்தையும் பிரயோகித்தே வருகிறேன். நீ எண்ணும எண்ணங்கள் அரசனாகிய உனக்குத் தகுதியானவையல்ல. யுதிஷ்டிரன் பக்கத்தில் அருச்சுனன் இருக்கும் வரையில் நம்முடைய எண்ணம் நிறைவேறாது என்று உனக்கு ஏற்கனவே நான் சொன்னேன். அவனை எப்படியாவது யுத்தகளத்திலிருந்து அப்புறப் படுத்தினா லல்லது உன் எண்ணம் நிறைவேறாது. இன்னும் அதற்காக முயற்சி செய்வேன்" என்று தன் கோபத்தை, அடக்கி துரியோதனனைச் சமாதானப் படுத்தினார்.

x x x

பதின்மூன்றாவது நாளிலும் சம்சப்தகர்கள் அருச்சுனனைப் போருக்கு அழைத்தார்கள். அவனும் அவர்களை எதிர்த்துத் தெற்கே சென்றான். அவ்விடம் அவனுக்கும் அந்தப் பெருங் கூட்டத்துக்கும் மிகப் பெரும் போர் நடந்தது. அதைப் போன்ற யுத்தமானது ஓரிடத்திலும் கேட்கப் பட்டதுமில்லை, பார்க்கப் பட்டதுமில்லை என்கிறார் வியாசர்.

தனஞ்சயன் தெற்கே சென்று விட்டதும் துரோணர் தம்முடைய படையைப் பத்ம வியூகமாக வகுத்து யுதிஷ்டிரனைத் தாக்கினார். பீமன், சாத்யகி, சேகிதானன், திருஷ்டத்யும்னன், குந்திபோஜன், துருபதன், கடோத்கசன், யுதாமன்யு, சிகண்டி, உத்தமௌஜஸ், விராடன், கேகயர்கள், சிருஞ்சயர்கள் இன்னும் பல மகா வீரர்களும் துரோணருடைய படையை எதிர்த்தும் பயன் பெறவில்லை. துரோணருடைய தாக்குதலின் வேகத்தைக் கண்டு பிரமித்து நின்றார்கள்.

சுபத்திரா புத்திரனான அபிமன்யு வாலிபனானாலும் கிருஷ்ணார்ச்சுனர்களுக்குச் சமமான சூரன் என்று பெயர் பெற்று விட்டான். அவனை யுதிஷ்டிரன் கூப்பிட்டு "அப்பா! துரோணர் நம்மை வாட்டுகிறார். நாம் தோல்வி அடைந்தால் அருச்சுனன் நம்மை மிகவும் நிந்திப்பான். துரோணருடைய சேனையை உடைக்க மற்ற வீரர்களால் முடியவில்லை. நீ ஒருவன் தான் அதைச் செய்ய முடியும். துரோணருடைய சேனையைத் தாக்குவாயாக!" என்றான்.

"நான் சென்று இந்த வியூகத்தில் பிரவேசிப்பேன். சந்தேகமில்லை. ஆனால் பிரவேசித்த பின் ஏதேனும் ஆபத்து நேரிட்டால் வெளியே வருவதற்கு நான் சக்தியற்றவன்" என்றான் அபிமன்யு.

"வீரனே! வியூகத்தை நீ உடைத்துப் பிரவேசி. நீ நுழைந்து செல்லும் வழியில் நாங்கள் உன்னைத் தொடர்ந்து செல்வோம். நீ வியூகத்தைப் பிளந்து உள்ளே தைரியமாகச் செல், பின்னால் நாங்கள் அனைவரும் உனக்குத் துணையாக இருப்போம்" என்று இவ்வாறு

தருமபுத்திரன் சொல்லியதைத் தொடர்ந்து பீமசேனனும், "உன்னைப் பின் தொடர்ந்து நான் வருவேன். திருஷ்டத்யும்னனும் சாத்யகியும் பாஞ்சாலர்களும் கேகயர்களும் மச்ச தேசத்துப் படையும் உன்னைப் பின் தொடர்ந்தே பிரவேசிப்பார்கள். வியூகத்தை ஒரு முறை நீ உடைத்து விட்டால் நாம் கௌரவ சேனையைத் துவம்சம் செய்து விடுவோம்" என்றான்.

"என் பராக்கிரமத்தைக் காட்டி மாமனுக்கும் பிதாவுக்கும் பிரீதியை உண்டு பண்ணுவேன்" என்று அபிமன்யு கண்ணனையும் தனஞ்சயனையும் நினைத்துக் கொண்டு உற்சாகத்தோடு சொன்னான்.

"உன பலம் வளர்க" என்று யுதிஷ்டிரனும் ஆசீர்வதித்தான்.

x x x

"சுமித்திரனே! அந்தோ! சீக்கிரமாகக் குதிரைகளைத் துரோணருடைய தேர்க்கொடி காணப்படும் இடத்துக்குச் செலுத்து!" என்றான் அபிமன்யு தன் சாரதியைப் பார்த்து. அவனும் ஓட்டினான்.

"போ! போ!" என்று மேலும் மேலும் தூண்டினான். சாரதி வணக்கமாக "ஆயுஷ்மன்! யுதிஷ்டிரர் உன்பேரில் வைத்திருப்பது மிகவும் பெரிய பாரம். ஒரு கணம் யோசித்துப் பிறகு வியூகத்தில் பிரவேசிப்பாயாக. துரோணர் சிறந்த அஸ்திரப் பயிற்சி பெற்ற சமர்த்தர்; பலசாலி; நீயோ அனுபவம் பெறாத பாலன்" என்றான்.

அபிமன்யு சிரித்தான். "கிருஷ்ணனை மாமனாகவும் அருச்சுனனைத் தந்தையாகவும் பெற்ற என்னிடம் பயம் என்கிற பேய் அணுகி வராது. இந்தச் சத்துருக்கள் என்னுடைய பலத்தில் பதினாறிலொன்று இருக்க மாட்டார்கள். வேகமாகத் துரோணருடைய சேனையைக் குறித்து ரதத்தைச் செலுத்து. தயங்க வேண்டாம்" என்று கட்டளையிட்டான். சாரதியும் அப்படியே ஓட்டினான்.

மூன்று வயதுள்ள இளங் குதிரைகள் பூட்டியதும் பொன்மய மானதுமான தேர் மிக்க வேகமாகச் சென்றது. கௌரவ சேனை, "அபிமன்யு வந்தான்! வந்தான்!" என்று ஆரவாரித்தது. பாண்டவர்களும் அபிமன்யு சென்ற வழியைப் பின் தொடர்ந்து சென்றார்கள். கோங்கு மரத் துவஜத்தைக் கொண்ட அபிமன்யுவின் தேர் தங்களை நோக்கி மிக வேகமாக வரும்போது கௌரவப் படையிலுள்ள வீரர்கள் "இவன் அருச்சுனனைக் காட்டிலும் மேலான சூரன்" என்று எண்ணி மனம் பதைத்தார்கள். யானைகளை எதிர்க்கச் சிம்மக் குட்டி செல்வதுபோல் அபிமன்யு சென்றான். சமுத்திரத்தில் கங்கா பிரவாகம் சேர்ந்து உண்டாகும் சுழல்போல் கௌரவப் படையில் ஒரு முகூர்த்த காலம் சுழல் உண்டாயிற்று. துரோணர் பார்த்துக் கொண்டிருக்கும்போதே வியூகம் உடைந்தது. அபிமன்யு உள்ளே பிரவேசித்து விட்டான்.

கௌரவ வீரர்கள் நெருப்பில் விட்டிற் பூச்சிகள் வீழ்வதுபோல் அபிமன்யுவை எதிர்த்து ஒருவர் பின் ஒருவராக வீழ்ந்து மாண்டார்கள். எதிர்த்து நின்ற வீரர்களையெல்லாம் தாக்கி பாலவீரன் அஸ்திரப் பிரயோகம் செய்து கவசங்களிலுள்ள மர்ம ஸ்தானங்களை நன்றாக அறிந்து பிளந்தான். யாக பூமியில் தருப்பைப் புல் பரப்புவதுபோல் அபிமன்யுவானவன், வீழ்த்தப் பட்ட வீரர்களால் யுத்த களத்தைப் பரப்பி மூடினான். எங்கு கண்டாலும் விற்கள், அம்புகள், கத்திகள், கேடகங்கள், அங்குசங்கள், கடிவாளங்கள், தேர்மரங்கள், கோடாலிகள், கதைகள், ஈட்டிகள், சாட்டைகள் சங்கங்கள் சிதறிக் கிடந்தன. கைகளும் தலைகளும் சரீரத் துண்டங்கள் அறுபட்டுக் கிடந்து பூமியை மண் தெரியாமல் மூடின.

அபிமன்யுவினால் ஏற்பட்ட நாசத்தைக் கண்டு துரியோதனன் மிகுந்த கோபங்கொண்டு தானே சென்று அபிமன்யுவை எதிர்த்தான். அபிமன்யுவை எதிர்க்க அரசனே சென்றான் என்பதையறிந்து துரோணர் துரியோதனனை நான்கு பக்கங்களிலும் காப்பாற்றுங்கள்

என்று பல வீரர்களைத் துணைக்கு அனுப்பினார். கொஞ்ச நேரம் சண்டை நடந்தது. பிறகு துரியோதனனைக் கஷ்டப்பட்டு விடுவித்தார்கள். கைக்கு எட்டினது வாய்க்கு எட்டவில்லையே என்று அபிமன்யு வருத்தப்பட்டான். அரசனுடைய துணைக்கு வந்த மகாரதர்களைப் புறங்காட்டி ஓடும்படி செய்தான்.

அதன்மேல் யுத்த தருமத்தையும் வெட்கத்தையும் விட்டுப் பல வீரர்கள் ஒன்று கூடித் தனியாய் நின்ற பாலனைச் சூழ்ந்து கொண்டு ஒரே சமயத்தில் தாக்கினார்கள். பொங்கி வரும் சமுத்திரத்தை மணற் கரையானது தடுப்பதுபோல் அருச்சுனனுடைய குமாரன் அவர்களையெல்லாம் தடுத்து நின்றான். துரோணர், அசுவத்தாமன், கிருபர், கர்ணன், சகுனி, சல்லியன் முதலிய பெரும் தளகர்த்தர்கள் எல்லாரும் ரதங்களிலிருந்து கொண்டு அபிமன்யுவைத் தாக்கினார்கள். அசுமகன் என்ற ராஜன் ஒருவன் தன் ரதத்தை மாயவேகமாக ஓட்டி அபிமன்யு மேல் பாய்ந்தான். அபிமன்யு சிரித்துக்கொண்டு அந்தப் பாய்ச்சலைத் தாங்கி, பாணங்களால் அவனை வதம் செய்தான். பிறகு கர்ணனுடைய கவசத்தைப் பிளந்து புகழ் பெற்ற சூரிய குமாரனும் திணறும்படியான பாணப் பிரயோகம் செய்தான். இன்னும் இவ்வாறே பிரபலமான பல வீரர்கள் அடிபட்டுப் புறங் காட்டினார்கள். அநேகம் பேர் மாண்டார்கள். சல்லியன் நன்றாக அடிபட்டுத் தேரில் மூர்ச்சையடைந்து உட்கார்ந்தான். சல்லியனுடைய தம்பி இதைக் கண்டு அபிமன்யுவை மெய்மறந்த வேகத்தோடு எதிர்த்தான். ஆனால் அருச்சுன குமாரன் அவனுடைய தேரைப் பொடிப் பொடியாக்கி இருந்த இடம் தெரியாதபடி செய்து அவனையும் வதம் செய்தான். இவ்வாறு மாமன் வாசுதேவனிடமும் தந்தை அருச்சுனனிடமும் கற்ற அஸ்திரங்களைப் பிரயோகம் செய்து பகைவர்களை மாய்த்த பால வீரனுடைய சௌர்யத்தையும் சாமர்த்தியத்தையும் பார்த்து, சந்தோஷத்தினால் துரோணாசாரியருடைய கண்கள் மலர்ந்தன என்கிறார் முனிவர்.

"இந்த அபிமன்யுவுக்கு நிகர் யாருமில்லை" என்று கிருபரிடம் துரோணர் சொன்னார். அதைக் கேட்டுக்

கொண்டிருந்த துரியோதனனுக்குப் பொறுக்க முடியாத கோபம் பொங்கிற்று.

"ஆசார்யர் அருச்சுனனிடம் வைத்திருக்கும் அன்பினால் அவனுடைய மகனைப் புகழ்ந்து கொண்டு அவனைக் கொல்லாமலிருக்கிறார். உண்மையில் அவனை அடக்க வேண்டும் என்று இவர் எண்ணினால் அது முடியாத காரியமா?" என்றான்.

அதர்ம யுத்தத்தில் பிரவேசித்த துரியோதனன் இவ்வாறு அடிக்கடி பீஷ்மரிடத்திலும் துரோணரிடத்திலும் சந்தேகம் ஏற்பட்டுப் பரிதபித்தான்.

துச்சாதனன் "இந்த மூடப்பையனை நான் கொன்று தீர்த்து விடுகிறேன்" என்று சொல்லிச் சிம்மநாதம் செய்து அபிமன்யுவைத் தாக்கினான்.

துச்சாதனனும் அபிமன்யுவும் தங்களுடைய தேர்களை நானாவித மண்டலாகாரங்களில் செலுத்தி வெகு நேரம் போர் செய்தார்கள். முடிவில் துச்சாதனன் அடிக்கப்பட்டு மூர்ச்சை யடைந்து சாய்ந்தான். துச்சாதனனுடைய சாரதி இதைக் கண்டு விரைவில் தேரை ரணகளத்தினின்று விலக்கிச் செலுத்தினான். பலசாலியான துச்சாதனனுடைய தோல்வியைக் கண்டு பாண்டவ சேனை சந்தோஷமடைந்து முழக்கம் செய்தது.

x x x

அதன்பின் அபிமன்யு கர்ணனால் தாக்கப்பட்டு மிகவும் பீடிக்கப்பட்டான். ஆயினும் சுபத்திராபுத்திரன் பரபரப்பில்லாமல் ஒரு பாணத்தைச் செலுத்திக் கர்ணனுடைய வில்லை அறுத்துப் பூமியில் விழும்படி செய்தான். இதைப் பார்த்துக் கர்ணனுடைய சகோதரன் அபிமன்யுவை எதிர்த்தான். அடுத்த கணம் அபிமன்யு செலுத்திய அம்பினால் அவனுடைய தலை அறுபட்டுக் கீழே உருண்டது. அதன்மேல் அபிமன்யு கர்ணனையும் பலமாகத் தாக்கி அவனையும் அவன் சேனைக் கூட்டத்தையும்

புறங்காட்டி ஓடச் செய்தான். இதைக் கண்டதும் கௌரவ சேனை ஒழுங்கிழந்தது. "நில்லுங்கள், நில்லுங்கள்" என்று துரோணர் எவ்வளவு சொல்லியும் நிற்காமல் கலைந்தது. ஓடாமல் நின்றவர்களை உலர்ந்த காட்டில் வைக்கப்பட்ட நெருப்பைப்போல் அபிமன்யு நாசம் செய்தான்.

# அபிமன்யு வதம்

தாங்கள் தீர்மானித்திருந்தபடி அபிமன்யு வியூகத்தை உடைத்த பாகத்தில் அவனைப் பின் தொடர்ந்து பாண்டவர்கள் நுழையப் போனார்கள். இதைக் கண்டு திருதராஷ்டிரனுடைய மருமகனும் மகா பராக்கிரமசாலியும் சிந்து தேசத்து ராஜனுமான ஜயத்ரதன் பள்ளத்தாக்கில் யானை இறங்குவதுபோல் பாண்டவர்கள் மேல் படையுடன் பாய்ந்தான். அவனுடைய தைரியத்தையும் சமயத்துக்குத் தகுந்தபடி யோசித்துச் செய்த சாதுர்யத்தையும் பார்த்த கௌரவ சேனை மறுபடியும் தைரியம் கொண்டது. ஜயத்ரதன் பாண்டவர்களைத் தடுத்த இடத்தில் படை வீரர்கள் பலமாகக் கூடினார்கள். வியூகத்தின் பிளவு மறுபடி மூடப்பட்டது. சிந்து ராஜனுடைய வெள்ளிப் பன்றிக் கொடியைப் பார்த்துக் கௌரவ சேனை உற்சாகமடைந்தது. அபிமன்யுவினால் உண்டாக்கப்பட்ட வியூக உடைப்பு அடைக்கப்பட்டு மறுபடி நன்றாக ஒன்று சேர்ந்து பூர்த்தி செய்யப்பட்டது.

x x x

யுதிஷ்டிரன் ஒரு பல்லத்தைப் பிரயோகித்து ஜயத்ரதனுடைய வில்லை அறுத்தான். கண் கொட்டுவதற்குள் அவன் வேறு ஒரு வில்லை எடுத்துப் பத்து பாணங்களைத் தர்மபுத்திரன்மேல் வீசினான். பீமசேனன் ஜயத்ரதனுடைய வில்லையும் தேரின் கொடி குடை எல்லாவற்றையும் பாணங்களால் நாசம் செய்து பூமியில் தள்ளினான். சிந்து ராஜன் தயங்காமல் மறுபடியும் வேறு வில்லை எடுத்து பீமனுடைய வில்லை அறுத்துத் தள்ளினான். பீமனுடைய தேர்க் குதிரைகளையும் வீழ்த்தினான். பீமசேனன் தன் தேரினின்று இறங்கி, சாத்யகியின் தேரில் ஏற வேண்டியதாயிற்று.

இவ்வாறு ஜயத்ரதன் மிகுந்த சாமர்த்தியமாக வியூக உடைப்பை உடனே அடைத்துவிட்டுப் பாண்டவர்கள்

உள்ளே நுழையாமற் செய்துவிட்டான். உள்ளே அபிமன்யு சகாயமற்று நின்றான்.

x x x

கௌரவ சேனைக்குள் புகுந்த சுபத்திராபுத்திரன் தன்னை எதிர்த்த வீரர்களையெல்லாம் வீழ்த்தினான். தனியாக நின்ற அவனை எதிர்க்க வந்தவர்கள் அனைவரும் சமுத்திரத்தில் புகுந்த நதிகளைப்போல் இருந்த இடம் தெரியாமல் மறைந்தார்கள். துரியோதனனுடைய குமாரன் லக்ஷ்மணன் என்பவன் மிகவும் காந்தியும் வீரமும் கொண்ட பாலன். அனைவரும் பின்வாங்கியபோது இவன் பயமின்றி அபிமன்யுவை எதிர்க்க வந்தான். இதைக் கண்டவுடன் புறங்காட்டிச் சென்று கொண்டிருந்த பல கௌரவ வீரர்கள் திரும்பி வந்து துரியோதனனுடைய குமாரனுக்குச் சகாயமாக நின்று போர் புரிந்தார்கள். மலைமேல் மழை பெய்வதுபோல் அபிமன்யுவின் பேரில் அம்புகளைப் பொழிந்தார்கள்.

துரியோதனனுடைய மகன் லக்ஷ்மணன் மிக்க பராக்கிரமத்துடன் போர் புரிந்தான். முடிவில் சுபத்திரா குமாரன் எய்த ஒரு பல்லம் சட்டை யுரித்த பாம்புபோல் லக்ஷ்மணனைத் தாக்கிற்று. அழகிய மூக்கும் புருவங்களும் பள பள வென்று கூந்தலும் குண்டலங்களும் பொருந்திய அந்த வீரன் இறந்து வீழ்ந்தான்.

"ஆ! ஆ!" என்று கௌரவ சேனையில் துயரச் சத்தம் கிளம்பிற்று.

"இந்தப் பாதகனை அபிமன்யுவைக் கொல்லுங்கள்" என்று துரியோதனன் உரக்கக் கத்தினான்.

துரோணர், கிருபர், கர்ணன், அசுவத்தாமன், பிருஹத்பலன், கிருதவர்மன் ஆகிய ஆறு மகாரதர்களும் அபிமன்யுவைச் சூழ்ந்து கொண்டார்கள்.

துரோணர் கர்ணனை நெருங்கி, "இவனுடைய கவசத்தை உடைக்க முடியாது. சரியாகக் குறி பார்த்து

இவனுடைய குதிரைக் கடிவாளங்களை அறுத்து விடு. பின்புறத்திலிருந்து இவன் மேல் ஆயுதப் பிரயோகம் செய்'' என்று சொன்னார்.

சூர்ய குமாரனும் அவ்வாறே செய்தான். பின்புறத்திலிருந்து விடப்பட்ட அம்புகளால் அபிமன்யுவினுடைய வில் அறுக்கப்பட்டது. குதிரைகளும் சாரதியும் கொல்லப்பட்டு அபிமன்யு தேரிழந்தவனாகவும் வில்லற்றவனாகவும் செய்யப்பட்டான். க்ஷத்திரிய சௌர்யத்தின் அவதாரமேபோல் அபிமன்யு அந்தச் சமயம் கத்தியும் கேடகமும் கையில் எடுத்துக் கொண்டு நின்றான். அவன் அப்போது காட்டிய சாமர்த்தியம் யுத்தகளத்திலுள்ள வீரர்களுக்கெல்லாம் வியப்பு உண்டாக்கிற்று. தன்னை ஒன்றுபோல் கூடி எதிர்த்த அனைவரையும் கத்திசஞ்சாரம் செய்து தாக்கினான். தரையில் கால் வைத்து நிற்காமல் ஆகாயத்தில் பறந்து யுத்தம் செய்பவனைப் போலவே காணப்பட்டான். துரோணர் அபிமன்யுவின் கையிலிருந்த கத்தியை ஒரு பாணத்தால் வெட்டினார். கர்ணன் கூர்மையான அம்புகளைச் செலுத்தி அவன் கேடகத்தைச் சிதற அடித்தான்.

உடனே அபிமன்யு ரதத்தின் சக்கரத்தைக் கழற்றிக் கையில் எடுத்துக்கொண்டு சுதர்சனதாரியான மகாவிஷ்ணுவைப் போலவே விளங்கினான். தேர்ச் சக்கரத்திலிருந்த புழுதி அவன் உடல்மேல் படிந்து அவன் சுபாவமான அழகு இன்னும் அதிகமாகப் பிரகாசித்தது.

இரண்டாவது ஜனார்த்தனனைப்போல் அபிமன்யு ஒரு க்ஷண காலம் பயங்கரமாக போர் நடத்தினான். பிறகு சேனை முழுதும் அவனைத் தாக்கி அவன் கையிலிருந்த தேர்ச் சக்கரம் துண்டு துண்டாகச் செய்யப் பட்டது. துச்சாதன புத்திரன் அச்சமயம் கதையை எடுத்துக் கொண்டு அபிமன்யுவைத் தாக்க வந்தான். அபிமன்யுவும் கதாயுதம் எடுத்துக்கொண்டு இருவரும் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு போர் துவக்கினார்கள். இருவரும் கீழே விழுந்தார்கள். பிறகு துச்சாதன குமாரன் முதலில் எழுந்தான். சுபத்திரா

குமாரன் எழுந்து கொண்டிருக்கும் சமயத்தில் அவன் தலையில் துச்சாதனனுடைய குமாரன் கதாயுதத்தால் அடித்தான். பல பேர்களை ஒருவனாக இருந்து எதிர்த்து யுத்தம் செய்த சிரமத்தினால் மயக்கமடைந்திருந்த அபிமன்யு அந்த அடிக்கு இரையாகி உயிரிழந்தான்.

"தாமரை ஓடையை யானை கலக்குவதுபோல் பெரும் கௌரவ சேனையைக் கலக்கிய சுபத்திரா புத்திரனைப் பலர் சேர்ந்துகொண்டு இவ்வாறு கொன்றார்கள்" என்று சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொன்னான். "அவ்வாறு கொல்லப்பட்ட அபிமன்யுவை உம்மைச் சேர்ந்தவர்கள் சூழ்ந்துகொண்டு காட்டு வேடர்களைப் போல் கூத்தாடிச் சந்தோஷப்பட்டார்கள். உண்மை வீரர்களுடைய கண்களிலிருந்து கண்ணீர் ஒழுகிற்று. ஆகாயத்தில் பறந்து வட்டமிட்டுக் கொண்டிருந்த பறவைகள் 'இது தருமமல்ல! தருமல்ல!!' என்று அலறிச் சொல்லுவதுபோல் சப்தமிட்டன."

கௌரவ வீரர்கள் அபிமன்யு வதத்தைப்பற்றி மகிழ்ச்சியடைந்து சிம்மநாதம் செய்தார்கள். திருதராஷ்டிரனுடைய மகன் யுயுத்ஸு மட்டும் மிகுந்த கோபம் கொண்டவனாக, "இது தகாது. யுத்த தருமத்தை யறியாத க்ஷத்திரியர்களே! வெட்கப்படுவதற்குப் பதில் சிம்மநாதம் செய்கிறீர்கள். பெரிய அதர்மத்தைச் செய்துவிட்டு நெருங்கி நிற்கும் அபாயத்தையும் அறியாமல் மூடர்களைப் போல் சந்தோஷப் படுகிறீர்கள்" என்று சொல்லி ஆயுதத்தை எறிந்து விட்டு யுத்தரங்கத்திலிருந்து விலகினான். யுயுத்ஸு தருமத்துக்குப் பயந்தவன். அவன் பேச்சு கௌரவர்களுக்கு பிடிக்கவில்லை.

# புத்திர சோகம்

"துரோணரையும் அசுவத்தாமனையும் துரியோதனனையும் யுத்தத்தில் ஜயித்துப் பகைவர் கூட்டங்களை எரித்த வீரன தீர்க்க சயனத்தை அடைந்துவிட்டான். துச்சாதனனைப் புறங்காட்டி ஓடச்செய்த சூரனே! நீ இறந்துவிட்டாயா? எனக்கு இனி என்னத்திற்காக வெற்றி, என்னத்திற்காக ராஜ்யம? அருச்சுனனுக்கு நான் என்ன சமாதானம சொல்லுவேன்? கன்றை இழந்த பசுவைப்போல் புத்திரனைக் காணாமல் துக்கப்படும் சுபத்திரைக்கு என்ன சமாதானம் சொல்லுவேன்? அர்த்தமில்லாத வார்த்தைகளை எப்படிச் சொல்லுவேன்? பேராசை கொண்டவனுக்கு மதி அழிந்து போகிறது. தேனுக்கு ஆசைபட்டுக் கீழே இருக்கும பெரும் பள்ளத்தைப் பாராமல் நாசம் அடைவதைப்போல் வெற்றிக்கு ஆசைபட்டுச் சுகங்களுக்குரிய பாலனை, அன்புக்குரிய குழந்தையை யுத்தத்தில் முன்னால் தள்ளினேன். என்னைப்போன்ற மூடன் உலகத்தில் இல்லை. அருச்சுனன் இல்லாத சமயத்தில் அவனுடைய அருமைப் புதல்வனைக் காப்பாற்றாமல் கொன்றவனானேன்."

இவ்வாறு பாசறையில் யுதிஷ்டிரன் புலம்பினான். சுற்றி உட்கார்ந்திருந்த வீரர்கள் அபிமன்யுவின் சௌரியத்தையே தியானித்தவர்களாக பேச்சில்லாமல் இருந்தார்கள். பொறுக்க முடியாத துக்கம் மேலிட்டு யுதிஷ்டிரன் தவித்துக் கொண்டிருக்கிற சமயங்களில் பாண்டவர்களுக்கு ஆசாரியரும் பிதாமகருமான வியாசர் வந்து ஆறுதல் சொல்லுவது வழக்கம். இந்தச் சமயமும் வந்தார்.

யுதிஷ்டிரன் அவரைப் பூஜை செய்து ஆசனத்தில் இருத்தி, "மனதை ஸ்திரப்படுத்திக் கொள்ள எவ்வளவு முயன்றாலும் என்னால் முடியவில்லை" என்று அவரிடம் சொன்னான்

“மிகுந்த புத்திமானும், சாஸ்திரங்கள் எல்லாம் படித்தவனுமான நீ இவ்வாறு மதிமயங்கிச் சோகத்துக்கு இரையாகக் கூடாது. மிருத்யுவின் தன்மை உனக்குத் தெரியாதா? பாமரர்களைப் போல் நீயும் சோகத்துக்கு இரையாகித் திகைக்கலாகாது” என்று வியாசர் தரும புத்திரனைச் சமாதானப்படுத்தினார்.

“உலகத்தைச் சிருஷ்டித்து ஜீவகோடிகளை உண்டாக்கிய பிரமன் வளர்ந்துகொண்டே போகும் பூபாரத்தைக் கண்டு இதற்கு என்ன செய்வது என்று கவலைப்பட்டான். பெருகிக்கொண்டே போகும் உயிர்ச் சமூகத்தை எவ்வாறு தடுப்பது என்று யோசித்து ஒரு வழியும் தோன்றாமல் பிரமனுடைய உள்ளத்தில் ஏற்பட்ட கவலையின் வேகம் ஒரு பெரும் சுவாலையாகக் கிளம்பி உலகத்தை ஒரே அடியாக நாசம் செய்வதாயிற்று. அதன் பின் உலகம் அழிந்துபோகும் என்று ருத்திரன் வந்து வேண்டிக்கொள்ள, பிரமன் தன்னுடைய கோபத்தை அடக்கிக் கொண்டான். அடங்கிய கோபாக்கினி மரணம் என்கிற சாந்த உருவம் கொண்டு உலகத்தின் பிறப்பும் இறப்பும் சமமாவதற்கு வியாதியும் விபத்துக்களுமாக மக்கள் வாழ்க்கையில் ஒரு இன்றியமையாத பாகமாகவே வேலை செய்து வருகிறது. மரணம் என்பது உலக நன்மைக்காகவே ஏற்பட்ட ஒரு ஒழுங்கு. மரணத்தைக் கண்டு யாரும் துக்கப்படலாகாது. இறந்தவர்களைக் கண்டு பரிதாபப்படுவதற்குக் காரணமேயில்லை. உயிருடன் இருப்பவர்களைப் பற்றியே துக்கிக்க வேண்டும்” என்று பூர்வ கதைகளையும் இதிகாசங்களையும் தத்துவ விளக்கமும் சொல்லிப் பிதாமகரான கிருஷ்ணத் துவைபாயன ரிஷி யுதிஷ்டிரனைத் தேற்றினார்.

“உலகத்தில் மிக மேன்மை பெற்று பாக்கியமும் மங்களங்களும் அடைந்தவர்கள் எல்லோருமே மாண்டார்கள் என்பது உனக்குத் தெரியாதா?. மருத்தன், சுஹோதரன், அங்கன, சிபி, ஸ்ரீராமன், பகீரதன், திலீபன், மாந்தாதா, யயாதி, அம்பரீஷன், சசிபிந்து, கயன், ரந்திதேவன், பரதன், பிருது, பரசுராமன், புகழ்பெற்ற இந்தப்

பதினாறு சக்கரவர்த்திகளும் கடைசியில் மரணத்தை அடைந்தார்கள் அல்லவா? நீ உன் புத்திரனைப் பற்றித் துக்கப்பட வேண்டாம். கால விளம்பமில்லாமல் சுவர்க்கத்தை அடைந்தவன் விஷயத்தில் துக்கித்தலே தகாது. துக்கப்படுகிறவனுக்குத் துக்கமே வளரும். விவேகியானவன் சோகத்தைவிட்டு கடமைகளைச் செய்து நற்பேறு அடைய முயற்சி செய்யவேண்டும்'' இவ்வாறு தருமபுத்திரனுக்குச் சொல்லி வியாசர் மறைந்தார்.

x x x

தனஞ்சயனும் கிருஷ்ணனும் சம்சப்தகர்களோடு போர் புரிந்து அவர்களை வதம் செய்துவிட்டுப் பாசறையை நோக்கிச் சென்றார்கள்.

"கோவிந்தா! என்ன காரணமோ தெரியவில்லை. என் மனம் கலக்கம் அடைந்திருக்கிறது. பேச்சுத் தடுமாறுகிறது. காரணமில்லாமல் உள்ளத்தில் துக்கமாக இருக்கிறது, யுதிஷ்டிரர் க்ஷேமமாக இருப்பாரா! அவருக்கு ஏதேனும் ஆபத்து நேரிட்டு விட்டதோ?'' என்றான் தனஞ்சயன்.

வாசுதேவன் "தருமபுத்திரன் தம்பிமார்களுடன் க்ஷேமமாகவே இருப்பார். நீ கவலைப்படாதே'' என்றான்.

வழியில் சந்தியாகாலத்துக் கடமைகளைச் செய்துவிட்டுத் தேர் ஏறித் தம்மவர்கள் தங்கியிருந்த இடம் சென்றார்கள். பாசறையை நெருங்க நெருங்க, அருச்சுனனுக்குச் சந்தேகம் அதிகரித்தது.

"ஜனார்த்தனா! வழக்கம் போல் மங்கள வாத்தியம் ஏதும் காதில் விழவில்லை. எதிரில் காணப்படும் யுத்த வீரர்கள் தூரத்திலிருந்து என்னைப் பார்த்துவிட்டுத் தலை குனிந்து திரும்பிப் போகிறார்கள். இது விபரீதமாக இருக்கிறது. மாதவ! சகோதரர்கள் க்ஷேமமாக இருப்பார்களா? என் மனம் தெளிவுபடவில்லை. அபிமன்யு தன் சகோதரர்களுடன் ஏன் சிரித்துக்கொண்டு என்னை இன்று எதிர் கொண்டு வரவில்லை?'' என்றான்.

இவ்வாறு பேசிக் கொண்டே உள்ளே நுழைந்தார்கள்.

"ஏன் அனைவரும்முகத்தில் தெளிவில்லாமல் துக்கமாக இருக்கிறீர்கள்? அபிமன்யுவையும் இங்கே காணவில்லை. ஏன் ஒருவரும் என்னைக் கண்டு சந்தோஷமாகப் பேசவில்லை? துரோணர் பத்மவியூகம் வகுத்தார் என்று கேள்விப்பட்டேன். சௌபத்திரனைத்* தவிர அதை உடைத்துப் பிரவேசிக்கத் தெரிந்தவன் உங்களுள் ஒருவனும் இல்லை! அபிமன்யு அந்த வியூகத்தைப் பிளந்து உள்ளே சென்றானா? உள்ளிருந்து வெளிவருவதை நான் அவனுக்கு உபதேசிக்கவில்லை. அவன் கொல்லப்பட்டானா?" என்று நடந்த விஷயத்தைத் தானாகவே ஊகித்து விட்டுச் சொன்னான்.

"ஐயோ! என் குழந்தை யமனுக்கு அதிதியாகி விட்டானா! யுதிஷ்டிரரும் பீமசேனனும் திருஷ்டத்யும்னனும் பராக்கிரமசாலியான சாத்யகியும் இருக்கையிலேயே சுபத்திரையின் மகனைப் பகைவர்களுக்குக் கொடுத்துவிட்டீர்களா? சுபத்திரைக்கு என்ன சமாதானம் நான் சொல்லுவேன்? ஐயோ! திரௌபதியைக் கண்டு என்ன சொல்லுவேன்? உத்தரைக்கு யார் என்ன ஆறுதல் சொல்லமுடியும்?" என்று அருச்சுனன் புலம்பினான்.

புத்திரசோகத்தால் தவிக்கும் வீரனுக்கு வாசுதேவன "அப்பனே! நீ இவ்வாறு துக்கித்தல் தகாது. க்ஷத்திரியர்களாகப் பிறந்த நமக்கு ஆயுதங்களே உயிர்; ஆயுதங்களே மரணம். யுத்தத்தில் பின் வாங்காத சூரர்களுக்கு எப்போதும் மிருத்யுவானவன் கூடவே இருக்கும் நண்பன். சூரர்களுக்கு அகால மரணம் ஏற்படுவது சகஜமல்லவா? புண்ணியம் செய்தவர்களுக்குரிய மேலுலகத்தை அபிமன்யு அடைந்தான. யுத்தத்தில் மரணத்தை அடைய வேண்டும் என்று வீரர்கள விரும்பி ஆசைப்படு

*சௌபத்திரன் = சுபத்திரையின் மகன் = அபிமன்யு.

கிறார்கள் அல்லவா? அபிமன்யு அடைந்த மரணம் க்ஷத்திரியர்களுக்கு விதிக்கப்பட்ட சஞ்சன லட்சியம். நீ அதிகமாகத் துக்கப்பட்டால் உன் சகோதரர்களும் மற்ற அரசர்களும் மனோ நிலை இழப்பார்கள். மற்றவர்களுக்குச் சமாதானமும் தைரியமும் வழங்குவாயாக, சோகத்தை நீக்கு'' என்றான் மாதவன்.

வீரனான மகன் இறந்த முழுக் கதையைச் சொல்ல வேண்டும் என்று தனஞ்சயன் கேட்க யுதிஷ்டிரன் சொன்னான்:

''பத்ம வியூகத்தைப் பிளந்து எங்களுக்கு வழியை உண்டு பண்ணினையானால் நாங்களும் உன்னைத்தொடர்ந்து உள்ளே புகுவோம்; உன்னைத் தவிர இந்த வியூகத்தை உடைக்கத் தெரிந்தவர் யாரும் இல்லை. உன் தந்தைக்கும் மாமனுக்கும் பிரியமான காரியத்தைச்செய்வாயாக'' என்று நான் அபிமன்யுவை ஏவினேன். உடைக்க முடியாத அந்தவியூகத்தைப் பிளந்து வழிசெய்துகொண்டு உள்ளே பாலவீரன் பிரவேசித்தான். முன்னால் தீர்மானித்திருந்த படி நாங்கள் அவனைத் தொடர்ந்து சென்றோம். பாதகனான ஜயத்ரதன் தடுத்துவிட்டான். பிளக்கப்பட்ட வியூகம் மறுபடியும் அடைக்கப் பட்டுவிட்டது. நாங்கள் உள்ளே போக முடியாதபடி சைந்தவன்* செய்துவிட்டான். க்ஷத்திரிய தருமத்துக்கு விரோதமாக மகாரதர்கள் பலர் ஒன்று சேர்ந்து சூழ்ந்துகொண்டு தனியாக நின்ற அபிமன்யுவைக் கொன்றார்கள்.''

நடந்ததை யெல்லாம் இவ்வாறு யுஷ்திடிரன் சொன்னான்,

''ஆ புத்திரனே!'' என்று கதறி அருச்சுனன் பூமியில் விழுந்தான். மூர்ச்சை தெளிந்த பின் எழுந்திருந்து ''என் மகன் மாய்வதற்குக் காரணமான ஜயத்ரதனை நாளையதினம் கொல்லப் போகிறேன். யுத்த களத்தில் அவனைக் காக்க துரோணரும் கிருபரும் வந்தா

---

*சைந்தவன் = சிந்து தேசத்து அரசன் = ஜயத்ரதன்.

லும் ஆசார்யர்களான அவர்களையும் அம்புகளுக்கு இரையாக்குவேன். இது என் பிரதிஜ்ஞை!'' என்று சொல்லி காண்டீவத்தை டங்காரம் பண்ணினான். கண்ணன் பாஞ்சஜன்யத்தை முழக்கினான்.

பீமசேனன் "இந்த டங்காரமும் இந்த சங்கின் ஒலியும் தார்த்தராஷ்டிரர்களுடைய நாசத்தின் ஒலியேயாகும்'' என்றான்,

# சிந்து ராஜன்

அபிமன்யுவின் வதத்துக்குக் காரணமாயிருந்த ஸைந்தவராஜனை அடுத்த நாள் சூரியாஸ்தமனத்துக்குள் கொல்லப் போகிறேன் என்று அருச்சுனன் பிரதிஜ்ஞை செய்தது சாரணர்களால் துரியோதனனுடைய கூட்டத்திற்குத் தெரிந்தது.

x x x

விருத்தக்ஷத்திரன் என்பவன் பிரசித்திபெற்ற சிந்து ராஜன்; பெரும தவம் செய்து ஜயத்ரதனைப் புத்திரனாக அடைந்தான். குழந்தை பிறந்தபொழுது அசரீரி 'இந்த ராஜகுமாரன் புகழ்பெற்று விளங்குவான்; உலகத்தில் எக் காலத்திலும் சூரர்களால் கொண்டாடப்பட்ட க்ஷத்திரிய சிரேஷ்டன் ஒருவனால் இவன் தலை வெட்டுண்டு தேகவியோகம அடைந்து மேலுலகம் சேருவான்'' என்று சொல்லிற்று.

பிறந்த உயிர்களெல்லாம் இறக்கவேண்டும் என்பது தெரிந்திருந்த போதிலும் அறிவாளிகளுக்கும் தவம் செய்து ஞானம் பெற்றவர்களுக்கும்கூட மரணமானது துக்கத்தை விளைவிக்கிறது. விருத்தக்ஷத்திரன் புதல்வனுடைய மரணத்தைப் பற்றி அசரீரி சொன்னதைக் கேட்டு மிகவும் துயரப்பட்டான். "இந்த வாக்கு உண்மையாயின் என் மகன் தலையை எவன் பூமியில் தள்ளுவானோ அவன் தலையும் அந்தச் சமயம் சுக்கு நூறாக வெடித்துச் சாகவேண்டும்.'' என்று சாபமிட்டான்.

ஜயத்ரதனுக்கு வயது வந்ததும் அவனை அரசனாக அமைத்துவிட்டு விருத்தக்ஷத்திரன் நாட்டை விட்டு விலகித் தவத்தில் தன் வாழ்நாளைக் கழித்து வந்தான். குருக்ஷேத்திரம் என்று பின்னால் புகழ்பெற்ற 'சியமந்த பஞ்சகம்' என்கிற மைதானத்திற்கு அருகில் ஒரு ஆசிரமத்தில் இருந்து வந்தான்.

அருச்சுனனுடைய பிரதிஜ்ஞையைப் பற்றிக் கேட்டதும் தன் முடிவு அசரீரி வாக்கின்படி வந்துவிட்டதோ என்று ஜயத்ரதன் சந்தோஷப்பட்டுத் துரியோதனனிடம் சென்று "எனக்கு இந்த யுத்தம் இனி வேண்டாம். நான் என்னுடைய நாட்டுக்குப் போகிறேன்" என்றான்.

"ஸைந்தவனே! நீ அஞ்ச வேண்டாம். இத்தனை க்ஷத்திரிய வீரர்களும் நின்று உன்னைக் காப்பாற்றுவார்கள். கர்ணன், சித்திரசேனன், விவிம்சதி, பூரிசிரவசு, சல்லியன், விருஷசேனன், புருமித்திரன், ஜயன், போஜன், காம்போஜன், சுதக்ஷிணன், சத்திய விரதன், விகர்ணன், துர்முகன், துச்சாதனன், சுபாஹு, காளிங்கன், அவந்தி ராஜாக்கள், துரோணர், துரோண புத்திரர், சகுனி இவ்வளவு பேர்களும் நானும் இருக்க நீ போவது சரியாகாது. என்னுடைய முழுச் சேனையும் உன் காப்புக்காகக் கட்டளையிடப்படும். நீ இந்த சமயம் விலகிப் போக வேண்டாம்." என்று துரியோதனன் வற்புறுத்த ஜயத்ரதனும் ஒப்புக் கொண்டான்.

துரோணரிடம் சென்று ஜயத்ரதன் "குருவே! எனக்கும் அருச்சுனனுக்கும் நீர் ஆசார்யராக இருந்தீர். எங்களுக்குள் சிட்சையில் என்ன தாரதம்யம் கண்டீர்?" என்று கேட்டான்.

"அப்பா! உனக்கும் அருச்சுனனுக்கும் பேதமின்றி நான் ஆசார்யக் கடமைகளைச் செய்தேன். சிட்சை ஒன்றேயாயினும் அப்பியாசத்தினாலும், கஷ்டமான தவத்தாலும் உன்னைக் காட்டிலும் அருச்சுனன் மேலானவன். ஆயினும் பயப்பட வேண்டாம். அருச்சுனனால் தாண்ட முடியாத வியூகத்தை வகுத்து அதற்குப் பின்புறமாக உன்னை வைப்போம். உன் மூதாதைகளின் தருமத்தை அனுசரித்து யுத்தம் செய். நாம் எல்லோருமே ஏதோ ஒரு வரிசைக் கிரமப்படி யமனால் தொடரப்பட்டவர்களாகப் பரலோகம் போவோம் அல்லவா? தபஸ்விகள் அடையும் லோகத்தை க்ஷத்திரியன் சுலபமாக யுத்தத்தில் அடைவான். பயத்தை விடு" என்றார்.

விடிந்ததும் ஆயுதம் தரித்தவர்களில் சிறந்தவரான துரோணர் சேனையை அணிவகுத்தார். ஜயத்ரதனும் அவனுக்குக் காப்பாக பூரிசிரவசும் கர்ணனும் அசுவத்தாமனும் சல்லியன் விருஷசேனன் கிருபர் இவர்கள் எல்லா விதப் படைகளுடனும் பன்னிரண்டு மைல் தூரத்தில் பின்னால் விலகி நின்றார்கள். அதற்கும் பாண்டவ சேனைக்கும் இடையில் துரோணர் பெருஞ் சேனையைச் சகட வியூகத்தில் அமைத்தார். சகட வியூகத்துக்கப்பால் பத்ம வடிவத்தில் உள் வியூகம் ஒன்று ஏற்படுத்தினார். அந்த பத்ம வியூகத்துக்கும் அப்பால் ஊசிமுக வியூகம் வகுத்தார். அந்த ஊசிமுக வியூகத்தின் காப்பில் ஜயத்ரதன் நின்றான். சகட வியூகத்தின் முகத்தில் துரோணர் நின்றார். வெண்ணிற கவசமும் வஸ்திரமும் தலைக்காப்பும் தரித்து நின்ற துரோணர் மிகவும் பிரகாசித்தார். சிகப்பு நிறக் குதிரைகள் பூட்டிய அவருடைய ரதத்தின் துவஜத்தில் யாக வேதிகையும் மான்தோலும் விளங்கின. அது காற்றில் ஆடியதைக் கண்ட கௌரவர்கள் உற்சாகம் கொண்டார்கள். வியூகத்தின் பலத்தைப் பார்த்துத் துரியோதனன் தைரியமடைந்தான்.

x x x

ஆயிரம் தேர்களும், நூறு யானைகளும், மூவாயிரம் குதிரைகளும், பதினாயிரம் காலாட் படைகளும், விற்கள் பிடித்து நின்ற வீரர்கள் ஆயிரத்து ஐந்நூறு வரும் கூடிய படையுடன் திருதராஷ்டிர புத்திரன் துர்மர்ஷணன் என்பவன் கௌரவ சேனைக்கு முன் நின்றுகொண்டு சங்கம் ஊதி அறைகூவினான்.

"யுத்தத்தில் ஜயிக்க முடியாதவனும் கோபங்கொண்டவனுமான தனஞ்சயன் எங்கே? அவன் எங்கள்மேல் போர் புரிந்து கல்மேல் போடப்பட்ட மண்குடம் போல் உடைபடுவதை உலகம் இப்போது பார்க்கப்போகிறது" என்றான்.

ஒன்றரை அம்பு பாய்ச்சல் தூரத்தில் அருச்சுனன் தன் தேரை நிறுத்திச் சங்கை ஊதி பிரதித்துவனி

செய்தான். உடனே கௌரவ சேனையிலும சங்கங்கள் ஊதப்பட்டன.

"கேசவ! துர்மர்ஷணன் இருக்குமிடத்தை நோக்கித் தேரை நடத்து. அங்கிருக்கும் யானைப் படையைப் பிளந்து நுழைவோம்" என்றான்.

x x x

துர்மர்ஷணனுடைய படை அருச்சுனனால் சிதறியடிக்கப்பட்டது. பெருங் காற்றினால் அலைக்கப்பட்ட மேகங்களைப்போல் படையங்கங்கள் அங்குமிங்கும் பறந்தன. அதைக்கண்டு துச்சாதனன் மிக்க கோபம்கொண்டு பெரிய யானைப படையுடன் வந்து அருச்சுனனைச் சூழ்ந்து கொண்டான்.

துச்சாதனன் கெட்ட பாபியானாலும் மிக்கப் பராக்கிரமசாலி. கடுமையாக யுத்தம் நடத்தினான். அருச்சுனனால் வீழ்த்தப்பட்ட யுத்த வீரர்களால் போர்க்களமானது கோரமான காட்சியாயிற்று. துச்சாதனனுடைய சேனை தைரியமிழந்து துன்பமடைந்து புறங்காட்டிற்று. துச்சாதனனும் பின் வாங்கி துரோணர் நின்ற இடத்துக்குச் சென்றான்.

சவ்யசாசியினுடைய தேரும் விரைவாக துரோணருக்கு அருகில் சென்றது. "நரசிரேஷ்டரே! புத்திரனை யிழந்து துக்கத்தால் பீடிக்கப்பட்டு சிந்து ராஜனை நோக்கி வந்திருக்கிறேன். என் பிரதிஜ்ஞையை நிறைவேற்ற அனுக்கிரகிப்பீராக" என்றான் தனஞ்சயன்.

ஆசார்யர் புன்னகைசெய்து "அருச்சுனனே! என்னை ஜெயிக்காமல் ஜயத்ரதனை நீ அடைய முடியாது" என்றார். யுத்தம் ஆரம்பித்தது. வில்லை வளைத்து அருச்சுனன்மேல் துரோணர் அம்புக் கூட்டங்களை இறைத்தார்.

பார்த்தனும அம்புகளால் துரோணரை அடித்தான். அவற்றைத் துரோணர் தம் அம்புகளால் அனாயாசமாகத் தடுத்துவிட்டு கிருஷ்ணனையும் அருச்சுனனையும் நெருப்

யைப் போல் எரியும் பாணங்களால் பீடித்தார். பா
வன் துரோணருடைய வில்லை அறுப்பதற்கு நிச்
தான். அதற்காக அம்பை எடுத்துக் கொண்டிரு
பொழுதே துரோணர் அருச்சுனனுடைய வில்லின் நா
அறுத்து விட்டார். பிறகு சிரித்துக்கொண்டே அ
பேரிலும் குதிரைகள் பேரிலும் தேரின் பேரிலும் ந
பக்கமும் அம்புகளைப் பொழிந்தார். அருச்சு
கோபங்கொண்டு ஆசார்யரை அடக்க வேண்டுமெ
பல பாணங்களை ஒன்றாகத் தொடுத்து பிரயோ
தான்.

துரோணர் ஒரு விநாடியில் சிஷ்யனை மிஞ்சுகி
ராகி அம்பு மழையைப் பொழிந்து அருச்சுனனை
அவன் தேரையும் இருட்டில் மறைத்தார்.

கண்ணன் துரோணருடைய பராக்கிரமத்
கண்டு. "பார்த்தனே? காலவிளம்பம் கூடாது. து
ணரை விட்டுச் செல்வோம். இந்தப் பிராமணரு
சிரமமென்பதே இல்லை" என்றான்.

அதன் பேரில் கண்ணன் அருச்சுனனுடைய தே
துரோணருக்கு இடது பக்கமாக ஓட்டிச் சேனையை
கிச் சென்றார்கள்.

"எங்கே போகிறாய்? யுத்தத்தில் சத்துருவை ஜ
காமல் நீ செல்பவன் அல்லவே? "நில், நில்!" எ
துரோணா சொன்னதற்கு அருச்சுனன்,

"தேவரீர் எனக்கு ஆசாரியர். சத்துருவல்ல!
உமக்குச் சிஷ்யன். உமமுடைய மகனைப் போன்ற
உம்மை யுத்தத்தில் தோல்வி யடைவிக்கக் கூடிய
உலகத்தில் இல்லை" என்று சொல்லிவிட்டு விரைவ
துரோணரை விட்டு விலகிக் கௌரவச் சேனையை
கிச் சென்றான்.

அருச்சுனன் போஜ சைன்யத்தில் நுழைந்து
வர்மனையும் சுதக்ஷிணனையும் ஒரே சமயத்தில் த
அவர்களைத் தோல்வியடையச் செய்து அதன் பே

தடுக்க வந்த சுருதாயுதனை எதிர்த்தான். பலமான போர் நடந்தது. சுருதாயுதன் குதிரைகளை இழந்தான். அதன மேல் அவன் தன் கதாயுதத்தை எடுத்து வீசிக் கண் ணனை யடித்தான். போர் செய்யாதவன் பேரில் அவன் வீசிய கதாயுதம் அவனையே வந்து திரும்பித் தாக்கி அவ னைக் கொன்றது. அதற்குக் காரணம் அவன் தாய் பெற்ற வரம்.

x x x

சுருதாயுதனுடைய தாயாகிய பர்ணசை என்பவள் வருணனைப் பார்த்து என் குமாரன் உலகத்தில் சத்துருக் களால கொல்லப்படாதவனுக இருக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள். அவள்பால் அன்பு கொண்ட வருணன "உன் புத்திரனுக்கு நான் திவ்யமான ஆயுதத் தைத் தருவேன். அந்த ஆயுதத்தைக் கொண்டு அவன் போர் செய்தால் அவனை யாரும் ஜெயிக்க முடியாது. ஆனால் யுத்தம் செய்யாதவன்மேல் அந்த ஆயுதத் தைப் பிரயோகிக்கக் கூடாது. அப்படிச் செய்தால் அது பிரயோகித்தவனையே திரும்பிக் கொல்லும்" என்று சொல் லித் திவ்ய கதாயுதத்தைத் தந்தான். யுத்த வேகத் தில் இந்த வாக்கியத்தை மறந்த சுருதாயுதன் கதாயுதத் தை கண்ணன்மேல் எறிந்தான். ஜனார்த்தனன் அதைத் தன் மார்பில் ஏற்றுக்கொண்டான். மந்திரத்தவறு ஏற் பட்டதால் மந்திரவாதியின் வசத்திலிருந்த பிசாசு அவ னையே கொல்லுவதுபோல் அந்த கதாயுதம் திரும்பிச் சென்று வீரனான சுருதாயுதனைக் கொன்றது. காற்றி னால் தள்ளப்பட்ட பெரிய மரத்தைப்போல் பூமியில் விழுந்தான்.

அதன் பிறகு காம்போஜ ராஜனான சதக்ஷிணன் அருச்சுனனைக் கடுமையாக எதிர்த்தான். அவனும் தேரி ழந்து கவசமுடைந்து மார்பில் அடிபட்டு உற்சவம் முடிந்த பின் கீழே தள்ளப்பட்ட இந்திரத்வஜத்தைப்போல் கை களை விரித்துக்கொண்டு கீழே விழுந்தான்.

மிக்க வன்மை பொருந்திய வீரர்களான சுருதாயுத னும் காம்போஜனும் கொல்லப்பட்டதைக் கண்டு கௌர

வச் சேனை குழப்பம் அடைந்தது. இதைக் கண்ட சுருதாயு அச்சுருதாயு என்ற இரு சகோதரர்களும் பார்த்தனை இருபுறமும் தாக்கினார்கள்.

இந்தக் கடும் போரில் அருச்சுனன் அதிகமாக அடிபட்டுக் கொடி மரத்தில் சாய்ந்தான். கண்ணனால் தேற்றப்பட்டு மறுபடி யுத்தம துவக்கி, அந்த இரண்டு சகோதரர்களையும் வீழ்த்தினான். அவர்களுடைய இரண்டு குமாரர்கள யுத்தத்தை விடாமல் தொடர்ந்தார்கள். அவர்களும் அருச்சுனனால் யமாலயம் அனுபபப்பட்டார்கள்.

இவவாறு இன்னும் அநேக வீரர்களை மாய்த்துவிட்டு காண்டீவம் ஏந்திய அருச்சுனன் சத்துரு சேனையில் வழியைச் செய்துகொண்டு ஜயத்ரதன் இருந்த இடத்துக்கு வேகமாகச் சென்றான்.

# தான் பயிலாத கவச தாரணம்

அருச்சுனனுடைய வெற்றியைப் பற்றிச் சஞ்சயன் சொன்னதைக் கேட்ட திருதராஷ்டிரன் "சூதனே! சமாதானத்தை விரும்பி ஜனார்த்தனன் ஹஸ்தினபுரம் வந்த போது 'இதுவே நல்ல சந்தர்ப்பம்; இதைக் கைவிடாதே. சகோதரர்களுடன் சமாதானம் செய்து கொள்; நம்முடைய நன்மையின் பொருட்டே கேசவன் வந்திருக்கிறான்; அவன் பேச்சை உல்லங்கனம் செய்யாதே' என்றேன். துரியோதனன் என் யோசனையை நிராகரித்து விட்டான். கர்ணன், துச்சாதனன் இவர்கள் சொன்னதே அவனுக்கு இதமாகத் தோன்றிற்று. காலபுருஷனால் தூண்டப்பட்டு நாசத்தைத் தேடிக் கொண்டான். துரோணரும் யுத்தம் வேண்டாம் என்றார். பீஷ்மரும் பூரிசிரவசும் கிருபரும் இன்னும் மற்றவர்களும் யுத்தம் வேண்டாம் என்றார்கள். மூர்க்கனான என் மகன் கேட்கவில்லை. பேராசையால் தூண்டப்பட்டுக் கெட்ட எண்ணமும் கோபமும் நிறைந்த மனோநிலையில் சிக்கிக் கொண்டு யுத்தத்தை வரவழைத்துக் கொண்டான்" என்று புலம்பினான்.

சஞ்சயன, "ஜலம் போனபின் அணைகட்டுவதுபோல் இப்போது நீர் புலம்புவதில் என்ன பயன்? சூதாட்டத்திலிருந்து குந்தி புத்திரனை நீர் முதலிலேயே ஏன் விலக்கவில்லை? அவ்வாறு செய்திருந்தால் இந்தப்பெரும் துக்கம் வந்திராது. பிறகும் யுத்தப் பேச்சு நேர்ந்த போதாவது உம்முடைய குமாரனைத் தடுத்திருந்தீராகில் இந்தத் துக்கம் வந்திராது. பிதாவானவன் செய்யவேண்டிய கடமையைச் செய்து மகனை அடக்கியிருந்தீராகில் இந்தப் பெருந்துயரம் உம்மைப் பிடித்திருக்காது. புத்திமான்களில் சிறந்தவரான நீர் உம்முடைய அறிவைத் தள்ளி விட்டுக் கர்ணன் சகுனி இவர்களுடைய மூர்க்கத்தனமான யோசனையை அனுசரித்தீர். கேசவனும யுதிஷ்டிரனும் துரோணரும் இப்போது உம்மை முன்போல் மதிக்கவில்லை. பேராசை கொண்டவர் என்றும், வாயி

னால் மட்டும் தருமம் பேசுபவர் என்றும் வாசுதேவன உம்மை அறிந்து கொண்டான். க்ஷத்திரிய தருமத்தின் படி சூரர்களால் எவ்வளவு செய்ய முடியுமோ அவ்வளவு இப்போது கௌரவர்கள் செய்து வருகிறார்கள். நீர் அவர்களை நிந்திப்பது தகாது. உயிரை அலட்சியம் பண்ணிப் போர் செய்கிறார்கள். அருச்சுனனும் கிருஷ்ணனும் சாத்யகியும் பீமனும் நடத்தும் யுத்தத்தில் அவர்களை எதிர்த்து நிற்க இவர்களுக்குப் பலம் போதாது. ஆயினும் எவ்வளவு செய்வதற்குச் சாத்யமோ அவ்வளவும் உம்முடைய மகன் துரியோதனன் செய்து வருகிறான். இப்போது, அவனை நீர் நிந்திக்க வேண்டாம்'' என்றான்.

''அப்பனே! சஞ்சயா! நீ சொல்வது சரியென்றே ஒப்புக்கொள்கிறேன். விதியை யாரும் விலக்க முடியாது நடந்ததை யெல்லாம் சொல்லு. நல்லதாயினும் சரி, துக்க சமாசாரமாயினும் சரி, எல்லாவற்றையும் நடந்தவாறு சொல்'' என்று துயரத்தில் மூழ்கித் துடித்துக் கொண்டிருந்த கிழ அரசன் சஞ்சயன் சொல்லுவதைக் கேட்கலானான்.

x x x

அருச்சுனனுடைய தேர் சிந்து ராஜனை நோக்கிச் செல்வதைப் பார்த்த துரியோதனன் தாங்க முடியாத துயரமடைந்து துரோணரிடம் விரைவாகப் போனான்.

''பெரிய சேனையைப் பிளந்துகொண்டு அருச்சுனன் பிரவேசித்து விட்டான். நம்முடைய தோல்வியைப் பார்த்து ஜயத்ரதனுடைய காப்புக்காக நிற்கும் வீரர்களும் தைரியம் இழப்பார்கள். துரோணரைக் கடந்து அருச்சுனன் செல்ல முடியாது என்று அரசர்கள் எல்லாரும் எண்ணியது பொய்யாகி விட்டது. நீர் பார்த்துக் கொண்டிருக்கும் போதே தேரை ஓட்டிக்கொண்டு உம்மைத் தாண்டிப்போய்விட்டான். நீர் பாண்டவர்களுக்கு நன்மை செய்வதிலேயே விருப்பம் கொண்டிருக்கிறீர். என்னுடைய மனம் மிகவும் குழப்பம் அடைந்திருக்கிறது. உமக்கு நான் என்ன பிழை அல்லது குறை செய்தேன்? என்னை ஏன் கைவிடுகிறீர்? இது எனக்குத் தெரிந்திருந்

தால் நான் ஜயத்ரதனை யுத்த பூமியில்நிறுத்தியிருக்கவே மாட்டேன். தன நாட்டுக்குத் திரும்பி போய் விடுவதாகச் சொன்ன அவனை நான நிறுத்தியது பெரும் பிழையாகி விட்டது. அருச்சுனன ஜயத்ரதனைத் தாககினால் அவன் மீளமாட்டான. துயரததினால் பிதறறுகிறேன். என்னை மன்னிக்க வேண்டும. நீரே போய ஸைந்தவனைக் காப் பாற்றும்'' என்று துரியோதனன கதறினன்.

துரோணர் ''அரசனே! தகாத வார்த்தைகளை நீ சொல்லிய போதிலும் நான உன் பேரில் கோபங்கொள்ள வில்லை. நீ எனக்குக் குமாரனைப்போல். அசுவத்தாமன் எபபடியோ அபபடியே எனககு நீயும. நான் சொல்லு வதைச் செய. இதோ இந்த கவசத்தைப் பெற்றுக் கொள. இதைபபோர்த்துக்கொண்டு நீயே அருச்சுன னைத் தடுபபாயாக. இவவிடத்தை விட்டு நான் போகக் கூடாது. அதோ பார், பாணசமூகங்கள்! பாண்டவசேனை நம்மைப பலமாக தாக்கி வருகிறது. அருச்சுனன இல்லா மல் யுதிஷ்டிரன் தனியாக இருக்கிறான். இதற்காக வல்லவோ இந்த ஏற்பாட்டை நாமே செய்தோம்? அவனை நான் பிடித்து உனக்குத் தரவேண்டியவனாக இருக் கிறேன். அதை விட்டு விட்டுப் பல்குனனைத் துரத்திக் கொண்டு நான் இப்போது போக முடியாது. வியூகத்தின் முகத்தை விட்டு விட்டு நான் அருச்சுனனைக் குறித்துச் சென்றேனானால் அனர்த்தம் நேரிடும். நான போர்த்த கவ சத்தைத் தரித்துக்கொண்டு செல். பயபபடாதே! நீ சூரன், சமர்த்தன். இந்த கவசத்தின்மேல் படும் ஆயுதம் உன்னைப் பாதிக்காது. மந்திரசக்தி பொருந்திய இந்தக் கவசம் உன் தேகத்தைக் காப்பாற்றும. பிரம்மதேவ னிடம் இந்திரன் கவசம பெற்றுப் போருக்குச் சென்றது போல் இந்தத் திவ்ய மந்திரக் கவசம் என்னால் பூட்டப் பட்டு நீ செல்வாயாக. உனக்கு மங்களம்'' என்றார்.

திவ்ய கவசமணிந்த துரியோதனனும் ஆசார்யர் சொன்னபடியே பெருஞ் சேனையுடன் தைரியமாக அருச் சுனனை நோக்கிச் சென்றான்.

x x x

அருச்சுனன் கௌரவ சேனையைத் தாண்டி வெகு தூரம் சென்றான். குதிரைகள் களைப்படைந்திருப்பது கண்டு கண்ணன் தேரை நிறுத்தி, குதிரைகளை அவிழ்த்து இளைப்பாறச் செய்யக் கருதினான். அச்சமயம் விந்தானு விந்தர்கள் என்ற இரு சகோதரர்கள் அருச்சுனனைத் தாக்கினார்கள். அவர்களை எதிர்த்து அவர்களுடைய படையைத் துரத்தி யடித்து இரு சகோதரர்களையும் அருச்சுனன் வதம் செய்தான். பிறகு கண்ணன் குதிரைகளை அவிழ்த்து மண்ணில் புரளச் செய்து இளைப்பாற்றினான். மறுபடியும் தேரைப் பூட்டி ஜயத்ரதனை நோக்கி விரைவாகச் சென்றான்.

x x x

"தனஞ்சய, அதோ பார்! பின்னால். துரியோதனன் வருகிறான்! இதை விட உனக்கு வேறு நல்ல சமயம் கிடைக்காது. வெகு காலமாக அடக்கிய கோபத்தை இப்போது தீர்த்துக்கொள். அனர்த்தங்களுக்கெல்லாம் மூல காரணமான இவன் இப்போது உன் பாணங்களுக்கு இலக்காக வந்திருக்கிறான். இவன் நல்ல தேர்வீரன். தூரத்திலிருந்து தாக்கும் சாமர்த்தியம் கொண்டவன். பெரிய வில்லை வளைப்பவன். அஸ்திரத் தேர்ச்சி பெற்றவன். யுத்தத்தில் மதம் கொண்டவன். உறுதியான தேகம் படைத்தவன். மிக்க பலசாலி. நமது பகைவன்" என்று கிருஷ்ணன் அருச்சுனனுக்குத் தூரத்தில் வந்து கொண்டிருக்கும் துரியோதனனைக் காட்டினான். அதன் மேல் தேரைத் திருப்பித் துரியோதனனை நோக்கிச் சென்று அவனை எதிர்த்தார்கள்.

துரியோதனன் பயப்படவில்லை.

"ஜனங்கள் நீ பெருங் காரியங்களைச் செய்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். நான் நேரில் பார்த்ததில்லை. உன்னுடைய புகழுக்குக் காரணமான பராக்கிரமத்தை இப்போது பார்க்கலாம். காண்பிப்பாயாக!" என்று

துரியோதனன் அருச்சுனனைப் பார்த்துச் சொன்னான். கடுமையான போர் நடந்தது.

x x x

"பார்த்தா! இதுவென்ன ஆச்சரியம்! உன்னால் விடப்பட்ட அம்புகள் ஏன் துரியோதனனைத் துன்புறுத்த வில்லை? காண்டீவத்திலிருந்து விடுபட்ட அம்புகள் வீணாகப் போவதை இன்றுதான் பார்க்கிறேன். இது என்றும் பாராத சம்பவமாக இருக்கிறது. உன்னுடைய கைப்பிடியும் தோள்வன்மையும் குறைந்து போச்சா? காண்டீவம் தன் தன்மையை இழந்ததா? நீ துரியோதனனைக் குறித்து விடும்பாணங்கள் அவன்மேல் பட்டுப் பயனற்றவையாகக் கீழே விழுவதைக் கண்டு ஆச்சரிய மாக இருக்கிறது" என்றான் கிருஷ்ணன்.

"கிருஷ்ணா! இவன் துரோணாரிடமிருந்து கவசம் பெற்று அதைப் போட்டுக் கொண்டு நிற்கிறான் என்றே எண்ணுகிறேன். இந்தக் கவசதாரண ரகசியம் துரோணர் எனக்குச் சொல்லியிருக்கிறார். இவன்மேல் அந்தக் கவசத்தை ஆசார்யர் போர்த்திருக்கிறார். என்றே எண்ணுகிறேன். மற்றொருவரால் பூட்டப்பட்ட இந்தக் கவசத்தை, மாடு பாரத்தைச் சுமப்பதுபோல் இவன் சும்மா சுமந்து நிற்கிறான். இப்போது என் சாமர்த்தியத்தைப் பார்" என்று அருச்சுனன் பாணங்களை விட்டுத் துரியோதனன் குதிரைகளையும் சாரதிகளையும் தேரையும் இழக்கும்படி செய்தான். பிறகு வில்லையும் கையுறையையும் அறுத்தான். கவசம் எந்தப் பாகத்தில் உடலை மூடவில்லையோ அதைப் பார்த்து அருச்சுனன் துரியோதனனைத் துன்புறுத்தினான். கவசம் மூடாத உள்ளங் கைகளிலும் நகக் கண்களிலும் நுண்ணிய அம்புகளை விட்டுச் செலுத்தித் துன்புறுத்தினான். துரியோதனன் தோல்வி அடைந்தான்.

x x x

துரியோதனன் புறங்காட்டியதும் கண்ணன் பாஞ்ச சன்யத்தை ஊதினன்.

ஜயத்ரதனுக்குக் காப்பாக இருந்த வீரர்கள் இதைக் கண்டதும் மிக்க கலக்கமுற்றார்கள். பூரிசிரவசு, சலன், கர்ணன், விருஷசேனன், கிருபர், சல்லியன, அசுவத் தாமன், ஜயத்ரதன் ஆகிய எண்மரும் தேர்களின மீது ஏறிப் பார்த்தனை எதிர்த்தார்கள்.

# தருமன் கவலை

அருச்சுனனைப் பின் தொடர்ந்து துரியோதனன் சென்றதைப் பார்த்துப் பாண்டவர்களுடைய சேனை எதிரிகளைப் பலமாகத் தாக்கிற்று. ஜயத்ரதனுக்கு உதவியாகத் துரோணரும் சென்றால் காரியம் கெட்டுப்போகும் என்று திருஷ்டத்யும்னன் அடுத்தடுத்து அவர் மேல் படையைச் செலுத்தித் தாக்கி வந்தான். துருபதபுத்திரன் அவ்வாறு செய்ததன் பயனாகக் கௌரவப் படை மூன்றாகப் பிளந்து போய் பலம் குன்றி நின்றது.

திருஷ்டத்யும்னன் தன் தேரைத் துரோணர் தேரின் மேல் இடித்துத் தாக்கினான். அவனுடைய புறா வண்ணக் குதிரைகளும் துரோணருடைய சிவப்புக் குதிரைகளும் ஒன்றோடொன்று கலந்து சூரியாஸ்தமன மேகங்களைப் போல் சித்திரக் காட்சி தந்தன. திருஷ்டத்யும்னன் தன் வில்லை எறிந்து விட்டுக் கத்தியும் கேடகமும் எடுத்துக் கொண்டு துரோணருடைய தேரின் மேல் குதித்தேறினான். ரதத்தின் ஏர்க்காலின் மேலும் நுகத்தடியின் மேலும் குதிரைகளின் முதுகின்பேரிலும் நின்று துரோணரை அவன் தாக்கினான். செத்த மிருகத்தின் மாமிசத்துக்கு ஆசைப்பட்டு பருந்து பாய்வதைப்போல் திருஷ்டத்யும்னன் குரூரமான திருஷ்டியுடன் இங்கு மங்கும் பாய்ந்து தன் பிறவிப் பகைவனைத் தாக்கினான். வெகு நேரம் இவ்வாறு கழிந்தது. கோபம் மேலிட்ட துரோணர் எய்த ஒரு பாணம் பாஞ்சாலனுடைய உயிரைக் கவர்ந்திருக்கும். ஆனால் சாத்யகி அச்சமயம் எதிர்பாராதபடி அதைத் தன பாணத்தால் தடுத்துவிட்டான். இதைக் கண்டு துரோணர் சாத்யகியைத் தாக்க ஆரம்பித்ததும் பாஞ்சால ரதிகர்கள் திருஷ்டத்யும்னனை விலக்கி அழைத்துக்கொண்டு சென்றனர்.

கிருஷ்ண சர்ப்பம்போல் சீறிக்கொண்டும், கோபத்தினால் கண்கள் சிவந்தும் துரோணர் சாத்யகியை எதிர்த்துச் சென்றார். சாத்யகி பாண்டவப் படையில் முதல்

ஸ்தானம் பெற்றவர்களில் ஒருவன். துரோணர் தன்னை எதிர்த்து வருவதைப் பார்த்த அவனும் அவரை நோக்கி முன் சென்றான்.

சாத்யகி தன் சாரதியைப் பார்த்து "இவர்தான் தம்முடைய குலத்துக்கு உரிய தொழிலை விட்டுவிட்டு, க்ஷத்திரியக் காரியத்தில் பிரவேசித்து பாண்டவர்களுக்குத் துன்பம் உண்டாக்குபவர். துரியோதனனுடைய கர்வத்துக்கு இவரே காரணமா யிருப்பவர். மகா சூரர் என்று எப்போதும் கர்வம் கொண்டவர். இவரை எதிர்த்து அடக்க வேண்டும். குதிரைகளை வேகமாகச் செலுத்து" என்று சொன்னான்.

சாரதியும் அவ்வண்ணமே காற்று வேகம் கொண்ட வெள்ளி நிறக் குதிரைகளைச் செலுத்தினான். ஒருவர் மேல் ஒருவர் பாணங்களை விட்டார்கள். அவ்விருவருடைய விற்களிலிருந்து வெளிப்பட்ட பாணங்கள் சூரியனை மறைத்து யுத்த பூமி இருள்படச் செய்தன. சட்டை உரித்த பாம்புகள்போல் பிரகாசிக்கின்ற நாராசங்கள் இருபக்கத்திலிருந்தும் பயங்கரமாகப் பாய்ந்தன. இருவருடைய தேர்க் குடைகளும் கொடிகளும் ஒடிந்து கீழே விழுந்தன. இருவருடைய உடலிலிருந்தும் இரத்தம் பெருகிற்று. அந்த யுத்தத்தைப் பார்த்து மற்ற வீரர்கள் தம் யுத்தத்தை நிறுத்திவிட்டுப் பேசாமல் நின்றார்கள். கர்ஜனைகளும் சிம்ம நாதங்களும் சங்க துந்துபி கோஷங்களும் அடங்கிவிட்டன. சாத்யகியும் துரோணரும் பற்பல ஆயுதங்களைப் பிரயோகித்துச் செய்த துவந்த யுத்தத்தைப் பார்க்கத் தேவர்களும் வித்தியாதரர்களும் கந்தர்வர்களும் யக்ஷர்களும் ஆகாயத்தில் நின்றார்கள்.

துரோணருடைய வில்லைச் சாத்யகி தன பாணங்களால் அறுத்துத் தள்ளினான். பரத்வாஜர் ஒரு விநாடியில் வேறு வில்லை எடுத்து நாணேற்றி நின்றார். அதையும் சாத்யகி உடனே அறுத்தான். மறுபடியும் வேறொரு வில்லை எடுத்து நின்றார். அதையும் அறுத்து விட்டான். இவ்வாறு நாணேற்ற விடாமல் நூற்றொரு விற்களை

சாத்யகி அறுத்து விட்டான். இந்தச் சாத்யகியானவன் ஸ்ரீராமர், கார்த்த வீர்யன், தனஞ்சயன், பீஷ்மர் இவர்களைப்போல் யுத்தம் செய்கிறான் என்று துரோணர் தமக்குள் எண்ணித் திருப்தி யடைந்தார். ஆசார்யர்களுக்கு இவ்விதமாக விரோதிகளிடம் நல்ல சாமர்த்தியத்தைப் பார்க்கும்போது சந்தோஷம் உண்டாவது இயற்கை. துரோணர் எந்த அஸ்திரத்தைப் பிரயோகம் செய்தாரோ அதே அஸ்திரத்தை அதே முறையில் சாத்யகிபிரயோகம் செய்வான். இவ்வாறு வெகு நேரம் கழிந்த பின்னர் தனுர்வேதத்தின் கரையைக் கண்ட துரோணாசாரியர் சாத்யகியைக் கொல்வதின் பொருட்டு ஆக்னேயாஸ்திரத்தைத் தொடுத்தார். சாத்யகியும் உடனே அதை வெட்டும்படியான வருணாஸ்திரத்தைத் தாமதமின்றிப் பிரயோகித்தான்.

X X X

வர வர, சாத்யகியின் வலிமை தளர ஆரம்பித்தது. இதைக் கண்ட கௌரவர்கள் மகிழ்ச்சி யடைந்து கர்ச்சித்தார்கள்.

சாத்யகி பீடிக்கப்படுகிறான் என்று யுதிஷ்டிரன் அறிந்து அருகிலுள்ள வீரர்களைப் பார்த்து "உத்தமனும் வீரனும் சத்ய பராக்கிரமனுமான யுயுதானன் * துரோணரால் மிகவும் கொடுமையாக எதிர்க்கப்படுகிறான். உடனே அவனிருக்குமிடம் செல்லுங்கள்" என்றான்.

திருஷ்டத்யும்னனைப் பார்த்து "சீக்கிரம் சென்று துரோணரைத் தடுப்பாயாக. பிராமணர் சாத்யகியைக் கொன்று விடுவார். ஏன் நிற்கிறாய்? உடனே வேகமாகப் போய்ச் சாத்யகி இருக்குமிடம் சேர். துரோணரால் நமக்குப் பெரிய பயம் நேரிட்டிருக்கிறது. சிறு பையன் பறவையைக் கயிற்றினால் கட்டிப் பறக்க விட்டு விளையாடுவதைப்போல் சாத்யகியுடன் துரோணர் செய்யும் யுத்தம் அவருக்கு விளையாட்டாக இருக்கிறது. அவனால் அவரை

* சாத்யகிக்கு மற்றொரு பெயர்.

இனி எதிர்க்க முடியாது. நீ சீக்கிரம் போய் உதவி செய். மற்றவர்களையும் அழைத்துச் செல். தாமதம் செய்யாதே. அந்தகனுடைய பற்களுக்கிடையில் சாத்யகி அகப்பட்டுக் கொண்டிருக்கிறான்'' என்றான். படைகளை யெல்லாம் துரோணரைத் தாக்கவும் கட்டளை யிட்டான்.

அனைவரும் கஷ்டப்பட்டுச் சாத்யகியைத் தப்புவித்தார்கள்.

x x x

அச் சமயம் பாஞ்சஜன்யத்தின் ஒலி கேட்டது. யுதிஷ்டிரர் கவலையுற்றார்.

''சாத்யகியே! பாஞ்சஜன்யம் மட்டும் ஒலிக்கிறது. காண்டீவத்தின் சப்தம் கேட்கவில்லை. பார்த்தனைப் பற்றி எனக்குச் சந்தேகமா யிருக்கிறது. ஜயத்ரதனுக்குத் துணையாக நிற்கும் வீரர்களால் அவன் சூழப்பட்டு ஆபத்திலிருக்கிறான் என்றே தோன்றுகிறது. முன் பக்கத்தில் ஸைந்தவனுடைய சேனையும் பின் பக்கத்தில் துரோணருடைய பெருஞ் சேனையும் அருச்சுனனுக்கு ஆபத்து விளைவிக்கும்படியாக இருக்கின்றன. அருச்சுனன் சூரியோதயத்தில் சத்துரு சேனையில் நுழைந்தான். இப்போது பகலில் பெரும் பாகம் கழிந்து விட்டது. பாஞ்சஜன்யம் மட்டும் ஒலிப்பதால் தனஞ்சயன் மாண்டுவிட்டு வாசுதேவன் மட்டும் யுத்தம் செய்கிறானோ என்று சந்தேகப்படுகிறேன். சாத்யகி! உன்னால் செய்ய முடியாத காரியம் இல்லை. அருச்சுனன் உனக்கு தோழனும் ஆசார்யனுமாவான். அவனுக்கு இப்போது நிச்சயமாகச் சங்கட நிலை ஏற்பட்டிருக்கிறது. சாத்யகி! தனஞ்சயன் உன்னைப் பற்றி என்னிடம் பல தடவை மிகவும் புகழ்ந்து பேசியிருக்கிறான். ''சாத்யகியைப் போன்ற சத்திய பராக்கிரமன் வேறொருவன் இல்லை'' என்று வனவாசத்தில் இருக்கும் போதே சொன்னான். அதோ பார், யுத்தத்தினால் கிளம்பிய புழுதி. அருச்சுனன் சத்துருக்களால் சூழப்பட்டிருக்கிறான் என்பது நிச்சயம். ஜயத்ரதன் மகா சூரன். அவன் விஷயத்தில் உயிரை விடத் துணிந்து பல வீரர்களும்

அவனுக்குத் துணையாக இருக்கிறார்கள். உடனே போ!'' என்று படபடப்புடன் தருமன் சொன்னான்.

இப்படி மிகவும் வற்புறுத்தப்பட்டவனான சாத்யகி ''தருமத்தினின்று தவறாதவரே! உம்முடைய கட்டளையை நான் தலைமேல் வகிப்பவன், தனஞ்சயனுக்காக நான் எதைத்தான் செய்ய மாட்டேன்? அவன் விஷயத்தில் என் உயிரும் எனக்கு ஒரு பொருளாகாது. உம்மால் ஏவப்பட்டால் நான் தேவர்களோடும் எதிர்த்துப் போர் புரிவேன். ஆனால் எல்லா விஷயமும் அறிந்த வாசுதேவனும் அருச்சுனனும் என்னிடம் சொல்லிப் போனதைத் தேவரீரிடம் விஞ்ஞாபனம் செய்து கொள்ளுகிறேன். 'ஜயத்ரதனைக் கொன்று திரும்பும் வரையில் நீ யுதிஷ்டிரனுக்குக் காப்பாக இரு. மிகவும் ஜாக்கிரதையாக அவரைப் பார்த்துக்கொள். உன்னை நம்பி நாங்கள் போகிறோம். கௌரவச் சேனையில் நாம் அஞ்ச வேண்டியவர் துரோணர் ஒருவரே. அவருடைய பிரதிஜ்ஞை உனக்குத் தெரியுமே! தரும புத்திரரை உன் காப்பில் வைத்து விட்டு நாங்கள் போகிறோம்' என்று வாசுதேவரும் அருச்சுனனும் என்னிடம் சொல்லிப் போனார்கள். அருச்சுனன் என்னை மதித்தும் நம்பியும் இவ்வாறு கட்டளையிட்டுப் போயிருக்கிறான். நான் இப்போது எப்படி அதைப் புறக்கணிக்க முடியும்? அருச்சுனனைப்பற்றி நீர் கவலைப்பட வேண்டாம். அவனை யாரும் ஜயிக்க முடியாது. சிந்து ராஜனும் மற்றவர்களும் தனஞ்சயனுக்குப் பதினாறில் ஒரு பங்குக்கு ஈடாக மாட்டார்கள். தரும புத்திரரே! உம்மை யாருடைய காப்பில் விட்டு விட்டு நான் போவேன்? துரோணருடைய எதிர்ப்பைத் தாங்கக் கூடிய எவனையும் நான் இங்கே காணவில்லை, நன்றாக ஆலோசித்து எனக்குக் கட்டளையிடுவீராக'' என்றான்.

''இரண்டையும் தீர ஆலோசித்தே நான் உன்னை அருச்சுனனிடம் போகச் சொல்கிறேன். என்னுடைய அனுமதியைப் பெற்று நீ செல். மகா பலசாலியான பீமன் எனக்குக் காப்பாக இருக்கிறான். திருஷ்டத்யும்னனும் இருக்கிறான். இன்னும் பலர் இருக்கிறார்கள். என்னைப்

பற்றிக் கவலைப்பட வேண்டாம்'' என்று சொல்லி சாத்யகி யின் தேரில் அம்புப் பெட்டிகளையும் எல்லா உபகரணங் களையும் சஸ்திரங்களையும் வைத்து, நன்றாக இளைப்பாறிய குதிரைகளையும் பூட்டச் செய்து ஆசீர்வதித்து யுதிஷ்டி ரன் சாத்யகியை அனுப்பினான்.

“பீமசேனா! தரும புத்திரரைப் பார்த்துக் கொள்'' என்று சொல்லிவிட்டுச் சாத்யகி தனஞ்சயனை நோக்கிச் சென்றான்.

x x x

இவ்வாறு சென்ற சாத்யகியைக் கௌரவப் படை பலமாகத் தாக்கித் தடுத்தது. தடை செய்தவர்களை யெல்லாம் வென்று பலரை வதம் செய்து சாத்யகி சென் றான். வழியில் அநேக சத்துருக்களுடன் போர் செய்ய நேரிட்டபடியால் அவன் அருச்சுனனிடம் போய்ச் சேர நேரமாயிற்று.

சாத்யகி யுதிஷ்டிரரை விட்டுப் பிரிந்ததைப் பார்த்த துரோணர் பாண்டவ சேனையை இடைவிடாமல் தாக் கினார். பாண்டவர்களுடைய சேனை ஒழுங்கு குலைந்து பினவாங்க நேரிட்டது. யுதிஷ்டிரன் மிகவும் கவலைப் பட்டு சிந்திக்க ஆரம்பித்தான.

## யுதிஷ்டிரன் ஆசை

"அருச்சுனனையும் காணவில்லை; அவனைத் தொடர்ந்து சென்ற சாத்யகியும் திரும்பவில்லை. பீமனே! தம்பியைப்பற்றி எனக்கு மிக்கக் கவலையாக இருக்கிறது. பாஞ்சஜன்யமும் ஒலிக்கும்போது காண்டீவமும் கூட ஒலிக்காமலிருப்பது என் உள்ளத்தில் மிக்க பயத்தை உண்டாக்குகிறது. உயிரைப் போன்ற நண்பனும் வீரனுமான சாத்யகியை அனுப்பினேன். அவனும் திரும்பவில்லை. என்னுடைய கவலை வளர்ந்து வருகிறது" என்று யுதிஷ்டிரன் பீமனிடம் சொல்லி ஒன்றும் செய்யத் தோன்றாமல் திகைத்தான்.

"உமக்கு இப்படிப்பட்ட மனக்கலக்கம் வந்ததை நான் எப்போதும் பார்த்ததில்லை. தைரியத்தை விட வேண்டாம். எனக்கு என்ன கட்டளை வேண்டுமானாலும் இடுவீராக. மனத்தைத் துக்கத்தில் சிக்கிக்கொள்ள விட வேண்டாம்" என்றான் பீமன்.

"அப்பனே! உன்னுடைய தம்பி இறந்தேவிட்டான் என்று நான் எண்ணுகிறேன். அவன் வீழ்த்தப்பட்டபடியால் மாதவனே ஆயுதம் எடுத்து யுத்தம் செய்கிறான் போல் இருக்கிறது. பாஞ்சஜன்ய ஒலி மட்டும் கேட்கிறது. தனஞ்சயனுடைய வில்லின் ஒலி கேட்கவில்லை. ஒப்பற்ற சூரனும் நமக்கு உயிருமான தனஞ்சயன் கொல்லப்பட்டான் என்றே எனக்குத் தோன்றுகிறது. நான் மதிமயக்கமடைந்துவிட்டேன். பீமனே! என் சொற்படி நீ நடப்பதாயிருந்தால் உடனே தனஞ்சயனிருக்குமிடம் செல். சாத்யகியையும் அருச்சுனனையும் பார்த்துச் செய்ய வேண்டியதைச் செய்து திரும்பி வா. என் பேச்சுக் கிணங்கி சாத்யகி அருச்சுனன் சென்ற வழியைத் தொடர்ந்து கௌரவச் சேனையைப் பிளந்துகொண்டு சென்றான். அவர்களைத் தொடர்ந்து நீயும் போய் அவர்கள் க்ஷேமமாக இருப்பதைக் கண்டாயாகில் உன் சிம்மநாதத்தால் அறிவேன்" என்றான்.

"நாதனே! விசனப்பட வேண்டாம். நான் போய் அவர்களைக் கண்டு க்ஷேமமாக இருப்பதைத் தெரிவிக்கப் போகிறேன்" என்று இரண்டாவது பேச்சு இல்லாமல் பீமன் ஒப்புக்கொண்டு திருஷ்டத்யும்னனைப் பார்த்து, "பாஞ்சாலனே! தருமநந்தனரை எப்படியாவது பிடிக்க வேண்டும் என்று துரோணர் உபாயத்தைத் தேடிக் கொண்டிருப்பது உனக்குத் தெரியும். அரசனை ரக்ஷிப்பது முக்கியமான கடமை. ஆனால் அவருடைய கட்டளையை நான் நிறைவேற்ற வேண்டியவனாக இருக்கிறேன். உன்னை நம்பிப் போகிறேன்" என்றான்.

"பீமனே! சிந்தனை வேண்டாம். ஆலோசிக்காமல் போவாயாக. என்னைக்கொல்லாமல் துரோணர் யுதிஷ்டிரரைப் பிடிக்க முடியாது" என்று வீரனும் துரோணருக்குப் பரம சத்துருவுமான துருபத குமாரன் சொன்னதும் பீமன் வேகமாகச் சென்றான்.

x x x

**அ**ருச்சுனனுக்குத் துணையாக அனுப்பப்பட்ட பீமனை வழியில் கௌரவர்கள் சூழ்ந்துகொண்டு தடுத்தார்கள். ஆனால் சிம்மமானது அற்ப மிருகங்களைவிரட்டியடிப்பதுபோல் அவன் பகைவர் கூட்டத்தைத் துரத்தியடித்துத் திருதராஷ்டிர குமாரர்களில் பதினொரு பேர்களை வழியில் கொன்று துரோணரை அணுகினான். அவர் அவனைத் தடுத்து "பீமசேனனே! சத்துருவாகிய என்னை ஜயிக்காமல் நீ செல்ல முடியாது. உன் தம்பி அருச்சுனன் என் சம்மதம் பெற்றுச் சேனையில் புகுந்தான். உனக்கு நான் சம்மதம் தரமாட்டேன்" என்றார். பல்குனனைப்போல் பீமனும் தம்மை கவுரவிப்பான் என்று எண்ணி இவ்வாறு சொன்னார்.

பீமனோ துரோணருடைய பேச்சைக் கேட்டு மிகுந்த கோபங்கொண்டு "ஓய் பிராமணரே! உமது சம்மதத்தின் பேரில் அருச்சுனன் சேனையில் பிரவேசிக்கவில்லை. அவன் தன் பராக்கிரமத்தைக் கொண்டு உம்முடைய வியூகத்தை உடைத்தான். நான் அருச்சுனனைப்போல்

உம்மிடம் தயை காட்டமாட்டேன். நான் உமக்குச் சத்துரு. ஒரு காலத்தில் நீர் எங்களுக்குத் தந்தையும் குருவுமாக இருந்தீர். நாங்களும் உம்மை வணங்கினோம்! இப்போது நீர் எங்களுக்குச் சத்துருவென்று நீரே சொன்னீர். அவ்வாறே இருக்கட்டும்'' என்று சொல்லி கதாயுதத்தைச் சுழற்றித் துரோணரைத் தாக்கினான். துரோணருடைய ரதம் பொடியாயிற்று.

துரோணர் வேறு ரதம் ஏறினார். அதையும் பீமன் பொடியாக்கினான். இவ்வாறு துரோணரைத் தாக்கி நான்கு பக்கங்களிலும் இருந்த யுத்த வீரர்களையும விரட்டி அடித்து வழி செய்துகொண்டு உள்ளே பிரவேசித்தான்.

அன்று துரோணருடைய எட்டு ரதங்கள் ஒன்றன் பின் ஒன்றாக உடைக்கப்பட்டன. சேனையைப் பிளந்து கொண்டு போகும் பீமனைப் போஜர்களுடைய சேனை எதிர்த்தது. அதையும் துவம்சம் செய்து முன்னால் சென்றான். அதன் பின்னும் வந்து தடுத்த சேனைப் பகுதிகளையெல்லாம் வதம்செய்து வேகமாகச் சென்று பீமன ஜயத்ரதனுடைய சேனையுடன் போர் புரிந்துகொண்டிருந்த அருச்சுனனைக் கண்டான்.

அருச்சுனனைக் கண்டதும் பீமசேனன் சிம்மத்தைப போல் கர்ச்சித்தான். அவன் செய்த கர்ச்சனையைக்கேட்டதும் கிருஷ்ணனும் அருச்சுனனும் மகிழ்ச்சிப் பரவசமடைந்து அவர்களும் சிம்மநாதம் செய்தார்கள்.

x x x

தருமபுத்திரன் இந்தக் கர்ச்சனைகளைக் கேட்டு களிப்புற்றான். சோகத்தை விட்டு தனஞ்சயனை மனதில் ஆசீர்வதித்தான்.

"அஸ்தமிப்பதற்குள் அருச்சுனன் தன் பிரதிஜ்ஞையை முடித்து, சிந்துராஜனை வதம்செய்து திரும்புவான். தனஞ்சயனால் ஜயத்ரதன் கொல்லப்பட்ட பின துரியோதனன சமாதானத்துக்கு வரலாம். தம்பிமார்களை

கொல்லப்பட்டதைக் கண்டு மூடனான துரியோதனனுக்கு நல்ல புத்தி உண்டாகலாம். சிறந்த அரசர்களும் போர் வீரர்களும் யுத்தகளத்தில் வீழ்த்தப்பட்டதைப் பார்த்து மந்த புத்தியுள்ளவனான துரியோதனன் தன் பிழையை அறிந்து சமாதானத்துக்கு வரலாம். பிதாமகரான பீஷ்மர் வீழ்ந்த பின் நமக்குள் உண்டான இந்தப் பாப மான வைரம் ஒழிந்து எஞ்சியுள்ளவர்களாவது நாச மாகாமல் பிழைக்க வழி ஏற்படுமா?"—இவ்வாறு தரும புத்திரன் பலவிதமாகச் சிந்தித்துக் கொண்டிருந்தான்.

x x x

இப்படி யுதிஷ்டிரன் சமாதானத்தில் ஆசைசெலுத்திச் சிந்தித்துக் கொண்டிருக்கையில், பீமனும் சாத்யகியும் அருச்சுனனும் சென்ற இடத்தில் கோரமான யுத்தம் நடைபெற்றது. உலகம் எப்படிச் செல்லவேண்டும். அதற்காக என்ன நிகழ்ச்சிகள் நடைபெற வேண்டும் என்பதை யெல்லாம் ஆண்டவன் அன்றி வேறு யார் அறிவார்? அனைத்தும் அவன் செயல் அல்லவோ?

# கர்ணனும் பீமனும்

அபிமன்யுவுக்குத் துணை செய்யப்போன பாண்டவர்களைத் தடுத்து அவன் வதத்திற்கு முக்கிய காரணமான ஜயத்ரதனைப் போருக்கு அழைப்பதற்காகப்போன அருச்சுனன் திரும்பிவராததால் யுதிஷ்டிரன் கவலைப்பட்டுச் சாத்யகியையும் பிறகு பீமனையும் அனுப்பினான். பீமன் போய்ச் சேர்ந்து தனஞ்சயன் உயிரோடு இருக்கிறான் என்பதற்கு அறிகுறியாக உரக்க கர்ச்சித்ததன் பேரில் யுதிஷ்டிரன் ஆறுதலும் தைரியமும் அடைந்தான்.

ஒரு புறம் சாத்யகிக்கும் பூரிசிரவசுக்கும், மற்றொரு புறம் கர்ணனுக்கும் பீமனுக்கும், வேறொரு புறத்தில் அருச்சுனனுக்கும் ஜயத்ரதனுக்கும் அதுவரையில் பார்த்ததும் கேட்காததுமான போர்கள் நடந்தன. துரோணர் பாஞ்சாலரும் பாண்டவர்களும் செய்துவந்த எதிர்ப்பைத் தாங்கியும் அவர்கள் பேரில் எதிர்த்தாக்குதல் செய்துகொண்டும் போர் நிலையின் முதல் வியூகத்திலேயே நின்றார். அருச்சுனன் ஜயத்ரதனை எதிர்த்த இடத்திற்குத் துரியோதனன் வந்து சேர்ந்தான். அவனும் தோல்வியடைந்து புறங்காட்டித் திரும்பினான்.

இவ்வாறு யுத்தம் பல பகுதிகளில் தீவிரமாகவே நடைபெற்றது. இரு திறத்தாருக்கும் ஆங்காங்கு முன்புறமும் பின்புறமும் இரண்டு புறத்திலும் அபாயம் இருந்துவந்தது. அப்போது துரோணரிடம் துரியோதனன் வந்து "அருச்சுனனும் பீமசேனனும் சாத்யகியும் இந்தச் சேனையை அலட்சியம் செய்து விலகிச் சென்று சிந்து ராஜனை நெருங்கி விட்டார்கள். அங்கே கடும்போர் நடைபெற்று வருகிறது. உம்முடைய தலைமையில் நின்ற நம்முடைய வியூகம் இப்படி உடைபட்டு நாம் எண்ணிய எண்ணம் நிறைவேறாமல் கெட்டுப்போனது ஆச்சரியமாக இருக்கிறது. தனுர் வேதத்தின் கரையைக் கண்ட துரோணர் எவ்வாறு தோற்கடிக்கப்பட்டார் என்று எல்லோரும் கேட்கிறார்கள். நான் என்ன சொல்வேன்? உம்மால்

நான் துர்ப்பாக்கியன் ஆனேன்" என்று துரோணரை வழக்கம்போல் தாக்கிப் பேசினான்.

"நீ என்னை நிந்திப்பதெல்லாம் உண்மைக்கும் தருமத்துக்கும் விரோதம். சென்று போனதைப்பற்றிப் பேசிக் கொண்டிருப்பதில் பயன் இல்லை. மேலே செய்ய வேண்டியதைப்பற்றி யோசிப்பாயாக" என்றார் துரோணர்.

"எது செய்யவேண்டுமோ அதை நீரே ஆலோசித்து சொல்லும். நன்றாக ஆலோசித்து முடித்த தீர்மானத்தை விரைவாகவும் செய்து முடிக்கவேண்டும்" என்றான் கவலை கொண்டு மதியிழந்த துரியோதனன்,

"அப்பனே! ஆலோசிக்க வேண்டிய விஷயம் பல வாறாக இருக்கிறது. மூன்று மகாரதர்கள் நம்மைத் தாண்டிச் சென்று விட்டிருக்கிறார்கள்: அது உண்மை. ஆனால் அவர்கள் முன்னால் சென்றதன் காரணத்தினால் நாம் பயப்படுவதைப் போலவே, அவர்களுக்குப் பின்புறம் நாம் இருப்பது அவர்களுக்கும் பயத்துக்குக் காரணமாகவே இருக்கும். அவர்களுக்கு இருபுறமும் சத்ருக்களாகிய நாமும் நம்மைச் சேர்ந்தவர்களும் இருக்கிறோம். ஆதலால் நீ தைரியமாக ஜயத்ரதனுக்கு உதவியாகப் போய் அவ்விடம் செய்யவேண்டியதைப் பார்த்துக்கொள். கவலைப்பட்டுச் சாவதில் பயனில்லை. நான் இவ்விடமே இருப்பது நலம். வேண்டும்போது இங்கிருந்து இன்னும் வீரர்களையும் படைகளையும் உனக்குச் சகாயமாக அனுப்புவேன். பாஞ்சாலனையும் பாண்டவப் படைகளையும் இவ்விடம் நான் எதிர்த்து நிற்கவேண்டும்" என்றார் துரோணர்.

ஆசார்யருடைய யோசனையின்படி துரியோதனன் சில படைகளையும் கூட்டிக்கொண்டு அருச்சுனன் யுத்தம் நடத்திக்கொண்டிருந்த இடத்துக்குத் திரும்பவும் போனான்.

தற்காலத்துப் போர் முறையில் ஒரு அத்தியாயம் பகைப் படைகள் அரண் செய்துகொண்டு நிற்கும் இடங்களைச் சில சமயம் அப்படியே விட்டுவிட்டு முன் செல்லும்

முறை. இவ்வாறு பகைவர்களுடைய பலத்தை லட்சி யம் செய்யாமல் முன் செல்வதின் லாப நஷ்டங்களை 1939-ல் ஆரம்பித்த மகா யுத்தத்தில் இரு திறத்தாரும் ஆராய்ந்து செய்ததைப் போலவே பாரத யுத்தத்திலும் நடைபெற்றது. பதினொன்காவது நாளில் எதிர்பாராத முறையில் அருச்சுனன் செய்த மகத்தான காரியங்களும் அதைப் பற்றித் துரோணரும் துரியோதனனிடம் கலந்து ஆலோசித்ததும் இதுவேதான். சத்துருப் படை இருக் கும் இடத்திலெல்லாம் போர் நடத்திக்கொண்டு கால விளம்பம் செய்யாமல் விட்டு விலகி முன் செல்லும் போர் யுக்தியே "பை—பாஸிங்" என்று தற்காலத்தில் சொல் லப்படுவது. அந்த முறையை அருச்சுனன் சாமர்த்திய மாக உபயோகித்து துரியோதனனைத் தத்தளிக்கச் செய்தான்.

x x x

பீமனுக்கும் கர்ணனுக்கும் அன்று நடந்த யுத்தம் ஒரு மயிர்சிலிர்க்கும்படியான கதை. பாரத யுத்தத்தை துரோண பர்வத்திலும் கர்ண பர்வத்திலும் படிக்கும் போது, பல இடங்கள் இப்போது நடைபெற்று வரும் யுத்தத்தின் பிரதி பிம்பமாகவே எல்லா விதத்திலும் காணப்படுகின்றன.

x x x

முதலில் தன்னை எதிர்த்த கர்ணனை விட்டுவிட்டுப் பீமன் தனஞ்சயன் இருந்த இடத்துக்குப் போய்ச் சேரவே விரும்பினான். ஆனால் ராதேயன் விடவில்லை. பீமசேனன் மேல் அம்புமாரி பொழிந்து அவனைத் தடுத்தான். தாமரைப் பூவைப்போன்ற அழகிய முகத்தைப் படைத் திருந்த கர்ணன் சிரித்துக்கொண்டு, "ஓடாதே! முதுகைக் காட்டாதே" என்று பீமனை ஏளனமாகப் பேசித் துன்புறுத்தினான். கர்ணனுடைய சிரிப்பைப் பீமனால் சகிக்க முடியவில்லை. இருவருக்கும் கடுமையான யுத்தம் ஆரம்பித்தது. கர்ணன் சிரித்துக்கொண்டே தான் செய்ய வேண்டிய எல்லா வேலைகளையும் செய்தான். பீமனோ

கோபாவேசமாயப் போர் புரிந்தான். கர்ணன் தூரத்தி லிருந்துகொண்டே தவருத குறி வைத்து வில்லேயும் பாணங்களேயும் பிரயோகம் செய்வான். பீமன் தனமேல் பொழியும் பாணங்களேயும் நாராசங்களேயும் லட்சியம் செய்யாமல் கர்ணனே நெருங்கிப் போவான். கர்ணன் சிரமமேயின்றிச் செய்வதைப்போல் காட்டிக்கொண்டு எல்லாவற்றையும் பிழை யில்லாமல் சாந்தமாகச் செய் வான். பீமன் அவமானத்தைப பொருதவனுகக் கோபம் மேலிட்டு வியப்பைத் தரும்படியான முறையிலெல்லாம் தன பலத்தைக் காட்டுவான்.

X X X

பீமசேனன் உடலெல்லாம் காயமடைந்து ரத்தம் ஒழுகி வசந்தகாலத்து அசோக மரத்தைதபபோல் விளங்கி ஞன். காயங்களே லட்சியம செய்யாமல் கர்ணனுடைய தேரையும் குதிரைகளேயும வில்லேயும நாசம செய்தான்.

கர்ணன வேறு ரதத்தைத் தேடி ஓடவேண்டிய தாயிற்று. வேறு ரதத்தில் ஏறிய கர்ணன தனக்கு ஏற்பட்ட அவமானத்திஞல் முகத்தில் இருந்த சிரிப்பு மாறிப் பருவகாலத்துக் கடலேப்போல் கோபம் பொங்கிப் பீமனே மறுபடியும் எதிர்த்தான். இருவரும் தேக பலத்தில் புலிகளேப போலும் விசையில் பருந்து களேப் போலவும் கோபத்தில் சர்ப்பங்களேப் போலவும ஒருவர்மேல் ஒருவர் பாய்ந்து யுத்தம செய்தார்கள். தனக்கும் தன் சகோதரர்களுக்கும மனேவி திரௌபதிக் கும் ஏற்பட்ட அவமானங்களும் துன்பங்களுமெல்லாம் அந்தச் சமயம் பீமனுக்கு நினேவு வந்தது. உயிரை வெறுத்து யுத்தம் செய்தான். இரண்டு தேர்களும் ஒன்றையொன்று மோதின. கர்ணனுடைய பால்வண்ணக் குதிரைகளும் பீமனுடைய கருங் குதிரைகளும மேகங்கள் கலப்பதுபோல் ஒன்ருேடொன்று நெருங்கிக் கலந்தன.

X X X

கர்ணனுடைய வில்லானது அறுபட்டது. சாரதியும் அடிபட்டுத் தேரினின்று கீழே விழுந்தான். அப்போது

கர்ணன் ஒரு சக்தி யாயுதத்தை எடுத்து பீமன் பேரில் வீசினான். பீமன் அதைத் தடுத்துவிட்டு வேறு அம்பு களைத் தன் வில்லில் தொடுத்தான். கர்ணனும புதிய தொரு வில்லை எடுத்துப் பீமன்மேல் சரமாரி பொழிந் தான். மறுபடியும் கர்ணன் தேரை யிழந்தான்.

x x x

துரியோதனன் கர்ணனுடைய கஷ்டமான நிலைமை யைப் பார்த்துத் தம்பி துர்ஜயனை அழைத்து "பாபிஷ்ட னான பாண்டவன் கர்ணனைக் கொல்லப் போகிறான், நீ உடனே சென்று பீமனை எதிர்த்துக் கர்ணன் உயிரைக் காப்பாயாக" என்றான். துர்ஜயனும் அந்தக் கட்டளைப்படி பீமனை எதிர்த்தான். விருகோதரன் கோபங் கொண்டு ஏழு பாணங்களை விட்டு துர்ஜயனையும் குதிரைகளையும் சாரதியையும் யமலோகத்திற்கு அனுப்பினான். நிலத்தில் விழுந்து அடிபட்ட பாம்புபோல் புரண்டு கொண் டிருந்த துர்ஜயனைப் பார்த்துக் கர்ணனுக்குத் தாங்க வில்லை. கண்ணீர் விட்டழுது அவனைப் பிரதக்ஷிணம் செய்தான். பீமனோ யுத்தத்தைவிட்டு விலகவில்லை. மறுபடியும் கர்ணனை அம்புக் கூட்டங்களாலும் பாணங்க ளாலும் நன்றாக அடித்துத் துன்புறுத்தினான்.

x x x

தேரை யிழந்த கர்ணன் வேறொரு தேரில் ஏறித் திரும்பவும் பீமனை எதிர்த்தான். அவன் செலுத்திய அம்புகள் பீமனை நன்றாகத் தாக்கின. கோபாவேசமாகிக் கதாயுதத்தை எடுத்துப் பீமன் வீசியெறிந்தான். அது கர்ணனுடைய சாரதியையும் குதிரைகளையும் கொன்று கொடிக் கம்பத்தையும் உடைத்தது. கர்ணன் குதிரை யிழந்த தேரைவிட்டு இறங்கி வில்லை எடுத்துக்கொண்டு பூமியில் நின்றான்.

இதையறிந்த துரியோதனன் "ராதேயன் பீமசேன னால் ரதத்தை மறுபடியும் இழந்தான். உன் ரதத்தில் ஏற்றிக்கொள்" என்று மற்றொரு தம்பி துர்முகனுக்குக்

கட்டளையிட்டான். துர்முகனும் தன் தேரைக் கர்ணன் நின்ற இடத்துக்குச் செலுத்தினான்.

திருதராஷ்டிர புத்திரர்களில் மற்றொருவனும் வந்தான் என்று பீமன் மகிழ்ச்சியடைந்து உதட்டை நக்கிக்கொண்டு துர்முகன் பேரில் ஒன்பது பாணங்கள் விட்டான். கர்ணன் அந்த ரதத்தின்மேல் ஏறிய அதே சமயம் துர்முகன் கவசமுடைந்து உயிரற்று வீழ்ந்தான். ரத்தத்தால் நனைக்கப்பட்டு வீழ்ந்து கிடந்த துர்முகனைக் கண்ட கர்ணன் கண்களில் நீர் ததும்ப ஒரு முகூர்த்த காலம் யுத்தம் செய்யாமல் அப்படியே நின்றான். பீமன் அப்போதும் யுத்தத்தை நிறுத்தாமல் மறுபடியும் கர்ணன் மேல் கூரிய பாணங்களை எய்தான். அவை ராதேயனுடைய கவசத்தைப் பிளந்து மிகவும் துன்புறுத்தின. உடனே அவனும் பீமனை எதிர்த்துப் பாணங்கள் எய்து பீமன் உடலில் பல இடங்களில் காயப்படுத்தினான். பீமனும் அதைப் பொறுத்துக்கொண்டு மறுபடியும் கர்ணனைப் பலமாகத் தாக்கினான். காரியங்களின் வேதனையினாலும், துரியோதனனுடைய தம்பிகள் தனக்காக ஒருவன் பின் ஒருவனாக மாண்டதனாலும் துக்கம் தாங்க முடியாமல் கர்ணன் தைரியம் இழந்து யுத்தரங்கத்தை விட்டு விலகிச் சென்றான்.

அப்போது பீமன் பல காயங்கள்பட்ட தேகத்தோடு கொழுந்து விட்டெரியும் நெருப்பைப் போல் யுத்த பூமியில் நின்று கொண்டு வெற்றிக் கர்ச்சனை செய்தான். அதைக் கேட்டதும் பொறுக்க முடியாமல் கர்ணன் யுத்த பூமியை விட்டுப் போகும் எண்ணத்தை மாற்றிக்கொண்டு திரும்பி வந்து நின்றான்.

# குந்திக்குக் கொடுத்த வாக்கு

திருதராஷ்டிரன் சஞ்சயனிடம் புலம்பினான்: "நெருப்பில் விழுந்து சாகும் பூச்சிகளைப்போல் துர்முகனையும் துர்ஜயனையும் யுத்தத்தில் பிரவேசிக்கச் செய்து மூர்க்கன் துரியோதனன் அருமைத் தம்பிகளைக் கொன்றானே! 'கர்ணனுக்குச் சமானமான வேறொரு வீரனை நான் உலகத்தில் கண்டதில்லை. கர்ணனைச் சகாயமாகக் கொண்ட என்னை யுத்தத்தில் தேவர்கள் கூட ஜயிக்க முடியாது. இந்தப் பாண்டவர்களா ஜயிக்கப் போகிறார்கள்?' என்று மூர்க்கன் சொன்னானே! இப்போது பீமசேனனுக்கெதிரில் கர்ணன் முதுகுகாட்டி ஓடியதைப் பார்த்துத் துரியோதனன் என்ன செய்தான்? சஞ்சய! காலனைப் போன்ற மகா பலத்தைப் படைத்த வாயு புத்திரனுடைய விரோதத்தைத் துரியோதனன் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான். ஐயோ, நாம் கெட்டோம்!"

"புத்தி யில்லாத குமாரனுடைய சொல்லைக் கேட்டுப் பாண்டவர்களுடைய ஆறாத பகைமையைச் சம்பாதித்தது நீரே யல்லவா? நீரே அல்லவோ இந்த அனர்த்தத்துக்கு முக்கிய காரணம்! பீஷ்மர் முதலிய பெரியோர்கள் சொன்னதையும் கேட்காமல் ஆரம்பித்த காரியத்தின் பயனை இப்போது அனுபவிக்கிறீர். உம்மையே நொந்து கொள்ளாமல் யுத்தம் செய்கிற வீரர்களை ஏன் நிந்திக்கிறீர்?" என்று கிழவனுடைய வீண் புலம்பலை நிறுத்தச் சொல்லிச் சஞ்சயன் கதையைத் தொடர்ந்தான்.

x x x

பீமசேனனால் கர்ணன் தோல்வி யடைந்ததைக் கண்டு திருதராஷ்டிர புத்திரர்களான துர்மர்ஷன், துஸ்ஸஹன், துர்மதன், துர்த்தரன், ஜயன் ஆகிய ஐவரும் பீமனை எதிர்த்தார்கள். இவர்கள் வருவதைக் கண்டு தைரியம் அடைந்து கர்ணன் மறுபடியும் பீமனை நோக்கிப் பாணங்களை விட்டான். பீமசேனன் திருதராஷ்டிர புத்தி

ர்களை முதலில் அலட்சியம் செய்து கர்ணனையே எதிர்த்துக் கொண்டிருந்தான். ஆனால் அவர்களோ கர்ணனைச் சுற்றிக் கொண்டு அம்புகள் எய்து பீமனைப் பலமாக எதிர்த்தார்கள். அதன் மேல் பீமன் கோபங் கொண்டு அந்த ஐந்து தார்த்தராஷ்டிரர்களையும் தன் பாணங்களுக்கு இரையாக்கினான். சாரதிகளோடும் குதிரைகளோடும் அந்த ஐந்து வாலிபர்களும் உயிரிழந்து யுத்த பூமியில் கிடைத்தது. காட்டில் புயல் காற்றடித்த பிறகு புஷ்பங்களோடு கீழே விழுந்த அழகிய மரங்களைப்போல் காட்சி யளித்தது.

இவ்வாறு மறுபடியும் ஐந்து ராஜகுமாரர்கள் யமாலயம் சென்றதைக் கண்ட கர்ணன் முன்னைவிடக் கோரமான யுத்தம் செய்ய ஆரம்பித்தான். பீமனும் கர்ணன் செய்த தீங்கை யெல்லாம் நினைத்துக் கூர்மையான பாணங்களைத் தொடுத்துக் கர்ணன்மேல் விட்டான். கர்ணனுடைய வில்லை உடைத்துத் தள்ளி அவனுடைய குதிரைகளையும் சாரதிகளையும் கொன்றான். அதன்மேல் கர்ணன் தேரினின்று இறங்கிக் கதா யுதத்தை எடுத்து வீசினான். பீமசேனன் வில்லை வளைத்து அம்புகளால் அந்த கதையைத் தடுத்துவிட்டுக் கர்ணன்மேல் அம்பு மாரி பொழிந்தான். மறுபடியும் கர்ணன் முதுகு காட்டிக் காலால் நடந்து சென்றான்.

இதைக் கண்ட துரியோதனன் மிகவும் துயரப்பட்டுத் தன் தம்பிமார்கள் சித்திரன், உபசித்திரன், சித்திராக்ஷன், சாருசித்திரன், சராஸனன், சித்திராயுதன், சித்திரவர்மன் ஆகிய எழுவர்களையும் ராதேயனுக்கு உதவியாக அனுப்பினான். அவர்களும் விசித்திரமான சாமர்த்தியத்தைக் காட்டி பீமனை எதிர்த்தார்கள். ஆனால் அவர்களும் ஒருவர் பின் ஒருவராக பீமசேனனுடைய கோபத்துக்கு இரையாகி யுத்தகளத்தில் உயிரற்று வீழ்ந்தார்கள். கர்ணன் கண்ணீர் நனைந்த முகத்தோடு வேறு ஒரு தேரின் மேல் ஏறிக் காலாந்தகனைப் போல் கோபம் மேலிட்டு பீமனைத் தாக்கினான். இடியும் மின்னலும் கூடிய மேகங்களைப் போல் இருவரும் விளங்கினார்கள். கேசவனும் சாத்யகியும் அருச்சுனனும் பீமனுடைய பராக்கிரமத்தைப்

பார்த்து மகிழ்ச்சி யடைந்தார்கள். கௌரவ பட்சத்தி லிருந்த பூரிசிரவசும் கிருபரும் அசுவத்தாமாவும சல்லியனும ஜயத்ரதனும் இன்னும் எல்லா வீரர்களும் 'ஹா! ஹா!' என்று பீமனைப பார்த்து வியந்து புகழ்ந் தார்கள்.

இதையெல்லாம் கண்டு பொருதவனான துரியோத னன், கர்ணனுடைய நிலைமையைப் பற்றிக் கவலை கொண்டு, "பீமனுடைய அம்புகள் ராதேயனைக் கொல் லப் போகின்றன. உடனே நீங்கள் சென்று பீமனை எதிர்த்து அவனைச் சூழ்ந்து கொள்ளுங்கள்" என்று தன் சகோதரர்கள் வேறு ஏழு பேர்களையும் அனுப்பினான், சத்ருஞ்சயன், சத்ருஸஹன், சித்திரன், சித்திராயுதன். திடன், சித்திரசேனன், விகர்ணன இவ்வேழு பேர்களும் பீமனைச் சூழ்ந்துகொண்டு ஒரே சமயத்தில் பீமனை மிகவும பீடித்தார்கள்.

x x x

துரியோதனன் அனுப்பிய இந்த ஏழு தம்பிமார் களும் பீமனுடைய அம்புகளுக்கு இரையாகி உயிரற்று யுத்த பூமியில் வீழ்ந்தார்கள்.

எல்லாருககும் பிரியனான விகர்ணனும் பின் வாங்கா மல் எதிர்த்துக் கொல்லப்பட்டு வீழ்ந்ததும் பீமன் "தரும மும் நியாயமும் அறிந்த விகர்ணனே! க்ஷத்திரியக் கடமை யைச் செய்ய நீ யுத்தத்தில் சேர்ந்து கொல்லப்பட்டாய்! உன்னையும் நான் கொல்லவேண்டியவனாக ஆனேன்! நீயும் பிதாமகர் பீஷ்மரும கொல்லப்பட வேண்டியதாகிய இந்த யுத்தம கொடிய யுத்தம" என்று துக்கித்தான்.

துரியோதனனுடைய சகோதரர்கள் தன்னைக் காப் பாற்றுவதற்காக ஒருவர் பின் ஒருவராக இவ்வாறு வந்து இறப்பதைக் கண்டு துயரம் மேலிட்ட கர்ணன ரதத்தின் மேல் சாய்ந்து இரண்டு கண்களையும மூடிக்கொண்டு மயக்க மடைந்தான். மறுபடியும் மனதை உறுதிப்படுத் திக் கொண்டு போர் துவங்கினான்.

பீமன் விடுத்த அம்புகள் கர்ணனுடைய வில்லை உடைக்க அவனும் வேறு விற்களை எடுத்து யுத்தம் செய்தான். பதினெட்டுத் தடவை இம்மாதிரி கர்ணனுடைய வில் உடைந்தது. கர்ணனும் தன் சாவதானத்தை இழந்து பீமனைப் போலவே கோபாவேசமானான். இருவரும் ஒருவரை ஒருவர் கோரமான பார்வைகளுடன் பார்த்துக் கொண்டு யுத்தம் செய்தார்கள். பீமன் அப்போது செய்த சிம்மநாதம் யுதிஷ்டிரனுக்கு மறுபடியும் கேட்டது. தருமபுத்திரனும் உற்சாகமடைந்து போர் வாத்தியங்களை ஒலிக்கச் செய்து துரோணரைப் பலமாக எதிர்த்தான்.

கர்ணனும் பீமனும் மறுபடி யுத்தம் துவக்கினார்கள். பீமன் குதிரைகளும் சாரதியும் இழந்து தேரும் உடைபட்டு வில்லு மிழந்தவனானான். அதன் மேல் பீமன் சக்தியாயுதத்தை எடுத்துக் கர்ணனுடைய ரதத்தின்மேல் பிரயோகித்தான். கர்ணன் அதை அம்புகளால் தடுத்துப் பயனற்றதாகச் செய்யவே, கத்தியையும் கேடகத்தையும் ஏந்தி பீமன் கர்ணனை எதிர்த்தான். ஒரு விநாடியில் கேடகம் கர்ணனுடைய அம்பினால் நாசம் செய்யப்பட்டது. கேடகத்தை இழந்ததும் பீமசேனன் கத்தியைச் சுழற்றிக் கர்ணன்மேல் எறிந்தான். அது ராதேயனுடைய வில்லை அறுத்துத் தள்ளிவிட்டு கீழே விழுந்தது. உடனே அவன் வேறொரு வில்லையெடுத்து அது வரையில் நடைபெறாத முறையில் அம்புகள் பிரயோகித்து பீமனை மிகவும் பீடித்தான். பீமன் உக்கிரமான கோபம் கொண்டு உயரக் கிளம்பிக் கர்ணன் தேரில் குதித்துப் பாய்ந்தான். ராதேயன் உடனே கொடிமரத்தடியில் பதுங்கி பீமனுடைய பாய்ச்சலுக்குச் சிக்காமல் தப்பித்துக் கொண்டான். பிறகு பீமன் மறுபடியும் கீழே குதித்து இறந்து கிடந்த யானைக் குவியல்களில் நுழைந்து கர்ணனுடைய அம்புகள் தன்மேல் பாயாமல் தடுத்துக் கொண்டு விசித்திரமான போர் புரிந்தான். யுத்தகளத்தில் வீழ்ந்து கிடந்த தேர்ச்சக்கரங்கள் குதிரை யானை முதலியவையின் வெட்டுப்பட்டுக் கிடந்த அங்கங்கள் இவற்றையெல்லாம் எடுத்து வீசியுத்தத்தை

நிறுத்தாமல் கர்ணனை எதிர்த்துக் கொண்டே நின்றான்.

இவ்வாறு ஆயுதமற்று பீமசேனன் தன்னை எதிர்த்துக் கொண்டு கஷ்ட நிலையிலிருந்தபொழுது 'அருச்சுனனைத் தவிர உன் மக்களில் மற்ற நால்வரை நான் கொல்லமாட்டேன்' என்று தாயார் குந்திக்குத் தான் கொடுத்த வாக்கு நினைவுக்கு வந்தது.

"மூடனே! பெருந்தீனிக்காரனே! யுத்தம் செய்யத் தெரியாதவன்! நீ காட்டில் பழங்களையும் கிழங்குகளையும் வயிறு நிறையத் தின்பதற்குத் தகுந்தவன். க்ஷத்திரியர்கள் செய்யும் யுத்தத்திற்கும் உனக்கும் வெகு தூரம் போ!" என்று இவ்வாறு பலவாறாக ஏசி பீமனைக் கோபம் பொங்கச் செய்தான்,

"கர்ணனால் பீடிககப்படும் பீமசேனனைப் பார்" என்று கிருஷ்ணன அருச்சுனனுக்குச் சொன்னான். கோபாக்கினியால் கர்ணனை எரித்து விடுவதுபோல் தனஞ்சயன் கண்கள் சிவந்தன. காண்டீவத்தை வளைத்துக் கர்ணன் மேல் அம்புகள் விட்டான். கர்ணன் பீமனை விட்டு விலகவேண்டியதாயிற்று. குந்திக்குக் கொடுத்த வாக்கை எண்ணிச் சந்தோஷமாகவே விலகினான்.

# சௌமதத்தன் வதம்

"அதோ! உன்னுடைய சிஷ்யனும் நண்பனும், சத்திய பராக்கிரமனுமான சாத்யகி சத்துருப் படைகளைக் குலைத்து விட்டு வெற்றியோடு வருகிறான் பார்!"

தேர் நடத்திக் கொண்டிருந்த கிருஷ்ணன் தனஞ்சயனுக்கு இவ்வாறு சொன்னான்.

"மாதவ! தருமபுத்திரரை விட்டு விட்டுச் சாத்யகி இங்கு வந்தது எனக்குப் பிடிக்க வில்லை. துரோணர் அவ்விடம் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார். தருமபுத்திரரைக் காப்பாற்ற வேண்டிய இவன் இங்கே இப்படி வந்து விடலாமா? ஜயத்ரதனும் கொல்லப்படவில்லை. அதோ பார்! பூரிசிரவசு, சாத்யகியை எதிர்க்கிறான். இந்த சந்தர்ப்பத்தில் சாத்யகியை யுதிஷ்டிரர் இவ்விடம் அனுப்பிவிட்டது பெருந்தவறு" என்றான் அருச்சுனன்.

x x x

கண்ணனைப் பெறுவதற்காக அவதரித்தாள் தேவகி. அவளுடைய சுயம்வரத்தில் சோமதத்தனுக்கும் சினிக்கும் பெரிய யுத்தம் நடந்தது. வசுதேவனுக்காக சினியானவன சோமதத்தனை ஜயித்து தேவகியைத் தன தேரில் ஏற்றி வைத்துக்கொண்டு சென்றான. அதுமுதல் அந்த இரண்டு குலங்களுக்குள ஜன்ம விரோதம் ஏற்பட்டு விட்டது. சினியின் பேரன் சாத்யகி. சோமதத்தன் மகன் பூரிசிரவசு. சாத்யகியைக் கண்டதும பரம்பரைப் பகையை ஒட்டி அவனை பூரிசிரவசு யுத்தத்துக்கு அழைத்தான்.

"சூரன் என்று எப்போதும் கர்வம் கொண்டிருக்கும் சாத்யகியே! இதோ உன்னைத் தொலைத்துவிடப் போகிறேன். நெடுநாளாக நான் விரும்பிய யுத்தம் இப்போது எனக்குக் கிடைத்தது. தசரத குமாரனாகிய லக்ஷ்மணனால் வதம் செய்யப்பட்டு இந்திரஜித்து மாண்டதைப்போல் என்னால் வதம் செய்யப்பட்டு நீ இன்று யமலோகத்துக்

குப் போவாய். உன்னால் கொல்லப்பட்ட வீரர்களுடைய ஸ்திரீகள் இன்று திருப்தி அடைவார்கள்."

இவ்வாறு சொல்லி பூரிசிரவசு சாத்யகியை யுத்தத்திற்கு அழைத்தான்.

"வீண் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டு போவதில் என்ன பயன்? யுத்தத்தில் பயம் இல்லாதவனிடத்தில் இந்தப் பேச்சுகள் என்னத்திற்காக? பேச்சை விட்டு விட்டுச் செய்கையினால் உன் சூரத்தனத்தைக் காட்டு. சரத்காலத்தில் மேகங்கள் வீண் இடி முழக்கம் செய்வதைப்போல் வெறும் கர்ச்சனை செய்ய வேண்டாம்" என்று சிரித்துக் கொண்டு சொன்னான் சாத்யகி.

போர் துவக்கினார்கள். இருவரும் இரண்டு சிங்கங்கள் போல யுத்தம் செய்தார்கள்.

x x x

குதிரைகள் கொல்லப்பட்டு விற்கள் அறுபட்டு ரதங்களை இழந்து இருவரும் தரையில் நின்று கத்தியும் கேடயமுமாக நின்றார்கள். இருவரும் ஆச்சரியமான சஞ்சாரங்களை செய்தார்கள். ஒரு முகூர்த்த காலம் கத்திச் சண்டை நடந்த பிறகு, கேடயங்களை அறுபட்டுக் கைச் சண்டை ஆரம்பித்தது.

ஒருவரை யொருவர் இறுகக் கட்டிக் கொண்டு பூமியில் சுழன்றும் துள்ளி எழுந்தும் மறுபடி ஒருவரை யொருவர் தள்ளியும் இவ்வாறு யுத்தம் நெடுநேரம் செய்தார்கள். பார்த்தன் அச்சமயம் சிந்து ராஜனோடு போர் செய்து கொண்டு அவன் வதத்தில் மனதைச் செலுத்தினவனாக இருந்தான்.

"தனஞ்சய! சாத்யகி களைத்துப் போனதைப் பார்! சாத்யகியை இந்தப் பூரிசிரவசு கொல்லப் போகிறான்" என்றான் கிருஷ்ணன். தனஞ்சயன் ஜயத்ரதன் மேலேயே கவனமாக இருந்தான்.

மறுபடி கிருஷ்ணன் "கௌரவப் படையுடன் போர் புரிந்து களைத்துப் போயிருக்கும் சாத்யகியைப் பூரிசிரவசு,

யுத்தத்துக்கு அழைத்தான். இது சமமான யுத்தமல்ல, இவனுக்கு உடனே துணை போகவேண்டும். இல்லாவிடில் நம்முடைய அருமை யுயுதானன் பூரிசிரவசால் கொல்லப் படுவான்'' என்றான்.

இவ்வாறு கிருஷ்ணன் சொல்லி முடிப்பதற்குள் பூரிசிரவசு சாத்யகியைத் தூக்கிக் கீழே போட்டு அடித்தான். ''செத்தான் யுயுதானன்!'' என்று கௌரவ சேனை ஆரவாரித்தது.

''விருஷ்ணி குலத்திலேயே சிறந்தோங்கி விளங்கிய வீரனை சாத்யகி பூமியில் கிடப்பதைப் பார். உனக்குத் துணை செய்ய வந்தவன் உன் எதிரில் வதம் செய்யப்படுகிறான். நீ பார்த்துக் கொண்டிருக்கையிலேயே உன் நண்பன் உயிர் இழக்கப் போகிறான்'' என்று கிருஷ்ணன் மறுபடியும் அருச்சுனனுக்குச் சொன்னான். சிங்கம் யானையை இழுப்பது போல் யுத்த களத்தில் விழுந்த சாத்யகியைப் பூரிசிரவசு தரதரவென்று இழுத்தான்.

அருச்சுனன் தருமசங்கடத்தில் சிக்கிக் கலக்கமடைந்தான்.

''பூரிசிரவசு என்னால் எதிர்க்கப்படவில்லை. வேறொருவனோடு எதிர்த்துப் போர் செய்து கொண்டிருக்கிற பூரிசிரவசின் மேல் அம்பு விட்டுக் கொல்ல என் மனம் துணியவில்லை. என் நிமித்தமாக சாத்யகி உயிர் இழப்பதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கவும் முடியவில்லை.''

இவ்வாறு அருச்சுனன் கண்ணனுக்குச் சொல்லி முடிக்கும் தறுவாயில், அவன்மேல் ஸைந்தவன் தொடுத்து வீசிய அம்புத் திரள் வந்து வானை மூடிற்று. அவனும் ஜயத்ரதன் மேல் அம்பு மாரி பெய்து கொண்டிருந்தான். அதே சமயம் சாத்யகியின் சங்கட நிலையை அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்து மனவேதனைப் பட்டுக் கொண்டுமிருந்தான்.

''பார்த்தனே! அநேக வீரர்களுடன் போர் புரிந்து விட்டுச் சாத்யகி மிகவும் களைப்படைந்து ஆயுதங்களை

இழந்து பூரிசிரவசின் கையில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறான்" என்றான் மறுபடியும் கண்ணன்.

அருச்சுனன் இச்சமயம் திரும்பிப் பார்த்தபோது பூரிசிரவசு கீழே கிடந்த சாத்யகியைக் காலால் மிதித்துக் கொண்டு கத்தியுடன் கூடிய கையை உயரத் தூக்கி நின்றான். அதைக்கண்டதும் பார்த்தன் ஒரு அம்புவிடுத்தான்; அது பூரிசிரவசின் கையை நோக்கிப் பாய்ந்தது. உயரத் தூக்கின வலக்கை அறுபட்டு பிடித்திருந்த கத்தியுடன் கீழே விழுந்தது.

கை வெட்டப்பட்ட பூரிசிரவசு திரும்பிப் பார்த்தான் "கௌந்தேயனே! வீரனுக்குத் தகாத காரியத்தை நீ செய்வாய் என்று நான் எதிர்பார்த்திருக்கவில்லை; உன்னைப் பாராமல் வேறொருவனுடன் போர் புரிந்து கொண்டிருக்கிற என்னுடைய கையை மறைவாக இருந்து வெட்டினாய். ஹா! மனிதன் யாரிடம் கூடிப் பழகுகிறானோ அவனுடைய குணத்தைச் சீக்கிரத்தில் அடைகிறான் என்கிற உண்மையை உன்னுடைய செய்கையில் கண்டேன். தனஞ்சய! உன் அண்ணன் தருமபுத்திரனிடம் சென்று பூரிசிரவசு என்ன செய்துகொண்டிருக்கும்போது அவன் கையை வெட்டினதாகச் சொல்லப் போகிறாய்? ஆ! இந்தத் தகாத யுத்த முறையை உனக்கு யார் உபதேசித்தது? தகப்பன் இந்திரனா, ஆசார்யர்கள் துரோணரா, கிருபரா? உன்னுடன் யுத்தம் செய்யாதவனும் உன்னைப் பாராதவனுமான ஒருவனை எந்தத் தருமத்தை அனுசரித்து அடித்தாய்? இழிவானவர்கள் செய்யக் கூடிய காரியத்தை நீ செய்தாய். உன் புகழுக்குப் பெருங் குறை உண்டாக்கிக் கொண்டாய்! நீயாக இந்த அதருமத்தில் இறங்கி யிருக்கமாட்டாய். வாசுதேவனுடைய பிரேரணையின் மேல்தான் நீ இவ்வாறு செய்திருக்க வேண்டும். இது உன் இயல்புக்குப் பொருந்தாத செய்கை. வேறொரு விஷயத்தைக் கவனித்துக் கொண்டு அஜாக்கிரதையாக இருப்பவனை அரச குலத்தில் பிறந்த ஒருவன் தாக்கமாட்டான். இகழத் தக்கவனான கிருஷ்ணனுடைய உபதேசத்தைக் கேட்டு இந்த அதருமத்தைச் செய்து விட்டாய்!"

இவ்வாறு வலக்கை யிழந்த பூரிசிரவசு யுத்தகளத்தில் கண்ணனையும் அருச்சுனனையும் நிந்தித்தான்.

பார்த்தன், "பூரிசிரவசே! முதுமையால் புத்தியை இழந்தாய் போலும். யுத்த முறைகளை முற்றிலும் அறிந்தவனாகிய நீ, ஏன் வீணாக என்னையும் ரிஷிகேசனையும் நிந்திக்கிறாய்? எனக்காகப் பிராணனை விடத் துணிந்து வந்து யுத்தம் செய்கிற நண்பனை எனக்கு வலக்கை போன்ற யுயுதானனை அவன் செய்கையற்றுக் கீழே கிடக்கும்போது நீ வதம் செய்வதை நான் எப்படிச் சும்மா பார்த்துக் கொண்டிருக்க முடியும்? இருந்தேனானால் நான் நரகத்தை அடைவேன். மாதவனுடன் சேர்ந்து நான் கெட்டுப்போனேனா? அப்படிக் கெட்டுப் போக உலகத்தில் எவன் தான் விரும்ப மாட்டான்? புத்தி மயக்கத்தினால் இப்படிப் பேசுகிறாய். அநேக மகாரதர்களுடன் போர் செய்து களைப்புற்று ஆயுதங்கள் குறைந்து வந்திருந்த சாத்யகியை நீ யுத்தத்துக்கு அழைத்து ஜயம் பெற்றாய். அவ்வாறு ஜயிக்கப்பட்டுக் கீழே கிடந்தவனை நீ எந்த தருமத்தின்படி கொல்லப்போனாய்? ஆயுதத்தை இழந்தவனும் கவசம் உடைந்தவனும் களைப்புற்றுத் தடுமாறி நின்றவனுமான பாலன் அபிமன்யுவின் வதத்தை நீங்கள் எவ்வாறு கொண்டாடினீர்கள்?" என்றான்.

இவ்வாறு அருச்சுனன் மறுமொழி சொன்ன பின், பூரிசிரவசு சாத்யகியை விட்டு விட்டு விலகி யுத்த களத்தில் இடக் கையினால் அம்புகளைக் கீழே பரப்பி யோகாசனத்தில் அமர்ந்து பிரம்மத்தை தியானித்துப் பிராயோபவேச நிலையில் அமர்ந்தான். கௌரவ சேனை முழுதும் பூரிசிரவசைப் புகழ்ந்து ஆரவாரித்தது. அருச்சுனனையும் கிருஷ்ணனையும் இகழ்ந்தது.

"வீரர்களே! என்னுடைய பாணங்கள் செல்லும் தூரத்தில் என்னைச் சேர்ந்த வீரனை எந்தப் பகைவனும் கொல்லவிட மாட்டேன் என்பது என்னுடைய விரதம். ஏன் என்னை நிந்திக்கிறீர்கள்? தருமத்தை அறியாமல் நிந்தித்தல் தகாது. சாத்யகியைக் காப்பாற்ற வேண்டியது

என்னுடைய தருமம்'' என்று சொல்லி அருச்சுனன் பூரி சிரவசைப் பார்த்து, ''அடுத்தவர்களுக்கு அபயம் கொடுத் தவனும் புருஷ சிரேஷ்டனுமான வீரனே! உன் தவறான செய்கையினால்தான் இந்த நிலைமையை நீ அடைந்தாய். என்னை நிந்திப்பதில் பயன் இல்லை. இதற்கெல்லாம் காரணமான க்ஷத்திரிய தர்மத்தை நாம் அனைவரும் நிந் திக்கவேண்டும்'' என்றான்.

அருச்சுனன் சொன்னதைக் கேட்ட பூரிசிரவசு, ஒன் றும் பேசாமல் மௌனமாய் வணங்கித் தலையால் பூமி யைத் தொட்டான்.

ஒருமுகூர்த்த காலம் இளைப்பாறிய சாத்யகி, எழுந்து கோபத்துக்கு வசப்பட்டவனாகக் கத்தியை எடுத்துக் கொண்டு யோகத்தில் அமர்ந்திருந்த பூரிசிரவசை அடுத் தான். சேனை முழுதும், ''ஹா! ஹா!'' என்று கூக்குர லிட்டுக்கொண்டும், கிருஷ்ணனும் அருச்சுனனும் ''வேண் டாம்'' என்று தடுத்துக் கொண்டும் இருக்க, சாத்யகி கத்தியை வீசி பூரிசிரவசின் தலையை அறுத்துக் கீழே தள்ளினான்.

சித்தர்களும் தேவர்களும் பூரிசிரவசைக் கொண்டாடி னார்கள். சேனையிலுள்ளவர்கள் அனைவரும் சாத்யகி செய்தது இகழத் தக்க காரியம் என்று சொல்லி வெறுப் புடன் துக்கமும் கொண்டு நிந்தித்தார்கள். ''யுத்தரங்கத்தில் உயிரோடு விழுந்திருக்கும் என்னைக் காலால் மிதித்துக் கொல்ல யத்தனித்த குல சத்துருவை அவன் எந்த விரதத்திலிருந்தாலும் நான் கொல்லத் தகுந்தவன்'' என்று சாத்யகி சொன்னான். ஆயினும் யாருமே யுத்த களத்தில் பூரிசிரவசின் வதத்தைச் சரியென்று ஒப்புக் கொள்ளவில்லை.

பாரதத்தில் அமைக்கப் பட்டிருக்கும் தரும சங்கடச் சிக்கற் கதைகளில் பூரிசிரவசின் வதமும் ஒன்று. துவே ஷமும் கோபமும் வளர்ந்து விட்டபின் ஒழுங்கேது, தருமமேது?

# ஜயத்ரதன் வதம்

"கர்ணா! இரண்டில் ஒன்று முடிவாகும் சமயம் இப்போது நேர்ந்திருக்கிறது" என்றான் துரியோதனன். "இன்றுமாலைக்குள் ஜயத்ரதவதம் பிரதிஜ்ஞை நிறைவேறாமற் போனால் அருச்சுனன் வெட்கத்தால் உயிரை மாய்த்துக் கொள்வான். அருச்சுனன் இறந்தால் பாண்டவர்களின் நாசம் நிச்சயம். அதன் பின் இந்தப் பூமி முழுதும் சத்துருக்களுடைய தொந்தரவு இன்றி நம் வசத்திலிருக்கும். புத்தி மயக்கத்தினால் தன்னுடைய விநாசத்துக்காகவே தனஞ்சயன் இந்த வீண் பிரதிஜ்ஞையை எடுத்துக்கொண்டான். இது என்னுடைய நல்ல காலம் என்றே நினைக்கிறேன். இதைக் கைவிடலாகாது. எப்படியாவது அவனுடைய சபதம் நிறைவேறாமல் செய்யவேண்டும். இன்று நீ உன் சாமர்த்தியத்தைக் காண்பிக்கவேண்டும். அதோ, சூரியன் சாய்ந்துவிட்டான். மிஞ்சியிருக்கும் காலத்துக்குள் பார்த்தன் ஜயத்ரதனை அடைய முடியாது. நானும் அசுவத்தாமரும் சல்லியனும் கிருபரும் நீயும் அஸ்தமனம் வரையில் எவ்விதத்திலாவது ஜயத்ரதனைக் காப்பாற்றித் தனஞ்சயனுடைய பிரதிஜ்ஞை நிறைவேறாமல் செய்துவிடவேண்டும்" என்றான்.

இதைக் கேட்டு கர்ணன் "அரசனே! பீமசேனனால் பலமாக அடிக்கப்பட்டு உடம்பு முழுவதும் காயமடைந்திருக்கிறேன். என் உடலின் லாகவம் மிகவும் குறைந்து போயிருக்கிறது. ஆயினும் என்னால் இயன்ற வரையில் உன்னுடைய காரியத்தை நிறைவேற்றுவேன். நான் பிழைத்திருப்பது உனக்காகவே" என்றான்.

இவ்வாறு யுத்தகளத்தில் துரியோதனனும் கர்ணனும் பேசிக்கொண்டிருக்கும் பொழுது அருச்சுனன் கௌரவசேனையைப் பலமாகத் தாக்கிக்கொண்டிருந்தான். எப்படியாவது கௌரவ சேனையை உடைத்து அஸ்தமனத்துக்குள் ஜயத்ரதனை அடையவேண்டும் என்று தனஞ்சயன் கடும்போர் புரிந்தான்.

x x x

கிருஷ்ணன் பாஞ்சஜன்யத்தை எடுத்து ரிஷப சுவரத்தில் பேரொலி செய்தான். அதைக் கேட்டதும் திட்டம் செய்திருந்தபடி கிருஷ்ணனுடைய சாரதி தாருகன் தயாரித்து வைத்திருந்த தேரை மாய வேகமாக ஓட்டிக்கொண்டு வந்து சேர்ந்தான். அதில் சாத்யகி ஏறிக் கர்ணனை எதிர்த்து மிகவும் சாமர்த்தியமான போர் நடத்தினான்.

தாருகனுடைய சாரத்யமும் சாத்யகியினுடைய வில் வன்மையும் சேர்ந்து தேவர்கள் நின்று பார்க்கும்படியான யுத்தம் துவங்கிற்று. கர்ணனுடைய நான்கு குதிரைகளும் வீழ்த்தப்பட்டன. சாரதியும் தேர்த் தட்டினின்று தள்ளப்பட்டான். பிறகு அவனுடைய கொடி மரமும் தேரும் துண்டு துண்டாக்கப்பட்டன. கர்ணன் தேரிழந்தவனாகச் செய்யப்பட்டான். கௌரவ சேனையில் "ஆ! ஆ!" என்று பேரொலி எழும்பிற்று. தேரிழந்த கர்ணன் துரியோதன னுடைய தேரில் ஏறிக்கொண்டான்.

இதைப்பற்றி திருதராஷ்டிரனுக்குச் சொல்லும் போது சஞ்சயன் "உலகத்தில் கிருஷ்ணனும் பார்த்தனும் சாத்யகியுமே சிறந்த வில்லாளிகள். இவர்களுக்குச் சமான மான நான்காவது வில்லாளி இல்லை" என்றான்.

x x x

அருச்சுனன் கௌரவ சேனையில் பெரும்பான்மை யான பாகத்தைத் தோல்வியடையச் செய்து ஜயத்ரதனை அடைந்தான். அபிமன்யுவின் வதத்தையும் தாங்கள் அனுபவித்த பல துன்பங்களையும் எண்ணி, நெருப்பைப் போல் கோபத்தால் ஜொலித்த அருச்சுனன் அன்று காண்டீவத்தை இரு கைகளாலும் பிரயோகம் செய்தான். இரு கையாலும் விற்பிரயோகம் செய்யும் திறமையினால் சவ்ய சாசி என்கிற புகழ்ப் பெயரை அருச்சுனன் பெற் றிருந்தான். கலவரமடைந்த கௌரவ வீரர்களுக்கு வாய் திறந்து நின்ற அந்தகனைப் போல் காணப்பட்டான்.

ஸைந்தவனைக் காப்பதற்காக அவனைச் சூழ்ந்து கொண்டு நின்ற அசுவத்தாமன் முதலிய மகாரதர்

களுக்கும் அருச்சுனனுக்கும் அப்போது நடந்த மகத்தான போரை வியாசரைத் தவிர வேறு யாரும் வருணிக்க முடியாது.

நடுவில் நின்று தடுத்த மகாரதர்களனைவரையும் தோல்வியடையச் செய்து விட்டு அருச்சுனன் ஜயத்ரதனைத் தாக்கினான்.

x x x

யுத்தம் வெகு நேரம் நடந்தது. இரு திறத்திலும் சூரியனை அடிக்கடி பார்க்கலாயினார். ஸைந்தவனும் மகா சூரன். எளிதில் அருச்சுனனுக்குத் தோற்பவன் அல்ல. அஸ்தமனம் நெருங்கிச் சூரியன் செந்நிறம் கொண்டான். அப்போதும் யுத்தம் முடியவில்லை.

"இன்னும் சிறிது நேரமே இருக்கிறது. ஜயத்ரதன் பிழைத்தான். அருச்சுனனுடைய பிரதிஜ்ஞை வீணாயிற்று" என்று துரியோதனன் தனக்குள் எண்ணி மகிழ்ந்தான். அப்போது திடீர் என்று இருள் மூடிற்று.

பாண்டவர்களுடைய சேனையில் "பகல் முடிந்து விட்டது. ஜயத்ரதனுடைய வதம் நடைபெறவில்லை. அருச்சுனனுடைய பிரதிஜ்ஞை வீணாயிற்று" என்று அனைவரும் பேசத் தொடங்கினார்கள். கௌரவ சேனையில் மகத்தான சந்தோஷ ஆரவாரம் உண்டாயிற்று.

ஜயத்ரதனும் சூரியன் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்துக்கொண்டு "பிழைத்தேன்!" என்று எண்ணினான்.

கிருஷ்ணன் "தனஞ்சய, சிந்துராஜன் சூரிய மண்டலத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். இருள் என்னால் உண்டாக்கப்பட்டது. சூரியன் இன்னும் அஸ்தமனம் ஆகவில்லை. உன் பிரதிஜ்ஞையைப் பூர்த்தி செய். இதுவே சமயம்" என்றான்.

உடனே காண்டீவத்தினின்று ஒரு அம்பு விடுபட்டது: பருந்து கோழிக் குஞ்சைக் கவ்வுவதுபோல் சைந்தவனுடைய தலையை அது கவர்ந்தது.

உடனே கிருஷ்ணன் "ஜயத்ரதனுடைய தலை கீழே விழலாகாது. அதை அந்தரத்திலேயே அம்புகளால் தூக்கிச் செலுத்தி தந்தை விருத்தக்ஷத்திரனுடைய மடியில் விழச் செய்" என்று ஞாபகமூட்டினான். அருச்சுனன் விடுத்த அம்பு ஜயத்ரதனுடைய தலையை அப்படியே ஆகாயத்தில் தூக்கிச்சென்றது. அது விசித்திரக்காட்சியா யிருந்தது.

விருத்தக்ஷத்திர ராஜன் தன் ஆசிரமத்தில் மாலை உபாசனையில் இருந்தான். கறுத்த தலை மயிரும் காதில் தங்கக் குண்டலங்களும் கொண்ட ஜயத்ரதனுடைய தலை தியானத்தில் ஆழ்ந்திருந்த தந்தையின் மடியில் விழுந்தது. ஜபத்தை முடித்து அவன் கண் திறந்து எழுந்ததும் அந்தத் தலையானது உருண்டு தரையில் விழுந்தது. உடனே விருத்தக்ஷத்திரனுடைய தலை நூறு துண்டாக வெடித்தது. ஜயத்ரதனும அவன் தந்தையாகிய சிந்து ராஜனும வீர சுவர்க்கத்தை ஒரே சமயத்தில் அடைந்தார்கள்.

x x x

கேசவனும் தனஞ்சயனும் பீமனும் சாத்யகியும் யுதாமன்யுவும் உத்தமௌஜஸும் சங்கங்களை ஊதி வெற்றி முழக்கம் செய்தார்கள். தருமராஜன் அதைக் கேட்டு "அருச்சுனன் ஸைந்தவனை வதம் செய்தாயிற்று" என்று அறிந்துகொண்டு மகிழ்ந்தான்.

அதன் பிறகு எல்லாப் பாண்டவ சேனையுடன் யுதிஷ்டிரன் துரோணரைப் பலமாக எதிர்த்தான். பதினாலாவது நாள் யுத்தம் பகலுடன் நிற்கவில்லை இரவிலும் நடந்தது. யுத்தத்தின் வேகம் அதிகரிக்க அதிகரிக்க முதலில் காப்பாற்றி வந்த வரமபுகள் ஒவ்வொன்றாக அழிந்துபோயின.

# துரோணரின் முடிவு

பீமனுடைய அசுர மனைவியின் குமாரன் கடோத்கசன் என்று பாரதம் கேட்ட யாவரும் அறிவார்கள். மகாபாரதக் கதா பாத்திரங்களுக்குள் வீரமும் தீரமும் பலமும் குணமும் புகழும் எல்லாம் சேர்ந்து சொலிக்கும் வாலிபர்கள் இரண்டு பேர்கள்; அருச்சுனன் மகன் அபிமன்யுவும் பீமன் மகன் கடோத்கசனும். இருவரும் யுத்தத்தில் பாண்டவர்களுக்காகப் பெரும்போர் செய்து மாண்டார்கள்.

இரண்டு பக்கத்திலும் கிளர்த்தப்பட்ட துவேஷ வேகத்திற்குப் பகலில் மட்டும் நடத்தப்பட்ட யுத்தம் திருப்தி தராமல் போயிற்று. பதினாலாம் நாளில் சூரியன் மறைந்த பின்னும் போர் செய்யவேண்டும் என்று தீவட்டிகள் ஏற்றினார்கள். இருட்டே சௌகரியமாகக் கொண்டு கடோத்கசனும் அவன் மாயக் கூட்டமும் துரியோதனன் படையை இரவில் பலமாகத் தாக்கினார்கள். அந்த இராத்திரி யுத்தம மகா அற்புதமாக இருந்தது. அதுவரையில் பாரத தேசத்தில நடைபெறாத நிகழ்ச்சியாக இருந்தது. ஆயிரக்கணக்கான தீவட்டிகளை ஏற்றி வைத்துக்கொண்டு பலவித சமிக்ஞைகளை நியமித்துக் கொண்டு இரண்டு பக்கத்திலும் வீரர்கள் யுத்தம் செய்தார்கள்.

கர்ணனுக்கும் கடோத்கசனுக்கும் அன்றிரவு போர் நடந்தது. கடோத்கசனும் அவன் பூத கணங்களும் பொழிந்த அம்புமாரியில் திரள் திரளாகத் தன் வீரர்கள் மாய்ந்து வீழ்ந்ததைக் கண்டு துரியோதனனுடைய உள்ளம் பதைத்தது. "கர்ணனே! இவனை உடனே கொல்வாயாக. இல்லாவிடில் நம்முடைய சேனை முழுதும் அழிந்து போகும். இவனைச் சீக்கிரம் ஒழிப்பாயாக" என்று கௌரவர்கள் எல்லாரும் கர்ணனை வேண்டினார்கள்.

கர்ணனுக்கும் அந்தத் தருணத்தில் கடோத்கசன் மேல் ஆத்திரமாகத்தான் இருந்தது. அவனால் அடிபட்

டுக் கோபம் பொங்கியிருந்த சமயம். இந்திரன் தனக்குத் தந்திருந்த சக்தியாயுதத்தை வீசி அவனைத் தொலைக்கவே தீர்மானித்தான். அருச்சுனனுக்காகவே என்று அதுவரையில் மந்திர பூர்வமாகக் காப்பாற்றி வந்திருந்த அந்தச் சக்தியைக் கர்ணன் எடுத்து கடோத்கசன் மேல் எறிந்து விட்டான். இதனால் அருச்சுனன் பிழைத்தான். ஆனால் அதற்குப் பதிலாக பீமனுடைய அருமைப் புத்திரன் மாய்ந்தான். அந்தரட்சத்திலிருந்து கடோத்கசனுடைய பிரேதம் நிலத்தில் வீழ்ந்தது. பாண்டவர்கள் துக்கத்தில் மூழ்கினார்கள்.

x x x

யுத்தம் அப்போதும் நிற்கவில்லை. துரோணருடைய வில் இடைவிடாமல் பாண்டவ சேனையாட்களை வீழ்த்திப் பாண்டவப் படையில் பயத்தைப் பரப்பிக் கொண்டிருந்ததைப் பார்த்த கிருஷ்ணன் " அருச்சுனா! இந்தத் துரோணரை யுத்தத்தில் வெல்லக் கூடியவர் யாரும் இல்லை. இவர் ஆயுதத்தைப் பிடித்து நிற்கும் வரையில் யாரும் அவரை யுத்த முறையில் தாக்கி ஜயம் பெற முடியாது. தருமத்தை புறக்கணித்துவிட்டு ஏதேனும் செய்துதான் தீரவேண்டும். வேறு வழியில்லை. அசுவத்தாமன் இறந்ததாகக் கேள்விப்பட்டால் துரோணர் போர் புரியமாட்டார். துயரத்தினால் ஆயுதத்தைக் கீழே போட்டு விடுவார். யாராகிலும் துரோணரிடம் சென்று அசுவத்தாமன் இறந்தான் என்று சொல்ல வேண்டும்" என்று சொன்னான்.

இதைக்கேட்ட அருச்சுனன் திகைத்தான். அசத்திய வழியை ஒப்புக்கொள்ள அவன் விரும்பவில்லை. கூட இருந்த மற்றவர்களும் மாட்டோம் என்றார்கள். அதருமச் செயலைச் செய்ய மனம் ஒவ்வாதவர்களாக இருந்தார்கள்.

யுதிஷ்டிரன் யோசித்தான். இந்தப் பாவத்தை நான் சுமக்கிறேன் என்று சொல்லி நெருக்கடியைத் தீர்த்தான்.

கடலைக் கடைந்தபோது தேவர்களுக்காகப் பரமேசுவரன் விஷத்தைக் குடிக்க முன் வந்தான். நம்பிய சினே

இதனைக் காப்பாற்ற வேறு வழியில்லாமல் ஸ்ரீராமனும் பாபத்தைச் சுமந்து வாலியை அதரும முறையில் கொல்லத் தீர்மானித்தான். அவ்வாறே யுதிஷ்டிரனும் தன் புகழைத் தியாகம் செய்ய உறுதி கொண்டான்.

பீமன் தன் இரும்புக் கதையைத் தூக்கி அசுவத்தாமன் என்ற ஒரு பெரிய போர் யானையைக் கொன்றான். கொன்றுவிட்டு துரோணருடைய படைப் பகுதியண்டை சென்று அவர் காதில் விழும்படி உரத்த குரலில் "அசுவத்தாமனைக் கொன்றேன்" என்றான். இழிவான செயலைக் கனவிலும் எண்ணாத வீரனாகிய பீமசேனன் இவ்வாறு சொல்லும்போது வெட்கப்பட்டான் என்று வியாசர் அழகாகச் சொல்லுகிறார்.

துரோணர் அச்சமயம் பிரம்மாஸ்திரத்தை எடுத்துப் பிரயோகிக்கும் தறுவாயி லிருந்தார். குமாரன் இறந்து விட்டான் என்கிற பேச்சைக் கேட்டதும் தயங்கினார். இது உண்மையா யிருக்காது என்று சந்தேகமும்பட்டார். அதன்மேல் துரோணர் யுதிஷ்டிரனை நோக்கி "என் மகன் இறந்தானா? உண்மையா?" என்று கேட்டார். மூன்று உலகங்களின் ஆதிபத்தியத்திற்காகவும் கூட யுதிஷ்டிரன் பொய் சொல்ல மாட்டான் என்று நம்பியே யுதிஷ்டிரனைக் கேட்டார்.

அச்சமயம் கிருஷ்ணன் பெருத்த மனவேதனை யடைந்தான். "யுதிஷ்டிரர் தருமத்தைப் புறக்கணிக்கப் பயப்பட்டாரானால் பாண்டவர்களுடைய நாசம் நிச்சயம். துரோணருடைய பிரம்மாஸ்திரம் வீணாகாது" என்று எண்ணினான். யுதிஷ்டிரனோ அசத்தியத்தைக் கண்டு அச்சத்தில் மூழ்கி நின்றான். ஆனால் வெற்றி பெறவேண்டும் என்கிற ஆசையும் உள்ளவனாக இருந்தான்.

என்னுடைய பாபமாக இருக்கட்டும் என்று மனதை ஸ்திரப்படுத்திக் கொண்டு "அசுவத்தாமன் இறந்தது உண்மை" என்று உரக்கச் சொன்னான். சொல்லும் போது மறுபடியும் அதருமத்திற்குப் பயந்து "அசுவத்தாமன என்கிற யானை" என்று தாழ்ந்த குரலில் சேர்த்துச் சொன்னான்.

சஞ்சயன் திருதராஷ்டிரனிடம் நிகழ்ச்சிகளைச் சொல்லும்போது "அரசனே! இவ்வாறு அதருமம் நடந்து விட்டது" என்றான்.

யுதிஷ்டிரன் வாயில் இவ்வாறு பொய்ச் சொற்கள் வெளியான உடனே தருமபுத்திரனுடைய ரதம், அது வரையில் பூமியைத் தீண்டாமல் எப்போதும் நான்கு அங்குலம் உயரச் சென்று கொண்டிருந்ததானது, திடீரென்று கீழே இறங்கி மண்ணைத் தொட்டதாம்.

அதருமமே வழக்கமாகிப் போன பூமியைத் தருமபுத்திரனுடைய சத்தியமானது அதுவரையில் தொடாமலிருந்தது. வெற்றிக்கு ஆசைப்பட்டு அசத்தியத்தில் இறங்கி விட்டபடியால் அவன் தேரும் பாபம் நிறைந்த பூமியின் மட்டத்திற்கு வந்துவிட்டது என்கிறார் வியாசர்.

x x x

அசுவத்தாமன் இறந்தான் என்கிற மொழியைக் கேட்டதும் துரோணருக்கு உயிரிலுள்ள பற்று திடீர் என்று அறவே நீங்கிவிட்டது. அந்த நிலையில் அவர் இருக்கையில் பீமசேனன் அவரை மிகவும் கடுமையான மொழிகளால் நிந்திக்கலானான்.

"கெட்டுப்போன பிராமணர்கள் தமக்குரிய தொழிலை விட்டுவிட்டு க்ஷத்திரியர்களுடைய தொழிலில் புகுந்தபடியாலல்லவோ அரசர்களுக்கு ஆபத்து வந்தது? அதரும வழியில் பிராமண குலத்தவர்கள் பிரவேசிக்காவிடில், அரசர்கள் மாண்டு போகாமல் தப்பி யிருப்பார்கள். கொல்லா விரதமே மேலான அறம் என்றும் அந்த அறத்திற்குப் பிராமண குலமே வேர் என்றும் அறிந்த நீர் அந்தணர் குலத்தில் பிறந்திருந்தும் வெட்கமில்லாமல் கொலைத் தொழில் செய்து வருகிறீர். ஏன் இவ்வாறு பாபத்தில் இறங்கினீர்?" என்றான்.

மகன் இறந்துவிட்டான் என்று ஏற்கெனவே உயிரில் வெறுப்புக் கொண்ட துரோணரை இந்த நிந்தனை மிகவும் துன்புறுத்திற்று. உடனே அஸ்திரங்களை எறிந்து விட்டு

துரோணர் தேர்த்தட்டின் மத்தியில் உட்கார்ந்து யோக நிஷ்டையில் அமர்ந்துவிட்டார்.

இந்த சமயத்தில் திருஷ்டத்யும்னன் கத்தி யெடுத்து வந்து துரோணருடைய ரதத்தில் ஏறி "ஆ! ஆ!" என்று சேனையில் நாலா பக்கமும் சப்தம் எழுந்துகொண்டிருந்த போதே ஒரே வெட்டாகவெட்டி ஆசார்யருடைய தலையை வேறுபடுத்தி விட்டான். பரத்வாஜ புத்திரருடைய ஆத்மா பார்த்தவர்கள் கண்ணுக்குத் தெரியம்படியாக ஜோதி மயமாய் மேலுலகம் சென்றது.

மக்கள் வாழ்க்கையிலுள்ள துயரங்களை யெல்லாம் பிழிந்தெடுத்துக் காட்டும் அற்புதமான கற்பனையாகும் மகாபாரதக் கதை. துயரங்களைக் காட்டிப் பேருண்மையான பரம் பொருளை நாடச் செய்யும் தரும நூல். சாதாரணக் கட்டுக் கதைகளின் போக்கே வேறு, மகா பாரதத்தின் துறையே வேறு. படிப்போருக்கு மயிர்க் கூச்சலுண்டாக்கும் ஆபத்துகளும் கஷ்டங்களும் பலவற்றைத் தாண்டிக் கதாநாயகன் முடிவில் வெற்றிகரமாக ஒரு பெண்ணை விவாகம் செய்து முடித்துக்கொண்டு வாசகர்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்குவது; அல்லது இதற்கு மாறாக எல்லாம் சுகமாகவே நிகழ்வதுபோல் காட்டி பெரிய ஏமாற்றம் தரும்படியான கோர சம்பவத்தோடு திரை மூடுவது, இது சாதாரணக் கதைகளில் காணப்படும் துறை. ராமாயணம் பாரதம் முதலிய தரும நூல்களின் போக்கு படிப்பவனுடைய உள்ளத்தைக் கரைத்து மகிழ்ச்சியிலும் துயரத்திலும் உணர்ச்சிகளை அலசி ஆட்டி முடிவில்மெய்ப்பொருளில் கொண்டுபோய்ச் சேர்க்கும்.

# கர்ணனும் மாண்டான்

துரோணர் இறந்த பின் கௌரவப்பட்சத்து அரசர்கள் கர்ணனைச் சேனாதிபதியாக அபிஷேகம் செய்தார்கள். சல்லியன் நடத்திய திவ்வியமான தேரின் மீது கர்ணன் ஏறி நின்றான். அவனுடைய தேஜசு மிகவும் பிரகாசித்தது. அவன் தலைமையில் மறுபடி யுத்தம் வெகு உக்கிரமாக நடந்தது.

கோர யுத்தத்துக்குத் தகுந்ததாக ஜோதிஷ நிபுணர்கள் பார்த்துச் சொன்ன முகூர்த்தத்தை நிச்சயித்து அர்ச்சுனனும் அவனுக்குக் காப்பாக பீமசேனன் தன் தேரின்மேல் அடுத்தாற்போல் பின்புறம் தொடர இருவரும் சேர்ந்து கர்ணனைத் தாக்கினார்கள்.

துச்சாதனன் இதைக் கண்டதும் பீமனை எதிர்த்து அம்பு மாரி பொழிந்தான். "சிக்கினாய் துச்சாதனா!" என்றான் பீமன். "செலுத்த வேண்டிய கடனை முதலும் வட்டியுமாக இப்போது தீர்க்கப் போகிறேன். திரௌபதியை நீ தீண்டியபோது நான் எடுத்த சபதம் இப்போது நிறைவேறப் போகிறது" என்றான். துச்சாதனன் செய்த அக்கிரமங்களை நினைவுக்குத் தந்து கொண்டு கோபம் மேலிட்டு பீமன் அவன் மேல் பாய்ந்தான்.

திரௌபதியை அவமதித்த பாபிஷ்டனை பூமியில் தள்ளி அவன் அங்கங்களைப் படபடவென்று ஒடித்தான். 'துன்மார்க்கனே! இந்தக் கையல்லவோ திரௌபதியின் தலைக்கூந்தலைப் பிடித்தது! அந்தக் கையை உடலிலிருந்து பிய்த்து எறியப் போகிறேன். உனக்கு உதவியாக யாரேனும் இப்போது வரட்டும்! உன்னைக் காப்பாற்றும் திறமை வாய்ந்தவர் யாரேனும் இருந்தால் வரலாம்" என்று துரியோதனனுக்குக் கேட்குமாறு சொல்லிக் கோப பரவசமாய்த் துச்சாதனனுடைய கையைப் பிடித்துப் பிய்த்து இழுத்து எறிந்தான். பிறகு அவனுடைய ரத்

தத்தை உறிஞ்சிக் குடித்து பீமசேனன் காட்டு மிருகத்தைப்போல் மிக்க கோரமான காட்சியைத் தந்தான்.

"முடித்தேன்! இந்தப் பாபியைக் குறித்துச் செய்யப்பட்ட சபதம் நிறைவேறிற்று. இனி இந்த துரியோதனனைப் பற்றியது எஞ்சி நிற்கிறது. அந்த யாகப்பசுவும் தயாராகட்டும்" என்று சொல்லி பீமசேனன் யுத்தகளத்தில் யம சொரூபமாகத் தாண்டவம் ஆடினான். இந்தக் கோரக் காட்சியைப் பார்த்து அனைவரும நடுங்கினார்கள். கர்ணனுடைய உடலும் நடுங்கிற்று.

சல்லியன் கர்ணனைத் தேற்றினான். "இது தீரனான உனக்குத் தகாது. துரியோதனன் மனமுடைந்து நிற்கும் போது நீயும் தைரியத்தை இழக்கலாகாது. துச்சாதனன் இறந்த பின் உன்னைத்தான் அனைவரும் நம்பியிருக்கிறார்கள். முழுப் பொறுப்பும் பாரமும் இப்போது நீ தாங்க வேண்டும். க்ஷத்திரிய தருமத்தை நடத்து. அருச்சுனனைத் தாக்கி வெற்றியோ சுவர்க்கமோ பெறுவாயாக" என்றான்.

தேரை ஓட்டிய சல்லியன் சொன்னதைக் கேட்ட கர்ணன் கண்கள் சிவந்து கோபாவேசமாய் அருச்சுனனைத் தாக்கச் சென்றான்.

x x x

"இந்த யுத்தம் போதும். இனி விரோதத்தை நிறுத்துங்கள். துரியோதனா! என் அப்பனே! பாண்டவர்களிடம் சமாதானம் செய்துகொள். யுத்தத்தை நிறுத்து" என்றான் அசுவத்தாமன்.

"அந்த மூர்க்கனை பீமன் காட்டு மிருகம்போல ரத்தம் குடித்துக்கொண்டு பேசியது உன் காதில் வி வில்லையா? பக்கத்தில் இருந்தாயே? சமாதானம் ஏது வீண் பேச்சு ஏன் பேசுகிறாய்" என்று துரியோதனன் அசுவத்தாமனுக்குச் சொல்லிவிட்டு, சேனையை மறுபடி வியூகப்படுத்திப் பாண்டவர்களைத் தாக்கக் கட்டளை

அருச்சுனனுக்கும் கர்ணனுக்கும் பெரும் போர் நடந்தது. விஷப் பாம்பின் வாயைப்போல் நெருப்பைக் கக்கும் ஒரு அம்பைக் கர்ணன் அருச்சுனன்மேல் செலுத்தினான். கிருஷ்ணன் அந்தச் சமயம் தேரைத் தன் காலால் அழுத்தி ஐந்து அங்குலம் தரையில் பதியச் செய்து அருச்சுனனைக் காப்பாற்றினான். சர்ப்பமுகாஸ்திரம் அருச்சுனனுடைய கிரீடத்தைத் தூக்கிச் சென்றது. ரோஷாவேசம் கொண்டு அருச்சுனன் வில்லில் அம்பு தொடுத்தான். அச்சமயம் கர்ணனுடைய தேரின் இடப் பக்கத்து சக்கரம் யுத்தகளத்தில் மண்ணில் பதிந்து சிக்கிக் கொண்டது.

"நில்! நில்! ரதத்தின் சக்கரம் இறங்கிவிட்டிருக்கிறது. அதைத் தூக்கி நிறுத்தப்போகிறேன். பாண்டவனே, அதுவரையில் தாமதிப்பாயாக. நீ க்ஷத்திரிய தர்மப்படி போர் நடத்துபவன் என்று பெயர் பெற்றிருக்கிறாய். அந்தப் புகழை இழந்துவிடாதே. நீ ரதத்தின் மேல் இருந்துகொண்டு ரதமில்லாமல் தரையில் நிற்பவனாகிய என்மேல் பாணம் செலுத்துதல் தகாது. இதோ சக்கரத்தைத் தூக்கித் திருப்புகிறேன். அதுவரையில் போரை நிறுத்து" என்றான்.

கர்ணன் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்த கிருஷ்ணன் "கர்ணனே, தருமம் என்பது உனக்கும் நினைவுக்கு வருகிறதா? கஷ்டம் நேரிட்டபோதல்லவா நீ தருமத்தைச் சிந்திக்கிறாய்? நீயும் துரியோதனனும் துச்சாதனனும் சகுனியும் திரௌபதியைச் சபைக்கு இழுத்தீர்களே, அப்போது ஏன் தருமம் என்பது நினைவிருக்கவில்லை? சூதாட்ட சாமர்த்தியம் தெரியாத தருமபுத்திரனை ஏமாற்றினீர்களே! அப்போது உன்னுடைய தருமம் எங்கே போய் மறைந்திருந்தது? பிரதிக்ஞைப்படி பன்னிரண்டு வருஷம் வனவாசமும் பதின்மூன்றாம் ஆண்டு அஞ்ஞாதவாசமும் முடிந்தபோது யுதிஷ்டிரனுக்குச் சேர்ந்த ராஜ்யத்தைக் கொடுக்க மறுத்தது தர்மமா? அப்போது உன் தருமம் எங்கே ஒளிந்திருந்தது? பீமனை விஷமிட்டுக் கொல்லப்பார்த்த பாபிகளுடன் சதி செய்தாயே? அரக்கு

மாளிகையில் தூங்கியிருந்தபோது குந்தி புத்திரர்களைச் சுட்டுக் கொல்லப் பார்த்தாயே? அப்போதெல்லாம் தருமம எங்கே போயிற்று? திரௌபதியை அநியாயமாய் அவமதித்து அக்கிரமம் செய்த காலத்தில் நீ பார்த்துக் கொண்டிருந்து சிரித்து சந்தோஷித்தாயே, அப்போது தருமம உனக்கு என்ன சொல்லிற்று? 'உன புருஷர்கள் உனக்கு உதவவில்லை. வேறு புருஷனைத் தேடிக்கொள' என்று பதிவிரதைக்கு உன் நாக்கால் சொன்னாயே, அப்போது தருமம் எங்கே போயிற்று? பாலனான அபிமன்யுவை வெட்கமில்லாமல் சூழ்ந்துகொண்டு பலரும் சேர்ந்து கொன்றீர்களே அப்போது உன் தரும நினைவு எங்கே போயிற்று? கர்ணனே! பாவியே! தருமத்தைத ஏன இழுக்கிறாய்?"

கிருஷ்ணன் இவ்வாறு சொல்லக் கர்ணன் தன் தலையைக் குனிந்து பதில் சொல்லாமல் மௌனமாக பூமியில் அழுந்தி நின்ற தேரின்மேல் நின்றே போரைத் தொடர்ந்தான. ஒரு அம்பு அருச்சுனனைத் தாக்க, அவன் சிறிதளவு அசைந்தான். அந்தச் சமயத்தை உபயோகித்துக் கர்ணன் தேரினின்று கீழே குதித்துச் சக்கரத்தைத் தூக்கப் பார்த்தான். தெய்வத்தால் கைவிடப்பட்ட கர்ணன் எவவளவு முயன்றும் சக்கரம் மேலே எழும்பவில்லை.

அப்போது கர்ணன் தான் பரசுராமனிடம் கற்றிருந்த அஸ்திரங்களை நினைவுக்குத் தந்து கொள்ளப் பார்த்தான். சாபத்தால் எல்லாம் மறந்து போய்விட்டது!

"அருச்சுனனே! தாமதிக்க வேண்டாம். பாபியாகிய இந்தப் பகைவனுடைய தலையை வெட்டும்படியான அம்பைச் செலுத்து" என்று அருச்சுனனை மாதவன தூண்டினான்.

"பிரபுவின் அந்த வார்த்தையை மதித்து அருச்சுனன் சூதபுத்திரனுடைய தலையை அம்பால் சேதித்தான்" என்கிறார் வியாசர். தரும விரோதமாக நடந்த இந்தக் காரியத்தை அருச்சுனனுடைய பொறுப்பாகவே விட்டு விடக் கவிக்கு மனம் வரவில்லை. பகவான் கண்ண

னுடைய செயலாகவே வைத்து எழுதுகிருர். கர்ணன் எய்த அம்பு அருச்சுனன் தலையில் விழாதபடி ரதத்தை அழுத்தியதும் கண்ணனே. மண்ணில் பதிந்து விட்டிருந்த தன்னுடைய தேர்ச் சக்கரத்தைத் தூக்கிக் கொண்டிருந்த சமயத்தில் கர்ணனைக் கொல்லச் செய்ததும் கண்ணனே. அக்காலத்து யுத்த தருமத்திற்கு இத்தகைய காரியங்கள் முற்றிலும் விரோதமாக எண்ணப்பட்டு வந்தன. அந்த பாரத்தைச் சுமக்க பகவானைத் தவிர வேறு யாரால் முடியும் ?

தேக பலத்தைச் செலுத்தி நடத்தும் போரின் மூலம் அதர்மங்களையும் அக்கிரமங்களையும் அடக்கலாம் என்று ஆசைப்பட்டுச் செய்யும் எத்தனங்கள் எல்லாம் வீண். தருமத்துக்காகச் செய்யும் போரிலும் அதர்மங்கள் நடந்தேதான் தீரும். அதனுல் மொத்தத்தில் அதர்மமே வளரும்.

# துரியோதனன் முடிவு

கர்ணன் யுத்தத்தில் கொல்லப்பட்டதை அறிந்ததும் துரியோதனன் தீராத சோகத்தில் மூழ்கினன். துரியோதனனுடைய நிலைமையைப் பார்த்துப் பரிதாபப் பட்ட கிருபர் சொல்லலானர் :

"ராஜ்யத்தில் ஆசை வைத்து அதற்காகச் செய்ய வேண்டிய காரியங்களின் பெரும் பாரத்தை யார் மேல் வைத்தோமோ அவர்கள் அதைச் சந்தோஷமாகவே வகித்து யுத்தத்தில் தங்கள் உயிர்களைத் தியாகம் செய்து மேலுலகம் ஏகியும் விட்டார்கள். இப்போது நீ செய்ய வேண்டியது ஒன்றே. பாண்டவர்களோடு சமாதானம் செய்து கொள்வதே உன்னுடைய கடமை. அரசனே! இனிப் போராட்டம் வேண்டாம்" என்றார்.

நிராசையான நிலையிலிருந்தாலும் துரியோதனனுக்கு இந்த யோசனை பிடிக்கவில்லை.

"பேடித்தனத்துக்கு இது சமயமன்று. போர் செய்வதே என் கடமை. நண்பர்களும் பந்துக்களும் இறந்து விட்டபின் என் உயிரை நான் காப்பாற்றிக்கொண்டு தப்பித்துக் கொள்ளவா? அப்படிச் செய்தேனுல் உலகம் என்னை நிச்சயமாக இகழும். இகழப்பட்டும் பிழைப்பது எந்த சுகத்தை அனுபவிக்க? சகோதரர்களும் பந்துக்களும் மாண்டு விட்டபின் ராஜ்யத்தை சமாதானத்தின்பேரில் காப்பாற்றிக்கொண்டு நான் என்ன அனுபவிக்கப் போகிறேன்?"

இவ்வாறு துரியோதனன் சொன்னதைப் படை வீரர்களனைவரும் பாராட்டினர்கள். துரியோதனன் சொல்லுவது சரியான வார்த்தை என்று ஆமோதித்தார்கள். அதன்மேல் எல்லாரும் யோசித்துச் சல்லியனைச் சேனுபதியாக அமைத்தார்கள். சல்லியன் மகா பலசாலி. அவன் பராக்கிரமம் உயிரிழந்த தலைவர்களுக்குக் குறைந்ததல்ல. அவன் தலைமையின் கீழ் பலத்த யுத்தம் மறுபடியும் துவங்கிற்று.

பாண்டவர்கள் பட்சத்தில் இப்போது யுதிஷ்டிரன் முழு பாரமும் வகித்தான். அவனே நேரில் சல்லியனைத் தாக்கினன். அது வரையில் சாந்தமே உருக்கொண்டவனாக விளங்கிய யுதிஷ்டிரன் இப்போது சினங்கொண்டு கோர யுத்தம் நடத்தியது வியப்பாக இருந்தது. வெகு நேரம் சம யுத்தம் நடந்தபின் யுதிஷ்டிரன் சல்லியன்மேல் சக்தி ஆயுதத்தை வீசினன். திருவிழாவில் உயர்த்திய துவஜஸ்தம்பத்தைப்போல் சல்லியன் உயிரிழந்து கீழே வீழ்ந்து கிடந்தான்.

சல்லியனும் இறந்து போனன். இனி ஒருவித பலமும் இல்லையென்று கௌரவப்படை மனக்கலக்கம் அடைந்தது. ஆயினும் எஞ்சிய திருதராஷ்டிர புத்திரர்கள் ஒன்று சேர்ந்து பீமனை நாலா பக்கத்திலிருந்தும் தாக்கினர்கள். அவ்வளவு பேரையும் பீமன் கொன்றன். பதின் மூன்று வருஷம் கோபத்தால் உள்ளம் வெந்தவாயு புத்திரன் இன்று தான் வாழ்க்கைப் பயனை அடைந்தேன் என்று எண்ணி மகிழ்ச்சியடைந்தான்.

x x x

அதன் பின் சகுனி சகாதேவனைத் தாக்கினன். கூரிய எஃகு அம்பு ஒன்றைச் சகதேவன் குறி வைத்து "மூடனே! நீ செய்த பாபத்தின் பலனை இப்போது அடைவாய்" என்று சொல்லிச் சகுனியின் தலை அறுபட்டுக் கீழே விழும்படி எய்தான். கௌரவர்களின் பாபங்களுக்கெல்லாம் மூலமாயிருந்த தலையானது அறுபட்டு வீழ்ந்தது என்கிறர் முனிவர்.

துரியோதனன் ஒருவன் தவிர எல்லாரும் மாண்டு விட்டார்கள். சேனையின்றி, ரதமின்றி, பரிதாப நிலையிலிருந்த அந்த வீரன் கதாயுதத்தை எடுத்துக்கொண்டு பாத சாரியாக தன்னந்தனியாக ஒரு தண்ணீர் மடுவை நோக்கிச் சென்றன். ஒரு தண்ணீர் மடுவைக் கண்டான். குளிர்ந்த தண்ணீரில் இறங்கினல் உடலில் வெப்பம் தணியும் என்று மடுவில் இறங்கி நின்றன்.

"மகா பிராஜ்ஞரான விதுரர் என்ன நடக்கும் என்பதை முந்தியே கண்டு சொன்னார்" என்று தனக்குள் சொல்லிக்கொண்டு அந்த மடுவில் இறங்கினான்.

காலம் தவறிய பிறகு அறிவு தோன்றினால் ஒரு பயனும் இல்லை. செய்த கருமங்களின் விளைவை அனுபவித்தே தீரவேண்டும்.

x x x

துரியோதனனைத் துரத்திக்கொண்டு அங்கே யுதிஷ்டிரனும் அவன் தம்பிகளும் வந்து சேர்ந்தார்கள்.

"துரியோதனா! குலத்தையும் குடும்பத்தையும் நாசம் செய்துவிட்டுத் தண்ணீரில் மறைந்து ஒளிந்து கொண்டு உயிர் தப்பப் பார்க்கிறாயா? உன்னுடைய மானமும் தன் மதிப்பும் எங்கே போயிற்று? வெளியே வந்து யுத்தம் செய். க்ஷத்திரியனாய்ப் பிறந்தாய், யுத்தத்தினின்று தப்பிப் பிழைக்கப் பார்க்காதே" என்றான் யுதிஷ்டிரன்.

அப்போது துரியோதனன் மிகவும் வருத்தப்பட்டு "என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்கல்ல நான் இவ்விடம் வந்தது பயத்தால் நான் இவ்விடம் வந்தேன் என்று எண்ணுகிறீர்கள். என் உடலின் சிரமத்தைத் தீர்த்துக் கொள்ளத்தான் வந்து இங்கே குளிர்ந்த தண்ணீரில் இறங்கி நிற்கிறேன். ஓ! யுதிஷ்டிரனே! எனக்குப் பயமும் இல்லை. உயிரைப்பற்றி ஆசையும் இல்லை. ஆயினும் இப்போது யுத்தத்தில் மனம் செல்லவில்லை. என்னைச் சார்ந்தவர்கள் அனைவரும் மாண்டார்கள். ராஜ்ய பதவியில் எனக்கிருந்த விருப்பம் தீர்ந்தது. இந்த உலகம் உனதே. கவலையின்றி நீயே அனுபவிப்பாயாக" என்றான்.

"ஊசி முனை நிலமும் இல்லையென்று அந்த நாளில் நீ சொன்னாயல்லவா? சமாதானத்தை விரும்பி நாங்கள் கெஞ்சி கேட்டகாலத்தில் இல்லை யென்ற நீ இப்போது எல்லாம் எடுத்துக்கொள் என்கிறாய். நீ செய்த பாபங்

களையெல்லாம் எடுத்துச் சொல்லவேண்டுமா? நீ எங்களுக்கு இழைத்த தீங்குகளும் திரௌபதிக்கு இழைத்த அவமானமும் உன் உயிரைக் கொண்டுதான் தீரும்'' என்றான் தருமபுத்திரன்.

சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குச் சொல்லுகிறான்: "இந்த கொடிய வார்த்தைகளை யுதிஷ்டிரன் வாயால் கேட்டதும் உன் மகன் துரியோதனன் கதாயுதத்தைத் தூக்கிக்கொண்டு தண்ணீரில் எழுந்து நின்றான்.''

X X X

எழுந்து நின்ற துரியோதனன், "வாருங்கள். ஒருவர் பின் ஒருவராக வாருங்கள். நான் தனியாக யிருக்கிறேன். நீங்கள் ஐவரும் ஒன்று கூடி என்னைத் தாக்குவது நியாய மன்று. என் தேகத்துக்குக் கவசமுமில்லை. ஓய்ந்து போயிருக்கிறேன். உடம்பில் பல இடங்களில் காய மடைந்திருக்கிறேன்'' என்றான்.

இதற்கு யுதிஷ்டிரன் "ஒருவனைப் பலர் சேர்ந்து எதிர்ப்பது தவறானால் அபிமன்யு எவ்வாறு இறந்தான்? உன் சம்மதம் பெற்றல்லவோ பலரும் சேர்ந்து அவனை அநியாயமாகக் கொன்றார்கள்? தங்களுக்குக் கஷ்டம் நேரிட்டபோது எல்லாரும் தரும சாஸ்திரம் எடுத்து ஓதுவார்கள். மடுவை விட்டு வெளியே வந்து கவசம் தரித்துக்கொள். எங்களுக்குள் யாரையேனும் ஒருவனைத் தேர்ந்து அவனுடன் யுத்தம் செய். இறந்து சுவர்க்கம் செல். அல்லது வென்று அரசனாக இருப்பாய்'' என்றான்.

அதன்மேல் பீமனுக்கும் துரியோதனனுக்கும் யுத்தம் நடந்தது. அவர்களுடைய இரு கதாயுதங்களும் ஒன்றையொன்று தாக்கியபோது நெருப்புப் பொறிகள் பறந்தன. வெகு நேரம் யுத்தம் நடந்தது.

பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அந்த இருவரில் யார் வெல்வார்கள் என்று பேசிக் கொண்டிருந்தார்கள். துரியோதனனுடைய துடைகளைப் பிளந்து பீமன் தன்

பிரதிஜ்ஞையைப் பூர்த்தி செய்வான் என்று கண்ணன் கூறியது பீமனுக்கும் கேட்டது. சிம்மம் பாய்வதுபோல் பீமன் துரியோதனன் மேல் பாய்ந்தான். பாய்ந்து கதையை ஓங்கி துரியோதனனுடைய துடையின் மேல் பலமாக அடித்தான்.

துரியோதனன் வீழ்ந்தான். வீழ்ந்து கிடந்த துரியோதனனுடைய தலையைக் காலால் துவைத்து பீமன் கூத்தாடினான்.

அப்போது கண்ணன் "பீமனே, போதும். உன் கடனைத் தீர்த்தாய். துரியோதனன் அரசனாகப் பிறந்தவன். நம்முடைய குலத்தவன். அவன் தலையைக் காலால் உதைக்கலாகாது. சீக்கிரத்தில் பாபிஷ்டனுடைய உயிர் உடலை விட்டுப் பிரியும். பாண்டு குமாரர்களே! துரியோதனனும் அவன் சகாக்களும் இறந்தார்கள். இனித் தாமதம் ஏன்? தேர் ஏறுங்கள்" என்றான்.

அச்சமயம் கீழே காலுடைந்து கிடந்த துரியோதனன் முகத்தில் கோபமும் வெறுப்பும் கலந்து நெருப்புப்போல் எரிந்தது. கிருஷ்ணனைப் பார்த்து "தரும முறையில் போர் புரிந்த அநேக வீரர்களைப் பல மோசங்கள் செய்து கொல்லுவித்தாய். உனக்கு வெட்கம் சிறிதும் இல்லையா? கர்ணனோடாவது பீஷ்மரோடாவது துரோணரோடாவது நேர்மையான முறையில் நீ போர் புரிந்திருந்தால் ஒரு நாளும் வெற்றி அடைந்திருக்க மாட்டாய்" என்றான்.

உயிர் உடலை விட்டு நீங்கும் சமயத்திலும் இவ்வாறு சொன்ன துரியோதனனைப் பார்த்துக் கிருஷ்ணன் "துரியோதனா! வீண் பேச்சு பேசுகிறாய். ஆசையினாலும் ராஜ பலம் பெற்ற கர்வத்தாலும் நீ செய்த பாபங்களுக்குக் கணக்கில்லை. அதன் பலனை அனுபவிக்கிறாய்" என்று சொன்னான்.

துரியோதனன் "க்ஷத்திரியர்கள் எவ்வாறு இறக்க விரும்புகிறார்களோ அந்த மரணத்தை நான் அடைந்தேன். என்னைவிடப் பாக்கியவான் யார்? என் நண்பர்களுடனும் என்னைத் தொடர்ந்தவர்களுடனும் நான்

சுவர்க்கம் போகிறேன். இகழப்பட்டவனாக நீ உயிருடன் இரு. கீழே விழுந்து கிடக்கும் என் தலைமேல் பீமன் தன் காலை வைத்து உதைத்ததால் எனக்குத் துயரம் இல்லை. காக்கைகளும் கழுகுகளும் என் தலைமேல் தம் கால்களை இன்னும் சில நிமிஷங்களுக்குள் வைக்கப் போகின்றன அல்லவா?'' என்றான்.

இவ்விதம் துரியோதனன் வீரனுக்குத் தகுந்த பேச்சுகள் பேசுகையில் ஆகாயத்திலிருந்து புஷ்ப வருஷம் வருஷித்தது என்கிறார் முனிவர்.

லோபத்தினாலே துரியோதனன் முதலில் அதருமத்தில் இறங்கினான். அதன் பலனாக விளைந்த கோபத்தினால் இரு பக்கத்திலும் பல அதருமங்கள் தோன்றின.

# பாண்டவர்களின் வெட்கம்

யுத்தம் முடியும் தறுவாயில் பலராமன் தீர்த்த யாத்திரை முடித்துவிட்டு குருக்ஷேத்திரம் வந்து சேர்ந்தான். அப்போது பீமனும் துரியோதனனும் மல்ல யுத்தம் செய்துகொண்டிருந்தார்கள். பீமன் துரியோதனனுடைய துடைகளை அடித்துப் பிளந்ததைப் பலராமன் பார்த்ததும் யுத்த முறை புறக்கணிக்கப் பட்டு அக்கிரமம் ஓங்கி விட்டது என்று பலராமனுக்குக் கோபம் பொங்கிற்று.

"சீ! சீ! நாபிக்குக் கீழ் கதாயுதப போரில் யாராவது அடிப்பார்களா? சாஸ்திர விரோதமாக இந்தப் பீமன் நடந்து கொண்டான்!"

இவ்வாறு பீமனுடைய நடவடிக்கையைப் பார்த்து பொறுக்காமல் பலராமன் தன் சகோதரன் கிருஷ்ணனை நோக்கி, "நீ இதையெல்லாம் பொறுப்பாய். என்னால் பொறுக்க முடியாது" என்று சொல்லிக் கலப்பையை மேலே தூக்கிக் கொண்டு பீமனை நோக்கிச் சென்றான். பலராமனுக்கு முக்கியமான ஆயுதம் கலப்பை.

பலராமன் கோபாவேசம கொண்டு பீமன் பேரில் பாயச் சென்றதைக் கண்டு கிருஷ்ணன் பயந்து வழிமறித்தான்.

"பாண்டவர்கள் நம்முடைய மித்திரர்கள். நெருங்கிய பந்துக்கள். துரியோதனனால் மிகவும் துன்புறுத்தப் பட்டவர்கள். திரௌபதியைச் சபையில் அவமதித்த போது பீமன் சபதம் செய்தான். 'இந்தக் கதையினால் துரியோதனனுடைய இரு துடைகளையும் நான் யுத்தத்தில் பிளந்து கொல்வேன்' என்று பிரதிஜ்ஞை செய்திருக்கிறான். இது அனைவருக்கும் தெரிந்த விஷயம். செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்றுவது க்ஷத்திரிய தருமம். தோஷமற்றவர்களும் நம்மைச் சேர்ந்தவர்களுமான பாண்டவர்கள் பேரில் அவசரமாகக் கோபிக்கவேண்டாம்.

கௌரவர்கள் செய்த தீவினைகளை யெல்லாம் வைத்துத் தருமத்தை நிர்ணயிக்க வேண்டும். நிகழ்ச்சிகளின் மத்தியில் முந்தி நடந்தவைகளை மறந்து விட்டு ஒரு காரியத்தை மட்டும் தனியாக எடுத்துக்கொண்டு தரும விமரிசனம் செய்வது பிழையில் முடியும். இப்போது கலிகாலம் வந்து விட்டது. வஞ்சனை முறைகளைப் பல தடவை அனுசரித்த துரியோதனனைப் பீமன் இவ்வாறு நாபிக்குக் கீழ் தாக்கியதில் குற்றம் இல்லை. இந்தத் துரியோதனனால் தூண்டப்பட்டே கர்ணன், அபிமன்யுவினுடைய வில்லைப் பின்புறத்தில் நின்று அம்பு எய்து அறுத்தான். தேரும் வில்லும் இழந்து நின்ற நிலையில் அநேகரால் தாக்கப்பட்டு அருச்சுனனுடைய குமாரன் கொல்லப்பட்டான். பிறந்தது முதல் வஞ்சனையில் புத்தியை செலுத்தின இந்தத் துரியோதன், குலத்தைக் கெடுத்த பாவியாவான். இவன் பீமசேனனால் கொல்லப்பட்டது அதருமம் ஆகாது. சபையில் செய்த பிரதிஜ்ஞையைப பதின்மூன்று வருஷ காலமாகப பீமன் நினைவில் வைத்துக் காத்தான். 'துடைகளைப் பிளந்து கொல்வேன்' என்று பீமன் செய்த பிரதிஜ்ஞை துரியோதனனுக்கு நன்முகத் தெரியும். மிகவும் துன்புறுத்தப்பட்ட பாண்டவர்களோடு யுத்தம் செயயும் துரியோதனனுக்குப் பீமனால் இது செய்யபபடும் என்பது நன்ருகத் தெரிந்த விஷயம். இதை அக்கிரமம் என்று எண்ணக் கூடாது'' என்று சமாதானம் சொன்னுன்.

இவ்வாறு கிருஷ்ணன் வாதித்ததெல்லாம் பலராமனுடைய அபிப்பிராயத்தை மாற்றவில்லை. ஆயினும் அவனுடைய கோபம் தணிந்தது.

''துரியோதனன் வீரர்களுக்குரிய சுவர்க்கம் அடைவான். பீமனுடைய புகழ் மாசடைந்து விட்டது. பாண்டு புத்திரன் முறை தவறிய வழியில் துரியோதனனை அடித்தான் என்பது உலகத்தில் பெரும்பழியாக நிற்கும். நான் இவ்விடம் நிற்க மாட்டேன்'' என்று சொல்லிவிட்டு, பலராமன் உடனே துவாரகைக்குச் சென்று விட்டான்.

x x x

"யுதிஷ்டிரரே! யாது காரணம் பற்றிப் பேசாமலிருக்கிறீர்?" என்றான் கிருஷ்ணன்.

"மாதவ! கீழே விழுந்த துரியோதனனுடைய தலையைப் பீமன் காலால் துவைத்தது எனக்குப் பிரியமான செய்கையல்ல. குலம் அழிந்து போவதைப் பார்க்கிறேன். கௌரவர்களால் நாம் வஞ்சிக்கப்பட்டோம். விருகோதரனுடைய உள்ளத்தில் நிறைந்து நிற்கும் துக்கத்தையும் கோபத்தையும் நான் அறிவேன். மூடனும் பேராசைக்காரனுமான துரியோதனனை இவ்வாறு கொன்றது நியாயமோ, அநியாயமோ எப்படியாயினும் மிகவும் பெரிய துக்கங்களை அனுபவித்த பீமசேனன் செய்ததை நான் ஆட்சேபிக்க முடியவில்லை" என்றான்.

தருமம் தவறினால் சமாதானங்களினால் அமைதி உண்டாகாது. மகா புத்திமானான அருச்சுனனும் பேசாமலிருந்தான்; பீமனைப் புகழவுமில்லை, குற்றமும் கூறவில்லை. ஆனால் பக்கத்தில் நின்ற மற்றவர்கள் துரியோதனனுடைய குற்றங்களை யெல்லாம் எடுத்துச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

கிருஷ்ணன் அவர்களை நோக்கி, "க்ஷத்திரிய வீரர்களே! அடித்து வீழ்த்தப் பட்டுச் சாகும் தறுவாயில் தரையில் கிடக்கும் சத்துருவை மேலும் மேலும் இகழ்ந்து பேசுவது தகாது. மூடன் கொல்லப்பட்டான். பாவிகளுடைய சகவாசத்தை அடைந்ததால் இவன் கெட்டுப் போனான். நாம் ரதமேறிப் போவோம்" என்றான்.

கால்கள் உடைந்து தரையில் குற்றுயிராகக் கிடந்த துரியோதனன் கிருஷ்ணன் சொன்னதைக் கேட்டுக் கோபாவேசமானான். இரண்டு கைகளையும் தரையில் ஊன்றிக் கஷ்டப்பட்டு எழுந்து உட்கார்ந்து கிருஷ்ணனைப் பார்த்து, "நீசனே! உன் தகப்பன் வசுதேவன் கம்சனுடைய தாசன் அல்லவா? நீ அரசர்களுடைய சகவாசம் பெறத் தகாதவன். வெட்கமில்லாமல் பேசுகிறாய். என் துடைகளைப் பார்த்து அடிக்கச் சொன்னது நீயே யல்லவா? நானும் பீமனும் சமயுத்தம்

செய்து கொண்டிருந்தபோது அருச்சுனனுடன் பேசுவது போல் துடைகளைக் காட்டி பீமனுக்குக் குறிப்புத் தெரியும்படி நீ செய்தது எனக்குத் தெரியாது என்று எண்ணுகிறாயா? உனக்கு வெட்கமுமில்லை, தயையுமில்லை. பிதாமகர் பீஷ்மர் உன்னுடைய யுக்தியாலே அல்லவா மாண்டார்? சிகண்டியை முன்னால் நிறுத்தி யுத்தம் செய்வித்தது நீயே. தருமபுத்திரனைப் பொய் சொல்ல வைத்து அதரும முறையில் துரோணரையும் மாய்த்தாய். யுதிஷ்டிரன் சொன்ன அசத்தியத்தை நம்பி துரோணரைத் தம் வில்லைக் கீழே போடச் செய்தது நீயே அல்லவா? ஆயுதமின்றி யோக நிலையில் உட்கார்ந்திருந்த ஆசார்யரை அந்தப் பாவியான திருஷ்டத்யும்னன் கொன்றதைத் தடுக்காமல் பார்த்துக் கொண்டு சந்தோஷப்பட்டாயல்லவா? அருச்சுனனைக்கொல்வதற்காகக் காப்பாற்றி வைத்திருந்த சக்தி ஆயுதத்தைக் கர்ணன் கடோத்கசன் மீது பிரயோகித்துச் செலவழித்துவிடச் செய்ததும் உன் வஞ்சனையேயல்லவா? பாபியே! கை வெட்டப்பட்டுப் பிராயோபவேச நிலையிலிருந்த பூரிசிரவசைச் சாத்யகி குரூரமாகக் கொன்றதும் உன் தூண்டுதலால் அல்லவா? உன்னால் அல்லவோ கர்ணன் பூமியில் அழுந்திவிட்ட தன் தேரின் சக்கரத்தைத் தூக்கிக் கொண்டிருந்தபோது இகழத்தக்க முறையில் அருச்சுனனால் கொல்லப்பட்டான்? அயோக்கியனே! எங்களுடைய நாசத்திற்கெல்லாம் நீயே காரணம். சிந்து ராஜனான ஜயத்ரதன் உன்னுடைய மாய வித்தையால் ஏமாற்றப்பட்டு அஸ்தமனமாகிவிட்டது என்று எண்ணி அஜாக்கிரதையாக இருந்த சமயத்தில் கொல்லப்பட்டதை உலகம் இகழவில்லையா?" என்று இவ்வாறு சரமாரியாக நிந்தித்துவிட்டு வலி தாங்க முடியாமல் மறுபடியும் பூமியில் விழுந்தான்.

"காந்தாரி புத்திரனே! கோபத்தால் உயிரை வீணாக எரித்துக் கொள்ளுகிறாய்! உன்னுடைய பாபங்களே உன் நாசத்துக்குக் காரணம். நான் அல்ல. உன்னுடைய தோஷத்தினால்தான் பீஷ்மரும் துரோணரும் உயிரை இழந்து மாண்டார்கள். அவ்வாறே கர்ணனும் மற்றவர்களும் உன்னாலேயே மாண்டார்கள். நீ பாண்டு புத்திரர்

களுக்குச் செய்த அநியாயங்களை யெல்லாம் எடுத்துச் சொல்ல வேண்டுமா? திரௌபதியை அவமானப்படுத்தியதற்கு எந்தத் தண்டனைதான் அதிகமாகும்? நீ செய்த தீமைகளின் காரணமாக உண்டான பகையும் கோபமும் எவ்வாறு மற்றவர்களின் குற்றமாகும்? நாங்கள் செய்த வஞ்சனைகள் எல்லாம் நீ செய்து வந்த மகா பாபமான காரியங்களினால் அனுஷ்டிக்க வேண்டியதாயின. லோபத்தினால் நீ செய்த பாபங்களின் பயனை யுத்த பூமியில் அனுபவித்தாய். ஆனால் வீரனைப் போல் மாண்டாய். க்ஷத்திரியர்களுக்குரிய சுவர்க்கத்துக்கு ஏகுவாய்'' என்றான் கிருஷ்ணன்.

"கிருஷ்ணா! நண்பர்களோடும் உறவினர்களோடும் நான் சுவர்க்கம் போகிறேன். நீங்கள் துக்கத்தில் மூழ்கி உயிருடன் இருப்பீர்கள்'' என்றான் துரியோதனன்.

மறுபடியும் ஆகாயத்திலிருந்து துரியோதனன் மேல் பூமாரி பொழிந்தது. கந்தர்வர்களின் வாத்தியமும் முழங்கிற்று. திசைகள் எல்லாம் ஜோதி மயமாக விளங்கிப் பிரகாசித்தன. இதைக் கண்டு வாசுதேவனும் பாண்டவர்களும் ஓரளவு வெட்கம் கொண்டார்கள்.

"துரியோதனன் சொன்னது உண்மை. வஞ்சனையின்றி நீங்கள் அவனை ஜயித்திருக்க முடியாது'' என்றான் கிருஷ்ணன்.

# அசுவத்தாமன்

துரியோதனனுடைய முடிவைப் பற்றிய விவரங்கள அசுவத்தாமனுக்குத் தெரிந்ததும் அவனுக்குக் கடல் பொங்குவதுபோல் கோபம் பொங்கிற்று. தந்தையான துரோணரைக் கொல்லுவதற்காகச் செய்யப்பட்ட வஞ்சனையையும் இப்போது துரியோதனனை யுத்த முறைக்கு முற்றிலும் விரோதமாகக் கொன்றதையும் எண்ணி அசுவத்தாமன் துரியோதனன் வீழ்ந்து கிடந்த இடத்துக்குச் சென்று "இந்தப் பாண்டவர்களை இன்றிரவே நான் கொல்லப்போகிறேன்" என்று சபதம் செய்தான.

மகிழ்ச்சிப் பரவசமடைந்த துரியோதனன் உடனே பக்கத்தில் நின்றவர்களுக்குச் சொல்லிக் கௌரவ சேனைக்கு அசுவத்தாமனைத் தலைவனாக அபிஷேகம் செய்வித்து "உம்மை நம்பினேன்" என்று சொன்னான்.

X X X

இருள் சூழ்ந்த ஒரு காட்டில் பெரிய ஆலமரத்தடியில் கிருபரும கிருதவர்மனும அசுவத்தாமனும் தங்கினார்கள். சூரியன அஸதமித்து விட்டான். களைப்பினால் கிருபரும கிருதவர்மனும தரையில் கிடந்தபடியே தூங்கிப் போனார்கள். அசுவத்தாமனுக்குத் தூக்கம் வரவில்லை கோபமும் துவேஷமும் மேலிட்டுச் சர்ப்பம்போல் சீறிக் கொண்டிருந்தான். இராக் காலத்துப் பிராணிகள் சத்தமிடுவதைக் கேட்டுக்கொண்டு ஆலோசித்துக் கொண்டிருந்தான.

அந்த ஆலமரத்துக் கிளைகளில் காக்கைகள் கூட்டமாக இரவில் தங்கித்தூங்கிக்கொண்டிருந்தன. அப்போது ஒரு பெருத்த கோட்டான் வந்து தூங்கிக்கொண்டிருந்த காக்கைகளை ஒன்றன்பின் ஒன்றாகக் கொத்திக் கிழித்துக் கொன்று கொண்டிருந்ததை அசுவத்தாமன் பார்த்தான். இரவில் கண் தெரியாமல் அலறி அலறி உயிர் விட்ட காகங்களைப் பார்த்து அசுவத்தாமனுடைய மனதில் ஒரு

எண்ணம் உதித்தது. "இந்த அதமர்களான பாண்டவர்களையும் என் தகப்பனுரைக் கொன்ற பாஞ்சாலனையும் அவர்களைச் சேர்ந்த அனைவர்களையும் இந்தக் கோட்டான் காக்கைகளைக் கொன்றதைப்போல் பாசறைகளில் தூங்கிக் கிடக்கும்போது உள்ளே புகுந்து எளிதில் கொன்று விடலாம். பாண்டவர்கள் செய்த அதரும யுத்தத்திற்குப் பிரதி செய்து விட்டுப் பழி தீர்த்துக் கொள்வேன். இந்தப் பறவையால் நான் உபதேசம் பெற்றேன். சந்தர்ப்பத்துக்குத் தக்கவாறு புது முறைகளை உபயோகிப்பதில் அநீதி ஒன்றுமில்லை. சத்துருக்கள் களைத்திருக்கும் நேரத்திலோ சேனுபலம் பிளவு பட்டு நிற்கும் சமயத்திலோ தாக்கலாம் என்று சாஸ்திரமே இருக்கிறது. பலம் இழந்து விட்ட நாம் அவர்களைத் தூங்கும்போது தாக்குவதில் என்ன தோஷம? அவ்வாறு செய்தால் தான அக்கிரம முறையில் வெற்றி பெற்ற இந்தப் பாண்டவர்களை நாம் இப்போது தோற்கடிக்க முடியும்" என்று நிச்சயம் செய்து கொண்டான்.

இந்த எண்ணத்தை உறுதி செய்து கொண்டதும் கிருபரை எழுப்பித் தன் நிர்மாணத்தை அவருக்குச்சொன்னுன். அசுவத்தாமனுடைய யோசனையை கேட்ட கிருபர் "இது முற்றிலும் தகாது. உலகத்தில் இது வரையில் நடை பெருத அக்கிரமமாகும்.யாருக்காக நாம யுத்தத்தில் கலந்தோமோ அந்த அரசன் கொல்லப்பட்டான. நம்முடைய கடமையை நாம முற்றிலும் முறைப்படி செய்து தீர்த்தோம். பேராசைக்காரனும மூர்க்கனுமான துரியோதனனுக்காக நாம் போர் செய்தோம். ஆனுல் தோற்ரேம். இனிமேல் இந்தக் காரியம் பயனற்றுப் போய் விட்டது என்று நாம் விட்டு விட வேண்டும். போய் திருதராஷ்டிரனையும் புகழ் பெற்ற காந்தாரியையும் யோசனை கேட்கலாம். அவர்கள சொல்லுகிறபடி செய்யலாம். மகா புத்திமானுன விதுரரையும் கேட்கலாம். அவர்கள் சரியான யோசனை சொல்வார்கள். அப்படி செய்யலாம்" என்ருர்.

அசுவத்தாமனுக்குச் சோகமும் கோபமும் இன்னும் அதிகரித்தது. "மனிதர்களின் புத்திக்கு அவரவர்

களுடைய யோசனை அவரவர்களுக்குச் சரியாகவே தோன்றும். இந்தப் பாண்டவர்கள் துரியோதனனைக் கொன்றதும் என் தந்தையைக் கொன்றதும் பெரிய அதருமம். ஆகையால் அதற்குப் பிரதி நான் எண்ணியிருக்கிறபடி செய்வதே சரி என்று எனக்குத் தோன்றுகிறது. இதைச் செய்தால்தான் அரசன் விஷயத்திலும் பிதாவின் விஷயத்திலும் நான் கடன் தீர்த்தவனாவேன். இது என் உறுதியான முடிவு. இன்றிரவு பாண்டவர்களின் பாசறைகளில் புகுந்து கவசமின்றிப் படுத்துத் தூங்கும் திருஷ்டத்யும்னனையும் பாண்டவர்களையும் கொல்லப் போகிறேன்" என்றான்.

இதைக் கேட்ட கிருபர் மிகவும் துக்கமடைந்தார். "உலகத்தில் மிக்க புகழ் பெற்றிருக்கிறாய். இதுவரையில் நிஷ்களங்கமாயிருந்த உன் புகழ் வெள்ளைத் துணியில் ரத்தம் தெளித்தாற்போல் இதனால் கெட்டுப் போகும். தூங்கிக் கொண்டிருக்கிறவர்களைக் கொல்வது ஒரு நாளும் தருமமாகாது. வேண்டாம்!" என்றார்.

"நீர் என்ன சொல்லுகிறீர்? இந்தப் பாண்டவர்கள், எல்லா ஆயுதங்களையும் கீழே எறிந்துவிட்டு உட்கார்ந்த என் பிதாவைத் தயையின்றிக் கொன்றார்கள். தருமம என்கிற அணையை உடைத்து எறிந்து விட்டார்கள். இனி என்ன தருமம் மிச்சமிருக்கிறது? ரதத்தை விட்டுத் தரையில் இறங்கி மண்ணில் புதைந்து அழுந்திய சக்கரத்தைத் தூக்கிக் கொண்டிருந்த கர்ணனை இவர்கள் அதரும முறையில் தாக்கிக் கொன்றார்கள். பீமன் துரியோதனனை நாபிக்குக் கீழே அடித்துக் கொன்றான். இனி எது தருமம்? பாண்டவர்கள தருமம் என்கிற அணையை உடைத்து விட்டார்கள். வரம்பு கடந்து அதருமத்தில் இறங்கிய நீசர்களைப்பற்றி ஏன் நாம் தருமத்தை ஆராய வேண்டும்? என் பிதாவைக் கொன்றவர்களான பாஞ்சாலர்களைத் தூங்கும்போது கொன்று அதனால் நான் புழுவாகவோ பக்ஷியாகவோ ஜன்மம் எடுத்தேனானாலும் அதை நான் விரும்புகிறேன்" என்று அசுவத்தாமன் முடிவாகச் சொல்லிவிட்டுக் குதிரைகளைத் தேரில் பூட்டிச் சத்துருக்களிருக்குமிடம் போகப் புறப்பட்டான்.

இதைப் பார்த்த கிருபரும் கிருதவர்மாவும் "அசுவத்தாமா! என்ன காரியம் செய்யப் போகிறாய்! நீ தனியாகப் போகலாமா? நீ சென்ற வழியில் நாங்களும் செல்வோம். எந்தப் பாவமாயினும் சரி, அதில் நாங்களும் பங்கு எடுத்துக் கொள்வோம்!" என்று அவர்களும் அசுவத்தாமனுடன் சென்றார்கள்.

x x x

திருஷ்டத்யும்னனது பாசறையை அவர்கள் அடைந்தார்கள். கவசத்தைக் கழற்றி விட்டுத் திருஷ்டத்யும்னன் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்தான். தூங்கிக் கொண்டிருந்த வீரனமேல் அசுவத்தாமன் குதித்துக் கால்களால் துவைத்துக் கோரமான முறையில் கொன்றான். அவ்வாறே எல்லாப் பாஞ்சாலர்களையும் திரௌபதியின் புத்திரர்களையும் ஒருவர்பின் ஒருவராகக் கொன்றான்.

இப்படி அதுவரையில் கேட்டிராத கொடிய செய்கையைக் கிருபரும் கிருதவர்மனும் அசுவத்தாமனும் செய்து விட்டுப் பாசறைகளுக்குத் தீவைத்து விட்டார்கள். நெருப்புப் பற்றிக் கொண்டதும் தூங்கிக் கொண்டிருந்தவர்கள் எழுந்து ஒன்றும் விளங்காமல் இங்குமங்கும் ஓடினார்கள். அவ்வாறு ஓடியவர்கள் அசுவத்தாமனால் இரக்கமின்றிக் கொல்லப்பட்டார்கள்.

"நாம் செய்ய வேண்டிய கடமையைச் செய்து விட்டோம். இனி நாம் சந்தோஷமாகத் துரியோதனனிடம் போகலாம். அவன் உயிருடன் இருப்பானானால் அவனுக்குத் திருப்தி உண்டாக்கும் இந்தச் செய்தியைச் சொல்வோம்" என்றான் அசுவத்தாமன். அப்படியே துரியோதனன் குற்றுயிராகக் கிடந்த இடத்துக்கு மூவரும் சென்றார்கள்.

## புலம்பி என்ன பயன்?

"துரியோதனா! உயிருடன் இருக்கிறாயா? உன் நெஞ்சம் குளிரும். நாங்கள் செய்து முடித்ததைச் சொல்லுகிறோம், கேள்! பாஞ்சாலர்கள் அனைவரும் ஒழிந்தார்கள். பாண்டவர்களுடைய குமாரர்களும் மாண்டார்கள். இரவில் தூங்கிக் கொண்டிருக்கையில் சேனை முழுதும் எங்களால் அழிக்கப்பட்டது. பாண்டவ பட்சத்தில் ஏழு உயிர்களே எஞ்சி நிற்கின்றன. நம்முடைய கட்சியில் கிருபரும நானும் கிருதவர்மாவும் இருக்கிறோம்" என்றான் அசுவத்தாமன்.

துரியோதனன், "அசுவத்தாமரே! பிதாமகர் பீஷ்மரும் வீரன கர்ணனும் செய்யாததை எனக்காகச் செய்தீர்" என்று சொல்லிவிட்டுச் சந்தோஷமாக உயிர் நீத்தான்.

x x x

இரவில் எதிர்பாராத முறையில் தாக்கப்பட்டுச் சேனை அழிந்துபோனதைப பார்த்து யுதிஷ்டிரன் துயரமமேலிட்டு "வெற்றி பெற்ற சமயத்தில் படுதோல்வி அடைந்து விட்டார்கள். மகா சூரனான கர்ணனுடைய தாக்குதலிலிருந்து தப்பின திரௌபதியின் புத்திரர்கள நம்முடைய அஜாக்கிரதையினால் இப்போது பூச்சிகளைப போல் மாண்டார்கள். பெரிய கடலைத் தாண்டிய வியாபாரக் கப்பல் முடிவில் சிறு வாய்க்காலில் கவிழ்ந்து போவது போல் நாம் நாசமடைந்தோம்" என்றான்.

மக்களை யிழந்த திரௌபதி தாங்க முடியாத சோகத்தில் மூழ்கிக் கிடந்தாள். தருமபுத்திரனிடம் வந்து "பாபியான அசுவத்தாமனை வீழ்த்த யாரும் இல்லையா" என்று கதறினாள்.

திரௌபதியின் சொல்லைக் கேட்டதும் பாண்டவர்கள் உடனே புறப்பட்டார்கள். இங்கு மங்கும் தேடிக்

கங்கை நதிக்கரையில் வியாசர் பக்கத்தில் மறைவாக இருந்த அசுவத்தாமனைக் கண்டார்கள். பாண்டவர்களை யும் ஜனார்த்தனையும் கண்டதும் அசுவத்தாமன் மெது வாகக் கீழே கிடந்த ஒரு துரும்பை எடுத்து "இது பாண்டு வம்சத்தை முற்றிலும் அழிப்பதாக" என்று மந் திரம் சொல்லி அஸ்திரத்தை விட்டான். அது சென்று உத்தரையின் கருப்பத்தை அடைந்தது.

பாண்டவ வம்சம் அத்துடன் அடையாள மில்லாமல் அழிந்திருக்க வேண்டும். ஆனால் ஸ்ரீ கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தால் அந்தக் கருப்பத்திலிருந்த பிண்டம் காக்கபபட்டது. அதுவே பரீக்ஷித்து ராஜனைப் பிறந்து பாண்டவ வம்சத்துக்கு அடையாளமாக நின்றது.

x x x

தன் தலையிலிருந்த ஜோதி மணியை எடுத்து அசு வத்தாமன் தான் தோற்றதற்கு அடையாளமாக பீமனிடம் தந்துவிட்டு வனம் சென்றான். பீமன் அந்த மணியைத் திரௌபதிக்குக் கொடுத்து "கல்யாணி! இந்த மணியை உனக்காகக் கொண்டு வந்தேன். உன்னுடைய புத்திரர் களைக் கொன்றவன் ஜயிக்கப்பட்டான். துரியோதனன் கொல்லப் பட்டான். துச்சாதனன் ரத்தமும் என்னால் குடிக்கப்பட்டது. கடன்களைத் தீர்த்துவிட்டேன்" என்று பீமசேனன் சொன்னான். திரௌபதி அந்த மணியை வாங்கி யுதிஷ்டிரனிடம் கொடுத்து வணங்கி, "குற்றமற்ற அரசர் இதைத் தம்முடைய முடியில் அணியத் தகுந்த வர்" என்றாள்.

யுத்தம் முடிந்து அஸ்தினாபுரத்தில் ஸ்திரீகளும் குழந்தைகளும் புலம்பும் சப்தம் எங்கும் நிறைந்தது. பல் லாயிரக் கணக்கான திக்கற்ற பெண்களைக் கூட்டிக் கொண்டு திருதராஷ்டிரன் யுத்த பூமிக்குச் சென்றான். கோரமான குலநாசம் நடைபெற்ற அந்தக் குருக்ஷேத்தி ரத்தில் குருடனான அரசன் நடந்து போனதை எல்லாம் எண்ணி எண்ணிப் புலம்பினான். புலம்பி என்ன பயன்?

# ஏவன் தேற்றப் போகிறான்?

"**து**க்கத்தை அடைந்தவனுக்கு மற்றவர்கள் சமாதானம் சொல்லித் துக்கத்தைத் தீர்க்கமுடியாது. அநேக அரசர்கள் உம்முடைய புத்திரனுக்காக உயிர் இழந்தார்கள். அவர்களுக்கும் இன்னும் மாண்டுபோன மற்றவர்களுக்கும் கிரமமாகப் பிரேத காரியங்களைச் செய்விப்பீராக!" என்று திருதராஷ்டிரனைப் பார்த்துச் சஞ்சயன் சொன்னான்.

விதுரனும் திருதராஷ்டிரனுடைய சோகத்தைப் போக்க முயற்சி செய்தான். "யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களைப்பற்றித் துக்கித்தல் தகாது. உடலை விட்டுப் பிரிந்த ஆத்துமாக்களுக்குள் அண்ணன், தம்பி, பந்துக்கள் என்கிற பரஸ்பர சம்பந்தம் ஒன்றுமில்லை. உம்முடைய மக்கள் உமக்கு உண்மையில் சம்பந்தப்பட்டவர்கள் அல்லர். தேக சம்மந்தம் மரணத்தோடு முடிந்து போகிறது. கண்ணுக்குத் தெரியாத இடத்தினின்று வந்து மறுபடியும் கண்ணுககுத் தெரியாத நிலையை ஜீவன்கள் அடைகிறார்கள். அதற்கு ஏன் புலம்ப வேண்டும்? யுத்தத்தில் எதிர்த்து நின்று உயிர் துறந்த வீரர்கள் இந்திரனுக்கு அதிதிகளாயிருப்பார்கள். கழிந்து போனதைப் பற்றித் துக்கிப்பதனால் தருமமோ, இன்பமோ, பொருளோ ஒன்றும் உமக்கு உண்டாகமாட்டாது"—இவ்வாறாகவும் இன்னும் பலவாறாகவும் தத்துவங்களை எடுத்துக் காட்டினான்.

வியாசரும் திருதராஷ்டிரனை அன்போடு உபசரித்து "அருமைப் புதல்வா! உனக்குத் தெரியமாலிருந்து நான் சொல்லி நீ தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை. பிராணிகள் அநித்தியம் என்பதை நன்றாக அறிந்திருக்கிறாய். இந்த யுத்தம் பூபாரத்தைக் குறைக்கவே நேரிட்டது. பிரபுவான விஷ்ணு இதைப்பற்றிச் சொல்லியதை நான நேரில் கேட்டிருக்கிறேன். ஆனபடியால் தான் இந்த யுத்தத்தைத் தவிர்க்க முடியவில்லை. இனி யுதிஷ

டிரனை உனக்கு மகன். அவன்பால் அன்பை உண்டாக்கிக்கொண்டு நீ உயிர் தரித்திருக்க வேண்டும். சோகத்தை விடு'' என்றார்.

பிறகு யுதிஷ்டிரன் வந்தான். புலம்பிக்கொண்டிருந்த ஸ்திரீகளின் கூட்டத்தைக் கடந்து அவன் திருதராஷ்டிரனை அடைந்து வணங்கி நின்றான். சோகத்தினால் பீடிக்கப்பட்ட திருதராஷ்டிரன் யுதிஷ்டிரனைக் கட்டித் தழுவிக் கொண்டான். ஆனால் அந்த ஆலிங்கனத்தில் பிரீதி இருக்கவில்லை.

பிறகு பீமசேனனையும் "வா!" என்று திருதராஷ்டிரன் அழைத்தபோது வாசுதேவன் முன் யோசனையுடன பீமனை விலக்கிவிட்டு இரும்பால் செய்யப்பட்ட பிரதிமை ஒன்றைக் கண்ணில்லாத திருதராஷ்டிரனிடம் நிறுத்தினான். திருதராஷ்டிரனுடைய கோபத்தை அறிந்து கண்ணன் இவ்வாறு செய்தான். கிழவன் இரும்பு மய மான அந்தப் பிரதிமையைப் பீமசேனன் என்று எண்ணி இரு கைகளாலும் தழுவிக் கொண்டான். கட்டி அணைத்துக் கொண்டிருக்கும்போது தன் மகனைக் கொன்றவன் இவன் என்று தாங்க முடியாத கோபம் திடீர் என்று மேலிட்டுத் தன்னையும் அறியாமல் பிரதிமையைப் பலமாகக் கட்டி அணைத்து நொறுக்கிவிட்டான்.

"ஹா! என் கோபம் ஏமாற்றி விட்டது. பீமன் இறந்தானே!" என்று திருதராஷ்டிரன் புலம்பினான்.

அப்போது கிருஷ்ணன் குருடனான அரசனைப் பார்த்து, "பிரபுவே! உமது கோபாவேசம் இவ்வாறு செய்யும் என்று அறிந்து நான் அதைத் தவிர்த்தேன். நீர் நொறுக்கிப் பொடியாக்கினது பீமசேனன் அல்ல; இரும்புப் பிரதிமை. உம்முடைய கோபத்தின் வேகம் பிரதிமையின் பேரில் காட்டியதோடு தீர்ந்துபோகட்டும். பீமன உயிருடன் இருக்கிறான்" என்றான்.

கோபாவேசம் அடங்கி பீமன் முதலான பாண்டவர்களையெல்லாம் கிழ அரசன் ஆசீர்வதித்தான். அவனிடம்

அனுமதி பெற்றுக்கொண்டு அனைவரும் காந்தாரியிடம் சென்றார்கள்.

x x x

காந்தாரியிடம் வியாசர் இருந்தார். "அம்மணீ! பாண்டவர்களிடத்தில் கோபம் பாராட்ட வேண்டாம். யுத்தத்துக்கு முன் நீயே சொன்னாயல்லவா? எங்கே தருமமோ அங்கே ஜயம்' என்றாய். அவ்விதமே முடிந்தது. நடந்து போன விஷயத்தில் மனதைச் செலுத்திக் கோபம் கொள்ளலாகாது. உனக்கு இயற்கையான பொறுமையை இப்போது பயன்படுத்திக் கொள்வாயாக!' என்றார்.

"பகவானே! நான் பாண்டவர்களைக் கண்டு அசூயைப்படவில்லை. புத்திர சோகத்தினால் என் புத்தியானது நிலைதவறி யிருப்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இந்தப் பாண்டவர்களும் எனக்கு மக்களே ஆவார்கள். துச்சாதனனும் சகுனியுமே இந்தக் குலநாசத்துக்குக் காரணம் என்பதை அறிவேன். அருச்சுனனும் பீமனும் குற்றமற்றவர்கள். அகங்காரத்தினால் யுத்தம் நேரிட்டது. என் மக்கள் கொல்லப்பட்டது சரியே, அந்த விஷயத்தில் நான் ஒன்றும் குறைகூறமாட்டேன். ஆனால் வாசுதேவன் பார்த்துக் கொண்டிருக்கும்போது பீமன் துரியோதனனைச் சண்டைக்கு அழைத்து யுத்தம் நடந்தது. தன்னைவிடத் துரியோதனன் மல் யுத்தத்தில் சாமர்த்தியம் மிஞ்சியவன் என்று அறிந்து அவனை நாபிக்குக் கீழே அடித்துக் கொன்றுவிட்டான். அது என்னால் பொறுக்க முடியவில்லை" என்றாள்.

இதைக் கேட்ட பீமன், "அம்மா! யுத்தத்தில் என்னைக் காத்துக் கொள்வதற்காக நான் அவ்விதம் செய்தேன். தருமமோ, அதருமமோ, அதை நீ பொறுத்துக்கொள்ள வேண்டும். உன்னுடைய புத்திரன் யுத்தத்தினால் ஒருவராலும் ஜயிக்க முடியாதவன். அதனால் அநியாயமான காரியத்தைச் செய்தேன். ஆனால் அவன் யுதிஷ்டிரரைச் சூதாட்டத்துக்கு அழைத்து வஞ்சித்தான். நாங்கள் அனைவரும் பலவாறு வஞ்சிக்கப்பட்டோம். அக்கிரமமாகக் கவர்ந்துகொண்ட ராஜ்யத்தை விடமாட்

டேன் என்றான். பதிவிரதையான திரௌபதியை உன்னுடைய மகன் எவ்வாறு நடத்தினான் என்பது உனக்கு முற்றிலும் தெரிந்த விஷயம். கெட்ட நடத்தையை அனுசரித்த உன்னுடைய குமாரனை அந்தச் சபையிலேயே நாங்கள் கொன்றிருந்தால் நீ தவறு என்று அப்போது சொல்லியிருக்க மாட்டாய். தருமராஜனுடைய பிரதிஜ்ஞையால் கட்டுப்பட்டுச் சும்மா நின்றோம். யுத்தத்தில் பகையைத் தீர்த்துக்கொண்டோம். அம்மா! நீ எங்களை மன்னிக்க வேண்டும் விசனப்படாதே!'' என்றான்.

'' அப்பனே! நீ என் நூறு மக்களில் ஒருவனையாவது விட்டு மற்றவர்களையெல்லாம் கொன்று கோபம் தீர்த்துக் கொண்டிருந்தாயாகில் முதியவர்களாகிய எங்கள் இருவருக்கும் ஒரு ஊன்றுகோலாவது இருந்திருக்கும். தரும புத்திரன் எங்கே? அவனைக் கூப்பிடுங்கள்'' என்றாள்.

இதைக் கேட்டதும் யுதிஷ்டிரன் நடுக்கமுற்றுக் கை கூப்பிக்கொண்டு கண்களை வஸ்திரத்தினால் கட்டிக்கொண்டிருந்த காந்தாரியிடம் வந்து வணங்கி, ''தேவி! உன் புத்திரர்களைக் கொன்றவனும் கொடியவனுமான யுதிஷ்டிரன் இதோ உன் முன் நிற்கிறான். சாபத்துக்குத் தகுந்தவன். சபிப்பாயாக. நான் துரோகம் செய்தவன். எனக்கு உயிரிலாவது ராஜ்யத்திலாவது இனி பயனில்லை'' என்று கூறிக் காந்தாரியின் காலில் விழுந்தான்.

காந்தாரி பெருமூச்சு விட்டு ஒன்றும் சொல்லாமலிருந்தாள். யுதிஷ்டிரன் பேரில் தன் பார்வை விழுந்தால் அவன் எரிந்து போவான் என்று அறிந்து அவனைப் பார்க்காமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். ஆயினும் கண்களை மறைத்துக் கட்டிக் கொண்டிருந்த வஸ்திரத்தின் இடைவெளியின் வழியாக யுதிஷ்டிரன் கால் விரல்களை மட்டும் பார்த்து விட்டாள். அவை உடனே விகாரப்பட்டுப் போயின என்கிறார் பௌராணிகர்.

அருச்சுனன் காந்தாரியினுடைய சோகத்தின் வேகத்துக்குப் பயந்து வாசுதேவருக்குப் பின்புறமாக ஒளிந்து கொண்டானாம்.

பிறகு மகா அறிவாளியும் புண்ணியவதியுமான காந்தாரி தன் கோபத்தை அடக்கிக்கொண்டு பாண்டவர்களை ஆசீர்வதித்துவிட்டு அவர்களைக் குந்தியிடம் போகச் சொன்னாள்.

பிறகு, தன் புத்திரர்கள் அனைவரையும் இழந்து புலம்பிக் கொண்டிருந்த திரௌபதியைப் பார்த்துக் காந்தாரி, "பெண்ணே! துக்கப்படாதே! உன்னையும் என்னையும் எவன் தேற்றப் போகிறான்? என்னுடைய குற்றத்தினாலேயே இந்தக் குலம் நாசம் ஆயிற்று" என்றாள்.

# " அண்ணனைக் கொன்றேன் "

யுத்தத்தில் இறந்தவர்களுடைய ஆத்ம சாந்திக்காக எள்ளும் தண்ணீரும் விட்டு விட்டு கங்கைக்கரையில் பாண்டவர்கள் ஒரு மாதம் தங்கினார்கள்.

x x x

ஒருநாள் நாரதர்வந்து "தருமபுத்திரனே; கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தினாலும் அருச்சுனனுடைய பலத்தினாலும் உன்னுடைய தருமத்தின் பலத்தாலும் வெற்றி பெற்றாய். பூமி முழுவதும் உனதாயிற்று. சந்தோஷம் அடைந்தாயா?" என்றார்.

"பகவானே! பூமி எனதாயிற்று என்பது உண்மை. ஆயினும் சுற்றத்தார் மாண்டார்கள். பிரியமான குமாரர்களைப் பலிகொடுத்தோம். இந்த வெற்றி பெரிய அபஜய மாகவே எனக்குத் தோன்றுகிறது. நாரதரே! மாறுபடாத நியமமும் உலகம் வியக்கும்படியான சாமர்த்தியமும் படைத்திருந்த எங்களுடைய தமையன் கர்ணனைப் பகைவன் என்று கருதிக் கொன்றுவிட்டோம். ராஜ்யத்தில் ஆசை வைத்து இந்தப் பெரிய பாபத்தைசெய்து விட்டோம். அவனோ தாயாருக்குத் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி எங்களைக் கொல்லாமலேவிட்டான். இத்தகைய தமையனைக் கொலைசெய்த நீசனான என்னுடைய மனம் மிகவும் தவிக்கிறது. கர்ணனுடைய பாதங்கள் எங்கள் தாயார் குந்தியினுடைய பாதங்களைப் போலவே இருந்தன. சபையில் எங்களைஅவன் அவமதித்த போது எனக்கு உண்டான கோபம் அவன் கால்களைக் கண்டதும எப்படியோ தணிந்து விட்டது. இது எனக்கு இப்போது நினைவு வருகிறது."

இவ்வாறு சொல்லி யுதிஷ்டிரன் பெருமூச்சு விட்டு மிகவும் துக்கப்பட்டான். இதன் பின் நாரதர் கர்ணனுடைய சரித்திரத்தை யெல்லாம் எடுத்துச் சொல்லி அவனுக்கு ஏற்பட்ட சாபங்களையும் எடுத்துச் சொன்னார்.

அருச்சுனன் தன்னைவிட தனுர்வேதத்தில் சிறந்தவன் என்று கர்ணன் தெரிந்து கொண்டு துரோணரை அடைந்து தனக்குப் பிரமமாஸ்திரத்தை உபதேசித்துத் தருமபடி கேட்டான். அவர் அது தன்னால் முடியாது, ஒழுக்கம தவறாத பிராமணன் அல்லது பெரும தவம் புரிந்து சுத்தமடைந்த க்ஷத்திரியன் இருவருமேதான அதை அடைய முடியும் என்று சொல்லிவிட்டார். பிறகு கர்ணன் மகேந்திர மலைக்குச் சென்று பரசுராமரை ஏமாற்றித் தான் பிராமணன் என்று சொல்லி அவரிடம் சீடனாக அமர்ந்து தனுர்வேதமும் அஸ்திரங்களும கற்றுக் கொண்டான்.

ஒரு நாள் கர்ணன் தனியாக விற்பயிற்சி செய்து கொண்டிருந்த சமயம அந்த ஆசிரமத்துக்குச் சமீபத்தில் ஒரு பிராமணருடைய பசு தற்செயலாக அடிபட்டு இறந்துவிட்டது. பசுவுக்கு உடையவராகிய பிராமணர் கோபமுற்று "யுத்தத்தில் உன தேர்ச் சக்கரம் மண்ணில் பதிந்து போகும. அப்போது இந்த பசுவைப்போல் நீயும கொல்லப்படுவாய்" என்று சொல்லி சபித்து விட்டார்.

பரசுராமர் கர்ணனிடம மிக்க அன்பு கொண்டு எல்லாவித விற்பயிற்சியும் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்கும முறையும் நிவர்த்திக்கும் முறையும் உள்பட உபதேசித்தார். ஒரு நாள் அவர் இந்த மாணவன் பிராமணன அல்ல என்று கண்டு கொண்டு விட்டார். ஒரு புழு கர்ணனுடைய துடையைக் கடித்துத் துளைத்துக் கொண்டிருந்தும் வெகு நேரம் அதைப் பொறுத்துக் கொண்டு கொஞ்சமும அசையாமல் தன் துடைமேல் தலை வைத்துத் தூங்கிக்கொண்டிருந்த பரசுராமரை எழுப்பாமல் இருந்தான். பிறகு ரத்தம் ஓடிப் பெருகி அவரை எழுப்பிற்று. பரசுராமர் எழுந்து கர்ணனைப் பார்த்து, "மூடனே! இத்தகைய சகிப்புத் திறமை க்ஷத்திரியன் தான் படைத்திருப்பான். உண்மையைச் சொல். நீ பிராமணன் அல்ல. என்னை ஏமாற்றிவிட்டாய். என்னிடம் நீ கற்றுக்கொண்ட வித்தை மரண காலத்தில்

உன் நினைவுக்கு வராது" என்று சபித்துவிட்டார். கர்ணனுடைய சகிப்புவன்மையே அவன் க்ஷத்திரியன் என்று காட்டிவிட்டது. பரசுராமருக்கு க்ஷத்திரியர்கள் மேல் மிகுந்த க்ஷாத்திரம்.

கர்ணன் மகா கொடையாளி. ஒரு நாள் பிராம்மண வேஷம் பூண்டு வந்த தேவேந்திரனால் யாசிக்கப்பட்டுத் தன் குண்டலங்களையும் கவசத்தையும் கர்ணன் கழற்றிக் கொடுத்துவிட்டான். தெய்வீக சக்தி பொருந்திய குண்டலங்களையும உடன்பிறந்த கவசத்தையும் கொடுத்துவிட்ட பிறகு கர்ணன் பலவீனமடைந்தான்.

"குந்திக்குக் கர்ணன் தந்த வரத்தினாலும் பரசுராமருடைய சாபத்தாலும் பசுவை யிழந்த பிராமணருடைய கோபத்தாலும் பீஷ்மர் மகாரதர்களில் இவனை ஒருவனாகக் கணக்கிடாமல் அவமானப் படுத்தியதாலும் தேரை ஓட்டிய சல்லியன் செய்த இகழ்ச்சியின பயனாகவும் வாசுதேவனுடைய யுக்தி முறைகளினாலும கர்ணன் இறந்தான. இவ்வாறு பல காரணங்கள ஒன்றுகூடி கர்ணன் மரணமடைந்ததற்கு ஏதுவாகின்றன. நீ தான் அதற்குக் காரணம என்று நினைத்துத் துக்கிக்க வேண்டாம்" என்றார் நாரதர்.

யுதிஷ்டிரன் நாரதரின் சொற்களால் ஆறுதல் அடையவில்லை.

குந்திதேவி சொல்லலானாள். "கர்ணனைக் குறித்து நீ சோகப்படாதே! கெட்ட புத்தியுள்ள துரியோதனனை விட்டுவிட்டு உன் பட்சம் வந்து சேரும்படி அவன் தகப்பனான சூரிய பகவானே முயன்றான். நானும எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவன் கேட்கவில்லை. அவன் முடிவுக்கு அவனே காரணம்" என்றாள்.

"கர்ணனுடைய பிறப்பின் ரகசியத்தை மூடி வைத்து எங்களை நீ வஞ்சித்து விட்டாய். அதனால் எங்களுடைய பெரும் துக்கத்துக்கு நீ காரணமானாய். இன்று முதல் பெண்கள் ரகசியத்தைக் காப்பாற்றச் சக்தியற்றவர்க

ளாகட்டும்!'' என்று யுதிஷ்டிரன் அண்ணனைக் கொன்றோமே என்ற வருத்தத்தில் சாபமிட்டதாக பௌராணிகர் ஒரு கதை கற்பித்துச் சொல்லுகிறார்.

பெண்கள் ரகசியத்தைக் காப்பாற்ற மாட்டார்கள் என்பது உலக அபிப்பிராயம். அதை யொட்டி இந்தக் கதையும அழகாகவே கற்பனை செய்யப் பட்டிருக்கிறது. லௌகீக லாப நஷ்டம் எவ்வாறாயினும் ரகசியத்தைக் காப்பாற்றுவது ஒரு பெரிய தார்மிகக் குணம் என்று எண்ண வேண்டியதில்லை. அது இல்லையே என்று ஸ்திரீகள் விசனபபட வேண்டியதில்லை. ரகசியத்தைக் காப்பாற்றும் சக்தி இல்லாம லிருப்பது அறத் துறையில் ஒரு பெருங் குறையல்ல. பெண்களுக்கு இயற்கையான அன்பினால் இரகசியங்களைக் காப்பாற்றுவதில் குறை ஏற்படலாம்.

ஆயினும் பெண்கள் சிலர் ரகசியங்களை நன்றாகவே காப்பாற்றி வருகிறார்கள். தவிர, ஆண் மக்கள் எல்லாருமே இந்தச் சாமர்த்தியம் பெற்றிருக்கிறார்கள் என்றும் சொல்ல முடியாது. பயிற்சி பேதத்தினாலும் தொழில் பேதத்தினாலும் உண்டாகும வித்தியாசங்களை ஆண்களின் குணம் பெண்களின் குணம் என்று பிரித்துச் சொல்லி விடுவது உலக இயல்பு.

# சோகமும் சாந்தியும்

பந்துக்களைக் கொன்றோம் என்று எண்ணி எண்ணி யுதிஷ்டிரன மனம் வாடினான். துறவு பூண்டு வனம் சென்றால்தான் இந்த பாவம் நீங்கும் என்று தீர்மானித்து சகோதரர்களிடம், "ராஜ்யத்தினாலாவது போகங்களினாலாவது எனக்குப் பிரயோஜனமில்லை. இந்தப் பூமியை நீங்கள் ஆளுங்கள். நான் வனம் போகிறேன" என்றான்.

அருச்சுனன் இல்லறத்தின் சிறப்பையும் கிருகஸ்தாசிரமத்தில் செய்யக்கூடிய புண்ணியங்களையும் எடுத்துக் காட்டினான். பீமசேனனும் கடுமையாகப் பேசினான். "சாஸ்திரங்களைக் குருட்டுப் பாடம் செய்து உண்மையான அறிவு பெறாமல் மந்த புத்தியைப் படைத்தவன் பேசுவதுபோல் நீரும் பேசுகிறீர்" என்று ஆரம்பித்து "க்ஷத்திரியர்களுக்குச் சந்நியாசம் கூடாது. கடமைகளைச் செய்து வாழ்க்கையை நடத்துவதே அவர்களுக்குரிய முறை" என்று வற்புறுத்தினான்.

நகுலனும் கரும மார்க்கமே தகுந்தது. சந்நியாசம் சிரமமான வழி என்று தரும புத்திரனோடு வாதாடினான். சகாதேவனும் இதையே சொல்லி, "எனக்குத் தந்தை, தாய், ஆசாரியர், உடன் பிறந்தவர் எல்லாம் நீரே! எங்களை பொறுத்தருள்வீராக" என்று மன்றாடினான்.

திரௌபதியும் பேசினாள். "துரியோதனனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கொன்றது நியாயமே. அதற்காக வருத்தப்படுதல் கூடாது. அரசனுடைய கடமைகளில் தண்டனை விதிப்பதும் ஒன்று. ராஜதருமத்தில் இன்றியமையாதது. தீச்செயல் செய்தவர்களைத் தண்டித்தீர். ஆகையால் உம்முடைய சோகத்துக்குக் காரணம் இல்லை, ராஜ தருமத்தை நடத்தி இந்தப் பூமியை ஆளுவது உம்முடைய கடமை. சோகம் வேண்டாம்" என்றாள்.

பிறகு வியாசர் அநேக நியாயங்களையும் இதிகாசங்களையும் எடுத்துக் காட்டி யுதிஷ்டிரனைச் சமாதானப்

படுத்தி நகரத்துக்குப் போய் ராஜ்யபாரம் வகிக்கச் சம்ம திக்கச் செய்தார்.

அஸ்தினபுரத்தில் ராஜ்யாபிஷேகம் நடந்தது.

மறுபடி ராஜ்யபாரம் வகிக்க ஆரம்பிப்பதற்கு முன் அம்புப் படுக்கையில் தவம் செய்துகொண்டு மரணத்துக் குக் காத்திருந்த பீஷ்மரிடம் சென்று யுதிஷ்டிரன் தர்மோப தேசம பெற்றான்.

பீஷ்மர் செய்த இந்த தர்மோபதேசம் மகா பாரதத் தில் சாந்தி பருவம் என்று மிகப் புகழ்பெற்ற பாக மாகும்.

யுதிஷ்டிரனுக்குச் செய்யவேண்டிய உபதேசமெல் லாம செய்துவிட்டு பீஷ்மர் உயிரை நீத்தார். பரமபரை ஆசாரத்தினபடி யுதிஷ்டிரன் பிதாமகருக்கு கங்கா நதி யில் இறங்கி உதகதானம் செய்தான. செய்துவிட்டுக் கரை ஏறி நின்றதும நடந்துபோன நிகழ்ச்சிகளை யெல் லாம் எண்ணித் தாங்காத துக்கம் மேலிட்டு வேடனால் அடிக்கப்பட்ட யானைபோல் பூமியில் திடீர் என்று விழுந்தான்.

பீமன் தமயனைக் கட்டித் தழுவித் தடவிக் கொடுத்து ஆறுதல் மொழிகள சொன்னான். திருதராஷ்டிரனும் அப்போது யுதிஷ்டிரனை நெருங்கி, "இவ்விதம் துயரப் படுதல் கூடாது. எழுந்திரு! சகோதரர்களுடனும் நண்பர்களுடனும் பூமியை ஆள்வாயாக. அது உன் கடமை. நானும் காந்தாரியுமல்லவா துயரப்பட வேண் டும்? க்ஷத்திரிய தருமத்தின்படி நீ வெற்றி பெற்றாய். வெற்றியை அடைந்ததினால் உண்டான கட்மைகளை இப்போது செய். மந்த புத்தியுள்ள நான் விதுரனுடைய சொல்லைக் கேளாமல் பெரும் பிழை இழைத்தேன். துரியோதனனுடைய அறிவற்ற சொற்களைக் கேட்டு ஏமாந்தேன். என்னுடைய நூறு புத்திரர்களும் கனவில் கண்ட தனத்தைப்போல் மறைந்து விட்டார்கள். இனி நீயே எனக்கு மகன். நீ துக்கப்பட வேண்டாம்" என்றான்.

# பொறாமை

பீஷ்மருக்காக ஜலக்கிரியை செய்துவிட்டுத் துயரத்தில் மூழ்கிக் கிடந்த யுதிஷ்டிரனுக்கு வியாசர் ஒரு கதையைச் சொல்லுகிறார்.

எப்பேர்ப்பட்ட மனிதனையும் எவ்வளவு பெரிய அறிவாளியையும் பொறாமை என்பது கெடுத்துவிடும். பிரஹஸ்பதி தேவர்களுக்கே உபாத்தியாயர். சகல வேதங்களும் சாஸ்திரங்களும் படித்தவர், அவரும் இந்தப் பொறாமையினால் ஒரு தடவை பீடிக்கப்பட்டு அவமானப் பட்டார்.

பிரஹஸ்பதிக்கு ஒரு தம்பி இருந்தார். அவர் பெயர் சம்வர்த்தர். அவரும் ரொம்ப படித்தவர்; நல்லவருங் கூட. இதனால் அவர் மேல் பிரஹஸ்பதிக்குப் பொறாமை. நல்லவர்கள் பேரில் ஏன் இவர்கள் நல்லவர்களாக இருக்கிறார்கள் என்றே உலகத்தில் பொறாமை ஏற்படுகிறது. இது விசித்திரமே ஆயினும், உண்மை! சம்வர்த்தரைப் பல விதத்தில் உபத்திரவம் செய்தார். தமயனாரின் தொந்தரவு மிதமிஞ்சிப் போனபடியால், அதனின்று தப்பிய பிழைப்பதற்குச் சம்வர்த்தர் பைத்தியக்காரனைப் போல் நடித்து ஊர் ஊராகத் திரிந்துகொண்டு காலம் கழித்து வந்தார்.

இக்ஷ்வாகு வம்சத்தைச் சேர்ந்த மருத்தன் என்ற அரசன் கைலாசநாதரைக் குறித்துக் கடுந் தவம் செய்து இமய மலையில் ஓரிடத்தில் குவிந்து கிடந்த பொன் குவியலை வரமாகப் பெற்று, அதைக்கொண்டு ஒரு பெரிய யாகம் செய்ய ஆரம்பித்தான். அந்த யாகத்தை நடத்திக் கொடுக்கும்படி பிரஹஸ்பதியைக் கூப்பிட்டான். மருத்த ராஜா யாகத்தைச் செய்து அதிக பெருமை அடைந்துவிடுவான் என்று தேவர்களின் சார்பாக பிரஹஸ்பதி பயப்பட்டு யாகத்தை நடத்திக் கொடுக்க வரமாட்டேன் என்று சொல்லிவிட்டார். அதன்மேல் மருத்த ராஜா எப்படியோ விசாரித்துச் சம்வர்த்தரைக் கண்டுபிடித்து

அவரை யாகம் நடத்தக் கேட்டுக் கொண்டான். அவர் முதலில் மறுதளித்துப் பிறகு ஒப்புக்கொண்டார். இதன் மேல் அவரிடம் பிரஹஸ்பதிக்குப் பொறுமை இன்னும் அதிகமாயிற்று.

"எனக்குப் பகைவனான இந்தச் சம்வர்த்தன் மருத்தனுடைய யாகத்தைச் செய்யப் போகிறான்" என்று பிரஹஸ்பதி எண்ணி எண்ணி அந்தப் பொறுமையினால், மிக இளைத்துப் போனார். நிறம் மாறி வெளுத்துப்போய்ப் பரிதாப நிலையடைந்தார்.

x x x

தேவர்களுக் கெல்லாம் ராஜாவான இந்திரன் தேவர்களின் புரோகிதரான பிரஹஸ்பதியிடம் வந்து "சுவாமி, ஏன் இளைத்திருக்கிறீர்? சுகமாகத் தூங்குகிறீரா? பணியாளர்கள் உம்மைச் சரியாக விசாரித்து வருகிறார்களா? ஏவப்படாமலே உமக்கு வேண்டியதையெல்லாம் குறிப்பறிந்து செய்கிறார்களா? தேவர்களெல்லாம் உம்மிடம் சரியாய் நடந்து வருகிறார்களா? அல்லது ஏதாவது குறை நேர்ந்ததா?" என்று இந்திரன் கவலைப்பட்டு விசாரித்தான்.

இதற்குப் பிரஹஸ்பதி, "தேவராஜனே! நல்ல படுக்கையில் சரியாகத்தான் படுக்கிறேன். பரிசாரகர்களும் அன்புடன் தான் விசாரிக்கிறார்கள். தேவர்கள் பரிபாலனையில் ஒரு குறையுமில்லை" என்று சொல்லிய பிறகு மேலே பேச்சுக் கிளம்பாமல் போயிற்று. துக்கம் பேச்சை அடக்கி விட்டது.

"ஏன் துக்கப்படுகிறீர்? ஏன நிறம் வெளுத்து உடம்பு இளைத்திருக்கிறீர்?" என்று இந்திரன் அன்புடன் கேட்டான்.

பிரஹஸ்பதி விஷயத்தைச் சொன்னார்: "சம்வர்த்தன் பெரிய யாகம் செய்யப் போகிறான். அதனால்தான் இப்படி இளைத்துப் போனேன்" என்றார்.

இந்திரன் ஆச்சரியப்பட்டான்.

"பிராமணரே! நீர் எல்லா இஷ்டங்களையும் அடைந்திருக்கிறீர். தேவர்களுக்கே புரோகிதராகவும யோசனை சொல்லும் மகா புத்திமானாகவும் இருக்கிறீர். சம்வர்த்தரால் உமக்கு என்ன தீமை உண்டாகக் கூடும்? ஒன்றும் இல்லையே! ஏன் பொறாமைப்பட்டு வீணாகக் கஷ்டப்படுகிறீர்?!' வன்றான்.

இந்திரன் யோக்கியதைக்கு இவ்வாறு பிரஹஸ்பதிக்கு ஞானோபதேசம் செய்யப் போனான்! இந்திரனுடைய பழைய கதைகளையெல்லாம் பிரஹஸ்பதி எடுத்துக் காட்டி, "உன்னுடைய பகைவன் விருத்தி அடைகிறான் என்பதைக் கேட்டு நீ சும்மா இருப்பாயா? அப்படித்தானே நானும்? எவ்விதமாகவாவது இந்தச் சமவர்த்தனை அடக்கி என்னை நீ காப்பாற்ற வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்.

இந்திரன் அக்கினியைக் கூப்பிட்டு "நீ போய் அந்த மருத்த ராஜாவின யாகத்தை எப்படியாவது நிறுத்திவிட வேண்டும்" என்று சொல்லி யனுப்பினான்.

அக்கினி தேவன் "சரி! செய்கிறேன்" என்று சொல்லிச் சென்றான். அக்னியைப் பற்றிச் சொல்ல வேண்டுமா - போகும் வழியில் மரங்களையும கொடிகளையும் எரித்து உலகம நடுங்கப் பெரும் கர்ஜனை செய்து கொண்டு சென்றான். அரசனிடம் தேவ சொரூபத்துடன் போய் நின்றான். அக்கினி தேவன் தன்னிடம் வந்ததைக் கண்டு ராஜாவுக்கு பேரானந்தம் பொங்கிற்று' 'கொண்டுவா ஆஸனம், அர்க்கியம், பாத்தியம், பசு!'. என்று ஆட்களுக்கு உத்தரவிட்டான்.

அக்கினிதேவன் வந்த காரியத்தைத் தெரியப்படுத்தினான். "நீ இந்தச் சம்வர்த்தரை விட்டுவிடு. வேண்டுமானால் உனக்குப புரோகிதராக நான் பிரஹஸ்பதியையே கொண்டு வருகிறேன்" என்றான். கூட இருந்த சம்வர்த்தர் இதைக் கேட்டுக் கடுஞ் சினம் கொண்டார். அவர் சாஸ்திர நியமனப்படி பிரமசரியத்தை அனுசரித்து அபரிமித சக்தியை அடைந்திருந்தவர்.

" இந்தப் பேச்சை நிறுத்து, நான் கோபங் கொண்டு என்னுடைய கண்களினால் உன்னை எரித்து விடுவேன். ஜாக்கிரதை !" என்றார் சம்வர்த்தர்.

பிரமசரியம் நெருப்பையே எரிக்கும் தன்மையது !

சம்வர்த்தர் சொன்னதைக் கேட்டு அக்கினி பகவான் பயத்தினால் அரசமரத்து இலையைப்போல் நடுங்கி இந்திரனிடம் திரும்பிப்போய் நடந்ததைச் சொன்னான்,

தேவராஜன், இந்தக் கதையை நம்பவில்லை.

" அக்கினியே ! நீ தான் மற்றவர்களை எரிக்கிறாய். உன்னை வேறொருவன் பஸ்மமாகச் செய்யவாவது ? இதென்ன வேடிக்கை ?" என்றான்.

" அப்படியில்லை தேவராஜனே! பிரம்ம பலமும் பிரம்மசரியத்தின் சக்தியும் உனக்குத் தெரியாதா ?" என்று அக்கினிதேவன் முன் காலத்தில் இந்திரனுக்கு பிராம்மணர்களிடம் ஏற்பட்ட அவதிகளையெல்லாம் சுத்திக் காட்டி ஞாபகப்படுத்தினான்.

பிறகு இந்திரன் அக்கினியை விட்டுவிட்டு ஒரு கந்தர்வனைக் கூப்பிட்டு, "நீ மருத்தனிடம் என் தூதனாகப் போய்ச் சம்வர்த்தரை விட்டுவிடச் சொல், இல்லாவிடில் என்னுடைய பகையைப் பெற்று அழிந்து போவான் என்று அந்த அரசனுக்குச் சொல்" என்றான்.

அப்படியே அந்த கந்தர்வ தூதனும் மருத்த ராஜனிடம் சென்று இந்திரன் சொன்னதை தெரியப்படுத்தி பயமுறுத்தினான்.

இராஜா கேட்கவில்லை. "மித்திர துரோகம் மகா பாவம். நான் சம்வர்த்தரை விட்டுவிட முடியாது" என்றான்.

அதைக் கேட்டு கந்தர்வன் "அரசனே! இந்திரன் உன்மேல் வஜ்ராயுதம் வீசினால் நீ எவ்வாறு பிழைக்கப் போகிறாய்!" என்றான்.

இவ்வாறு சொல்லும்போதே ஆகாயத்தில் இந்திரனுடைய இடி முழக்கம் கேட்டது.

இந்திரன் யுத்தத்திற்கு வந்துவிட்டான் என்று அரசன் மிகவும் பயந்து சம்வர்த்தரிடம் சரண்புகுந்தான்.

சம்வர்த்தர் "பயப்படாதே!" என்று அரசனுக்கு அபய வார்த்தை சொல்லித் தன் தபோ பலத்தைப் பிரயோகித்தார். யுத்தம் செய்ய வந்த இந்திரன் அடங்கி ஒடுங்கிச் சாந்த வடிவமாக யாகத்திலும் கலந்து கொண்டான். அவியும் பெற்றுப் போனான். பிரஹஸ்பதியின் பொறாமைப் பிரயத்தனம் வீணாயிற்று. பிரமசரியம் வென்றது.

பொறாமை என்பது பொல்லாத பாவம். யாரையும் அது தீண்டும். சரஸ்வதியே தோல்வியடையும் படிப்பைப் பெற்ற பிரஹஸ்பதியுங்கூடப் பொறாமைக்கு இரையானார். சாதாரண மனிதர்களைப் பற்றிக் கேட்க வேண்டுமா?

# உதங்கர்

பாண்டவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கிருஷ்ணன் துவாரகைக்குப் போனான். போகும் வழியில் உதங்கர் என்ற பிராம்மணச் சிரேஷ்டரை வழியில் சந்தித்தான். அவரைக் கண்டதும் தேரை நிறுத்தி இறங்கி நமஸ்காரம் செய்து பூஜித்தான். அவரும் கண்ணனுக்கு மரியாதை செய்துவிட்டு,

“மாதவ! பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் சகோதரர்களுக்குள் இருக்க வேண்டிய அன்பு சரியாக இருந்து வருகிறதா? எல்லாரும் சுகமா யிருக்கிறார்களா?” என்று கேட்டார்.

துறவி வாழ்க்கையிலிருந்த பிராமணருக்கு உலக நிகழ்ச்சிகள் ஒன்றுமே எட்டவில்லை. யுத்தம் நடந்ததே அவருககுத் தெரியவில்லை. அவருடைய கேள்வியைக் கேட்டு கண்ணன் ஒரு நிமிஷம் திகைத்தான். என்ன சொல்லுவது என்று தோன்றாமல் நின்றான். பிறகு “ஐயா! கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் கோரமான யுத்தம் நடந்துவிட்டது. சமாதானம் செய்ய நான் எவ்வளவோ முயன்றேன. அவர்கள் கேட்கவில்லை. யுத்தத்தில் அனைவரும் மாண்டார்கள். விதியை யாரும் மீற முடியாது” என்று சொல்லி நடந்த வரலாற்றையெல்லாம் சொன்னான்.

இதைக் கேட்டதும் உதங்கர் கோபாவேசமானார். கண்கள் சிவந்துபோய் மாதவனைப் பார்த்துச் சொன்னார்,

“வாசுதேவா! நீ பக்கத்தில் இருந்தும் இவ்வாறு ஆயிற்றா? அவர்களை காப்பாற்றாமல் போனாய். நீ கபடமாக வேலை செய்து அவர்கள் அழிந்து போக விட்டு விட்டாய். நான் உனக்குச் சாபம் தரப் போகிறேன்” என்றார்.

வாசுதேவன் புன்னகை புரிந்து “சாந்தம்! சாந்தம்! தபஸ்வியான நீர் உம்முடைய தவத்தின் பயனைக் கோபத்தில் இழந்து விடாதீர். முதலில் நான் சொல்லுவதைக்

கேளும். பிறகு வேண்டுமானால் சாபத்தைக் கொடும்" என்று சமாதானப் படுத்தினான்.

கண்ணன் உதங்கருக்கு ஞானக்கண் கொடுத்துத் தன் விசுவரூபத்தைக் காட்டினான்' "உலகத்தைக் காப்பதற்காகவும் தருமத்தை நிலை நிறுத்துவதற்காகவும் பல பிறவிகள் நான் எடுத்து வருகிறேன். நான் எந்த அவதாரத்தை எடுக்கிறேனோ அந்த அவதாரத்தின் தருமத்தை அனுசரிக்கிறேன். தேவ ஜாதியில் பிறக்கும் போது தேவனைப்போல் எல்லாவற்றையும் செய்வேன். யக்ஷனாகவோ ராக்ஷதனாகவோ பிறந்தால் யக்ஷனைப் போலவும் ராக்ஷதனைப் போலவும் எல்லாக் காரியங்களையும செய்வேன். மனிதனாகப் பிறந்தாலும் மிருகமாகப் பிறந்தாலும் அவ்வாறு அந்த அவதாரத்துக்கு இசைந்தவாறே காரியத்தை முடிப்பேன். அவிவேகிகளான கௌரவர்களைக் கெஞ்சினேன். அவர்கள் அகங்காரத்தால் மதிமயங்கி என்னுடைய வார்த்தைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. பயமுறுத்திப் பார்த்தேன். அதற்கும் அவர்கள் இணங்கவில்லை. கோபங்கொண்டு என் விசுவரூபத்தையும் அவர்களுக்குக் காட்டினேன். அதுவும் வீணாயிற்று. அவர்கள் அதருமத்தைச் செய்வதிலேயே பிடிவாதமாக இருந்தார்கள். யுத்தத்தில் பிரவேசித்து உயிர் நீத்தார்கள். பிராமணச் சிரேஷ்டரே! என்மேல் உமக்குக் கோபத்துக்குக் காரணம் இல்லை" என்றான்.

உதங்கர் சாந்தம் அடைந்தார். அதைக் கண்டு கண்ணன் மகிழ்ச்சியடைந்து "உமக்கு ஒரு வரம் தர விரும்புகிறேன். எதையேனும் கேளும்" என்றான்.

"அச்சுதா! உன்னை நான் பார்த்ததும் உன் விசுவரூபத்தைத் தரிசிக்கும் பாக்கியம் பெற்றதும் போதாதா? எனக்கு வேறொரு வரமும் வேண்டாம்" என்று உதங்கர் சொன்னார்.

ஆனால் கண்ணன் மறுபடியும் வற்புறுத்த, பாலைவனத்தில் திரிபவரும் ஆசையற்றவருமான உதங்கர் "பிரபுவே! அவசியம் எனக்கு ஏதேனும் கொடுக்க நீ விரும்பினால், நான் எவ்விடத்தில், எப்போதேனும் தாகத்

துக்குத் தண்ணீர் வேண்டினால் அது கிடைக்குமாறுவரம் தருவாயாக" என்றார். "இவ்வளவுதானா?" என்று கண்ணன் சிரித்து "அப்படியே ஆகட்டும்!" என்று சொல்லிவிட்டுத் துவாரகை சென்றான்.

x x x

பிறகு ஒருநாள் உதங்கர் தாகம் மிகுந்து தண்ணீருக்காகக் காட்டில் இங்குமங்கும் அலைந்து கிடைக்காமல் அச்சுதனை நினைத்தார். உடனே ஒரு புலையன் தோன்றினான். அவன் உடம்புக்குப் போதிய ஆடையில்லை. உடுத்தி யிருந்த கந்தல் துணியும் அழுக்குப்படிந்து அவலட்சணமாக இருந்தது. கூட நான்கு ஐந்து வேட்டை நாய்கள். கையில் வில், தோளில் ஒரு தோற்பை. அந்தத் தோற்பையில் குடிதண்ணீர்.

புலையன் நகைத்துக்கொண்டு உதங்கரைப் பார்த்து, "தாகத்தால் வருந்துகிறீர் போலும்! உம்மைப்பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. ஜலம் பெற்றுக் கொள்ளும்" என்று தோற்பையின் மூங்கிற் குழாயை நீட்டினான்.

புலையனையும் அவன் குடி தண்ணீர்ப் பையையும் நாய்களையும் பார்த்து உதங்கர் மிக்க அருவருப் படைந்து, "வேண்டாம்!" என்றார்.

கண்ணனை மனதில் எண்ணி "இதுவா உன் வரம்" என்று நொந்து கொண்டார். புலையன் ஜலத்தைப் பெற்றுக் கொள்ளும்படி தோற் பையைக் காட்டி உதங்கரைப் பலமுறை வற்புறுத்தினான். அவர் கோபம் வரவர அதிகரித்து மறுத்துவிட்டார். அதன்மேல் புலையன் நாய்களுடன் மறைந்தான்.

x x x

புலையன் இவ்வாறு அந்தர்த்தானமானதைக் கண்டு உதங்கர் யோசிக்கலானார். "இது யார்? இது புலையனல்ல. பரீட்சையாகவே இருக்க வேண்டும். பிழை செய்தேன். என்னுடைய ஞானம் என்ன பயன் தந்தது?

புலையன் கொடுக்க வந்த ஜலத்தை நான் ஏன் மறுத்தேன்?'' என்று வருந்தினார்.

கொஞ்ச நேரம் கழித்துச் சங்கும் சக்கரமும் ஏந்திக் கொண்டு பகவான் மாதவன் உதங்கர் முன் நின்றான்.

"புருஷோத்தமா! நீ என்னை இவ்வாறு பரீட்சை செய்யலாமா? புலையனுடைய தோற்பையிலுள்ள அசுத்த ஜலத்தையா பிராமணனாகிய எனக்குக் கொடுக்கச் செய்வது? இது தருமமா?'' என்று உதங்கர் வருத்தத்துடன் பகவானைக் கேட்டார்.

ஜனார்த்தனன் சிரித்து "ஓய்! உதங்கரே! உமக்காக நான் இந்திரனிடம் சொல்லி அமிர்தத்தை எடுத்துப் போகச் சொன்னேன். அவன் 'மானிடனுக்குச் சாகா மருந்து கொடுக்க இயலாது. வேறு ஏதேனும் செய்ய லாமே?' என்றான். நான் அவனை வற்புறுத்தினதில் அவன் ஒப்புக்கொண்டு 'சரி, அப்படியே செய்கிறேன். ஜலரூபமாக அமிருதத்தை எடுத்துச் சென்று உதங்கருக்குத் தருவேன். ஆனால் நான் சண்டாள வேஷத்தில் போவேன். ஒப்புக் கொண்டால் சரி!' என்றான். நீர் ஞானியாயிற்றே, புலையனுடைய வேஷத்தைக் கண்டு வெறுக்கமாட்டீர் என்று நான் நம்பி அவ்வாறே செய்யச் சொன்னேன். நீர் இவ்விதம் நடந்து கொண்டதால் நான் தோற்றேன்'' என்றான்.

அமிர்தத்தை இழந்த உதங்கர் வெட்கத்தில் ஆழ்ந்தார்.

# படி மாவு

யுத்தம் முடிந்தபின் முடி சூட்டப்பட்ட யுதிஷ்டிரன் ஒரு பெரிய அசுவமேத யாகம் செய்தான். பாரத நாட்டு மன்னர்களெல்லாம் வந்து கூடி யிருந்தார்கள். யாகம் வெகு சிறப்பாக நடந்தது. எட்டுத் திசைகளிலும் பறை அறையச்செய்து அழைக்கப்பட்டு வந்திருந்த பிராமணர்களும் ஏழைகளும் திக்கற்றவர்களும் தானங்கள் பெற்றார்கள். சாஸ்திரத்தில் சொல்லி யிருக்கிறபடி எல்லா விதத்திலும் சிறப்பாக யாகம் நடத்தப்பட்டது.

அந்தச் சமயத்தில் எங்கிருந்தோ ஒரு கீரிப்பிள்ளை திடீர் என்று யாகசாலைக்குள் பிரவேசித்துச் சபை நடுவில் தைரியமாக எல்லாரையும் பார்த்துப் பெரிய சிரிப்பு சிரித்தது. மனிதனைப் போல் ஒரு பிராணி சிரிப்பதைப் பார்த்து இதென்ன நம்முடைய யாகத்தைக் கெடுக்க வந்த பேயோ பிசாசோ என்று யாக காரியங்களை முடித்து விட்டு உட்கார்ந்திருந்த ரித்துவிக்குகள் திடுக்கிட்டார்கள்.

கீரிப்பிள்ளையின் உடம்பு ஒரு பக்கம் முழுதும் பொன்மயமாகப் பிரகாசித்தது. நாநா தேசங்களிலிருந்து வந்து சபையில் கூடியிருந்த அரசர்களையும் படித்த பிராமணர்களையும் நோக்கி அந்த அற்புதக் கீரிப்பிள்ளை பேச ஆரம்பித்தது.

"மன்னர்களே! உங்களுடைய யாகம் ரொம்ப சிறப்பாக நடந்ததாக நீங்கள் எண்ணுகிறீர்கள். ஒருகாலத்தில் குருக்ஷேத்திரத்தில் வசித்து வந்த ஒரு ஏழைப்பிராமணர் ஒரு படி மாவு தானம் செய்தார். அவர் செய்த அந்த தானத்திற்கு உங்கள் அசுவமேதமும் அதில் செய்யப்பட்ட எல்லா தானங்களும் சேர்ந்து சமமாகாது. உங்கள் யாகத்தைப்பற்றி ஏன் வீண் பெருமைப் படுகிறீர்கள்?" என்று சொல்லிற்று.

இவ்வாறு கீரிப்பிள்ளை சொன்னதைக் கேட்டுச் சபையோர் வியப்படைந்தார்கள். யாகம் செய்த பிராமணர்கள் அந்தக் கீரியண்டை போய், "சாதுக்கள் கூடியிருக்கும் யாகத்திற்கு நீ எங்கிருந்து வந்தாய்? நீ யார்? ஏன் எங்களுடைய யாகத்தை இவ்வாறு நிந்திக்கிறாய்? சாஸ்திரம் தவறாமல் சகல சாமக்கிரியைகளும் சேர்த்துக் கிரமமாக நடத்தப்பட்ட இந்தப் பெரிய அசுவமேத யாகத்தை நீ குறை கூறுவது சரியல்ல. யாகத்திற்கு வந்தவர்கள் எல்லாரும் தக்க முறையில் பூஜிக்கப்பட்டார்கள். எல்லாரும் திருப்தி யடையுமளவு தானங்கள் கொடுக்கப்பட்டன. மந்திரங்களும் ஓதப்பட்டு அவிகளும் அக்கினியில் விடப்பட்டன. நான்கு வருணத்தார்க்ளும் சந்தோஷ மடைந்திருக்கிறார்கள். நீ ஏன் இவ்விதம் சொல்லுகிறாய்? எங்களுக்கு விஷயம் விளக்க வேண்டும்" என்று சொன்னார்கள்.

இதைக் கேட்டு அந்தக் கீரி மறுபடியும் சிரித்துச் சொன்னதாவது:

"பிராமணர்களே! நான் சொன்ன வார்த்தை பொய் யல்ல. உங்கள் பேரிலாவது யுதிஷ்டிர மகாராஜாவின் பேரிலாவது எனக்கு அசூயை இல்லை. மிகவும் சிறப்பாகச் செய்யப்பட்ட இந்த யாகம் உண்மையில் நான் பார்த்த ஏழைப் பிராமணரின் தானத்திற்குச் சமமாகாது. குருக்ஷேத்திரத்தில் வசித்த அந்த ஏழைப் பிராமணர் தான் சிறந்த கொடையாளி யாவார். அதன் பயனாக அவர் உடனே பத்தினி, மகள், மருமகன் எல்லாருடனும், சுவர்க்கம் ஏறிச் சென்றார். நான் பார்த்த நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

உங்கள் யுத்தம் நடப்பதற்கு முன் குருக்ஷேத்திரத்தில் ஒரு பிராமணர் உஞ்சவிருத்தி ஜீவனம் நடத்தி வந்தார். அதாவது கீழே உதிர்ந்து கிடக்கும் தானியத்தைப் பொறுக்கி அவரும் அவர் மனைவி, மகன், மருமகள் ஆகிய நால்வரும் தினசரி வேண்டிய ஆகாரத்தை அடைந்து வந்தார்கள், ஒவ்வொரு நாளும் பகலின் ஆறாவது பாகத்தில், அதாவது பிற்பகல் ஒன்றரை மணிக்கு

மேல் ஒரே வேளை உணவு எல்லாருமாகக்கூட உட்கார்ந்து சாப்பிடுவார்கள். ஒவ்வொரு நாள் போதிய தானியம் கிடைக்காது. அப்படி நேர்ந்தால் உபவாசமிருந்து அடுத்த நாள் ஆருவது காலத்தில்தான் சாப்பிடுவார்கள். ஒரு நாள் கிடைத்ததை மறு நாள் வைத்துக் கொள்ள மாட்டார்கள். இது அவருடைய விரதமாக இருந்து வந்தது.

இவ்வாறு விரத வாழ்க்கை இவர்கள் நடத்தி வந்த போது ஒரு காலத்தில் மழை யில்லாமல் நாட்டில் கடும் பஞ்சம் நேரிட்டது. எங்கும் ஜனங்கள் உணவின்றிக் கஷ்டப்பட்டார்கள். மழையில்லாமல் விவசாயம் விளைவு ஏதுமில்லாமல் போனபடியால் சாப்பாட்டுக்கு வேண்டிய தானியம் வயல்களில் சிந்திக் கிடக்கவில்லை. பல நாட்கள் பிராமணரும் அவர் குடும்பமும் பட்டினியாக இருக்க நேரிட்டது. ஒரு நாள் வெயிலிலும் பசியிலும் அலைந்து கஷ்டப்பட்டு ஒரு படி சோளம் சம்பாதித்து வீடு வந்து சேர்ந்தார்கள். அந்த ஒரு படி சோளத்தை மாவாக அரைத்து ஜபம் முதலியன விதிப்படி செய்து மாவை நாலு சமபாகமாகப் பிரித்துக்கொண்டு பகவானை நினைத்து மகிழ்ச்சியுடன் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

அந்தச் சமயத்தில் ஓர் பிராமணர் பசியோடு அங்கே வந்து சேர்ந்தார். அதிதி ஒருவர் வந்தாரே என்று எழுந்து அவரை நமஸ்கரித்து உபசரித்து உட்காரச் சொன்னார்கள். களங்கமற்ற பரிசுத்த மனப்பான்மை படைத்த அந்தப் பிராமணருக்கும் அவருடைய மனைவி மகன் மருமகளுக்கும் அதிதியை உபசரிக்கப் பெற்றோமே என்று மகிழ்ச்சி பொங்கிற்று. வந்தவரைப் பார்த்து, "பிராமண சிரேஷ்டரே, நான் ஏழை. இந்த மாவு நியமத்துடன் சம்பாதிக்கப்பட்டது. இதை நீர் பெற்றுக்கொள்ள வேண்டும். உமக்கு மங்களம் ஆகுக" என்று சொல்லி பிராமணர், தன்னுடைய பங்கு காற்படி மாவை அவருக்குக் கொடுக்க அதிதியானவர் அந்த மாவைப் புசித்தார்.

ஆனால் அவருக்கு பசி தீரவில்லை. கொடுத்த மாவை சாப்பிட்டுவிட்டு திருப்தி அடையாத பசிப் பார்வையுடன்

பார்த்தார். என்ன செய்வது என்று சிந்தித்துக்கொண் டிருப்பதை மனைவி பார்த்துச் சொன்னாள்:

"என்னுடைய பாகத்தையும் இவருக்குக் கொடும். இவர் திருப்தி அடைந்தால் எனக்குப் போதும்."

இவ்வாறு சொல்லித் தன் பங்கு மாவையும் புருஷ னிடம் கொடுத்து அதிதிக்குக் கொடுக்கச் சொன்னாள்.

"பதிவிரதையே! விலங்கு புழு பூச்சிகளுங்கூடத் தம் இனத்தில் பெண்களைக் கவனத்துடன் போஷிக்கின் றன. நீ சொல்லுவது சரியல்ல. உன்னால் பணிவிடை செய்யப்பட்டு இல்லறம் நடத்தும் நான் உன்னை ரக்ஷிக் காமல் பசியில் தவிக்கவிட்டால் எனக்கு என்ன நலன் உண்டாகும்? அன்புக் குரியவளே! எலும்பும் தோலு மாகப் பசியில் நீ வாடிக் கொண்டிருக்க உன்னைப் பட்டினி போட்டு நான் அதிதி பூஜை செய்வதில் என்ன பயன் உண்டாகும்?" என்று பிராமணர் சொன்னதை மனைவி மறுத்தாள்.

"பிராமணரே! தருமமும் பொருளும் எல்லா புரு ஷார்த்தமும் நம்மிருவருக்கும் பொதுவல்லவா? கிருபை செய்து என்னுடைய கால் பங்கு மாவையும் பெற்றுக் கொண்டு அதிதிக்குக் கொடுப்பீராக. என்னைப் போலவே நீரும் பசியால் பீடிக்கபபட்டு வருகிறீர். நான் சொன் னதை மறுக்க வேண்டாம்" என்று மனைவி வற்புறுத் தினாள்.

பிறகு அவரும் ஒப்புக்கொண்டு அந்த மாவையும் அதிதிக்குக் கொடுத்தார். அவர் அதைப் பெற்றுக் கொண்டு புசித்தார். ஆனால் இன்னும் பசி தீராமலே யிருந்தார். உஞ்ச விருத்தி பிராமணர் மிகுந்த மனக் கவலைப்பட்டார்.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த பிராமணருடைய மகன், "தகப்பனாரே! என் பங்கையும் அதிதிக்குக் கொடுத்துத் திருப்தி செய்யும்" என்றான்.

தகப்பன் இதைக் கேட்டு வருத்தமுற்று "குழந்தாய், வயது முதிர்ந்தவர்கள் பசியைப் பொறுத்துக்கொள்ள

முடியும். பாலர்களுடைய பசி தீவிரமானது. உன்னுடைய பங்கை வாங்கிக்கொள்ள எனக்கு மனம் வரவில்லை'' என்றார்.

குமாரன் கேட்கவில்லை. "வயது முதிர்ந்த பிதாவைக் காப்பாற்றுவது புத்திரனுடைய கடமை. பிதா வேறு, புத்திரன் வேறு அல்ல, பிதாவே புத்திரனாக உண்டாகிறானல்லவா? என் பங்கு மாவும் உம்முடையதே. நான் கொடுப்பதை பெற்றுக்கொண்டு பசி தீராத அதிதியை திருப்தி செய்யவும்'' என்று வேண்டிக் கொண்டான்.

''குழந்தாய், சீலத்திலும் இந்திரிய அடக்கத்திலும் எல்லா விதத்திலும் நான் உன்னைக் கண்டு பெருமைப் படத் தக்கவனாக இருக்கிறாய். உனக்கு எல்லா நலனும் ஆகுக, உன்னுடைய மாவைப் பெற்றுக் கொள்ளுகிறேன்'' என்று சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டு அதையும் அதிதிக்குக் கொடுத்தார்.

அதிதி மூன்றாவது பாகத்தையும் பெற்றுக்கொண்டு அதையும் சாப்பிட்டார். இன்னும் திருப்தி யாகாமலே யிருந்தார். உஞ்சவிருத்தி பிராமணர் வெட்கப்பட்டார். இனி என்ன செய்வது என்று தெரியாமல் ஏங்கி நிற்கும் மாமனாரைப் பக்கத்திலிருந்த மருமகள் பார்த்து. "சுவாமி என் பங்கையும் சந்தோஷமாகவே கொடுக்கிறேன். ஒப்புக்கொண்டு அதை அதிதிக்குக் கொடுக்க வேண்டும். உம்முடைய ஆசீர்வாதத்தால் எனக்கு அக்ஷயமான நலன் உண்டாகும்'' என்று சொன்னாள்.

இதைக் கேட்டு மாமனார், "ஒழுக்கம் தவறாதவளே ! நிறம் மாறி இளைத்துப் போயிருக்கும் உன்னைப் பசியால் பீடிக்கப்படவிட்டு உன்னுடைய பங்கு மாவையும் நான் வாங்கி அதிதிக்குக் கொடுத்தால் நான் தருமத்தை அழிப்பவனாவேன். சிறுமியாகிய நீ பசியால் தவிப்பதை நான் எவ்வாறு பார்த்துச் சகிப்பேன் '' என்று மறுதளித்தார்.

அவள் விடவில்லை, "சுவாமி! நீர் எனக்குப் பிரபுவின் பிரபு. குருவின் குரு, தெய்வத்திற்குத் தெய்வம்.

என்னுடைய மாவைப் பெற்றுக்கொள்ள வேண்டும். இந்தச் சரீரம் குருநாதனின், பணிவிடைக்காகத் தானே இருக்கிறது? நீர் என்னை நல்ல கதி அடையச் செய்ய வேண்டும். என்னுடைய மாவைப் பெற்றுக் கொள்ள வேண்டும்" என்று பலவாறாக வற்புறுத்தினாள்.

பிராமணர், "பெண்ணே! பதிவிரதையே! நீ எல்லா பாக்கியமும் அடைவாயாக!" என்று ஆசீர்வதித்து அவளுடைய மாவையும் பெற்றுக்கொண்டு அதிதிக்குக் கொடுத்தார்.

அதை வாங்கிச் சாப்பிட்ட பின் அதிதியாக வந்த பிராமணர் சந்தோஷமடைந்தார். "பரிசுத்தமானதும் சக்திக்குத் தக்கவாறு கொடுக்கப்பட்டதுமான உம்முடைய தானத்தால் மிகவும் திருப்தி அடைந்தேன். உங்களுடைய தானம் அற்புதமான தானம். தேவர்கள் பூமாரி பொழிகிறார்கள். அதோ! தேவ ரிஷிகளும் தேவர்களும் கந்தாவர்களும் உம்மைத் தரிசிக்கப் பரி ஜனங்களோடு விமானங்களில் வந்து நிற்கிறார்கள். நீரும் உம்முடைய மனைவியும் மகனும் மருமகளும் சுவர்க்கம் போவீர்கள். நீர் செய்த தானத்தினால் உம்முடைய முன்னோர்களுக்காகவும் நீர் சுவர்க்கம் சம்பாதித்தவரானீர். சாதாரணமாக பசியானது அறிவை அழிக்கும். தரும சிந்தனையைக் கெடுக்கும். ஞானவான கூடப் பசியினால் உறுதியை இழப்பான். மனைவி மகனிடத்திலுள்ள அன்பையும் பாராமல் தருமத்தையே பெரிதாக நீர் எண்ணினீர். அநேக ராஜசூயங்களும் அசுவமேதங்களும் உம்முடைய இந்த ஒரு தானத்துக்குச் சமமாகா. காத்திருக்கும் திவ்விய விமானத்தில் ஏறுங்கள்—சுவர்க்கம் செல்லுங்கள்!" என்று சொல்லி மறைந்தார்."

x x x

இவ்வாறு உஞ்சவிருத்திப் பிராமணருடைய கதையைச் சொல்லிவிட்டு கீரி மீண்டும் சொன்னதாவது: "அந்தப் பிராமணருடைய சோள மாவின் மணத்தால் கிட்ட இருந்த என்னுடைய தலை சுவர்ண மயமாகிவிட்

டது. பிறகு மாவுபரிமாறின இடத்தில் போய் நான் புரண்டேன். சிந்திக்கிடந்த மாத் தூள்கள் பட்டு என் உடலில் ஒரு பாதி தங்கமய மாயிற்று. பாதி உடல் சுவர்ண மயமாயிற்றே என்று நான் மற்றொரு பாதியும் அவ்வாறே ஆகவேண்டுமென்று ஆசைப்பட்டு பல தபோவனங்களும் யாகம் செய்யும் இடங்களும் போய்ப் பார்த்து வருகிறேன். புகழ்பெற்ற தருமபுத்திரர் யாகம் செய்கிறார் என்று கேள்விப்பட்டு இங்கேயும் வந்தேன். ஆயினும் நான் சுவர்ணமயமாகச் செய்யப்படவில்லை. அதனால்தான் இந்த யாகம் ஒரு படிமாவுக்குச் சமமில்லை என்றேன்''

இவ்வாறு சொல்லிவிட்டுக் கீரி மறைந்தது.

# ராஜ்ய பாரம்

மனிதனுக்கு ஒரு பொருள் கிடைக்கும் வரையில் அதைப் பற்றி மோகம். தேடிய பொருளை கிட்டியதும் அதன் மேல் வைத்திருந்த ஆசை கரைந்துபோய் புதுத் துயரங்களும் சங்கடங்களும் மனிதனைப் பீடிக்கும். போர் புரிவதும் பகைவனைக் கொல்லுவதும் க்ஷத்திரிய தருமமாக இருந்தாலும், சகோதரர்களைக் கொன்று சம்பாதித்த பதவியும் செல்வமும் என்ன சுகத்தைத் தரும்? இதைத்தான் அருச்சுனன் கண்ணனிடம யுத்தம் ஆரம்பிக்கும் தருவாயில் முறையிட்டது. அதற்குச் சமாதானமாகக் கண்ணன் கருமத்தைப் பற்றியும் கடமையைப் பற்றியும உபதேசம் செய்தான். ஆயினும் அருச்சுனன் சொன்னதிலும் பெரிய உண்மை இல்லாமலில்லை.

பாண்டவர்கள் கௌரவர்களை ஜெயித்துவிட்டுச் சம்பூரண ராஜ்ய பதவி அடைந்தார்கள். பிறகு கடமையை உத்தேசித்து ராஜ்யபாரம் வகித்து நடத்தினார்கள். ஆனாலும் எதிர்பார்த்த சந்தோஷம் அடையவில்லை.

"வெற்றி பெற்று ராஜ்யாதிபத்தியம் அடைந்த பாண்டவர்கள திருதராஷ்டிரனை எவ்விதம் நடத்தினார்கள்" என்று ஜனமேஜயர் கேட்க, வைசம்பாயனர் கதையைச் சொல்லுகிறார்:

துக்கசாகரத்தில் மூழ்கிய திருதராஷ்டிரனிடம் எல்லா விதத்திலும் கவுரவம் காட்டியே பாண்டவர்கள் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள. எல்லாக் காரியங்களையும் திருதராஷ்டிரனிடம் தெரிவித்து அவனுடைய அனுமதி பெற்றே பாண்டவர்கள் யுதிஷ்டிரன் தலைமையில் ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள. பெற்ற நூறு மக்களையும் கனவில் பெற்ற தனத்தைப் போல இழந்த காந்தாரியை குந்திதேவி மிகவும் அன்போடும் பக்தியோடும் பார்த்து வந்தாள். திரௌபதியானவள் அவர்களிருவரையும் சமமாகவே பாவித்துப் பணிவிடை செய்து வினயமாக நடந்துகொண்டாள்.

திருதராஷ்டிரனுடைய மாளிகையில் அவனுக்காகச் சிறந்த சயனாசனங்களையும் ஆடையாபரணங்களையும் யுதிஷ்டிரன் அமைத்தான். அவனுக்குப் பலவிதமான பட்சணங்களையும் ஆகாரங்களையும் செய்து அனுப்பி வந்தான். கிருபாசாரியார் திருதராஷ்டிரனுடன் வசித்து வந்தார். வியாசர் அவனுக்கு ஆறுதல் கொடுக்கக் கூடிய கதைகளைச் சொல்லிக்கொண்டு வந்தார். அரசியல் விவகாரங்களை யுதிஷ்டிரன் திருதராஷ்டிரனை அவ்வப்போது கேட்டு அவனுடைய அனுமதியின்மேல் செய்வது போலவே செய்து வந்தான். ராஜாவான தருமபுத்திரன் திருதராஷ்டிரனுக்கு வருத்தம் உண்டாகக்கூடிய பேச்சு ஏதும் பேசாமல் ஜாக்கிரதையாக இருந்தான். பல தேசங்களிலிருந்து வரும் மன்னர்கள் கௌரவ சிரேஷ்டனான திருதராஷ்டிரனை முன்போல் மகாராஜனாகவே உபசரித்தார். ஸ்திரீகள் காந்தாரிக்குப் பணிவிடை செய்வதில் ஒரு குறையும் இல்லாமல் பார்த்து வந்தார்கள். யுதிஷ்டிரன் ‘புத்திரர்களை இழந்த இவர் சிறிதும் துயரப்படாமலிருக்க வேண்டும்’’ என்று தன் சகோதரர்களுக்கு உத்தரவிட்டிருந்தான். பீமனைத் தவிர மற்றவர்கள் அவ்வாறே செய்து வந்தார். திருதராஷ்டிரன் பாண்டவர்களால் நன்கு பூஜிக்கப்பட்டு, தன் புத்திரர்கள் இருந்திருந்தால் எவ்வளவு சுகம் கிடைக்குமோ அவ்வளவு சுகத்தையும் போகங்களையும் அடைந்தான். திருதராஷ்டிரனும் பாண்டவர்களை அன்போடே பார்த்து வந்தான். அவர்களிடம் அப்பிரியம் காணவில்லை, காட்டவுமில்லை.

இவ்வாறு பாண்டவர்கள் திருதராஷ்டிரனை நன்றாகவே நடத்தி வந்தார்கள். ஆனால் பீமன் மட்டும் அப்பிரியமான காரியங்களைச் சில சமயம் செய்வான். சில நாட்கள் கழிந்த பிறகு ரகசியமாக ஆட்களைக் கொண்டு திருதராஷ்டிரனுடைய கட்டளைகள் நடக்கவொட்டாமல் செய்ய ஆரம்பித்தான். “மந்த புத்தியைப் படைத்த துரியோதனாதிகள் சொல்லப்பட்டார்’’ என்று திருதராஷ்டிரன் காதில் விழும்படி சொல்லுவான். துரியோதனன், கர்ணன், துச்சாதனன், இவர்களுடைய செயல்களை எண்ணியெண்ணித் தன் கோபத்தை மறக்கவோ அடக்க

கவோ அவனால் முடியவில்லை. சில சமயம் திருதராஷ்டிரனுக்கும் காந்தாரிக்கும் கேட்கும்படியாகக் கூட கடுமையான வார்த்தைகளைச் சொல்லுவான்.

பீமனுடைய வார்த்தைகளும் சில்லரைக் காரியங்களும் திருதராஷ்டிரன் மனத்தைக் குத்தும். இதைக் கண்டு காந்தாரியும் வருத்தப்பட்டாள். ஆனால் அவள் மகா விவேகசாலி. தர்மம் அறிந்தவள். பீமன் சொல்லும் அப்பிரிய வசனங்களைக் கேட்கும்போதெல்லாம் தருமமே வடிவம் கொண்டது போல் விளங்கும் குந்தியைப் பார்த்து மனதில் சாந்தம் அடைவாள்.

இவ்வாறு பதினைந்து வருஷங்கள் கடந்தன.

# திருதராஷ்டிரன்

விதுரன் திருதராஷ்டிரன், பீமனுடைய வார்த்தைகளால் பீடிக்கப்பட்டு யுதிஷ்டிரன் உத்தரவுப்படி அமைக்கப்பட்டு வந்த சுகங்களில் மனம் செலுத்த அவனால் முடியாமல் போயிற்று. பாண்டவர்களுக்குத் தெரியாமல் கடும் விரதங்களை அனுசரித்தான். சாப்பாட்டைக் குறைத்தும் வேறு விதங்களிலும் உடலை வருத்திக் கொண்டு வந்தான். காந்தாரியும் அவ்விதமே செய்தாள். பிறகு ஒரு நாள் தர்மபுத்திரரை அழைத்து அவரிடம் திருதராஷ்டிரன் இவ்வாறு சொன்னான்:—

"பிள்ளாய்! உனக்கு க்ஷேமமுண்டாகுக! நான் உன்னால் நன்கு பாலிக்கப்பட்டு சுகமாக பதினைந்து வருஷம் உன் வீட்டில் வசித்தேன். தானங்களைக் கொடுத்தேன், சிரார்த்தங்களையும் செய்தேன். புத்திரர்களை இழந்த காந்தாரியும் மனதை ஸ்திரப்படுத்திக்கொண்டு தன் துக்கத்தை மறந்து என்னைக் கவனித்து வந்தாள். துரௌபதிக்கு பெரிய அபகாரம் செய்தவர்களும் உன்னுடைய பிதுரார்ஜிதத்தைக் கவர்ந்தவர்களுமான என்னுடைய கொடிய மக்கள் அவர்களுடைய அதர்மத்தினால் மாண்டார்கள். அவர்கள் யுத்தத்தில் புறங் காட்டாமல் கொல்லப்பட்டு வீர சுவர்க்கம் அடைந்திருக்கிறார்கள். நானும் காந்தாரியும் மறுமைக்கு வேண்டிய கடமைகளை இனிச் செய்துகொள்ள வேண்டும். உனக்கு சாஸ்திரம் தெரியுமே, கிழிந்த துணிகளும் மரப்பட்டையும் தரித்து நான் வனம் செல்ல வேண்டும். உனக்கு நலன் வேண்டிக் கொண்டு நான் வனத்தில் வசிக்க விரும்புகிறேன். இதற்கு நீ அனுமதி கொடுக்க வேண்டும். நம்முடைய குலத்தின் வழக்கத்தை நான் அனுசரிக்க வேண்டும். அரசனாகிய நீயும் என் தவத்தின் பயனில் ஒரு பகுதியை அடைவாய்" என்றான்.

இதைக் கேட்டு யுதிஷ்டிரன், "நீர் இவ்வாறு உபவாசமிருந்து தரையில் படுத்து தேகத்தை வருத்தி வந்ததை

நானும் என் சகோதரர்களும் அறியவில்லை. நீர் சுகமாக இருப்பதாகவே நான் வஞ்சிக்கப்பட்டேன். என்னுடைய பிதாவான நீர் ஆறாத துக்கத்தை அடைந்தீர். எனக்கு ராஜ்யத்தாலும் போகங்களாலும் என்ன பயன்? நான் மிகக் கெட்டவன். ஆசையினால் நான் தவறு செய்தேன். உம்முடைய புத்திரன் யுயுத்ஸு ராஜாவாக இருக்கட்டும், அல்லது வேறு எவனை நீர் விரும்புகிறீரோ அவன் ராஜாவாக இருக்கட்டும். அல்லது நீரே ராஜாவாக இருந்து இந்த தேசத்தை பரிபாலனம் செய்யும். நான் வனம் செல்லுகிறேன். நான் இது வரையில் அடைந்த அபகீர்த்தி போதும். நீர் மறுபடியும் என்னை அபவாதத்தில் போட்டு எரிக்க வேண்டாம். நான் ராஜா அல்ல. நீர் அல்லவோ ராஜா. நான் உமக்கு எப்படி அனுமதி தர முடியும்? துரியோதனன் விஷயத்தில் இப்போது எனக்கு ஒரு கோபமுமில்லை. விதி வசத்தால் நாம் எல்லோரும் மதிமயக்கமடைந்து சம்பவம் நடைபெற்றுவிட்டது. துரியோதனாதிகளைப் போலவே நாங்களும் உமக்குப் புத்திரர்கள். காந்தாரியும் குந்தியும் இருவருமே எனக்கு சமமான அன்னைகள். நீர் வனம் சென்றால் நானும் கூடவே வருவேன். நீர் காட்டுக்குப் போய்விட்டு உம்மைப் பிரிந்த எனக்கு இந்த அரச பதவி என்ன சுகம் உண்டுபண்ணும்? உம்மைத் தலை வணங்கி பிரார்த்திக்கிறேன். உம்முடைய மனத்திலுள்ள வருத்தம் விலகவேண்டும். நான் சந்தோஷமாக உமக்குப் பணிவிடை செய்து உள்ளத்தில் சாந்தி பெறுவேன்'' என்றான்.

திருதராஷ்டிரன், "குந்தி நந்தனா! என்னுடைய மனமானது வனம் போய் தவம் செய்வதில் பற்றுகொண்டு விட்டது. நான் உன் வீட்டில் பல வருஷங்கள் வாசம் செய்தேன். நீயும் உன்னைச் சேர்ந்த எல்லாரும் எனக்கு நன்றாய் பணிவிடை செய்தீர்கள். இப்போது எனக்கு வனம் செல்ல அனுமதி கொடுக்கவேண்டும்'' என்றான்.

இவ்வாறு திருதராஷ்டிரன் நடுங்கிக் கொண்டும் அஞ்சலி செய்து கொண்டும் நின்ற தர்மராஜனுக்குச் சொல்லிவிட்டு, விதுரனையும் கிருபாசாரியரையும் நோக்கி, "நீங்கள் அரசனுக்குச் சமாதானம் சொல்லி எனக்கு

அனுமதி பெற்றுத் தரவேண்டும். எனக்கு வாய் உலருகிறது. வயதாகி விட்டதல்லவா? அதிகமாகப் பேசின சிரமமாக இருக்கவேண்டும்'' என்று சொல்லிவிட்டு பிரஜ்ஞையற்று காந்தாரியின்மேல் சாய்ந்தான். இதைப் பார்த்து யுதிஷ்டிரன் தாங்க முடியாத துக்கமடைந்தான். "யானையின் பலத்தைப் படைத்த இவர், இரும்பினால் செய்யப்பட்ட பிரதிமையைப் பொடியாகச் செய்த இந்த வீரர், இவ்வாறு மனம் நொந்து, உடல்வாடி தோலும் எலும்புமாய் விட்டாரே. பிரஜ்ஞை இழந்து காந்தாரி பேரில் அநாதைபோல் சாய்ந்து விழுந்து கிடக்கிறாரே, இதற்கெல்லாம் காரணம் நான் அல்லவோ? தருமம் தெரியாதவனை என்னையும் என்னுடைய புத்தியையும் நான் கற்ற கல்வியையும நிந்திக்க வேண்டும்'' என்று பரிதாபப் பட்டான்.

ஜலத்தை எடுத்துத் தெளித்துத் தன் குளிர்ந்த கையினால் திருதராஷ்டிரனுடைய முகத்தைத் தடவினான். திருதராஷ்டிரனுக்கு நினைவு வந்ததும், கையினால் தன்னைத் தடவிக்கொண்டிருந்த பாண்டவனைக் கட்டி அணைத்துக்கொண்டு "அப்பனே! உன்னுடைய ஸ்பரிசம் அமிருதம்போல் இன்பம் தருகிறது'' என்றான்.

அச்சமயத்தில் வியாசர் வந்தார். விஷயம் தெரிந்ததும் அவர் யுதிஷ்டிரனுக்குச் சொன்னார் :

"குருகுலச் சிரேஷ்டனே திருதராஷ்டிரன் எவ்விதம் சொல்லுகிறானோ அவ்விதமே செய். முதுமை அடைந்தவனும் புத்திரர்களை இழந்தவனுமான இவன் நீண்ட காலம் இந்தக் கஷ்டத்தை சகிக்க மாட்டான். சிறந்த ஞானம் பெற்றவளான காந்தாரி தன் சோகத்தை மிக்க தைரியமாகப் பொறுத்து வருகிறாள். என்னுடைய வார்த்தையைக் கேள். திருதராஷ்டிரனுக்கு அனுமதி கொடு. இவன் வனத்தில் தேன் மலர்களின் வாசனைக் கிடையில் கவலையற்று இருக்கட்டும். பழைய ராஜரிஷிகளின் மார்க்கத்தை பின் தொடர்ந்து செல்லட்டும். ராஜாக்களுக்கு இதுதான் தர்மம். யுத்தத்தில் உயிரிழக்க வேண்டும், அல்லது வனத்தில் விதிப்படி ஆயுளை முடித்துக்கொள்ள

வேண்டும். இவன் யாகங்களைச் செய்தான். பூமியை அனுபவித்தான். நீங்கள் காடு சென்றிருந்த பொழுது புத்திரனுடைய ஆதீனத்திலிருந்த விசாலமான ராஜ்யத்தை பதின்மூன்று வருஷம் அனுபவித்தான். பலவிதமான தானங்கள் செய்தான். நீயும் இந்த பதினைந்து வருஷகாலம் இவனை நன்றாகவே ஆராதித்து வந்தாய். ஒரு குறையுமில்லை. இப்போது இவனுக்கு தவம் புரியும் சமயம். இவன் கோபத்தினால் போகவில்லை. நீ அனுமதித்து அனுப்பு'' என்று யுதிஷ்டிரனை சமாதானப் படுத்தினார்.

பிறகு அப்படியே ஆகட்டும் என்று தருமராஜன் சொல்லியபின் வியாசர் தன் ஆசிரமத்திற்கு திரும்பிச் சென்றார்.

# மூவர்களின் முடிவு

வனம் போவதற்கு யுதிஷ்டிரனுடைய அனுமதி பெற்றதும் திருதராஷ்டிரனும் காந்தாரியும் தங்களுடைய மாளிகைக்குச் சென்று உபவாசம் தீர்த்துக் கொண்டார்கள். காந்தாரியும் குந்தியும் சேர்ந்தாற்போல் உட்கார்ந்து போஜனம் செய்தார்கள். திருதராஷ்டிரன் தன் பக்கத்தில் யுதிஷ்டிரனை உட்காரவைத்து ஆசிமொழிகள் சொன்னான். அதனமேல் காந்தாரியின் தோளின் பேரில் கை வைத்து ஊன்றிக்கொண்டு நடந்து கிழவன் வனத்துக்குப் புறப்பட்டான். புருஷனுக்குக் கண்ணில்லை என்று தானும் தன் முகத்தைத் துணியால் கட்டிக்கொண்டு கண்களை உபயோகப் படுத்தாமல் விரத வாழ்க்கை நடத்தி வந்த காந்தாரி குந்தியின் தோள்மேல் தன் கையை வைத்துககொண்டு நடந்தாள். மூவரும் ராஜதானியை விட்டு வனம் சென்றார்கள்.

காந்தாரிக்கு சுசுரூஷை செய்யத் தானும் வனத்திலே இருப்பதாகக் குந்தி தன் மனதில் நிச்சயித்துக் கொண்டு சென்றாள். போகும்போது யுதிஷ்டிரனுக்குச் சொன்னாள். "மகனே! சகதேவன் மீது ஒருபோதும் கோபித்துக் கொள்ளாதே! யுத்தத்தில் வீர மரணம் அடைந்த கர்ணனை எப்போதும் அன்புடன் நினைப்பாயாக! அவன் என் மகன், உங்கள் சகோதரன் என்பதை நான் உங்களுக்குச் சொல்லாமல் போனது என் குற்றம். துரௌபதியைப் பிரியமாகப் பார்த்துக் கொள்ளுங்கள். பீமனும் அருச்சுனனும் நகுலனும் சகதேவனும் ஒருபோதும் துக்கப்படாமல் பார்த்துக்கொள். குலத்தின் பாரம் இனி உன்னுடையது" என்றாள்.

காந்தாரியை வழியனுப்பத்தான் குந்தி சென்றாள் என்று அது வரையில் எண்ணிக் கொண்டிருந்த தருமபுத்திரன் இதைக் கேட்டதும் ஒரு முகூர்த்த நேரம் ஒன்றும் சொல்லத் தெரியாமல் திகைத்தான். பிறகு, "அன்னையே! இது வேண்டாம். எங்களை ஆசீர்வதித்து யுத்தத்துக்கு அனுப்பினாய்! இப்போது எங்களை விட்டுவிட்டு நீ

வனம் போவது தருமம் அல்ல'' என்று யுதிஷ்டிரன் தாயை வருந்திக் கேட்டுக் கொண்டான். ஆனால் குந்தி வனம் செல்லுவதாக நிச்சயித்து விட்டு உறுதியாக நின்றாள்.

"என் பர்த்தா இருக்கும் உலகத்துக்குப் போக நான் விரும்புகிறேன். காந்தாரியுடன் வனத்தில் வசித்து தவம் செய்து நான் உங்கள் தகப்பனாரைச் சேருவேன். நீ திரும்பிச் செல். நகரத்துக்குப் போ. உன் மனம் எப்போதும் தருமத்தில் நிலைத்து நிற்கட்டும்'' என்று மகனை ஆசீர்வதித்தாள்.

யுதிஷ்டிரன் பேச்சில்லாமல் நின்றான். அவனையும் மற்ற புத்திரர்களையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே குந்தி வனம் சென்றாள்.

ஒருவர் தோள்மேல் ஒருவர் கைவைத்து ஊன்றிக் கொண்டு அந்த மூன்று விருத்தர்களும் வனம் போனது இந்தச் சித்திரம் நேற்று நம் வீட்டில் நடந்த ஒரு சோக நிகழ்ச்சி போலிருக்கிறது.

x x x

மூன்று வருஷங்கள் திருதராஷ்டிரனும் காந்தாரியும் குந்தியும் வனத்தில் கழித்தார்கள். பிறகு ஒரு நாள் திருதராஷ்டிரன் ஸ்நானம் செய்துவிட்டு ஆசிரமத்துக்குச் சென்றான். அப்போது காடு தீப்பற்றிக் கொண்டது. காற்றடித்து வனம் முழுதும் நெருப்பு பரவிற்று. மான்களும் காட்டுப் பன்றிகளும் கூட்டம் கூட்டமாக ஓடி தடாகத்தை அடைந்தன.

கூட இருந்த சஞ்சயனை நோக்கி "நீ இந்த அக்னியினின்று ஓடித் தப்புவாயாக!'' என்று சொல்லிவிட்டு கண்ணில்லாத கிழ அரசனும் கண்ணை வஸ்திரத்தால் கட்டி மறைத்துக் கொண்டிருந்த காந்தாரியும் குந்திதேவியும் கிழக்கு முகமாக உட்கார்ந்து கொண்டு யோகநிலையில் அமர்ந்து நெருப்புக்கு இரையானார்கள்.

திருதராஷ்டிரன் மறைந்ததும் அவனுக்கு கண்ணும் உயிருமாயிருந்த சஞ்சயன் துறவு பூண்டு இமய மலை சென்றான்.

# கண்ணன் மறைந்தான்

பாரத யுத்தம் முடிந்த பின் துவாரகையில் கிருஷ்ணன் முப்பத்தாறு ஆண்டுகள் அரசாண்டான். கிருஷ்ணனுடைய குலத்தைச் சேர்ந்த விருஷ்ணிகள், அந்தகர்கள், போஜர் என்று பல பெயர் கொண்ட யாதவ குமாரர்கள் வரம்பு கடந்த சுகத்தில் காலங் கழித்து வந்தார்கள். அவ்வாறு நடத்திய சுக வாழ்க்கையினால் அடக்கமும் ஒழுக்கமும் இழந்தார்கள்.

ஒருநாள் சில ரிஷிகள் துவாரகைக்கு வந்தார்கள். அப்போது பெரியோர்களிடம் அலக்ஷியங் கொண்ட யாதவர்கள் ரிஷிகளைப் பரிகசிப்பதற்காக தங்களுள் ஒருவனுக்குப் பெண் வேஷம் போட்டு முனிவர்களிடம் சென்று "சாஸ்திரம் படித்தவர்களே! இந்த பெண்ணுக்கு என்ன குழந்தை பிறக்கும் சொல்லுங்கள்" என்றார்கள்.

ரிஷிகள் இந்தப் பொய்யையும் பரிகாசத்தையும் கண்டு கோபம் மேலிட்டு "இவனுக்கு ஒரு உலக்கை பிறக்கும். அந்த உலக்கை உங்கள் குலத்துக்கு யமனாகும்" என்று சபித்துவிட்டுத் திரும்பிப் போய்விட்டார்கள். முனிவர்களின் சாபத்தைக் கேட்டு வேடிக்கையாகச் செய்தது இப்படி ஆயிற்றே என்று யாதவர்கள் கொஞ்சம் பயந்தார்கள். மறுநாள் ரிஷிகள் சொன்னபடியே ஸ்திரீ வேஷம் தரித்த சாம்பன் பிரசவ வேதனை அடைந்து ஒரு உலக்கை உண்டாயிற்று. இதைக் கண்டு ரிஷிகளுடைய சாபம் உண்மையாகவே முடியும் என்று யாதவர்கள் மிக்க மனோவேதனை யடைந்தார்கள். உலக்கையை யமசொரூபமாகக் கருதினார்கள். எல்லாரும் சேர்ந்து ஆலோசனை செய்து உலக்கையை எடுத்துச் சுட்டு சாம்பலாக்கிவிட்டு கடற்கரையில் இறைத்து விட்டார்கள். அடுத்த வருஷம் அந்த இடத்தில் கோரைப்புல் ஏராளமாக முளைத்தது. தங்களுடைய பயம் தீர்ந்து விட்டது என்று யாதவர்கள் சாபத்தை மறந்தார்கள்.

பிறகு ஒருநாள் யாதவர்கள் கூட்டமாக கடலோரம் சென்று உல்லாசமாக கூத்திலும் மதுபானத்திலும் காலம் கழித்தார்கள். கள்ளினுடைய வேகம் வேலை செய்ய ஆரம்பித்தது.

யாதவ குலத்தில் கிருதவர்மன் கௌரவர்கள் பக்கத்திலும், சாத்யகி பாண்டவர்கள் பக்கத்திலும் சேர்ந்து யுத்தம் செய்தார்கள் அல்லவா?

“எந்த க்ஷத்திரியனாவது தூங்குகின்றவர்களைக் கொல்லுவானா? ஓய் கிருதவர்மனே! யாதவ குலத்துக்கே ஒரு பெரிய அவமானத்தைக் கொண்டு வந்து விட்டாய்” என்று சாத்யகி கிருதவர்மனைப் பார்த்துப் பரிகாசம் செய்தான். போதையிலிருந்த மற்றும் பலர் இந்த பரிகாச வார்த்தையை ஆமோதித்தனர். கிருதவர்மனுக்குக் கடும் கோபம் வந்து விட்டது.

“யுத்தத்தில் கை அறுக்கப்பட்டு பிராயோபவேசம் செய்து யோக நிலையில் இருந்த மகான் பூரிசிரவசை கசாப்புக்காரனைப்போல் கொன்ற நீ என்னைப் பற்றி எப்படிப் பேசலாம்” என்றான் கிருதவர்மன். அதன் மேல் வேறு பலர் சாத்யகி செய்த அந்த அநாகரிகத்தை எடுத்துப் பேச ஆரம்பித்தார்கள். பிறகு, எல்லா யாதவர்களும் கலகத்தில் சேர்ந்து கொண்டார்கள். சண்டை பலமாக முற்றிக்கொண்டது.

“தூங்கி யிருந்தவர்களைக் கொன்ற பாதகன் இதோ பார்! தன் முடிவை அடைந்தான்” என்று சொல்லி சாத்யகி கிருதவர்மன் பேரில் பாய்ந்து கத்தியால் அவன் தலையை வெட்டி வீழ்த்திவிட்டான்.

அதைக் கண்டு பலர் சாத்யகியைச்சூழ்ந்து கொண்டு அங்கிருந்த பான பாத்திரங்களை அவன் மேல் எறிந்து தாக்கினார்கள். இவ்வாறு சாத்யகியை சூழ்ந்து கொண்டு தாக்கினவர்களை கிருஷ்ணன் மகன் பிரத்யும்னன் எதிர்த்துப் போராடினான். அவனைப் பலர் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். பிரத்யும்னனும் சாத்யகியும் உயிரிழந்தார்கள். அதன் பேரில் கிருஷ்ணனுக்கும் கோபம்

மேலிட்டு அவ்விடம் கடலோரத்தில் வளர்ந்து நின்ற கோரைப் புல்லை பிடுங்கி எடுத்து அதைக் கொண்டு எல்லாரையும் தாக்கினான். அவ்வாறே யாதவ கூட்டத்தார் எல்லாரும் கோரைப்புல்லைப் பிடுங்கி ஒருவரை யொருவர் அடித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

உலக்கைச் சாம்பலிலிருந்து உண்டான அந்த கோரைப் புல் எல்லாம் ரிஷிகளுடைய சாபத்தால் பிடுங்கிய உடனே உலக்கைகளாயின. அந்த உலக்கைகளால் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு யாதவ குலம் முழுதும் கள் வெறியில் நடந்த இந்த இழிவான கலகத்தில் மாண்டார்கள்.

இதை யெல்லாம் கண்ட பலராமன் துயரம் மேலிட்டு யோகத்தில் அமர்ந்து உயிரை நீத்தான், வெள்ளைப் பாம்பு வடிவத்தில் அவன் முகத்திலிருந்து ஜோதி புறப் பட்டு கடலில் கலந்து மறைந்தது. பலராமனுடைய அவதாரம் முடிந்தது.

பந்துக்கள் அனைவரும் ஒருவரும் மிஞ்சாமல் நாச மடைந்து சகோதரனும் மறைந்ததைப் பார்த்த கிருஷ்ணன் தியானத்தில் மூழ்கினான். பிறகு தன்னந் தனியாக கடற்கரை வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். நடந்ததை யெல்லாம் எண்ணி தானும் இந்த உலகத்தை விட்டு மறையும் காலம் வந்தது என்று அறிந்து தரையில் படுத்தான். அப்படியே தூங்கிப் போனான்.

அப்போது அந்தக் காட்டில் மிருகங்களைத் தேடித் திரிந்த வேடன் ஒருவன் படுத்திருந்த வாசுதேவனை தூரத்திலிருந்து பார்த்து அது மான் என்று எண்ணி வில்லை வளைத்து அம்பு எய்தான்.

அம்பு கிருஷ்ணன் உள்ளங்காலில் புகுந்து உயிரைத் தூக்கிச் சென்றது. மகோன்னதப் புகழைப் பெற்ற கிருஷ்ணன் மறைந்தான்.

# தரும புத்திரன்

யாதவர்களின் முடிவைப் பற்றியும் மாதவன் மறைந்து போனதைப் பற்றியும் அஸ்தினபுரத்துக்குச் செய்தி வந்தது.

அதைக் கேட்டதும் பாண்டவர்களுக்கு உலக வாழ்க்கையில் இருந்த பற்று முற்றிலும் போய்விட்டது. அபிமன்யுவின் குமாரனான பரீக்ஷித்துக்கு முடிசூட்டி விட்டு ஐவரும் திரௌபதியுடன் நகரத்தை விட்டுப் புறப்பட்டு யாத்திரை சென்றார்கள். பல இடங்களுக்குப் போய் முடிவில் இமயமலையை அடைந்தார்கள். அப்போது அவர்களுடன் ஒரு நாயும் சேர்ந்து சென்று கொண்டிருந்தது. மலை ஏறிச் செல்லும்போது ஒருவர்பின் ஒருவராக திரௌபதியும் தம்பிகளும் விழுந்து உயிர் நீத்து உடல் பாரத்தினின்று விடுபட்டு மறைந்து போனார்கள். தம்பிகளும் மனைவியும் வீழ்ந்து மரித்ததைப் பார்த்துப் மெய்ப்பொருளைக் கண்ட தருமபுத்திரன் மனம் தளராமல் சென்றான். யுதிஷ்டிரனுக்கு நாய் மட்டும் துணையாகச் சென்றது. மனிதனுக்குத் துணை தருமம் ஒன்றே என்பதற்கு இந்தக் கதை வியாசரால் அமைக்கப்பட்டிருக்கிறது. நாய் உருவத்தில் தருமம் யுதிஷ்டிரன்கூடச் சென்றது. வெகு தூரம் போனபின் இந்திரன் ரதத்துடன் வந்து யுதிஷ்டிரன் முன் நின்றான்.

"உன் தம்பிகளும் திரௌபதியும் சுவர்க்கம் வந்து சேர்ந்து விட்டார்கள். நீ மட்டும் எஞ்சி நிற்கிறாய். தேகத்துடன் ரதத்தில் ஏறு. உன்னை அழைத்துப் போகவே வந்தேன்!" என்றான்.

யுதிஷ்டிரன் தேரில் ஏறப் போகும்போது நாயும் ஏறப் போயிற்று. "சுவர்க்கத்தில் நாய்க்கு இடம் ஏது?" என்று இந்திரன் நாயைத் தடுத்தான்.

யுதிஷ்டிரன் "அப்படியாயின் எனக்கும் இடமில்லை" என்று கூட வந்த நாயை விட்டுச் செல்ல மறுத்துவிட்

டான். யுதிஷ்டிரனைச் சோதிக்கவே நாயாக வந்த தரும தேவதை தன் புத்திரனுடைய உறுதியைக் கண்டு மகிழ்ந்து மறைந்தது.

யுதிஷ்டிரன் சுவர்க்கம் அடைந்தான். சுவர்க்கத்தில் தருமபுத்திரன் முதலில் துரியோதனனைக் கண்டான். அந்தக கௌரவன் சூரிய தேஜஸ்ஸுடன் பிரகாசித்துக் கொண்டு அழகிய ஆசனத்தில் வீற்றிருப்பதையும் அவனைச் சூழ்ந்து வீரலக்ஷ்மியும் தேவர்களும் நிற்பதைக் கண்டான். யுதிஷ்டிரன் அங்குள்ளவர்களை நோக்கி, “பேராசையுள்ளவனும் குறுகிய திருஷ்டியுள்ளவனுமான துரியோதனனிருக்கும் இடத்தில் நான் இருந்து காலம்கழிக்க விரும்பவில்லை. எங்களைப் படாத பாடுபடுத்திய இவன் செய்த காரியங்களின் பயனாக சிநேகிதர்களையும் பந்துக்களையும் கொன்றோம்; தருமத்தை அனுஷ்டித்து எங்கள் பத்தினி பாஞ்சாலி இவன் உத்தரவினால் சபை நடுவில் இழுக்கப்பட்டு அவமானப் படுத்தப்பட்டாள். இந்தத் துரியோதனனைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லை. என்னுடைய தம்பிகள் எங்கே? அவர்கள் இருக்குமிடத்துக்குச் செல்ல நான் விரும்புகிறேன்” என்று சொல்லி அங்கிருந்து திரும்பினான்.

எல்லாம் அறிந்த தேவ ரிஷியான நாரதர் யுதிஷ்டிரனைப் பார்த்துச் சிரித்து,

“ராஜ சிரேஷ்டனே! இவ்விதம் சொல்லலாகாது. சுவர்க்கத்தில் விரோதம் என்பது கிடையாது. துரியோதனனைப் பற்றி இந்த வார்த்தைகளைச் சொல்லவேண்டாம். வீரனான துரியோதனன் க்ஷத்திரிய தருமத்தின் சக்தியால் இந்தப் பதவியை அடைந்திருக்கிறான். மகனே! தீர்ந்துபோன நிகழ்ச்சிகளை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளக்கூடாது. முறைப்படி துரியோதன ராஜாவுடன் இங்கே இரு. இங்கு விரோதங்களுக்கு இடமில்லை. மானிடத் தேகத்தோடு நீ வந்திருக்கிறபடியால் இவ்வாறு உனக்குத் தவறான எண்ணங்கள் உண்டாகின்றன. அவற்றை அகற்று” என்று சொன்னார்.

இதைக்கேட்ட யுதிஷ்டிரன் "பிராமணரே! தருமத்தை அறியாதவனும் பாவியும், நல்லோர்க்குத் தீமையைச் செய்தவனும் பகையும் கோபமும் வளரச் செய்தவனும், கணக்கிறந்த ஜனங்களை அழியச் செய்தவனுமான துரியோதனனுக்கு இந்த வீரசுவர்க்கம் கிடைத்திருக்கிறது. சூரர்களும் சீலர்களுமான என்னுடைய சகோதரர்களும் திரௌபதியும் என்ன கதி அடைந்திருக்கிறார்கள்? அவர்களையும் கர்ணனையும் இன்னும் எனக்காக உயிர் நீத்த என் நண்பர்களான ராஜாக்களையும் இங்கே காணவில்லை. நான் அவர்களைப் பார்க்க விரும்புகிறேன். விராடனையும் துருபதனையும் திருஷ்டகேதுவையும் பாஞ்சால குமாரன் சிகண்டியையும் திரௌபதியின் புத்திரர்களையும் சூரன் அபிமன்யுவையும் பார்க்க விரும்புகிறேன். அவர்கள் இங்கே என் கண்ணுக்குத் தென்படவில்லையே. என் நிமித்தம் யுத்தமாகிற பெரிய வேள்வித் தீயில் தங்கள் சரீரங்களை எரித்து மாண்ட அந்த வீரர்களை நான் இங்கே காணவில்லை. அவர்கள் எல்லாரும் எங்கே? அவர்கள் இருக்குமிடத்தில் வசிக்க விரும்புகிறேன். என் தாய் குந்தி கர்ணனுக்கும் ஜலதர்ப்பணம் செய் என்றாள். அதை நினைக்கும்போது இப்போதும் எனக்குத் துக்கம் மேலிடுகிறது. கர்ணன் யார் என்பதை நான் அறியாமல் என்னால் சாகடிக்கப்பட்டான். அவனைப் பார்க்க விரும்புகிறேன். எனக்கு உயிரைக் காட்டிலும் பிரியனான பீமனையும் தேவராஜனுக்கு ஒப்பான அருச்சுனனையும், நகுல சகதேவர்களையும் எப்போதும் தருமநெறியில் நின்றவளான பிரிய பாஞ்சாலியையும் பார்க்க விரும்புகிறேன். இந்த இடத்தில் இருக்க எனக்கு உண்மையில் முடியவில்லை. பக்கத்தில் பிராதாக்கள் இல்லாமல் நான் சுவர்க்கத்தில் இருப்பதில் என்ன பயன்? அவர்கள் எங்கே இருக்கிறார்களோ அதுதான் சுவர்க்கம். இது சுவர்க்கமல்ல என்பது என் கருத்து" என்று சொன்னான்.

இதைக் கேட்ட தேவர்கள் "யுதிஷ்டிரரே! உமக்கு அவர்களிடம் போக விருப்பமானால் தாமதிக்க வேண்டாம், போகலாம்" என்று தேவதூதனைப் பார்த்து யுதிஷ்டிரனை அழைத்துப் போகக் கட்டளையிட்டார்கள்.

முன்னால் தேவதூதனும் பின்னால் யுதிஷ்டிரனுமாகப் போனார்கள். போன மார்க்கத்தில் இருள் சூழ்ந்துகொண்டது. ஓரளவு கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் பயங்கரமாக இருந்தது.

வழியெல்லாம் மாமிசமும் உதிரமும் கலந்த சேறு. பிணங்களும் எலும்புகளும மயிரும் நாற்புறங்களிலும் கிடந்தன. எங்கும் புழுக்கள். சகிக்க முடியாத துர்நாற்றம் வீசிற்று. கைகளும் கால்களும் வெட்டப் பட்டு ஆங்காங்கு மனிதர்கள் விழுந்து கிடந்தார்கள். இதையெல்லாம் பார்த்து தர்மாத்மாவான யுதிஷ்டிரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. பலவாறாக ஆலோசனை செய்துகொண்டே போனான்.

"இந்த மார்க்கத்தில் எவ்வளவு தூரம் போக வேண்டும்? என்னுடைய சகோதரர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று தேவதூதனைக் கேட்டான்.

"திரும்பிப் போக விரும்பினால் போகலாம்" என்றான் தூதன்.

துர்நாற்றத்தைச் சகிக்க முடியாமல் யுதிஷ்டிரன் திரும்புவதில் மனங் கொண்டான். அந்த சமயத்தில நாற்புறமிருந்தும் தீன சுவரங்கள் கிளம்பின.

"ஓ, தருமபுத்திரரே! போய்விட வேண்டாம். எங்களை அனுக்கிரகிக்க ஒரு முகூர்த்தமாவது நில்லும். நீர் வந்தபோது நல்ல மணம்நிறைந்த புண்யமான காற்று எங்கள் பேரில் வீசிற்று. அதனால் எங்களுக்கு கொஞ்சம் ஆறுதலும் சுகமுண்டாயிற்று. குந்தி குமாரரே! நாஙகள் உம்மைப் பார்த்துக் கொண்டிருந்தாலே கொஞ்சம் சுகம் பெறுவோம். ஒரு முகூர்த்த காலமாவது நில்லும், நீர் இருக்கும் வேளை எங்களைப் பீடிக்கும் வாதனை கொஞ்சம் ஓய்கிறது" என்று அந்தக் குரல்கள் அழுதன. இவ்வாறு தீனவசனங்கள் நாலாபுறமும் எழுந்ததைக் கேட்ட யுதிஷ்டிரன் "ஆ! கஷ்டம்!" என்று சொல்லிக்கொண்டு நின்றான். குரல்கள் ஏதோ தெரிந்த குரல்களாகவே அவனுக்குத் தோன்றிற்று. "நீங்கள் யார்?

எதற்காக இங்கே இருக்கிறீர்கள்?" என்று சோகம் மேலிட்டுக் கேட்டான்.

"பிரபுவே! நான் கர்ணன்" என்றது ஒரு குரல். "நான் பீமசேனன்" என்றது மற்றொன்று. "நான் அருச்சுனன்" என்றது வேறொன்று. "திரௌபதி" என்றது ஒரு தீனமான சுவரம். "நான் நகுலன்" "நான் சகதேவன்" "நாங்கள் திரௌபதி புத்திரர்கள்" என்று இவ்விதம் நாற்புறங்களிலும் குரல்கள் கிளம்பியதைக் கேட்டான் யுதிஷ்டிரன்.

தாங்க முடியாத சோகத்தால் பீடிக்கப்பட்ட யுதிஷ்டிரன் "இவர்கள் என்ன பாபகருமம் செய்தார்கள்? திருதராஷ்டிர புத்திரனான துரியோதனன் என்ன புண்ணியம் செய்து மகேந்திரனைப் போல தேஜஸ்ஸுடன் சுவர்க்கத்திலிருக்கிறான்? இவர்களோ நரகத்தை அடைந்திருக்கிறார்கள்! நான் தூங்குகிறேனா? விழித்துக் கொண்டிருக்கிறேனா? பிரஜ்ஞை இழந்தேனா? இது சித்த விகாரமா?" என்று சொல்லி கடுஞ் சினங்கொண்டு தேவர்களையும் தருமத்தையும் நிந்தித்தான். தேவதூதனைப் பார்த்து,

"நீ எவர்களுடைய தூதனோ அவர்களிடம் செல். நான் வரமாட்டேன். நான் இவ்விடத்திலேயே வசிப்பேன். என்னை அடுத்தல்லவோ என்னுடைய பிரிய சகோதரர்கள் இங்கே நரகத்தில் பீடிக்கப்பட்டுக் கிடக்கிறார்கள். நானும் இங்கேயே இருப்பேன்" என்றான்.

யுதிஷ்டிரன் இவ்வாறு சொல்லியதும் தூதன் இந்திரனிடம் சென்று யுதிஷ்டிரன் சொன்னதைத் தெரிவித்தான்.

ஒரு முகூர்த்த காலம் கழிந்த பின் இந்திரனும் யமதேவனும் யுதிஷ்டிரன் இருந்த இடம் வந்தார்கள். அவர்கள் வந்ததும் இருள் விலகிவிட்டது. பயங்கரமான காட்சிகளும் மறைந்தன. புண்ணிய வாசனையுள்ள சுகமான காற்று வீசிற்று. தரும தேவதையாகிய யமன்

தன்னுடைய புத்திரனை யுதிஷ்டிரனைப் பார்த்து "சிறந்த மதிமானே! என்னால் நீ சோதிக்கப்பட்டது இது மூன்றாவது தடவை. பிராதாக்களின் நிமித்தம் நீ நரகத்திலேயே இருக்க விரும்பினாய். அரசபதவி பெற்று உலகம் பரிபாலித்தவர்கள் எல்லாரும் அவசியம் நரகம் பார்க்க வேண்டும். ஆகையால் ஒரு முகூர்த்தகாலம் உன்னாலும் இந்தப் பெரிய துக்கம் அனுபவிக்கப்பட்டது. புகழ் பெற்ற வீரன் சவ்யசாசியாவது உன் அருமைத் தம்பி பீமனாவது, சத்தியவான் கர்ணனாவது யாருமே உண்மையில் நரகத்தை அடையவில்லை. இது உன்னைச் சோதிக்கச் செய்த ஒரு மாயம். இது தேவலோகம். இதோ பார். மூவுலகங்களிலும் செல்லும் தேவரிஷி நாரதர்! துக்கப்படாதே!" என்றான்.

பிறகு யுதிஷ்டிரன் மானிட தேகத்தை விட்டு திவ்யமான சரீரத்தைப் பெற்றான்.

அதனுடன் மனிதப் பிறப்புக்குரிய பகையும் மனவருத்தங்களும் அற்றவனாக பூரண பரிசுத்தம் அடைந்தான.

தேவர்களாலும் ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்டு கர்ணனும் தம்பிகளும் திருதராஷ்டிர குமாரர்களும் கோபம் தீர்ந்து தெய்வநிலை அடைந்திருப்பதை யுதிஷ்டிரன் கண்டு சாந்தி அடைந்தான்.

வியாசர் விருந்து முற்றிற்று.

ஓம்